॥ श्रीः ॥

शाश्वतधर्मगोप्त्रे श्रीमते वासुदेवाय नमः ॥



# तैत्तिरीयोपनिषत्

# தைத்திரீயோபநிஷத்

ஸ்ரீ சங்கர பாஷ்யம், வித்யாரண்ய தீபிகை, ரங்கராமானுஜ
பாஷ்யம் இவற்றின் தமிழுரையுடன்

ஆசிரியர்:
பிரும்ம ஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்




MADRAS-17.

|| श्रीः ||

शाश्वतधर्मगोप्त्रे श्रीमते वासुदेवाय नमः ||



# तैत्तिरीयोपनिषत्

# தைத்திரீயோபநிஷத்.

ஸ்ரீ சங்கரபாஷ்யம், வித்யாரண்யதீபிகை, ரங்கராமானுஜ பாஷ்யம் இவற்றின் தமிழுரையுடன்

இச்சிறந்த உரை

மஹாமஹோபாத்யாய வேதாந்த கேஸரி பங்கானாடு ப்ரம்ம ஸ்ரீ கணபதி சாஸ்திரிகள் அவர்களின் முக்கிய சிஷ்யரும், வியாகரண வேதாந்த சாஸ்திர பாரங்கதரும், பாகவத பகவத் கீதோபன்யாஸகரும், சோதிட மந்திர சாஸ்திர வித்வானுமான

கோபால தத்வ ரக்ஷாமணி:

**ப்ரம்மஸ்ரீ கடலங்குடி நடேச சாஸ்திரிகள்**


**தொகுப்பாசிரியர் :**

**Dr. K.N. சரஸ்வதி**

*M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer Science*

**பதிப்பாசிரியர் :**

**M.A. ஜெய்சங்கர் B.A., M.B.A**





**கடலங்குடி பப்ளிகேஷன்ஸ்**

**38, நடேச அய்யர் தெரு,**

**தி. நகர், (பஸ் ஸ்டாண்டு அருகில்)**

**சென்னை - 600 017.** ✆ 434 34 06





(மூன்றாம் பதிப்பு)

முதற் பதிப்பு : 1935
இரண்டாம் பதிப்பு : செப்டம்பர் 1996
மூன்றாம் பதிப்பு Jan 1998



விலை ரூ. 120.00

---

அச்சிட்டோர்:
ஜெய்சங்கர் பிரிண்டர்ஸ்
38, நடேச அய்யர் தெரு,
தி. நகர். (பஸ் ஸ்டாண்ட் அருகில்)
சென்னை - 17. போன் : 434 34 06





போன் : 22115

ஸ்ரீ சந்த்ர மௌளீச்வராய நம:

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்ய பரம்பராகத

ஸ்ரீ காஞ்சி காம கோடி பீடாதிபதி ஜகத்குரு

ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அவர்கள்

ஸ்ரீ மடம் ஸம்ஸ்தானம்

நெ 1. சாலை தெரு, காஞ்சிபுரம் 631502

முகாம் : தேதி 6 : 9 : 95

# ஸ்ரீ முகம்

ஆன்மிக துறைகளிலும், சாஸ்திரங்களிலும் ஆழ்ந்த அறிவு, கடினமான உழைப்பு இவைகளால் தனக்கென ஒரு ஸ்தானம் தேடிக் கொண்டவர் **கடலங்குடி நடேச சாஸ்திரிகள்.**

இவரால் முதன்முதலில் தேவநாகரி மூலத்துடனும், விரிவான தமிழாக்கத்துடனும் பதிப்பிக்கப்பட்ட ஸ்ரீமத் பாகவதத்துடன் இணைந்த ஸ்ரீ நாராயணீயம் (மூலமும், பதவுரையுடன் கூடியது) ப்ரம்ம சூத்ர ஸ்ரீ சங்கர பாஷ்யம், இதர வேதாந்த, உபநிடத்து கிரந்தங்களின் மறுபதிப்பில் இவரது புதல்வி **ஸ்ரீமதி கே.என். சரஸ்வதி** ஈடுபடுவது அறிந்து மகிழ்கிறோம்.

இம்முயற்சிக்கு ஆஸ்திக அன்பர்கள் உதவி புரிந்து ஸ்ரீ பரமேச்வரனது ப்ரீதிக்குப் பாத்திரங்களாக ஆசீர்வதிக்கிறோம்.

நாராயண ஸ்ம்ருதி :



கடலங்குடி

பிரம்மஸ்ரீ நடேச சாஸ்திரிகள்

(1878 – 1961)



"JYOTHISHA KALANIDHI"

Dr. K. N. Saraswathy

*M.A., M.S., M.Ed., Doctorate in Counselling, Diplomas in Naturopathy, Art, Yoga and Computer.*

## तैत्तिरीयोपनिषत् ॥

# தைத்திரீயோபநிஷத்.

## முகவுரை.

தைத்திரீயோபநிஷத் (தைத்திரீயோபநிஷத்) = தைத்திரீயசாகையி லுள்ள உபநிஷத் என்பது இதன் பொருள். வேதவியாஸருடைய சிஷ்யரான வைசம்பாயனர் யாக்ஞ்ய வல்க்யர் முதலிய அநேகம் சிஷ்யர்களுக்கு யஜுர் வேதத்தை அத்யயனஞ் செய்வித்தார். அப்பொழுது வைசம்பாயனருக்கு ஏதோ தைவஸங்கல்பத்தால் பிரும்மஹத்தி தோஷம் பிராப்தமாயிற்று. அத்தோஷத்தைப் போக்குவான் கருதி தனது சிஷ்யருள் ஒருவரைப் பார்த்து "நீ எனது பிரும்மஹத்தி தோஷம் விலகவேண்டி இன்னின்ன தவங்களைச் செய்யவேண்டும்" எனக் கட்டளையிட்டார். அப்பொழுது அருகிலிருந்த மஹானான யாக்ஞ்ய வல்க்யாசாரியர் தனது குருவான வைசம்பாயனரை நோக்கி "ஓ குரோ! தாங்கள் விதித்த தவம் மிக்கக் கடுமையானது பற்றி அத்தவத்தை இச்சிறுவன் மட்டும் தனியாய் எவ்விதம்செய்யப்போகின்றான். அடியேனும் அவனுடன் சேர்ந்து அதைச் செய்கின்றேன் எனக்கும் அவ்விதம் கட்டளையிட வேண்டும்" என வேண்டிக்கொண்டார். இது கேட்டதும் பிரும்மஹத்தி தோஷத்தால் மதிமயக்கமுற்ற வைசம்பாயனர் சினங்கொண்டு "நீ வித்யாகர்வத்தால் இச்சிறுவனை அவமதித்தமையால் என்னிடம் கற்ற வித்யையாவையும் கக்கிவிட வேண்டும்" என யாக்ஞ்யவல்க்யருக்குக் கட்டளையிடவே அது கேட்ட யாக்ஞ்ய வல்க்யாசாரியர் தனது யோகப் பிரபாவத்தால் உடனே அவற்றைக் கக்கிவிட்டார். உடனே வைசம்பாயனர் தனதருகில் நின்ற ருஷிகுமாரனைப் பார்த்து "நீ இவற்றை எடுத்து உன் வசமாக்கிக்கொள்" என்றார். அது கேட்ட அந்த ருஷிகுமா

ரனும் தனது தவமஹிமையால் தித்திரி என்ற ஓர் பக்ஷியினுருவ மெடுத்து அவற்றைப் பெற்றுக் கொண்டு விட்டார். ஆகவே தித்திரி வுருவங்கொண்ட ருஷி குமாரராற் பெறப்பட்டது பற்றி இந்த வேதபாகமானது தைத்திரீய்சாகை என்ற பெயரை யடைந்தது. அந்த தித்திரி சிஷ்ய பரம்பரையாய் வரும்.சாகையை எவரெவர் அத்யயனஞ் செய்கின்றனரோ அவரும் தைத்திரீய சாகிகள் என்றே சொல்லப்படுகின்றனர். அத்தகைய தைத்திரீய சாகையிலுள்ள இந்த உபநிஷத்தையும் தைத்திரீயோபநிஷத் என்றே அழைக்கின்றனர்.

உபநிஷத் இந்தப் பதத்தில் उप+नि+षत् (உப, நி, ஷத்) என மூன்று பதங்கள் அடங்கி யிருக்கின்றன. அவற்றின் பொருளை

उपनीयेममात्मानं ब्रह्मापास्तद्वयं स्वतः ।
निहन्त्यविद्यां तज्जं च तस्मादुपनिषद्भवेत् ॥ १ ॥

निहत्याऽनर्थमूलां स्वाऽविद्यां प्रत्यक्तया परम् ।
गमयत्यस्तसंभेदमतो वोपनिषद्भवेत् ॥ २ ॥

प्रवृत्तिहेतून्निश्शेषांस्तन्मूलोच्छेदकत्वतः ।
यतोऽवसादयेद्विद्या तस्मादुपनिषन्मता ॥ ३ ॥

என்றதால் ஸ்ரீமத்சுரேஸ்வராசாரியர் அவர்கள் சொல்லியிருக்கின்றனர். அந்த விளக்குவாய்—षद्लृ என்ற தாதுவுக்கு, विशरणं, गतिः, अवसादनम् என மூன்றுபொருள் வியாகரணத்திற் கூறப்பட்டிருக்கின்றது. அம்மூன்றுவித பொருளுள்ள षद्ल என்றதை उप, नि என்ற இவ்விரண்டினுடனும் சேர்த்துப்பார்க்குங்கால் பின்னர் வருமாறு மூன்று பொருள் உபநிஷத் என்ற சப்தத்திற்கேற்படுகின்றது. அவையாவன—

(1) இந்த ப்ரத்யகாத்மாவை उप (உப)=அருகில் அதாவது: பிரும்மத்தினருகில் அதாவது:—பிருமத்தில் नि (நி) சேர்ப்பித்து षत् = அவித்யையையும், அதனுலுண்டான வற்றையும் நாசஞ்செய்து விடுகின்றது பற்றி उपनिषत्=என்று சொல்லப்படும் என்றும்,

(2) नि=निहत्य=ப்ரத்யக் ரூபமாயிருத்தல்பற்றி (அனர்த்தமூல மான ஸ்வாவித்யையை) நாசஞ்செய்து எவ்விதபேதமுமற்ற பர

மாத்மாவை उपसत्=गमयति அடைவிக்கின்றது பற்றி உபநிஷத் என்று சொல்லப்படும் என்றும்,

(3) उपनिषीदतीत्युपनिषत्=அதாவது: பிரவிருத்தி காரணங்கள் யாவையும் மீதமின்றி அதன் மூலோச்சேதம் செய்யும் வாயிலாக நழுவும்படி (இல்லாமல் போகும்படி) செய்வது பற்றி उपनिषत् எனப்படும் என்றும் என்பதாம். ஆகவே இம்மூன்றுவிதமான பொருளிலும் உபநிஷத் சப்தத்தால் பிரும்மவித்யையே தான் சொல்லப்படுகின்றது. ஆகவே उपनिषत् என்றதால் பிரும்ம வித்யையே சொல்லப்படினும் "ஊஞ்ஜல் கத்துகின்றது" என்ற விடத்தில் ஊஞ்சல் என்ற பதத்தால் ஊஞ்ஜலிலுள்ளவன் என்று அதிலிருப்பவனை நாம் கிரஹித்துக் கொள்ளுவது போல இங்குள்ள பிரும்மவித்யா வாசகமான உபநிஷத் சப்தத்தால் அந்த பிரும்ம வித்யை எதனாலுபதேசிக்கப் படுகின்றதோ, அந்த வேத பாகத்தையும் கிரஹித்துக் கொள்ளவேண்டும் என்றேற்பட்டது.

அத்தகைய தைத்திரீயோபநிஷத்தானது सांहिती (ஸாம்ஹிதீ) வாருணீ, யாக்ஞிகீ என மூன்றுவிதமான பிரிவுள்ளதாகவாகும். அவற்றுள் முதல் பிரபாடகத்தில் (அத்தியாயத்தில்) संहिताया उप निषदं व्याख्यास्यामः என்றுதொடங்கி ஸம்ஹிதாத்தியாயமானது உபதேசிக்கப்பட்டிருப்பதால் அந்தப்பாகம் (1) வதான सांहिती (ஸாம்ஹிதீ) என்று சொல்லப்படுகின்றது. 2, 3-வது பிரபாட கங்களில் பிரும்மவித்யை சொல்லப்படுகின்றது. அந்தபிரும்ம வித்யைக்கு ஸம்ப்ரதாயப்ரவர்த்தகர் வருணன் ஆனது பற்றி அவ் விரண்டு பிரபாடகங்களும் (அத்தியரயங்களும்) வாருணீ என் றழைக்கப் படுகின்றன. 4-வது பிரபாடகத்தில் யாகத்திற்குப யோகமாகும் மந்திரங்கள் சொல்லப்படுகின்றன வானதுபற்றி அந்த 4-வது பிரபாடகம் (அத்யாயம்) யாக்ஞிகீ எனப்படுகின் றது. கர்மகாண்டோபயுக்தமான பாகங்கள் அந்த 4-வது பிர பாடகத்திற் சொல்லப்படுவதைக் கொண்டே பிரும்மகாண்ட பா கத்திற்கு பாஷ்யஞ்செய்யப்புகுந்த ஸ்ரீசங்கரபகவத்பாதாசாரியா ளவர்கள் பாஷ்யஞ் செய்யாது விடுத்தனர். வித்யாரண்ய ஸ்வாமி கள் 4-வது பிரபாடகத்திற்கும் பாஷ்யஞ் செய்திருக்கின்றனர். ஆயினும், அவர்கள் கர்மகாண்டங்களோ,பிரும்மகாண்டங்களோ

வேதபாகம் பூராவுக்குமே பாஷ்யஞ் செய்யப் புகுந்தவர்களானது
பற்றியேதான் அம்முறையில் இந்த 4-வது பிரபாடகம் கர்மகாண்ட
மாயினும் தனது ஸங்கற்பத்திற்கிணங்க அதற்கும் பாஷ்யம் செய்
திருக்கின்றனர் என்றேற்படுகின்றது.

ஸ்ரீ ரங்கராமானுஜ ஸ்வாமிகள் இதற்கும் சேர்த்து பாஷ்
யம் செய்திருக்கின்றனராயினும் இந்த விசிஷ்டாத்வைதஸித்தாந்
தத்தில் கர்மகாண்டமும், பிரும்ம காண்டமும் சேர்ந்து ஒரே
சாஸ்திரம் என்றும், கர்ம காண்டமானது நேரிலோ, பரம்பரை
யாகவோ ஸர்வசேஷியான பகவானுடைய ஆராதனத்தைச் சொல்
லுகின்றதென்றும், பிரும்ம காண்டமானது ஆராத்யனான பகவா
னின் ஸ்வரூபத்தை விளக்குகின்றதென்றும் கொள்ளப்படுவதை
யொட்டியே ஸ்ரீரங்கராமானுஜஸ்வாமிகள் கர்மகாண்டோபயோ
கியான அந்த 4-வது பிரபாடகத்திற்கும் பாஷ்யஞ் செய்தனர் என்
றும் ஒருவாறு சொல்லுவதற் கிடமிருக்கிறது. ஆகவே அத்
வைத ஸித்தாந்த ப்ரவர்த்தகர்களான ஸ்ரீமத் சங்கரபகவத்பாதா
சாரிய ஸ்வாமிகளவர்கள் இந்த நான்காவது பிரபாடகத்திற்கு
பாஷ்யம் செய்யாததை யொட்டி நாமும் இம்மொழி பெயர்ப்புடன்
அந்த பாகத்தை மொழிபெயர்த்துச் சேர்த்து வெளியிடாது
விடுத்திருக்கிறோம். ஆயினும் அந்த 4-வது பிரபாடகத்திற்
சொல்லிய விஷயங்களையும் ஆஸ்திகர் யாவரும் தெரிந்துகொண்டு
அதன்படி அனுஷ்டிக்க வேண்டுவது அவசியமாதல் பற்றி தனி
யே அந்த பாகத்தைமட்டும் பின்னர் மொழிபெயர்த்து வெளி
யிடுவதாகவும் உத்தேசித்திருக்கிறோம்.

ஆகவே இதன்படி தைத்திரீயோபநிஷத்தானது (1) ஸாம்
ஹிதீ என்றும், (2) வாருணீ என்றும் இரண்டுவிதமாகப் பிரிக்
கப்பட்டதாக வாகின்றது. மேலும், 1-2-3 பிரபாடகங்களும்
முறையே (1) சிக்ஷாவல்லீ என்றும், (2) பிரும்மவல்லீ அல்
லது ஆனந்தவல்லீ என்றும், (3) பிருகுவல்லீ என்றும் சொல்
லப்படுகின்றன. அவற்றுள் முதலாவது வல்லியில் शीक्षां व्याख्या
स्यामः என்று தொடங்கி பிரும்மக்ஞானத்தை யடைவதற்குரிய
பற்பல ஸாதனங்கள் சிக்ஷிக்க (உபதேசிக்க) ப்படுவதால் இது
சிக்ஷாவல்லீ எனப்படுகின்றது. மேலும், சீக்ஷாம் வியாக்யா

ஸ்யாம: என தொடக்கத்தில் சிக்ஷா பத மிருப்பதைக் கொண்டு இது சிக்ஷாவல்லீ யென்றழைக்கப் படுவதாயும் கொள்ளுதல் பொருந்தும். 2-வது வல்லியில் ब्रह्मविदाप्नोति परम् எனத் தொடங்கி பிரும்மத்தின் ஸ்வரூபமும், அதை யொருவன் அறிய வேண்டிய முறையும் வெகு தெளிவாயுபதேசிக்கப் பட்டிருப்பது பற்றி இது பிரும்மவல்லீ என்றழைக்கப் பட்டிருக்கிறது. மேலும் இந்த வல்லியில் பிரும்மம் ஆனந்த ரூபமானது எனத்தெளிவா யுபதேசிக்கப் பட்டிருப்பதைக் கொண்டு இதை ஆனந்த வல்லீ என்றும் பெரியார் சொல்லுகின்றனர். இதுவும் பொருத்தமானதே. 3-வது வல்லியில் பிரும்மவித்யா ஸம்ப்ரதாய ப்ரவர்த்தகரான வருணனிடமிருந்து அவரது அருமைப் புதல்வரான பிருகுவானவர் அம்முறையைக் களங்கமறப் பெற்று அவ்விதமே அவர் அனுபவித்திருப்பதால் குருவின் உபதேசப்படி அனுபவத்தில் கொண்டு வந்தவர் பிருகுவானதுபற்றி அவரது பெயரால் இந்த வல்லீயானது பிருகுவல்லீ என அழைக்கப்படுகிறது.

சங்கை — பிருகுவுக்கு உபதேசம் செய்தவரான வருணனுடைய பெயரால் வாருணீ வல்லீ என இதை அழைக்க வேண்டியிருக்க அதை விடுத்து பிருகுவின் பெயரால் இது அழைக்கப் படுவதின் காரணம் யாதெனின்?

உத்தரம்—உலகில் மஹான்களான ஆசிரியர்கள் சிஷ்யனுக்கு பிரும்ம தத்துவோபதேசஞ் செய்தபோதிலும் श्रुतब्रह्मणामपि यथा पूर्वं संसारित्वदर्शनात् குருவினிடமிருந்து பிரும்மோபதேசஞ் பெற்றவர்க்கும் முன்போலவே ஸம்ஸாரித்வம் காணக்கிடக்கின்றதே? என சங்கரபகவத்பாதாசாரிய ஸ்வாமிகளவர்கள் தமது பிரும்மஸூத்திரபாஷ்யத்திலும், ஸ்ரீகங்காதரேந்தர ஸரஸ்வதீந்த்ராள் देहाद्यध्यासदार्ढ्याच्छ्रुतमपि सहसा नैव संभावनीयं ब्रह्मत्वं स्वस्य வேரூன்றின தேஹாத்யத்தியாஸம் காரணமாய் குருவினிடமிருந்து பிரும்மதத்துவோபதேசம் பெறினும் தனக்கு இயற்கையிலமைந்துள்ள பிரும்மத்தன்மையானது சுளுவில் நம்பக்கூடியதாக ஆவதில்லை என ஸ்வாராஜ்ய ஸித்தியிலும் சொல்லியிருப்பதைக்கொண்டு குருபதேசம் பெற்றதும் அவ்விதமே அதை

அநுபவத்தில் கொண்டுவருவதென்பது வெகுசிரம சாத்திய மானது என்றும், அவ்விதம் அநுபவத்தில் கொண்டுவருபவரே புருஷசிரேஷ்டரும் மஹானும் ஆவார் என்றும் வெளியாகிறது. இந்தப்பிருகுவோ குரு உபதேசித்தபடி அதை அப்படியே அநுபவத்திற் கொண்டுவந்து மிருக்கிறார் ஆனதுபற்றியேதான் மஹானான அவரது பெயரால் இந்த 3-வது வல்லீ அழைக்கப் படுகின்றதென்றும் கொள்ளப்படுகின்றது. மேலும், குருவான வர் இவ்விதம் அத்வைத ஆத்ம ஸ்வரூபோபதேசஞ் செய்வது அநுபவத்தில் வரக்கூடியது தானா? அவ்விதம் அநுபவத்தில் கொண்டுவந்தவர் எவரேனுமுண்டா? என்ற சங்கையை விளக்க வேண்டியும் குரூபதேசப்படி பிருகு அநுபவத்தில் கொண்டு வந்திருப்பதால் இது அநுபவத்தில் வரக்கூடியதுதான் என்றும், அவ்விதமான லாபத்தை பிருகு அடைந்ததுபோலவே ஏனை யோரும் அடையமுயற்சி செய்ய வேண்டுவது அவசியமாகிறது என்றும் காட்டவுமே பாக்கியசாலியான பிருகுவின் பெயரால் இந்த வல்லீ அழைக்கப் படுகின்றதென்றும் கொள்ளுவதற்கு மிடமுண்டாகின்றது. அதுடன் வித்யாரண்யஸ்வாமிகள் 2-3வது வல்லிகளை வாருணீ என்றே சொல்லியு மிருக்கின்றனர்.

அம்மூன்று வல்லிகளுள் முதலாவதான சிக்ஷாவல்லியில் 12 அநுவாகங்களிலிருக்கின்றன. அவற்றுள் முதலாவது அநு வாகத்தில் சித்தை காக்ர்யத்திற்கு (மனதை ஒரு முகப்படுத்துவ தற்கு) ள்ள இடையூறுகள் விலகவேண்டி தேவதைகளின் பிரார்த் தனையும், அந்த தேவதைகளுக்கு அந்தர்யாமியான பிரும்மத்தின் நமஸ்காரமும் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது:—நிஷ்காம கர்மானுஷ்டானத்தினால் சித்தத்திலுள்ள தோஷம் விலகவே பிரும்மத்தை அறியவேண்டு மென்ற இச்சையுண்டாகின்றது. இவ்வித இச்சையுள்ளவனுக்கு பிரும்மவித்யையில் அதிகாரமுண் டாகின்றது என்பது சாஸ்திரங்களின் முறையான கொள்கை தானாயினும், பிரும்மத்தின் அபரோக்ஷ ஸாக்ஷாத்காரமுண்டாக வேண்டுமானால் சித்தைகாக்ர்யம் (சித்தம் ஒரு முகப்பட்டிருத் தல்) அவசியமாகிறது. அவ்வித சித்தை காக்ர்யமோ தியானுப் யாஸ பரிபாகத்தாற்றான் நிகழ்கின்றது. ஆகவே தியானப்பயிற்சி

எவ்விதத்தினும் மேலானதாக வாகின்றமையின் அத்தகைய தியானமும், அதன் முறையும் இந்த சிக்ஷாவல்லியில் பின்னர் சொல்லப்படப் போகின்றது. ஆனால் "நற் செய்கைகட்கு நானு வித இடையூறுகள்" என்ற பழைமொழிப்படி பிரும்மக்ஞானத்தை யடைய ஒருவன் பிரவிருத்திக்கும் விஷயத்தில் तदेषां तन्नप्रियम् यदेतन्मनुष्याविद्युः மனிதன் பிரும்மக்ஞானத்தை யடைவதென்பது தேவர்கட்குப் பிரியமில்லாதது என பிருஹதாரண்யக உபநிடதத்திற் கூறியிருப்பதைக் கொண்டு தேவர்கள் பற்பலவழியில் இடையூறு செய்கின்றனர் என்பது விளங்குகின்றது. ஆகவே பிரும்மக்ஞானத்திலோ, அதற்கு அந்தரங்க (நெருங்கின) ஸாதனமான சித்தைகாக்ர்ய ஸம்பாதனத்திலோ முயற்சி செய்பவர் எவரும் அவ்வழியிற்றமக்கு நேரும் இடையூறைப் போக்க வழிதேட வேண்டியவர்களாகின்றனர் என்பது வெள்ளிடைமலை. ஆனது பற்றியே அத்தகைய இடையூறை விலக்கவேண்டிய மந்திரமானது இந்த முதலனுவாகத்திற் படிக்கப்படுகின்றது.

இரண்டாவது அனுவாகம்—பிறகு இவ்விதம் விக்னங் (இடையூறு) களைப் போக்கிக் கொண்டவர்க்கு உபாஸனத்தையும், பிரும்மக்ஞானத்தையும், தெரிவிக்கும் மந்திரங்களுப தேசிக்கப்படல் வேண்டும். அம்மந்திரங்களை ஒருவன் அப்பியஸிக்குங்கால் ஸ்வரம், வர்ணம், மாத்திரை (கால அளவு) ஸந்தானம் (தொடர்பு) இவற்றையும் வழுவாது தெரிந்தே கற்கவேண்டும் ஆதலால் அவ் விஷயம் இந்த இரண்டாவது அனுவாகத்தா லுபதேசிக்கப்படுகின்றது.

மூன்றாவது அனுவாகம்—மூன்றாவது அனுவாகத்தில் இம்மையில் பிரஜாதி சித்தியையும், சித்தை காக்ர்யத்தையும் தரும் ஸம்ஹிதோபாஸனம் உபதேசிக்கப்படுகின்றது.

நான்காவது அனுவாகம்—மேதை (தாரணாசக்தி) யற்றவனுக்கு குருவினிடமிருந்து கேட்ட சாஸ்திரார்த்தமானது மறந்துவிடுமாதலால் பிரும்மக்ஞான முண்டாவதற்கிடமில்லாமலாகிறது. அதுடன் ரோகாதிகளால் தேகத்திறனற்றவர்க்கும் உண்ண உணவு, உடுக்கத் துணி, உறவாட மற்றுமுள்ளவை இவையற்றவர்க்கும் பிரும்மக்ஞான ஹேதுவான சிரவணாதி பிரவிருத்தி

யேற்படுவதற்கிட மில்லாமலாகிவிடுகிறது. ஆகவே முற்கூறிய மேதா (தாரண சக்தி) முதலியவற்றைத் தரும் மந்திரம் இந்த நான்காவது அனுவாகத்திற் படிக்கப்படுகின்றது.

ஐந்து, ஆறுவது அனுவாகங்கள் — 5-வது அனுவாகத்தில் அங்கதேவதைகளின் உபாஸனமும் 6-வது அனுவாகத்தில் உத்தமாதிகாரிகளுக்குரிய மனோமயத்வம் முதலிய குணங்களுடன் கூடின அங்கியான பிரும்மத்தின் உபாஸனமும் சொல்லப்படுகின்றது.

ஏழாவது அனுவாகம்—7-வது அனுவாகத்தில் மந்தாதிகாரிகட்கேற்ப கண்கூடாகக் காண்பதற்குரிய குணங்களுடன் கூடின பிரும்மோபாஸனம் சொல்லப்படுகின்றது.

எட்டாவது அனுவாகம்—8-வது அனுவாகத்தில்வேதாந்தப் பிரதிபாத்யமானதும் பிரணவத்தாற் சொல்லப் படுவதுமான சுத்த நிர்க்குண பிரும்மோபாஸனஞ் சொல்லப்படுகின்றது.

ஒன்பதாவது அனுவாகம்—8-வது அனுவாகத்தில்பிரவணத்தினால் பிரம்மோபாஸனம் சொல்லப்பட் டிருப்பதினின்றும் கிரம முக்தி ஸித்திக்கக்கூடுமாயினும் சுருதி, ஸ்மிருதிகளிற் சொல்லிய நித்திய கர்மங்களையும் உத்தம தபஸ்ஸான பிரும்மயக்ஞத்தையும் செய்து கொண்டேதான் முற்கூறிய ஸகுணப்பிரும்மோபாஸனஞ் செய்யவேண்டுமென இந்த 9-வது அனுவாகத்தி லுபதேசிக்கப் படுகின்றது.

பத்தாவது அனுவாகம்—புத்திக்குறைவாலோ,வேறுகாரணத்தாலோ ஒருவன் வேதாத்தியயனஞ் செய்யாமைபற்றி உத்தம தபஸ்ஸான பிரும்மயக்ஞத்தைச் செய்யச்சக்தியற்றவனுயினும் அவனுக்கு பிரும்மயக்ஞ பலனுண்டாவதற்குரிய மந்திரஜபம் உபதேசிக்கப் படுகின்றது.

பதினொன்றுவது அனுவாகம்—கேவலகர்மங்களும் பிரும்மக்ஞான இச்சையையுண்டாக்கும் வாயிலாக மோக்ஷஹேதுக்களாக வாகின்றன என்பது இதிலுபதேசிக்கப்படுகின்றது.

பன்னிரண்டாவது அனுவாகம்—இதுவரை சொல்லிய விஷயங்களை யுபதேசிக்கும் கிரந்தாத்யயனத்தின் முடிவில் ஜபிக்க வேண்டிய மந்திரமிதிற் படிக்கப்படுகின்றது.

இவ்விஷயங்களடங்கிய இந்த சிக்ஷாவல்லியினுல் கிடைப்பது யாதெனில்? கூறுவாம்—மேலான மனிதப்பிறவியை யடைந்தவர் ஒவ்வொருவரும் தக்கவயதில் குருகுலவாஸஞ் செய்து நியம பூர்வகமாய் வேதத்தைக்கற்று பின்னர் குருவின் கட்டளைப்படி மணந்து கிருஹஸ்தனுகி அந்த ஆசிரமத்திற்குரிய நித்தியகர்மங்களை முறைதவருது செய்துவரல்வேண்டும். இவ்விதம் செய்யப்படும் கர்மங்கள் (1)காயிகம், (2) வாசிகம், (3) மானஸிகம் என 3 வகைப்படும். அவற்றுள் ஸ்தூலசரீரத்தாற் செய்யப்படும் தீர்த்தாடனம், தேவபூஜனம், அக்னிபூஜை முதலியன காயிக கர்மமாகும் பிரும்மயக்ஞம், வைதிக, தாந்திரிக, பௌராண மந்திரங்களையுச்சரித்தல் முதலியன வாசிக கர்மமாகும். மனதால் சாஸ்திரத்திற் சொல்லிய முறைபிறழாது அந்தந்த குணவிசேஷங்களுடன் ஸ்வேஷ்டபகவன்மூர்த்தியை யனுஸந்தானஞ்செய்தல் முதலியன மானஸிக கர்மமாகும். இம்மூன்றனுள் முதலாவது காயிகமான கர்மாவைச் செய்துவருங்கால் அவைமுடிந்ததும் இடையிலுள்ள காலங்களில் வெளியிலுள்ள விஷயங்களிலேயே அலைந்து திரியும் மனதைத் திருப்பி அந்தர்முகப்படுத்தும் வழியில் பழக்கிவரல் வேண்டும். அவ்விதம் அந்தர்முகப்படுத்த வாரம்பஞ்செய்யும் பொழுது பிரும்மசரியாசிரமத்தில் தான் கற்ற வேதங்களின் ஆதியிலுள்ளதும், முடிவிலுள்ளதும், இடையிலுள்ளதும் அவற்றின் தொடர்பும் ஆனவற்றில் இந்த சிக்ஷாவல்லியில் 3-வது அனுவாகத்திற் சொல்லிய முறைப்படி உபாஸனஞ் செய்யத் தொடங்க வேண்டும். இவ்வித முபாஸனஞ்செய்யச்செய்ய மனதிற்கு வெளியிலுள்ள வஸ்துக்களில் பிரவிருத்தி குறைய வாரம்பஞ் செய்யும். வெளியிலுள்ள வஸ்துக்களிற் பிரவிருத்தி குறையக்குறைய வெளியிலுள்ள வஸ்துக்களில் வைராக்யமும் பெருகிக்கொண்டே வரும். இவ்விதம் வெளிவிஷயப் பிரவிருத்திக் குறையும் வைராக்கியமும் பெருகப்பெருக தான் யார்? எங்கிருந்து வந்தோம்? எங்கு போகப் போகிறோம்? அங்கு நம்மை கார்ப்

பவர் யார்? என்ற எண்ண முதயமாகிக் கொண்டே வரும். இவ்விதமான எண்ண முதயமாகவே தான் வழுவாது செய்து வரும் புண்ணியமான நித்யகர்மங் காரணமாய் கர்மபல தாதா (கொடுப்பவர்) வான ஸ்வேஷ்டதேவதா பக்தியுண்டாகும். அவ்வித பக்தியுண்டானதும் இந்த சிக்ஷாவல்லியில் 5, 6-வது அநுவாகங்களிற் சொல்லியபடிக்கான பகவதுபாஸனஞ் செய்வதில் தீவிரமான பிரவிருத்தி யுண்டாகி அவ்வுபாஸனத்தையே இடைவிடாது செய்யும்பொழுது சித்தைகாக்ர்ய முண்டாகி விடுகிறது அவ்வித ஐகாக்ர்ய முண்டானதும் நித்யாநித்ய வஸ்து விவேகம், இகபரபோக வைராக்யம், சமம், தமம், விடல், ஸஹித்தல், சமாதானம், சிரத்தை ஆகிய ஸமாதி ஸம்பத்தும், முக்தியை விரும்பு மிச்சை ஆகிய இந்நான்கு ஸாதன நிறைவு முண்டாகி விடுகின்றது. ஆகமே "ஸாதனமின்றி யொன்றைச் சாதிப்பாருலகிலில்லை ஆதலாலிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண்டாகும்" எனக்கைவல்லியத்திலும்

अधीतेज्यादानव्रतजपसमाधाननियमै
र्विशुद्धस्वान्तानां जगदिदमसारं विमृशताम् ।
अरागद्वेषाणामभयचरितानां हितमिदं
मुमुक्षूणां हृद्यं किमपि निगदामः सुमधुरम् ॥

என ஸ்வாராஜ்யஸித்தியிலும் கூறியபடி பிரும்மோபதேசத்திற்கு யோக்யனாகவாகிவிடுவதுடன்,

जन्मानेकशतैस्सदाऽऽदरयुजा भक्त्या च सन्तोषितो
भक्तै र्वैदिकलक्षणेन विधिना सन्तुष्ट ईशः स्वयम् ।
साक्षाच्छ्रीगुरुरूपमेत्य कृपया दृग्गोचरस्सन् प्रभु
स्तत्त्वं साधुविबोध्य तारयति तान्संसारदुःखार्णवात् ॥

என ஸர்வவேதாந்த சித்தாந்த ஸாரஸங்க்ரஹத்தில் ஸ்ரீமத் பகவத்பாதாள் உபதேசித்திருக்கின்றபடி தன்னானுபாஸிக்கப்பட்ட இஷ்டதைவமே குரு மூர்த்தமாக வந்து தத்துவோபதேசஞ் செய்யவும் பெறுகிறான் என்றும் ஏற்பட்டது.

## இரண்டாவது பிரும்மவல்லீ

இந்தப் பிரும்மவல்லியில் 10 அநுவாகங்களுண்டு. அவற்றுள் முதலாவது அநுவாகத்தின் தொடக்கத்தில் சிக்ஷாவல்லியிற்

சொல்லியபடி ஸத்குரூபதேசமூலம் பிரும்மத்தை யறிந்த உத்தமாதிகாரியானவர் தனக்குள்ள அக்ஞானம் விலகி அகண்டஸச்சிதானந்த பிரும்மரூபமாகவே ஆகிவிடுகிறார் என்று உபதேசிக்கப்பட்டது. ஆனால் உத்தமாதிகாரிவிஷயத்தில் சாஸ்திரமானது இவ்வளவுடன் சரிதார்த்தமாக (தனதுகடன் முடித்ததாக) ஆகிவிடுகின்றதாயினும், देहाद्यध्यासदार्ढ्याच्छ्रुतमपि सहसा नैव संभाव-नीयं ब्रह्मत्वं स्वस्य என முன்னர் சொன்னப்டி தேஹாதி அத்தியாஸ வலுவுள்ளவர்க்கு பகவானே குருமூர்த்தமாக வந்து தத்வோபதேசஞ் செய்தபோதிலும் இடையிடையே ஸந்தேஹமுதயமாகுமாதலால் அதைவிளக்கவேண்டி முதலாவதனுவாகத்தில் तदेषाभ्युक्ता सत्यं ज्ञानमनन्तं ब्रह्म என்றுதொடங்கி 9-வது அனுவாகம் முடியவுள்ள பாகம் பிரவிருத்திக்கின்றது.

சிஷ்யனுடைய ஸந்தேஹமாவது—

(1) பிரும்மம் என்பது எது?
(2) அதைத் தெரிவிப்பது யாது?
(3) அதன் லக்ஷணம் என்னே?
(4) அதை நான் எவ்விதம் அறிவது?
(5) அதனால் எனக்குண்டாகும் பயன் என்னே? என்பதாம்.

இவற்றிர்க்கு முறையே குருரூபமான சுருதி பதில்கூறுகிறது. அதாவது:—

(1) பிரும்மமானது நிரதிசய பிருஹத்வமுள்ளது.
(2) அதை வேதாந்தத்தா லறியவேண்டும்.
(3) அது ஸத்யக்ஞான ஆனந்த ஸ்வரூபமானது. இதுவே அதன் ஸ்வரூப லக்ஷணமாகும்.
(4) இதுவே உனது ஹிருதயகுஹையிற் பிரகாசிக்கின்றது.
(5) ஸர்வானந்த நிதியான பிரும்மமாகவே நீ ஆகிவிடுகின்றாய் என்பதாம்.

இவ்வித வுபதேசத்திலும் திருப்தி யேற்படாத மந்தாதிகாரிக்கு பிரும்மத்தின் தடஸ்த லக்ஷணம் கூற வேண்டியும், அது ஹிருதய குஹையிற் பிரகாசிக்கும் முறையைக் கூறும் வாயிலாக பிரும்மமானது ஸர்வாதிஷ்டான மென்றும், அத்வைத மென்

பட்டிருக்கிறது. முதல் பிரபாடகத்தில் ஸம்ஹிதாத்யாயம் உப தேசிக்கப்பட்டிருப்பதால் அதற்கு ஸாம்ஹிதீ எனப்பெயரேற் பட்டது. பின்னர் 2, 3 வது பிரபாடகங்களில் உபதேசிக்கப்படும் பிரும்ம வித்தைக்கு ஸம்பிரதாய பிரவர்த்தகராக வருணன் இருப்பது பற்றி அவ்வருணன் பெயரை முன்னிட்டு அவ்வுப நிஷத்து வாருணீ என்றழைக்கப்படுகின்றது. 4 வது பிரபாட கத்தில் யக்ஞோபயுக்தமான மந்திரங்கள் படிக்கப்பட்டிருப்ப தால் அவ்வுபநிஷத்து யாக்ஞிகீ என்றழைக்கப் படுகின்றது. ஸாம்ஹிதீ, வாருணீ, யாக்ஞிகீ என்ற இம்மூன்றனுள் வாருணீ என்ற உபநிஷத்தில் பிரும்மப் பிராப்தி லக்ஷணமான பரம புருஷார்த்தமானது உபதேசிக்கப்பட்டிருப்பதுபற்றி மற்றவை களைவிட இந்த வாருணீ உபநிஷத்தானது மிக்கச்சிறந்த தாக வாகும்.

அங்ஙனமாயின் "अभ्यर्हितंपूर्वं" சிறந்ததை முன்னர் கூறல் வேண்டும் என்றபடி வாருணீ உபநிஷத்தை யன்றோ முத வில் படிக்கவேண்டும். அவ்வித மிருக்க ஸாம்ஹிதீ உபநிஷத் தை முதலில் படித்ததின் காரணம் யாதெனின்? கூறுவாம். ஸாம்ஹிதீ என்ற உபநிஷத்தைப்படித்து அதிற்சொல்லியபடி யெல்லாம் அனுஷ்டிப்பவனுக்கே வாருணீ என்ற உபநிஷத்தில் உபதேசிக்கப்படும் பிரும்ம வித்யையில் அதிகாரம் ஏற்பட வேண்டி யிருப்பதால், அதிகாரஸம்பத்தைத்தரும் ஸாம்ஹிதீ என்ற உபநிஷத்தானது முதன் முதலில் படிக்கப்பட்டது. ஆனால் வித்யையில் விருப்பமுள்ளவனுக்கு வித்யையில் அதிகா ரமோ, பிரும்மத்தை யறியவேண்டும் என்ற எண்ணமோ, கர்மங் களாலுண்டு பண்ணப்படு கின்றதெனலாம். அங்ஙனமாயினும் கர்மங்களால் சித்தத்தில் ஐகாக்ரியமானது உண்டுபண்ணப் படுவ தில்லை. அத்துடன் கர்மமார்க்கத்தில் பிரவிருத்தி யதிகமாயிருப் பதுபற்றி சித்தத்திற்கு விக்ஷேபவாஸனையே மேல் நோக்கி நிற் கின்றது. சித்தத்திலுண்டாகும் ஐகாக்ர்யமானது பிரும்மஸாக்ஷா த்கார முண்டாவதற்கு முக்யஸாதனமாகும். இவ்விதமே.

दृश्यते त्वग्र्यया बुद्धया सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः ॥

அநுபவத்திற் கண்ட விஷயமாதலாலும் 5-வதான ஆனந்தமய கோசத்தையே குஹை என்றும், பரமவ்யோம வென்றும் முன்னர் சொல்லியிருப்பதாலும் ஆகாசந் தொடங்கி ஆனந்தமயம் முடியவுள்ள ஸகல வஸ்துவுக்கும் பிரும்மமே காரணமாகவாவதாலும், காரணமான அந்தப் பிரும்மமானது ஆகாசாதி ஆனந்தமயாந்தமான உலகைப் படைத்து தானும் அதில் பிரவேசத்தை யடைந்திருப்பதாலும் பரமவ்யோம, குஹை முதலியவற்ருற் சொல்லப்படும் பதார்த்தத்தில் ஸர்வாந்தரமாகப் பிரகாசிப்பது ஸர்வகாரணமான பிரும்மமே யொழிய ஜீவனில்லை என்றும் உபதேசிக்கவேண்டியே சிருஷ்டியும், பிரவேசமும், அன்னமயம் முதல் ஆனந்தமயன் முடியவுள்ள ஐந்து கோசங்களும் உபதேசிக்கப்பட்டன. இதுவரை 5 அநுவாகத்தின் பொருள் முடிந்தது. இவ்விதம் 5-வது அநுவாகத்திற் கூறிய ஆனந்தமயனுக்கு ஆதாரமாக பிரும்மம் இருக்குமானல் பிரும்மமானது க்ஞானி, அக்ஞானி எவர்க்கும் ஸமமானது என்றே ஏற்படும். அவ்விதம், பிரும்மம் ஸர்வஸம்மாக வாகும்பொழுது பிரும்மவித்தானவர் பிரும்மத்தை யடைகிருர் என்ருல் பிரும்மத்தை அறியாதவனும் பிரும்மத்தை யடைகிருன் என்று தான் சொல்லவேண்டி வரும். ஏனெனில் பிரும்மமானது ஸர்வஸமமாக இருப்பதே அதன் காரணமுமாகும் என்ற சங்கை உதயமாகிறது. இந்த சங்கையானது 6 முதல் 9 முடியவுள்ள 4 அநுவாகங்களாற் போக்கப்பட்டிருக்கிறது. அதாவது:—அவித்யாதி தோஷத்தால் அவித்வானுக்கு பிரும்மப்ராப்தியில்லை யென்றும், வித்யாப்ரபாவத்தால் வித்வானுக்கு பிரும்மப்ராப்தி யேற்படுகின்றதென்றும், கண்டுகொள்ள வேண்டும் என்பதாம். ஆகவே முற்கூறியபடி மந்தாதிகாரிக் குதயமான சங்கைகளை குரு ஸ்தானத்திலுள்ள சுருதியானது விளக்கிவிட்டபடியால் மந்தாதிகாரியும் பிரும்ம ப்ராப்திக்கு அதிகாரியாகிவிடுகிருன் என்றும் கண்டுகொள்ள வேண்டும். இதுடன் பிரும்மவல்லீ முடிகின்றது. பிறகு

### மூன்ருவது பிருகுவல்லீ ஆரம்பமாகின்றது.

இதுவரை கூறிய பிரும்ம வித்யையை யடைவதற்கு சித்தைகாக்ர்ய (மனதை ஒருமுகப் படுத்தல்) ரூபமான தபஸ்ஸே மிக்க

மேலானதென உபதேசிக்க வேண்டி, வருணன், தனது அருமைப் புதல்வரான பிருகுவுக்கு அதை யுபதேசித்தார் என ஒரு கதையைச் சுருதி சொல்லத் தொடங்குகிறது. இக்கதையினின்றும் எத்தகைய உயர்குடிப் பிறந்தவரேனும், பிரும்மத்தை யடைய விரும்புவரேல் மனதை ஒரு முகப்படுத்தி அன்னாதிகளான ஸ்தூலங்கள் யாவையும் இதன்றிதன்றென விலக்கி ஸர்வ சூக்ஷ்மமான பிரும்மத்தை அறிந்தாலல்லாது மோக்ஷப்ராப்த்தியானது ஒருபொழுதுமவர்க் குண்டாகாதென்பது பெறப்பட்டது. இம்மாதிரி பிருகுவல்லி முடிகிறது.

ஆகவே பிரும்மதத்துவத்தை ஈசம், கேனம், கடம், ப்ரச்னம், முண்டகம், மாண்டூக்யம், ஐதரேயம், சாந்தோக்யம், பிருஹதாரண்யகம் முதலிய உபநிஷத்துக்கள் பற்பலமாதிரியாக உபதேசிக்கின்றனவாயினும் இந்த தைத்திரீயோபநிஷத்தில் அது வெகு தெளிவாயும், சுளுவாயுமுள்ள முறையிலுபதேசிக்கப் பட்டிருப்பது இதனின்றும் நன்கு விளங்கும். ஆகவே அதிருஷ்ட வசத்தாற்கிடைத்த மிக்க மேலான இம்மனிதப்பிறவியை வீணாக்காமல் ஆத்மதத்வ விசாரஞ் செய்து அதைநாம் பயன் படுத்திக் கொள்ளுவோமாக.

சுபம்.

ஓம் தத் ஸத்

॥श्रीगोपालश्शरणम्॥

ஸ்ரீ கோபாலன் துணை.

கட்டலங்குடி நடேச சாஸ்திரிகள்.



# விஷய அட்டவணை.

## சிக்ஷாவல்லீ 1.

---

முதலாவது அநுவாகம். பக்கம்.



***

பக்கம்.

நான்காவது அனுவாகம்.



ஐந்தாவது அனுவாகம்.

பன்னிரண்டாவது அனுவாகம்.



## இரண்டாவது பிரும்மவல்லீ.

முதலாவது அனுவாகம்.

* * * *

பக்கம்.

வித்யாரண்ய தீபிகை.



விசிஷ்டாத்வைதம்.



மூன்றாவது அனுவாகம்.

ஏழாவது அனுவாகம்.



வித்யாரண்ய தீபிகை.

பக்கம்.



* * * * *

விசிஷ்டாத்வைதம்.



விஷய அட்டவணை முற்றிற்று.

குறிப்பு — இப்புஸ்தகத்தில் அடிமுதல் 4 பாரம் சிவகாமி விலாஸம் அச்சாபீஸிலும், 5-வது பாரம் லாப்ருண்டிங் ஹௌஸிலும், மீதமுள்ள பாரங்கள் நமது ஆர்யமத ஸம்வர்த்தனி அச்சாபீஸிலும் அச்சடிக்கப்பட்டன.

---

## अद्वैतसिद्धान्तानुसारि शान्तिपाठक्रमः ॥

नारायणं पद्मभुवं वसिष्ठं शक्तिञ्च तत्पुत्रपराशरञ्च ।
व्यासं शुकं गौडपदं महान्तं गोविन्दयोगीन्द्रमथास्य शिष्यम्॥

श्रीशंकराचार्यमथास्य पद्मपादञ्च हस्तामलकं च शिष्यम् ।
तं तोटकं वार्तिककारमन्यानस्मद्गुरून्सन्ततमानतोऽस्मि ॥

सदाशिवसमारंभां शंकराचार्यमध्यमाम् ।
अस्मदाचार्यपर्यन्तां ब्रह्मविद्यां विभावये ॥

नमः श्रुतिशिरःपद्मषण्डमार्ताण्डमूर्तये ।
बादरायणसंज्ञाय मुनये शमवेश्मने ॥

ब्रह्मसूत्रकृते तस्मै वेदव्यासाय वेधसे ।
ज्ञानशक्त्यवताराय नमो भगवतो हरेः ॥

ॐ शन्नो मित्रः। शं वरुणः। शन्नो भवत्वर्यमा। शन्न इन्द्रो बृहस्पतिः। शन्नो विष्णुरुरुक्रमः। नमो ब्रह्मणे। नमस्ते वायो। त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि। त्वमेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि। ऋतं वदिष्यामि। सत्यं वदिष्यामि। तन्मामवतु। तद्वक्तारमवतु। अवतु माम्। अवतु वक्तारम्। ॐ शान्तिः शान्तिः शान्तिः॥ ॐ। सह ना ववतु। सहनौ भुनक्तु। सह वीर्यं करवावहै। तेजस्विनावधीतमस्तु माविद्विषावहै॥ ॐ शान्तिः...तिः॥ यः छन्दसामृषभो विश्वरूपः। छन्दोभ्योऽध्यमृतात्संबभूव। समे-

न्द्रो मेधया स्पृणोतु। अमृतस्य देव धारणो भूयासम्। शरीरं मे विचर्षणम्। जिह्वा मे मधुमत्तमा। कर्णाभ्यां भूरिविश्रुवम्। ब्रह्मणः कोशोसि मेधया पिहितः। श्रुतं मे गोपाय॥ ॐ शान्तिः...तिः। अहं वृक्षस्य रेरिवा। कीर्तिः पृष्ठं गिरेरिव। ऊर्ध्वपवित्रो वाजिनीव स्वमृतमस्मि। द्रविणꣳसवर्चसं। सुमेधा अमृतोक्षितः। इति त्रिशंकोर्वेदानुवचनम्। ॐशान्तिः...तिः॥ आवहन्ती वितन्वाना। कुर्वाणा चीरमात्मनः। वासाꣳसि मम गावश्च। अन्नपाने च सर्वदा। ततो मे श्रियमावह॥ ॐ शान्तिः...तिः॥ आप्यायन्तु ममाङ्गानि। वाक्प्राणः चक्षुश्श्रोत्रमथोबलमिन्द्रियाणि च सर्वाणि सर्वं ब्रह्मोपनिषदं माहं ब्रह्म निराकुर्यां। मामा ब्रह्मनिराकरोत्। अनिराकरणमस्तु। अनिराकरणंमेऽस्तु। तदात्मनि निरते। य उपनिषत्सु धर्माः ते मयि सन्तुतेमयि सन्तु। ॐशान्तिः...तिः॥ पूर्णमदः पूर्णमिदं पूर्णात्पूर्णमुदच्यते। पूर्णस्य पूर्णमादाय पूर्णमेवावशिष्यते। ॐ शान्तिः...तिः॥ भद्रं नो अपिवातय मनः। ॐ शान्तिः...तिः॥ भद्रं कर्णेभिः श्रृणुयाम देवाः। भद्रं पश्येमाक्षभिर्यजत्राः। स्थिरैरंगैः स्तुष्टुवाꣳसस्तनूभिः। व्यशेम देवहितं यदायुः। स्वस्तिन इन्द्रो वृद्धश्रवाः। स्वस्ति नः पूषा विश्ववेदाः। स्वस्ति नस्ताक्ष्र्यो अरिष्टनेमिः। स्वस्ति नोबृहस्पतिर्दधातु॥ ॐशान्तिः...तिः॥ यो ब्रह्माणं विदधाति पूर्वं। यो वै वेदांश्च प्रहिणोति तस्मै। तꣳह देव मात्मबुद्धिप्रकाशं। मुमुक्षुर्हं वै शरण महं प्रपद्ये। ॐ शान्तिः...तिः॥ ॐ नमो ब्रह्मादिभ्यो ब्रह्मविद्यासंप्रदायकर्तृभ्यो वंशऋषिभ्यो अस्मादाचार्यपर्यन्तेभ्यो गुरुभ्यः॥



## अधीहि नो भगवः॥

### श्री दक्षिणामूर्त्यष्टक प्रारंभः॥

मौनव्याख्याप्रकटितपरब्रह्मतत्वं युवानं
वर्षिष्ठान्तेवसदृषिगणैरावृतं ब्रह्मनिष्ठैः।
आचार्येन्द्रं करकलितचिन्मुद्रमानन्दमूर्तिं
स्वात्मारामं मुदितवदनं दक्षिणामूर्तिमीडे॥

विश्वं दर्पणदृश्यमाननगरीतुल्यं निजान्तर्गतं
पश्यन्नात्मनि मायया बहिरिवोद्भूतं यथा निद्रया।

यस्साक्षात्कुरुते प्रबोधसमये स्वात्मानमेवाऽद्वयं
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्री दक्षिणामूर्तये ॥ १ ॥

बीजस्याऽन्तरिवाङ्कुरो जगदिदं प्राङ्निर्विकल्पं पुन-
र्मायाकल्पितदेशकालकलनावैचित्र्यचित्रीकृतम् ।
मायावीव विजृंभयत्यपि महायोगीव यस्स्वेच्छया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ २ ॥

यस्यैव स्फुरणं सदात्मकमसत्कल्पार्थकं भासते
साक्षात्तत्वमसीति वेदवचसा यो बोधयत्याश्रितान् ।
यत्साक्षात्करणाद्भवेन्न पुनरावृत्तिर्भवांभोनिधौ
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ३ ॥

नानाच्छिद्रघटोदरस्थितमहादीपप्रभाभास्वरं
ज्ञानं यस्य तु चक्षुरादिकरणद्वारा बहिःस्पन्दते ।
जानामीति तमेवभान्तमनुभात्येतत्समस्तं जग-
त्तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ४ ॥

देहं प्राणमपीन्द्रियाण्यपि चलां बुद्धिं च शून्यं विदुः
स्त्रीबालांधजडोपमास्त्वहमिति भ्रान्ता भृशं वादिनः ।
मायाशक्तिविलासकल्पितमहाव्यामोहसंहारिणे
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ५ ॥

राहुग्रस्तदिवाकरेन्दुसदृशो मायासमाच्छादना
त्सन्मात्रः करणोपसंहरणतो यो ऽभूत्सुषुप्तः पुमान् ।
प्रागस्वाप्समिति प्रबोधसमये यः प्रत्यभिज्ञायते
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ६ ॥

बाल्यादिष्वपि जाग्रदादिषु तथा सर्वास्ववस्थास्वपि
व्यावृत्तास्वनुवर्तमानमहमित्यन्तस्स्फुरन्तं सदा ।
स्वात्मानं प्रकटीकरोति भजतां यो मुद्रया भद्रया
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ७ ॥

विश्वं पश्यति कार्यकारणतया स्वस्वामिसंबन्धत
श्शिष्याचार्यतया तथैव पितृपुत्राद्यात्मना भेदतः ।
स्वप्ने जाग्रति वा य एष पुरुषो मायापरिभ्रामितः
तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ८ ॥

भूरम्भांस्यनलोऽनिलोऽम्बरमहर्नाथो हिमांशुः पुमा
नित्याभाति चराचरात्मकमिदं यस्यैव मूर्त्यष्टकम् ।
नान्यत्किंचनविद्यते विमृशतां यस्मात्परस्माद्विभो
स्तस्मै श्रीगुरुमूर्तये नम इदं श्रीदक्षिणामूर्तये ॥ ९ ॥

सर्वात्मत्वमिति स्फुटीकृतमिदं यस्मादमुष्मिन्स्तवे
तेनाऽस्य श्रवणात्तदर्थमननाद्ध्यानाच्च संकीर्तनात् ।
सर्वात्मत्वमहाविभूतिसहितं स्यादीश्वरत्वं स्वत
स्सिद्ध्येत्तत्पुनरष्टधा परिणतं चैश्वर्यमव्याहतम् ॥ १० ॥

वटविटपिसमीपे भूमिभागे निषण्णं
सकलमुनिजनानां ज्ञानदातारमारात् ।
त्रिभुवनगुरुमीशं दक्षिणामूर्तिदेवं
जननमरणदुःख छेददक्षं नमामि ॥ ११ ॥

चित्रं वटतरोर्मूले वृद्धाश्शिष्या गुरुर्युवा ।
गुरोस्तु मौनं व्याख्यानं शिष्यास्तु छिन्नसंशयाः ॥१२॥

चिद्घनाय महेशाय वटमूलनिवासिने ।
सच्चिदानन्दरूपाय दक्षिणामूर्तये नमः ॥ १३ ॥

अङ्गुष्ठतर्जनीयोगमुद्राव्याजेन देहिनाम् ।
श्रुत्यर्थं ब्रह्मजीवैक्यं दर्शयन्नोऽवताच्छिवः ॥ १४ ॥

उत्तरशान्तौ—त्वामेव प्रत्यक्षं ब्रह्मावादिषं ऋतमवादिषं सत्यमवादिषम् । तन्मामावीत् । तद्वक्तारमावीत् । आवीन्माम् आवीद्वक्तारम् ॐ शान्तिः शान्तिः शान्तिः इति विशेषः ॥

॥ श्रीः ॥

॥ शाश्वतधर्मगोप्त्रे श्रीमते वासुदेवाय नमः ॥



# ॥ तैत्तिरीयोपनिषत् ॥



# தைத்திரீயோபநிஷத்.

## प्रथमा शिक्षावल्ली ॥

यस्माद्विश्वमुदेति यत्र निवसत्यन्ते यदप्येति य
त्सत्यज्ञानसुखस्वरूपमवधिद्वैतप्रणाशोज्झितम् ।
यज्जागृत्स्वपनप्रसुप्तिषु विभात्येकं विशोकं परं
प्रत्यक्ब्रह्म तदस्मि यस्य कृपया तं देशिकेन्द्रं भजे ॥

## ஸ்ரீ சங்கர பகவத்பாத பாஷ்யம்.

### முன்னுரை.

ஸர்வக்ஞசிகாமணிகளான ஸ்ரீ சங்கரபகவத்பாதாசார்ய பாஷ்யகாரர் அவர்கள் தைத்திரீயோபநிஷத்திற்கு பாஷ்யம் செய்யத் தொடங்குமுன்னர் தாம்செய்ய உத்தேசித்திருக்கும் லோகோபகாரமான பாஷ்யரசனம் என்ற மாபெருங்காரியமானது எவ்வித இடையூறுமின்றி நிறைவேற வேண்டி, ஸ்வானுபூதபரமாத்

னுஸந்தானரூப மங்களா சரணத்தைச் செய்கின்றவர்களாய்க் கொண்டு ஸர்வோபனிடதங்களின் முக்யதாத்பர்ய விஷயமான பப்பிரும்மத்தை * தடஸ்த ஸ்வரூப லக்ஷணங்களால் விளக்கிக் காட்டுகின்றனர்.

यस्माज्जातं जगत्सर्वं यस्मिन्नेव प्रलीयते ।
येनेदं धार्यते चैव तस्मै ज्ञानात्मने नमः ॥

(ப - ரா) **यस्मात्**=எதனின்றும் **सर्वम्**=எல்லாவிதமான **जगत्** ஜகத்தானது **जातं**=உண்டாயிற்றோ **यस्मिन्नेव**=எதனிடத்திலேயே **प्रलीयते**=ஒடுங்குகின்றதோ **च**=மேலும் **येनैव**=எதனாலேயே **इदम्**= இந்த ஜகத்தானது **धार्यते**=நிலைத்து நிற்கும்படி செய்யப்படுகின்றதோ **ज्ञानात्मने**=ஞானவடிவமான **तस्मै**=அதின் பொருட்டு **नमः**= நமஸ்காரம்.

(அ - கை) குரு பக்தியானது வித்யாப்ராப்திக்கு அந்தரங்க ஸாதனம் என விளக்கப்படுகின்றது.

यैरिमे गुरुभिः पूर्वं पदवाक्यप्रमाणतः ।
व्याख्याताः सर्ववेदान्ता स्तान्नित्यं प्रणतोऽस्म्यहम् ॥

(ப - ரை) **पूर्वं**=எனக்கு முன்னர் **यैः**=எந்த **गुरुभिः**=ஆசார்ய புருஷர்களால் **इमे**=இந்த **सर्ववेदान्ताः**=எல்லா வேதாந்தங்களும் **पद, वाक्य, प्रमाणतः**=வியாகரணம், மீமாம்ஸா, நியாயம் இவைகளின் உதவியைக்கொண்டு **व्याख्याताः**=வியாக்யானம் செய்யப்பட்டனவோ **तान्**=அந்தகுருக்களை **नित्यं**=எப்பொழுதும் **प्रणतः**=நமஸ்கரித்தவனாக **अस्मि**=இருக்கின்றேன்.

(தா - ம்) **आचार्यवान्पुरुषोवेद** "ஆசார்யபக்தியுள்ளவனுக்கே வித்யாப்ராப்தி ஏற்படும்" என்ற வசனத்தால் ஆசார்யபக்தியா

---

* தடஸ்தலக்ஷணம், ஸ்வரூப லக்ஷணம் இவை இன்னதென்பதையும், இவற்றால் அத்விதீயபாமாத்மவஸ்து பிரித்துக்காட்டப்படுவது எங்ஙனம் என்பதையும் பிரும்ம வல்லியில் **तस्माद्वा एतस्मादात्मन आकाशस्संभूतः** என்ற விடத்தில் காண்க.

னது வித்யாப்ராப்திக்கு அந்தரங்க ஸாதனம் எனவேற்படுவதால் தான் குருபக்தி செய்யும் வாயிலாக "பிரும்ம வித்யையில் பற்றுள்ளவர் குருபக்தி செய்தல் அவசியம்" என இதனையுபதேசித்தனர்.

(அ - கை) குரு வந்தனம் செய்தபின்னர் தாம் செய்ய உத்தேசித்திருக்கும் கார்யத்தை இந்தச்சுலோகத்தால் தெரிவிக்கின்றனர்.

तैत्तिरीयकसारस्य मयाऽऽचार्यप्रसादतः ।
विस्पष्टार्थरुचीनां हि व्याख्येयं संप्रणीयते ॥

(ப - ரை) **विस्पष्टार्थरुचीनां**=எவ்வித ஸந்தேகமுமில்லாத அர்த்தத்தில் ருசியுள்ளவர்களுக்குவேண்டி **मया**=என்னால் **तैत्तिरीयकसारस्य**=தைத்திரீயக சாகையிலுள் சிறந்தபாகமான இந்த உபநிஷத்திற்கு **इयं**=இந்த **व्याख्या**=பாஷ்யமானது **आचार्यप्रसादतः, हि**=ஆசாரியபிரஸாதத்தாலன்றோ **संप्रणीयते**=நன்றாய் செய்யப்படுகின்றது.

(தா - ம்) எவ்வித ஸந்தேஹமும் முதயமாகாமல் தெளிவாய்த் தைத்திரீயோபநிஷத்தின் பொருளையறிய விருப்பமுள்ள சிஷ்யர்களுக்கு வேண்டி எனது ஆசார்ய கிருபையை முன்னிட்டு, (அதாவது: எனது குருவின் உபதேசமூலம்) கிடைத்தபொருளை இந்த பாஷ்யரசன மூலம் நான் வெளியிட்டிருப்பதால், நான் இந்த பாஷ்யத்தில் கூறியுள்ள பொருள் யாவும் ஆசார்யபரம்பரையை யொட்டி ஏற்பட்டதென்றும், பின்னுள்ளவர்களும் ஆசார்யபரம்பரையாகவே இதன் பொருளைத்தெரிந்து கொள்ளுதல் வேண்டும் என்றும் இதனையுபதேசிக்கப்பட்டது.

யஜுர்வேதத்திலுள்ள இவ்வுபநிஷத்திற்கு முந்தியபாகமான கர்மகாண்டத்தில், பிராப்தமான துரிதங் (பாபங்)களின் நாசத்தை பிரயோஜனமாயுடைய நித்யகர்மங்களும், பலனில் விருப்பமுள்ளவர்க்கு காம்யகர்மங்களும் உபதேசிக்கப்பட்டன. இப்பொழுது கர்மங்களின் உபாதான காரணமான அவித்யையை விலக்கவேண்டி பிரும்ம வித்யை தொடங்கப்படுகின்றது.

அவித்யா கார்யமான காமமானது கர்மத்திற்குக் காரணம். பலேச்சையே பிரவிருத்தியை யுண்டுபண்ணுகிறது. ஸ்வரூபானந்தத்தை யடைந்தவர்க்கு அடையவேண்டிய வேறு பதார்த்த மில்லாத பொழுது, அவ்விஷயமான காமனையே உண்டாகாமல் போகவே ஸ்வரூபானந்தத்தில் நிலை ஏற்பட்டு விடுவதி லிருந்து பிரவிருத்தி ஏற்படுவதற்கில்லையன்றோ! ப்ரத்யகாத்மஸ்வரூபத்தில் ஆசையுள்ள வனுயிருத்தலே ஆப்தகாமத்வம் எனப்படும். ப்ரத்யகாத்மஸ்வரூபமே பிரும்ம ஸ்வரூபமாகின்றது. "பிரும்ம வித்தானவன் பரத்தையடைகின்றான்" என உபதேசிக்கப்போகின்றது. ஆனதுபற்றி அவித்யாநி விருத்தி ஏற்பட்டதும் ஸ்வாத்மஸ்வரூபாவஸ்தான மாகிற பரப்ராப்தி சித்திக்கின்றது. இவ்விதமே **अभयं प्रतिष्ठां विन्दते** "பயஹேதுவான த்விதீய பதார்த்த மற்ற ஸ்வாத்மஸ்வரூபாவஸ்தானம் என்ற நிலையை எப்பொழுது அடைகிறானோ அப்பொழுதே அபயத்தை யடைந்தவனாகின்றான்" என்றும், **एतमानन्दमयमात्मानमुपसंक्रामति** "இந்த ஆனந்தமய ஆத்மாவை பரித்யாகம்செய்கின்றான், அதாவது: ஆனந்தமயனான ஜீவனிடத்திலுள்ள ஆத்மபுத்தியைவிலக்குதல் என்ற சுத்த பிரும்மப்ராப்தியை யடைகிறான்" என்றும் இதே உபநிஷத்திலுபதேசிக்கப்பட்டிருக்கிறது.

## கர்மத்தாலேயே மோக்ஷ ஸித்தி ஏற்படும் என்றவாதம்.

சங்கை:—கர்மங்கள் காம்யங்களென்றும், நிஷித்தங்களென்றும், நித்யங்களென்றும், மூன்று வகைப்படும். அவற்றுள், காம்யங்களும், நிஷித்தங்களும் சஞ்சிதங்கள் பிராரப்தங்கள், ஆகாமிகள் என மூன்றுவகைப்படும். முன் ஜன்மத்தில் செய்யப்பட்டு பலனைத்தர வேண்டியதாக எஞ்சியிருப்பவைகள் "சஞ்சிதங்கள்" என்றும், பலனைக்கொடுக்க ஆரம்பித்தவைகள் "பிராரப்தங்கள்" என்றும், பின்னர் பலனைத்தரக்கூடியதாக இந்த ஜன்மத்தில்செய்யப்படுவன "ஆகாமிகர்மங்கள்" என்றும் சொல்லப்படும். ஆகவே காம்யகர்மங்களையோ, சாஸ்திரத்தால் விலக்கப்பட்ட கர்மத்தையோ இந்த ஜன்மத்தில் செய்யாதிருத்தலாலும், பலனைக்கொடுக்கின்ற பிராரப்த கர்மங்களை, அநுபவத்தால் தேய்த்து விடுவதா

லும், நித்ய கர்மங்களை வழுவாது நடத்தி வருவதிலிருந்து ப்ரத்யவாயம் என்ற பந்தத்தைத்தரும் தோஷம் நேராதாகையாலும், இவற்றிற்குப்புறம்பான வேறு முயற்சியின்றியே ஸ்வாத்மாவஸ்தானம் என்ற மோக்ஷமானது சித்தித்து விடலாம். அல்லது,

यन्नदुःखेन संभिन्नं न च ग्रस्तमनंतरम् ।
अभिलाषोपनीतंच तत्सुखं स्वःपदास्पदम् ॥

"துக்கஸம்பந்தமற்றதும், பிறகு அழிவையடையாததும், இச்சைக்குத்தக்கபடி நேரக்கூடியதுமான ஸுகம் யாதுண்டோ அதுவே ஸ்வர்க்கம் என்ற சப்தத்தால் சொல்லப்படும்" என்ற மூதுரைப்படி ஸ்வர்க்கசப்தத்தால் சொல்லப்படுகின்ற நிரதிசயப்ரீதியானது கர்மமூல முண்டாவதால் கர்மானுஷ்டானங்களினின்றே மோக்ஷ முண்டாகலாம் எனின் ?

ஸமாதானம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை.ஏனெனில் கர்மங்கள் பற்பலவிதமா யிருத்தலே அதன்காரணமாகும். அதாவது சென்ற வெகு ஜன்மங்களில் செய்யப்பட்டவைகளும், ஒன்றிற்கொன்று நேர்மாறான பலன்களைத்தருகின்றவைகளும், பலனைக்கொடுக்க ஆரம்பித்தவைகளும், பலனைக்கொடுக்க ஆரம்பம் செய்யாதவைகளுமான அனேக கர்மங்கள் ஸம்பவிக்கக்கூடும் என்பது வெளிப்படையன்றோ ? இக்காரணத்தை முன்னிட்டு முற்கூறிய கர்மங்களுள் பலனைத்தராது எஞ்சி யிருக்கும் ஸஞ்சித கர்மங்களுக்கு ஒரே ஜன்மத்திலுள்ள அனுபவத்தால் தேய்தல் சம்பவிக்கா தாகையால், அனுபவிக்கவேண்டியதாய் மீதமுள்ள கர்மங்கள் காரணமாக புதிதான சரீராரம்பம் வந்தே தீரும் என்பதற்கு யுக்தியும், பொருத்தமுமிருக்கின்றது. மேலும்.

"तद्य इह रमणीयचरणाः—" "ततश्शेषेण—"

"ஆனதுபற்றி எவர் நற்கார்யம் செய்கின்றனரோ அவர் பிராம்மணப் பிறவியையடைகின்றனர்" என்றும், "அனுபவிக்க வேண்டியதாக எஞ்சியிருக்கும் கர்மசேஷத்தாலேயே அக்கர்மத்திற்குத்தக்கவாறுய ஜன்மத்தையடைகின்றான்" என்றும் சுருதி,

ஸ்மிருதிகள் உபதேசிப்பதிலிருந்து ஸஞ்சிதகர்மங்கள் எஞ்சி யிருப்பதாகவே தெளிவாகிறது.

பூர்வபக்ஷி—சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட நித்திய கர்மங் கள் இஷ்டானிஷ்ட பலன்களையுடைய அனாரப்த (ஸஞ்சித) கர் மங்களைத்தேய்த்து விடக்கூடியவைகள் என்னின் ?

ஸித்தாந்தி—உனது சித்தாந்தத்தில் நித்யகர்மத்தைச் செய் யாதிருத்தலைக்காரணமாக உடையதும், துக்கரூபமானதும், இனி வரப்போகின்றதுமான பிரத்யவாயம் என்ற பாபத்தைத்தடுப்பத ற்காகவே நித்யகர்மங்கள் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டன என்று தீர்மானிக்கப்பட்டிருப்பதால் அதன்படி நித்யகர்மங்கள் அனாரப்த பலனையுடைய கர்மங்களை (அதாவது: சஞ்சிதகர்மங் களை) நாசம்செய்யச்சக்தியற்றவைகளாயாகிவிடுகின்றன. மேலும் அனாரப்த பலனையுடைய கர்மங்களை (ஸஞ்சித கர்மங்களை) நித்ய கர்மங்கள் நாசமாக்குவதாக ஒப்பினும் பாபகர்மங்களைப் போ க்குமேயின்றி புண்யகர்மங்களை ஒருபொழுதும் நாசமாக்காது. ஏனெனில் புண்யத்திற்கும்; பாபத்திற்கும் உள்ள விரோதம் போல ஒரு புண்யத்திற்கும், மற்றொரு புண்யத்திற்கும் ஒன்றுக் கொன்று விரோதமேற்படுவதற்கிடமில்லை. விரோத மில்லாமை பற்றி புண்யகர்மத்தால் புண்யகர்மம் நாசமாவதில்லை. சுத்தத்திற் கும், அசுத்தத்திற்கும் அன்றோ விரோத மேற்படுவதை லோகா னுபவத்திற்காண்கிறோம். சுபமான பலனையுடைய கர்மாவானது சுத்தமாயிருப்பதுபற்றி சுத்தமான நித்யகர்மங்களோடு ஒரு பொழுதும் விரோத மேற்படாது. மேலும் ஆத்மதத்துவக்ஞான முண்டாகாதவரை கர்மஹேதுக்களான காமங்களுக்கு நிவிருத்தி ஸம்பவிக்கா தாகையால் எல்லாக்கர்மங்களும் நாசமாகி விடும் என்று ஒரு பொழுதும் உறுதி கூறமுடியாது. ஆத்மதத்துவக் ஞானம் எவனுக்கில்லையோ அவனுக்கே காமம் உண்டென்பது அனுபவசித்தமானது. ஆத்மதத்துவக்ஞானமுள்ள வனுக்கோ காமனையுண்டாவதற்கிடமில்லை. காமனை என்பது தன்னை விட வேறானதும், அடையப்படாததுமான பலன் விஷயத்தில் தானு ண்டாகும். தனது ப்ரத்யகாத்மஸ்வரூபத்திலோ காமனை யுண்டா

வதற்கிடமில்லை. நித்யப்ராப்தமாயிருத்தலே அதன் காரண மாகும். இந்த ப்ரத்யகாத்மாவோ பரம் ப்ரும்மம் என **अयमात्मा ब्रह्म** என்றவாக்ய முபதேசிக்கிறது.

மேலும் நித்யகர்மத்தைச்செய்வதால் ப்ரத்யவாயம் என்ற பாபம் சம்பவிப்பதில்லை என்று சொன்ன பூர்வபக்ஷியின் வாக்ய த்திலிருந்து ப்ரத்யவாயரூபமான பாபமானது நித்யத்தைச்செய் யாதிருத்தல் என்ற அபாவத்தினின்றும் உண்டாகின்றதெனகூற ப்பட்டதாயேற்படுகிறது. அதையும் பர்யாலோசித்தால் அவ்வி தம் சித்திப்பதற்கிடமில்லை. ஏனெனில்? நித்யத்தைச் செய்யா திருத்தல் என்பது அபாவமாகும். அதனின்றும் (அபாவத்தினி ன்றும்) ப்ரத்யவாய (பாப) ம் என்ற பாவவஸ்து ஒருபொழுதும் உண்டாவதற்கிடமில்லை.

अकुर्वन्विहितं कर्म निन्दितं च समाचरन् ।
प्रसजंश्चेन्द्रियार्थेषु नरः पतनमृच्छति ॥

என்றவிடத்தில் **विहितमकुर्वन् नरःपतनमृच्छति** । விஹிதத்தை (நித் யகர்மத்தை) ச்செய்யாத மனிதன் பதனத்தை (ப்ரத்யவாயம் என்ற தோஷத்தை) யடைகிறான் என்று உபதேசிக்கப்பட்டிருக் கின்றது **अकुर्वन्** என்ற விடத்தில் **कृञ्** என்றதாதுவின்மேல் **शतृ** என்ற ப்ரத்யயம் வைத்து **कुर्वन्** என்றும், அத்துடன், **न** என்ற தைச் சேர்த்தால் **अकुर्वन्** என்றும் ஏற்படுகின்றது. இந்த விடத்தி லுள்ள **शतृ** என்ற ப்ரத்யயத்திற்கு வியாகரண சாஸ்திரத்தில் லக்ஷணம்(ஞாபனம்)என்றும்,ஹேது (காரணம்)என்றும் இரண்டு பொருள் கூறப்பட்டிருக்கிறது. இவ்விரண்டு பொருள்களுள் ஞா பனம் என்ற பொருளை மட்டும் நாம் இங்கு எடுத்துக்கொள்வோ மேயானால், விஹித கர்மத்தைச்செய்யாதிருத்தலானது பதனத் தையடைவதற்கு ஞாபகமாகிறது என்று பொருள் ஏற்படுகிறது. இதனால் ஒருவனுக்கு முந்தினஜன்மங்களில் நேர்ந்துள்ள புண்ய பாப கர்மங்களுள் பாபகர்மங்கள் மூலம் நேருகின்ற துக்கத்தை வரவொட்டாது அவன் இந்த ஜன்மத்தில் செய்யும் நித்யகர்மம் தடைசெய்துகொண்டிருக்கிறது. அவ்விதம் ஜன்மாந்தரீயபாப

கர்மபலனான துக்கத்தை வரவொட்டாது தடைசெய்கின்ற நித்ய கர்மத்தையொருவன் விட்டுவிடுவானேயானால் ஜன்மாந்தரீய பாப கர்மபலனானதுக்கத்தை வரவொட்டாது தடைசெய்யக்கூடியலாத னமில்லாமை பற்றி பாபகர்மபலனான துக்கத்தை இவன் அனுப விக்கநேரிடும் என்பதை அகுர்வ என்றசப்தத்திலுள்ள சது பிரத்ய யம்ஞாபிப்பதாக ஏற்படுவதால் பூர்வபக்ஷி சொல்லுகிறபடி சுருதி, யுக்தி, அனுபவம் இவற்றிற்குமாறாக அபாவத்தினின்றும் பாவ வஸ்து உண்டாகின்றதென அங்கிகரிக்கவும் வேண்டியதில்லை. அவ்விதமங்கீகரித்தோமேயாயின் ஸகலபிரமாணங்களும் வீணாகி விடும். ஆகவே மோக்ஷத்திற்காகத்தனியாய் எவ்வித முயற்சியு மின்றி ஸ்வாத்மாவஸ்தானம் என்ற முக்தி சித்திக்கும் எனபூர் வபக்ஷிசொன்னது சுருதி, யுக்தி, அனுபவங்களுக்குப் பொருத்த மானதல்ல.

மேலும் ஸ்வர்க்க சப்தத்தால் சொல்லப்படும் நிரதிசயபிரீதி யானது கர்மங்கள்மூல முண்டாவதாக ஏற்படுவதால் கர்மங்களி னின்றே மோக்ஷமானது உண்டாகலாம் என்று பூர்வபக்ஷி சொன் னது யுக்திக்குப்பொருத்தமானதல்ல. ஏனெனில் மோக்ஷமானது நித்யமாயிருப்பது பற்றியே என்க. அதாவது: உலகில் நித்யமா யுள்ளது எதுவும் ஒன்றினாலுண்டு பண்ணப்பட்டதாகத்தெரிய வில்லை. எது ஒன்றினாலுண்டுபண்ணப்பட்டதோ அது அனி த்யமாகவே இருக்கிறது என்பதாம். ஆனதுபற்றி கர்மத்தால் மோக்ஷமுண்டாவதில்லை, கர்மத்தா லுண்டுபண்ணப்படுமாயின் மோக்ஷமானது அனித்யமாகவே யாகிவிடும். மோக்ஷத்தையொ ப்பும் எந்தவாதிகளும் அதை நித்யமாகவே ஒப்பியிருக்கின்றனர்.

வித்யாசப்தத்தால் சொல்லப்படும் உபாஸனத்துடன் சேர் ந்தகர்மங்களுக்கு நித்யமான மோக்ஷத்தை யுண்டாக்கும் ஸாமர் த்ய மேற்படலாம் என்றும் பூர்வபக்ஷி சொல்லமுடியாது. ஒன்று நித்யமானதென்றும், அது ஒன்றினால் உண்டு பண்ணப்படுகின்ற தென்றும் சொல்லுவதானது நேர்விரோதமாக ஏற்படுமல்லவா ?

பூர்வபக்ஷி—குடம்முதலிய எந்தவஸ்து நஷ்டமாயிற்றோ அந் தவஸ்து திரும்பவும் உண்டாவதில்லை என்பது அனுபவத்திற்க

ண்டவிஷயம் ஆகவேகுடம் முதலியவற்றின் விநாசரூபமான பிர த்வம்ஸா பாவத்தை நித்யமென்றே நிச்சயிக்கின்றோம். குடப்ர த்வம்ஸா பாவம் உண்டாவதுபற்றி அதை அனித்யமாகச் சொல் லுவோமாயின் விநஷ்டமான குடம் திரும்பவும் உண்டாக வேண்டிவரும். அவ்விதமோ அனுபவமில்லை. ஆகவே குடப பிரத்வம்ஸாபாவமானது உண்டாயிற்றாயினும் நித்யமாகவே ஒப்பப்படுவது போலவே நித்யமான மோக்ஷமும் கர்மங்களா லுண்டு பண்ணப்பட்டதாயினும் நித்யமாக இருப்பதில் யாதும் தடையில்லைஎனின் ?

சித்தாந்தி—அது ஒப்பத்தக்கதல்ல. மோக்ஷம் எப்பொழு தும் பாவரூபமானதென்றே மோக்ஷத்தை யொப்பியவாதிகளின் சித்தாந்தம். மேலும் குடப்ரத்வம்ஸாபாவம் உண்டாகின்றது என்பதும் அனுபவத்திற்கு ஒத்ததன்று. ஏனெனில், ஜனனத்தை (உத்பத்தியை) பாவரூபமான குடம்முதலிய வஸ்துவின் தர்மமாக சாஸ்திரக்காரர்கள் கூறுகின்றனர். ஆகவே நாசமானது (அபாவ மானது) பாவரூபமான உத்பத்திக்கு ஆசிரயமாக ஆகாது. கடாபாவம் (குடமில்லை) என்றதால் கபாலம் (குடத்தின்சில்) முதலியவஸ்து சொல்லப்படுவதாகவே கொள்ளவேண்டும். ஆக வே ப்ரத்வம்ஸாபாவமானது பாவரூபமான உத்பத்திக்கு ஆசிர யமாயிருப்பதாக தார்க்கிகர்களுக்கு ஏற்படும் தோற்றமானது கேவலம் மயக்கமாகவேயாகும். மேலும் அபாவம் என்பது பாவ த்திற்கு நேர் எதிரிடையாகவுள்ளதாகும். உலகில் பாவமும், வஸ் துவும் ஒன்றுக்கொன்று வேறுபட்டதன்றாயினும் குடத்தின் பாவம் (இருப்பு) படத்தின் பாவம் என ஒன்றானவஸ்துவையே வேறு பட்டவஸ்துவைப்போல வியவஹரிக்கின்றனர். இதுபோல வே அபாவத்தில் எவ்விதபேதமு மில்லாவிடினும் பாவரூபமான குடம்முதலிய வஸ்துக்களிலேற்படும் தடியாலடிபடுதல் முதலிய கார்யம், குணம், முதலியவற்றை நிமித்தமாகக்கொண்டு ப்ரத்வம் ஸாபாவ:, ப்ராக பாவ:, அத்யந்தாபாவ:, அன்யோன்யா பாவ: என அபாவத்தைப்பிரிக்கின்றனரேயன்றி உண்மையில் அவ்வித விபாகத்திற்குரிய கிரியையோ, குணமோ எதுவும் இருப்பதற்கிட மில்லை. மேலும் "கருத்த உத்பலம்" என்பது போல அபாவத்தி

லும் வேற்றுமைக்குரிய தர்மங்களைக்கற்பிப்போமாயின் அது அபாவமாகவே யாகாது. குடம் முதலியது போன்ற பாவ வஸ்து வாகவே யாகிவிடும், என்பதில் யாதும் தடையில்லை.

பூர்வபக்ஷி—கங்கையில் முன்சென்ற ஜலத்திற்கும் பின்னர் வரும் ஜலத்திற்கும் உண்மையில் பேதமிருந்த போதிலும் ஜலப் பிரவாஹமானது தொடர்ச்சியாயிருத்தலை முன்னிட்டு கங்கை யிலோடும் ஜலம் எல்லாம் ஒன்றென்றே தோற்றமேற் படுவதிலிருந்து ஒன்றென்றே திருடமாகவும் வியவஹரிக் கிறோம். இதுபோலவே மோக்ஷமானது கர்மம், உபா ஸனம் இவைகளாலுண்டு பண்ணப்படுவதுபற்றி "எது உண்டா கின்றதோ அது அனித்யமானது" என்றயுக்திப்படி அனித்ய மாக ஆகக்கூடுமாயினும், உபாஸனம், கர்மம் இவற்றைச் செய் யும் கர்த்தா நித்யனாயிருப்பதால் வித்யாகர்ம ஸந்தானத்தால் (தொடர்ச்சியால்) உண்டான மோக்ஷமும் பிரவாஹம் போல் நித்யமாக யிருக்கட்டும் எனின்?

ஸித்தாந்தி—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. கர்மங்களின் கர்த்தாவாக யிருக்கும் தன்மையானது அவித்யாகார்ய மான துக்கரூபமானதுபற்றி கர்த்தாவானதன்மை விலகினால் மோக்ஷத் திற்கும் நாசமேற்பட்டு விடும். ஆகவேகர்மங்களுக்கு உபா தானகாரணமான அவித்யை, காமம் இவைகள் விலகினதும் சித்திக்கும் தனது ஆத்மஸ்வரூபாவஸ்தானமே மோக்ஷமாகும். பிரத்யகாத்மாவோ பிரும்மம். பிரத்யகாத்ம பிரும்மாபேதக் ஞானத்தால் அவித்யை விலகி விடுகின்றது. ஆகவே இத்தகைய பலனைத்தரும் உபநிஷத்தானது ஆரம்பிக்கப்படுகின்றது. உப நிஷத் என்றதால் பிரும்மவித்தை சொல்லப்படும். பிரும்மவித் தையில் பழக்கமுள்ளவர்க்கு கர்ப்பவாஸம், பிறவி, மரணம், முதலியன விலகி விடுகின்றன என்பது பற்றியும், பிரும்மத் தைச்சேர்ந்ததாகச்செய்கின்றதென்பது பற்றியும் உபநிஷத் என்ற பதத்திற்கு பிரும்ம வித்தைதான் பொருள் என்றேற்படு கின்றது. இந்தப் பிரும்ம வித்தையில் மேலான சிரேயஸ் (மோக்ஷம்) அடங்கி யிருப்பதால் இந்த பிரும்ம வித்தை உபநிஷ

த்தாகும். இத்தகைய பிரும்ம வித்தையை இக்கிரந்தம் போதிப்பதால் இககிரந்தத்தையும் உபநிஷத்தென்றே கொள்வதுண்டு.

## வித்யாரண்ய ஸ்வாமிகளின் உபோத்காதச் சுருக்கம்

உபநிஷத் என்ற பதத்திற்கு பிரும்ம வித்யை என்று பொருள். எங்ஙனமெனின்—**उपनिषत्**=என்றபதத்தில் **उप-नि-षत्** என்ற மூன்று பதங்கள் அடங்கியிருக்கின்றன, அவற்றுள் **उप** என்றதற்கு ஸமீபம் என்றும், **नि** என்றதற்கு நிச்சயம் என்றும் பொருள் ஏற்படுகின்றது. **षत्** என்றதற்கு **षद्लृविशरणगत्यवसादनेषु** என்றதால் விசாணம் என்ற தளரச்செய்தல், கதி என்ற அடைவித்தல், அவஸாதனம் என்ற நாசம் செய்தல் என மூன்று விதமான பொருள் வியாகரண சாஸ்திரத்தில் உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே வெகுகாலமாக பிரும்மத்தை விட்டு விலகி நிற்கும் ஜீவன் **उप** பிரும்மத்தின் ஸமீபத்தை யடைந்ததும் அதாவது:—பின்னர் கூறும்முறைபடி பிரும்மமும், பிரத்யக்ஸ்வரூபமும் ஒன்றென்றறிந்ததும் நிலைத்து நிற்கும் அவனது அவித்யை முதலியபேத (வேற்றுமை) காரணங்களை **नि** நிச்சயமாய் **षत्** தளரும்படி செய்கின்றது, அல்லது **षत्** பிரும்மத்தை யடைவிக்கின்றது, அல்லது **षत्**=நாசமாக்குகின்றது என உபநிஷத் என்றபதத்தின் மொத்தப்பொருளாக்வேற்படுவதால் இத்தகைய குணம் பிரும்ம வித்யைக்கேயிருப்பதாகத் தெளிவாக ஏற்படுவது பற்றி உபநிஷத் என்ற பதத்தால் பிரும்ம வித்யை கூறப்படுகின்றது என்க.

இந்த உபநிஷத்தானது தைத்திரீய சாகையின் முடிவில் படிக்கப்பட்டிருப்பதால் தைத்திரீ யோபநிஷத் என வழங்கப்படுகின்றது. இந்த உபநிஷத்தானது ஸாம்ஹிதீ, வாருணீ, யாக்ஞிகீ என மூன்று விதமாகப் பிரிக்கப் பட்டிருப்பதுடன் 4 பிரபாடக மாகவும் பிரிக்கப்பட்டிருக்கிறது. அந்நான்கு பிரபாடகங்களுள் முதல் பிரபாடகத்தில் ஸாம்ஹிதீ என்ற உபநிஷத்தும் 2, 3 வது பிரபாடகங்களில் வாருணீ என்ற உபநிஷத்தும், 4 வது பிரபாடகத்தில் யாக்ஞிகீ என்ற உபநிஷத்தும் முறையே படிக்கப்

றும், உபாதி வசத்தால் அதுவே ஜீவபாவத்தை யடைந்ததென்றும் கூறவேண்டியும்,

अविद्यास्तीत्यविद्यायामेवास्तित्वं प्रकल्प्यते ।
ब्रह्मदृष्ट्यात्वविद्येयं न कथञ्चन युज्यते ॥

என்றபடி பிரும்ம திருஷ்டியாகப் பார்க்குங்கால் அவித்யையோ, அவித்யா காரியமான பிரபஞ்சமோ உண்மையில் கிடையா வெனவும், அவித்யை அதன் காரியம் இவற்றைக்கொண்டு பார்க்கப்படும்பொழுது அவித்யாதி பேதத்தோற்றம் ஏற்படினும் ஒவ்வொரு காரியங்களேயும் தத்தமது காரணத்திலொடுக்கி அதாவது: காரணத்தைவிட காரியமானது தனிமையிலில்லை என எண்ணுபவனுக்கு ஸர்வகாரணமான பிரும்ம ஸாக்ஷாத்காரம் உண்டாகி விடுமென உபதேசிக்க வேண்டியும், ஸர்வாதிஷ்டான பிரும்மமே ஜகத்தை அவித்யா மூலம் சிருஷ்டித்து அதில் எள்ளில் எண்ணை போலும், பாலில் நெய் போலும் ஊடுருவிப் பிரகாசிக்கின்றதென்றும், அவித்யையையும், அதன் காரியமான பிரப்ஞ்சத்தையும், ஸர்வாதிஷ்டான பிரும்மமாகவே அதாவது: பிரும்மத்தைவிட வேறாக இல்லாததாகவே பார்ப்பவனுக்கு இதுவரை ஏற்பட்ட ஸந்தேஹங்கள் யாவும் விலகிவிடும் என்றும் तस्माद्वा என்ற இந்த பாகத்தா லுபதேசிக்கப் படுகின்றது.

மேலும் முன்னர் ஹிருதய குஹையில் பிரகாசிப்பதை எவன் அறிகின்றானோ அவன் ஸர்வானந்தங்களேயும் ஒரே ஸமயத்தி லனுபவிக்கின்றான் என உபதேசிக்கப்பட்டது. அவ்விஷயத்தில் பின்வருமாறு ஸந்தேஹம் உண்டாகக் கூடும். அதாவது: ஹிருதய குஹையில் பிரகாசிப்பது ஜீவனே யாகையால் ஜீவனுடைய க்ஞானத்தினல் ஸர்வானந்தப் பிராப்தி எவ்விதமுண்டாகக் கூடும் என்பதாம். இவ்விதமான வாசங்கையை விளக்கவேண்டி ஹிருதய குஹையில் பிரகாசிப்பது பிரும்மமேயொழிய ஜீவனல்ல வென்பதை யுபதேசிக்க வேண்டும். அதற்கு வேண்டியே அன்னமயாதி ஐந்து கோசங்கள் உபதேசிக்கப்பட்டன. இந்த கோசங்கள், அன்னமய கோசத்திற்குள் பிராணமய கோசமும், பிராணமய கோசத்திற்குள் விக்ஞானமய கோசமும், அதற்குள் ஆனந்தமய கோசமுமாக முறையே ஒடுங்கியிருப்பது

“ஸூக்ஷ்மமான ஏகாக்ரபுத்தியினாலேயே அப்பொருள் காணப்படுகின்றது” என கடோபநிஷத்திலு முபதேசிக்கப்பட்டிருக்கின்றது. ஐகாக்ர்யமோ, தியானப்யாஸத்தாலுண்டு பண்ணப்படுகின்றது. இவ்விதமே பாதஞ்ஜல யோகஸூத்திரத்தில் **योगश्चित्तवृत्तिनिरोधः** என்று தொடங்கி **अभ्यासवैराग्याभ्यां तन्निरोधः** என்றதால் தெளிவா யுபதேசிக்கப்பட்டிருக்கின்றது * ஆகவே தியானப்யாஸம் சித்திப்பதற்கு வேண்டியே ஸாம்ஹிதீ என்ற உபநிஷத் முதன் முதலில் படிக்கப்பட்டதென தெளிவாகின்றது.

## முதல் மந்திரத்தின் அவதாரிகை.

**तदेषां तन्नप्रियं यदेतन्मनुष्या विदुः** “மனிதர்கள் பிரும்மக்ஞானத்தை யடைவதென்பது தேவர்களுக்குப்பிரிய மில்லாதது” என பிருஹதாரண்ய கோபநிஷத்தில் கூறியபடியும், **श्रेयांसि बहुविघ्नानि** “நற்கார்யங்கள் பல இடையூறுகளையுடையன” என்ற வசனப்படியும் பல இடையூறுகள் தேவர்களாலுண்டு பண்ணப்படலாமாதலால் பரமபுருஷார்த்த விஷயத்தில் தேவர்களால் நேரிடும் இடையூறுகள் வருவண்ணம் தடுப்பதற்கு வேண்டிய மந்திரம் ஸாம்ஹிதீ உபநிஷத்தின் முதல் அனுவாகத்தில் படிக்கப்பட்டிருக்கிறது. இம்மந்திரத்தைப்படிப்பவன் தேவதாபிரஸாதத்தை யடைந்து அதன் மூலம் எவ்வித இடையூறுமின்றி பிரும்ம வித்யோபதேசத்தைப்பெற்றும், அதைமனத்தில் தரித்தும், தான் தரித்தவாறே தன்னையண்டின சிஷ்யனுக்கு உபதேசித்தும், வரக்கூடும் என்பதில் யாதும் தடையில்லை. இதையே சாந்தி மந்திரம் என்றும் கூறுவர் அம்மந்திரம் பின்வருமாறு.

(मन्त्रः) ओं ॥ शं नो मित्रः शं वरुणः । शं नो भवत्वर्यमा ।
शं न इन्द्रो बृहस्पतिः । शं नो विष्णुरुरुक्रमः ॥

---

* **योगश्चित्तवृत्ति निरोधः** என்ற முதல்பாதம் 2வது ஸூத்திரத்தின் பொருளையும், **अभ्यासवैराग्याभ्यांतन्निरोधः** என்ற ஷை பாதம் 12 வது ஸூத்திரத்தின் பொருளையும் நமது பாதஞ்ஜலயோக ஸூத்திர மொழிபெயர்ப்பில் முறையே 5, 25வது பக்கங்களில் காண்க.

(ப - ரை) **मित्रः**=மித்திரன் என்ற தேவன் **नः**=எங்களுக்கு **शं**=ஸுகத்தைச் செய்கின்றவராக (**भवतु**=ஆகட்டும்) **वरुणः**=வருணன் **शं**=ஸுகத்தைச் செய்கின்றவராக (**भवतु**=ஆகட்டும்) **अर्यमा**=அர்யமா என்ற தேவன் **नः**=எங்களுக்கு **शं**=ஸுகத்தைச் செய்கின்றவராக **भवतु**=ஆகட்டும். **इन्द्रः**=இந்திரனும் **बृहस्पतिः**பிருஹஸ்பதியும் **नः**=எங்களுக்கு **शं**=ஸுகத்தைச் செய்கின்றவர்களாக (**भवतां** = ஆகட்டும்) **उरुक्रमः**-**उरु** = எங்கும்நிறைந்த **क्रमः**=பாதநியாஸத்தை யுடையவரான **विष्णुः**=விஷ்ணுவானவர் **नः**=எங்களுக்கு **शं**=ஸுகத்தைச் செய்கின்றவராக(**भवतु**=ஆகட்டும்.)

(தா - ம்) பகலுக்கும் சரீரத்திலுள்ள பிராணவிருத்தி (மூச்சுக்காற்று உள்ளிருந்து வெளிவருவது பிராணவிருத்தி எனப்படும்) க்கும் அபிமானிதேவதை மித்திரன் எனப்படும். ராத்திரிக்கும், அபான விருத்தி (மூச்சுக்காற்று வெளியிலிருந்து உள்நோக்கிச்செல்வது அபான விருத்தி எனப்படும்.) க்கும் அபிமானிதேவதை வருணன் எனப்படும். கண்ணுக்கும் ஸூர்யமண்டலத்திற்கும் அபிமானிதேவதை அர்யமா எனப்படும். இரண்டு கைகளுக்கும் சரீரத்திலுள்ளவலுவுக்கும் அபிமானி தேவதை இந்திரன் எனப்படும். வாக்கிற்கும், புத்திக்கும் அபிமானி தேவவை பிருஹஸ்ப்தி எனப்படும். பாதங்களுக்கு அபிமானி தேவதை விஷ்ணு வென்றும், உருக்கிரமன் என்றும் சொல்லப்படும். ஆகவே மித்திரன், வருணன், அர்யமா, பிருஹஸ்பதி, விஷ்ணு என்ற இத்தேவர்கள் பிரும்ம விசாரம் செய்யத்தொடங்கும் எங்களுக்கு அவ்விஷயத்தில் நேரும் விக்னங்கள் யாவையும் போக்கி வித்யாசிரவணத்தையும், கேட்டவித்யை மறவாதிருத்தல் என்ற தாரணத்தையும், ஸமயம் வரும்பொழுது சிஷ்யர்களுக்கு உபதேசித்தல் என்ற விநியோகத்தையும் தந்து சுகத்தைச் செய்கின்றவர்களாக ஆகவேண்டும் என இதனல் பிரார்த்திக்கப்பட்டது. (எ - று.)

குறிப்பு— **उरुक्रमः** = திரிவிக்ரமாவதாரத்தில் பலிசக்கிரவர்த்தியினிடம் மூன்றடி மண்யாசித்துப்பின்னர் அவரது பாதம் எங்கும் நிறைந்ததாக வாயிற்றென்பதுபற்றி திரிவிக்ரமாவதாரம்

செய்த பகவான் என்று பொருள் என்றும், பிராணன் முதலிய அவயவங்களின் அபிமானிகளான மித்திரன் முதலியதேவர்களைச் சொல்லிவிட்ட படியால் அவயவியான எல்லாத்தேஹத்திற்கும் அபிமானியான் விராட்புருஷன் சொல்லப்படவேண்டியதாய் மீதமிருப்பதால் பிரும்மாண்டத்தையேசரீரமாயுடைத்தானவரானது பற்றி சராசராத்மகஸகல சரீரத்திலும் பாலில் நெய்போல, எள்ளில் எண்ணை போல எங்கும் நிறைந்து நிற்றலால் ஸர்வவியாபியான் ஸ்ரீமந்நாராயணனே உருக்கிரம என்ற பதத்தால் சொல்லப்பட்டார் என்றும் கொள்ளல் வேண்டும் என்றும் வித்யாரண்ய தீபிகையிலுப தேசிக்கப்பட்டிருக்கிறது.

(அ - கை) இதுவரைசரீரேந்திரியாபிமானி தேவதைகள் ஸுகத்தைச்செய்யவேண்டுமென பிரார்த்திக்கப்பட்டது. இனி ஸர்வதேவதாசரீரியும் வாயுபதத்தால் சொல்லப்படுபவரும், ஸூத்திராத்மாவுமான பகவானை பிரும்ம வித்யைக்குரிய விரோதிகள் விலகவேண்டுமெனபிரார்த்திப்பதற்காக வாயுபிரும்மசப்தவாச்யமான பரமாத்மாவின் நமஸ்காரம், நாமோச்சாரணம் இவ்விரண்டும் செய்யப்படுகின்றது.

(मन्त्रः) नमो ब्रह्मणे । नमस्ते वायो । त्वमेवप्रत्यक्षं ब्रह्माऽसि। त्वेव प्रत्यक्षं ब्रह्म वदिष्यामि । ऋतं वदिष्यामि । सत्यं वदिष्यामि । तन्मामवतु । तद्वक्तारमवतु । अवतु माम् । अवतु वक्तारम् । ओं शान्तिः, शान्तिः, शान्तिः ॥

(ப - ரை) **ब्रह्मणे** = க்ஞான கிரியாசக்தியுடன் கூடியவரும் வாயுசரீரியுமான பிரும்மத்திற்கு **नमः**= நமஸ்காரம் (**भवतु**= இருக்கட்டும்.) **वायो**=வாயுசரீரியான ஒபரமாத்மாவே! **ते**= உமக்கு **नमः** நமஸ்காரம் (**भवतु**=இருக்கட்டும்) **त्वमेव**= நீரே **प्रत्यक्षं**= நேரில் அநுபவிக்கக்கூடிய **ब्रह्म**= பிரும்மமாக **असि** = இருக்கின்றீர். **त्वमेव**= நீரே **प्रत्यक्षं**=நேரில்காணக்கூடிய **ब्रह्म**=பிரும்மமென **वदिष्यामि**= சொல்லப்போகிறேன். **ऋतं**= சாஸ்திரமுறை தவறாது செய்யவேண்டியதை ஒருவாறு மனத்தால் நிச்சயித்தல் ருதம் என்னப்படும்

அந்த ருதமாக உம்மை **वदिष्यामि**-சொல்லுவேன். **सत्यं**-மனத்தால் நிச்சயித்தபடி அனுஷ்டித்துக்காட்டல் ஸத்யம் எனப்படும் அந்த ஸத்யமாகவும் உம்மை **वदिष्यामि**=சொல்லுவேன். **तत्**-என்றால் ஸ்துதிக்கப்பட்ட ஸர்வாத்மகவாயு ரூபமான பிரும்மமானது **मां**-என்னை **अवतु**-ரக்ஷிக்கட்டும். **तत्**-முற்கூறிய பிரும்மம் **वक्तारं**-ஆசாரியனை **अवतु**=பிரும்ம வித்யோபதேசம் செய்வதற்குரிய சக்தியைக்கொடுத்தல் வாயிலாக இரக்ஷிக்கட்டும். **अवतु मां, अवतु, वक्तारं**-என்னை இரக்ஷிக்கட்டும், எனது ஆசாரியனை இரக்ஷிக்கட்டும் **शान्तिः**-ஆத்யாத்மிக தோஷநிவிருத்தியும் **शान्तिः** ஆதிதைவிக தோஷநிவிருத்தியும் **शान्तिः**=ஆதிபவுதிக தோஷநிவிருத்தியும் **ओम्**-உண்டாகட்டும்.

(தா - ம்.) பிரும்மக்ஞானத்தை யடையவிரும்பும் அதிகாரியானவன் அவ்விஷயத்தில் நேரும் விக்னங்களைப்போக்கவேண்டி முற்கூறிய மித்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியும், ஆனது பற்றியே ஸர்வப்பிரேரகமானதும், வாயுவைச்சரீரமாயுடையது மான பரப்பிரும்மத்தை நமஸ்கரித்தும், ஸ்துதித்தும் வேண்டிக்கொள்ளுகிறான். பிரும்மத்தையே நேரில் நமஸ்காரஸ்தோத்திரங்கள் செய்யவேண்டியதாக விருக்க அவ்விதம் செய்யாது வாயுசரீரகனுகவைத்து ஸ்துதி நமஸ்காரங்கள் செய்ததின் கருத்து யாதெனின் ? கூறுவாம். சாஸ்திரானு மானங்களைக் கொண்டு அந்தர்யாமியான பரமாத்மாவை யறிதலென்பது கூடுமேயன்றி கண்கூடாக்காணக்கூடாதாகையால் பிரும்மத்தை நேரில் ஸம்போதனம் செய்யாது பிரத்யக்ஷமானதும், பிரும்ம சரீரமானதுமான வாயுவை யழைத்து வாயுமூலம் அந்தர்யாமிபரமாத்மா வேண்டப்பட்டார் என்று கொள்ளவேண்டும். மேலும்

**वायुर्वै गौतम तत्सूत्रं, वायुनैव गौतम सूत्रेण अयं च लोकः परश्च लोकः, सर्वाणि च भूतानि संदृब्धानि भवन्ति ॥**

என உபநிடதங்களில் வாயுசரீரகனுகவேபிரும்மத்திற்கு அந்தர்யாமித்வம் கூறியிருப்பதால் இங்கும் வாயுசரீரகனுகவே பரமாத்மா நமஸ்கரிக்கப் பட்டார் எனக்கொள்ளுதல் அவசியமானது.

ஆனது பற்றியே பிரும்மத்தையே நேரில் ஸம்போதனம் செய்யாது ப்ரத்யக்ஷயோக்யமானதும், வாயுசரீரகமானதுமான பிரும்மம் ஸம்போதனம் செய்யப்பட்டது. இக்காரணம்ப்பற்றித்தான் நீரே ப்ரத்யக்ஷ பிரும்மமாயிருக்கிறீர். ஆனது பற்றியே உம்மை ப்ரத்யக்ஷ பிரும்மமாக நான் சொல்லுவேன் என त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि, त्वमेव प्रत्यक्षं ब्रह्मवदिष्यामि என்றதால் சொல்லப்பட்டது. ஸகுண பிரும்மத்தை எங்கெந்த விதமாக எவனெவன் உபாஸிக்கின்றானோ அவனவனது வெகு காலப்பழக்கத்திற்கேற்றபடி அந்தந்த ஸகுணபிரும்மமானது ப்ரத்யக்ஷமாக வாகின்றது. என்பதும் சாஸ்திரானுபவமூலம் மிக்கபிரஸித்தமானதே.

மேலும் देवो भूत्वा देवानप्येति "எவன் எந்தத்தேவதையை ஆதரவுடனும், இடைவிடாமலும் உபாஸிக்கின்றானோ அவன் இதேஜன்மத்தில் தானுபாஸிக்கும் தேவதாஸாக்ஷாத்கரத்தையடைந்து மரணத்திற்குப் பின்னர் உபாஸ்யதேவபாவத்தையடைகிறான்" எனச்சுருதியானுபதேசிக்கப் பட்டிருப்பதால் ப்ரத்யக்ஷ பிரும்மமாக நீர் இருக்கின்றீரென நான் சொன்னது ஆலோசியாமற் சொன்னதல்ல. ஆகவே நான் மனதால் நன்கு சுருதிகளைப் பர்யாலோசனை செய்தே எதையும் சொல்வேன். பிறகு சென்னபடி அனுஷ்டிக்கவும் செய்வேன். ஆனதுபற்றி வித்யார்த்தியான என்னையும், எனது ஆசாரியனையும் ரக்ஷித்தருள்புரியவேண்டும். இவ்விஷயத்தில் தனக்குள்ள ஆதரவைக்காட்டவேண்டியே प्रवतुमाम् अवतुवक्तारम् என சொன்னதே திரும்பவும் சொல்லப்பட்டது. பிரும்ம விசாரத்திலீடுபடுபவனுக்கு ஆத்யாத்மிகம், ஆதி தைவிகம், ஆதி பௌதிகம் என மூன்றுவிதவிக்னங்கள் உண்டாகக்கூடும். அவற்றுள் ஜ்வரம், தலைவலி முதலியன ஆத்யாத்மிகம் என்றும், தேவதைகளாலுண்டாகக்கூடியவை ஆதி தைவிகம் என்றும், பூதபிரேதாதிகளாலுண்டாகக் கூடியவை ஆதி பௌதிகம் என்றும் சொல்லப்படும். ஆகவே இம்மூன்றுவித விக்னங்களும் விலகி தனது இஷ்ட சித்தியுண்டாகவேண்டுமென்பதைக் காட்டவே ओं, शान्तिः, शान्तिः, शान्तिः, என மூன்றுதடவை சொல்லப்படுகின்றது.

## விசிஷ்டாத்வைதம்

ஸ்ரீரங்கராமானுஜ பாஷ்யத்திற்சொல்லியபடியும் இவ்வுப னிடதங்களுக்குப் பொருள் செய்யப்படுகின்றது. அவ்விதம் பொருள் செய்யும் பொழுது அத்வைதமதத்தைவிட வேறாக எங்கு பொருளேற்படுமோ அப்பாகங்களுக்குமட்டும் பதவுரை யும், கருத்துரையும் எழுதப்படும். அத்வைதத்திற்கு "அத்×ம்" என்ற சுருக்கெழுத்தடையாளமும், விசிஷ்டாத்வைதத்திற்கு "விசி+ம்" என்ற அடையாளமும் ஆங்காங்கு கொடுக்கப்பட்டி ருப்பதைக் கொண்டு அந்தந்தமதப்படிக் குள்ள பொருளை அவ ரவர் பிரித்தறிந்து கொள்ளவும்.

अतसीगुच्छसच्छायमञ्चितोरःस्थलं श्रिया ।
अञ्जनाचलशृङ्गारमंजलिर्मम गाहताम् ॥
व्यासं लक्ष्मणयोगीन्द्रं प्रणम्यान्यान्गुरूनपि ।
तैत्तिरीयकवेदान्तविवृतिं करवाण्यहम् ॥

கருத்துரை—காசாம்பூங் கொத்திற்கொப்பான நிறமுள்ள வரும், இலக்ஷ்மீதேவியால் அலங்கரிக்கப்பட்ட மார்பையுடைய வரும், மைமலைக் கொப்பாக விருக்கின்றவருமான ஸ்ரீமந்நாரா யணனை எனது அஞ்ஜலி அடையட்டும். அதாவது: நமஸ்கரிக் கிறேன்.

வியாஸர், ராமானுஜர், மற்றுமுள்ள குருக்கள் இவர்களை வணங்கி தைத்திரீயோபநிஷத்திற்கு உரை எழுதுகிறேன்.

(அ-கை) பரவித்யையை ஆரம்பம் செய்யும் அதிகாரி யானவன் விக்னங்கள் விலகவேண்டியதற்காக தேவதைகளைப் பிரார்த்திக்கிறான்.

(मन्त्रः) शंनोमित्रः............शान्तिः ॥

(ப-ரை) **मित्रः**-ஸூரியன் **अर्यमा**-அர்யமாஎனப் பெயரியத் வாதசாதித்யர்களுள் ஒருவர்-(மற்றபாகத்திற்கு முன்போலர்த்-

தம்.) **ब्रह्मणे**-வேதத்தையும் பொருட்டு **नमः**-நமஸ்காரம். **वायो**-வேதாக்ஷரங்களை பிரகாசம் செய்கின்ற ஓவாயுவே? **त्वमेव**-நீர் தான் **प्रत्यक्षम्**-நேரில் காணப்படுகின்ற **ब्रह्म**-பிரும்மமாக **असि**-இருக்கின்றீர். வாயுவைப்ரத்யக்ஷ பிரும்மம் என்று கூறியதின் கருத்து யாதெனில்—தாது பாடத்தில் **बृहिवृद्धौ** என்று படிக்கப் பட்டிருப்பதால் விருத்தி என்று பொருளுள்ள **बृहि** என்றதாதுவினின்றும் **ब्रह्म** என்ற சப்தஸ்வரூபம் ஏற்பட்டிப்பதால் **ब्रह्म**-என்ற சப்தத்தால் எதிலும் நிறைந்துள்ள வஸ்துவானது போதிக்கப்பட்டதாயாகின்றது. ஆகவே பிருஹத்வ குண சாலித்வமானது, அதாவது எங்கும் நிறைந்ததாயிருக்கும் தன்மை என்றகுணமானது வாயுவுக்கும் பரமாத்மாவுக்கும் ஒற்றதாகவேதானிருக்கிறது. ஆயினும் பிருஹத்வகுணசாலியான பரமாத்மவஸ்துவானது ப்ரத்யக்ஷமாக ஆவதில்லை. பிருஹத்வ குணசாலியான வாயுவோ பிரத்யக்ஷமாக ஆகின்றது. ஆனது பற்றியே வாயுவானது "ப்ரத்யக்ஷம் ப்ரும்மம்" என்று சொல்லப் பட்டது.

**ऋतं वदिष्यामि**=அபசப்தமல்லாது ஸுசப்தத்தைச் சொல்லுகிறேன். இதனால் சப்தத்திலுள்ள சத்யத்தன்மை கூறப்பட்டது. **सत्यं वदिष्यामि**=எந்தப்பொருள் எவ்விதமிருக்கின்றதோ அப்பொருளை அதுஇருக்கின்றபடியே மாற்றாது சொல்லுகிறேன். இதனால் சப்தத்தின் பொருளிலுள்ள ஸத்யத்தன்மை கூறப்பட்டது. இவ்விதம் **ऋतं, सत्यं** என்ற பதங்களுக்குப் பொருள் வெவ்வேறாக கொள்ளப்பட்டதால் பௌனருக்த்யம்-(கூறியது கூறல்) என்ற தோஷம் விலகி விடுகிறது. **तत्**=அத்யயனம் செய்யப்பட்ட வேதம் **माम्**=அத்யயனம் செய்கின்ற என்னை **अवतु**=ரக்ஷிக்கட்டும். **तत्**-அந்தவேதம் **वक्तारं**=அத்யயனம் செய்து வைக்கின்ற குருவையும் **अवतु**-இடையூறுகளினின்றும் ரக்ஷிக்கட்டும். **शान्तिः**=விக்னங்களுக்கு விலகுதலுண்டாகட்டும். மற்று மிருமுறை கூறினது விக்னங்கள் விலகுவதில் தனக்குள்ள ஆதரவைக் காட்டுகின்றது.

## இரண்டாவது அனுவாகம்.

அத்+ம்—(அ-கை) அர்த்தமறிதலே உபநிஷத்திற்கு முக்ய மானதெனக்கருதி கிரந்தத்தை அத்யயனம் செய்யும் பொழுது ஸ்வரம் முதலியவற்றில் உண்டாகக்கூடிய கவனக்குறைவைப் போக்க வேண்டி சிக்ஷாத்யாயம் ஆரம்பம் செய்யப்படுகின்றது.

(मन्त्रः) शीक्षां व्याख्यास्यामः । वर्णः स्वरः । मात्रा बलम् । साम सन्तानः । इत्युक्तश्शीक्षाऽध्यायः ।

(ப-ரை) **शीक्षाम्**=ஸ்வரம், வர்ணம் முதலியவற்றைக் கவனித் தறிதலை **व्याख्यास्यामः**=தெளிவாயுபதேசிக்கின்றோம். (**सः, शीक्षाध्यायः**=ஸ்வரம், வர்ணம் முதலியவற்றைக் கவனித்தறிதலைப்பற் றிய அந்த அத்யாய (பாக) மானது) **वर्णः**=அகாரம் முதலிய எழுத்து **स्वरः**=உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் முதலி யன **मात्रा**=ஹ்ரஸ்வம். தீர்க்கம் முதலியன (அதாவது: எழுத்தை உச்சரிப்பதிலுள்ள குறில், நெடில்முதலிய உச்சாரணகால அளவு) **बलम्**=ஸ்ப்ருஷ்டத்வம், ஈஷத்ஸ்ப்ருஷ்டத்வம் முதலியன (அதா வது முகத்தினின்றும் வெளியாகும் எழுத்துக்களை வெளிப்படுத் துவதிலுள்ள முயற்சிகள்) **साम**=நடுநிலையில் வர்ணங்களை யுச்சரித் தல் (அதாவது: மிக்கவேகமின்றியும், மிக்க தாமதமின்றியும், எந்தவர்ணத்தை யுச்சரிப்பதற்கு எவ்வளவுகாலம் சாஸ்திரத்திற் சொல்லப்பட்டிருக்கிறதோ அவ்விதமுச்சரித்தல்) **सन्तानः**=முன் பின்னுள்ள எழுத்துக்களின் தொடர்ச்சி **इति**=இவ்விதமாக **उक्तः**= சொல்லப்பட்டிருக்கிறது.

(தா-ம்) இவ்வனு வாகத்திலுள்ள சிக்ஷாமுதலிய சப்தங் களை ஏகசுருதியாகவே அத்யயனம் செய்வது வழக்கத்திலிருந்து வருகிறது. ஆகவே வியாகரணசாஸ்திரப்படி பிரக்ருதி, பிரத்யம் (பகுதி, விகுதி) முதலியவற்றிற்குச் சொல்லிய ஸ்வரம் உச்சரிக் கப்படுவதில்லை தானாயினும் எந்தச் சப்தத்திற்கு எவ்விதஸ்வரம் ஸம்பிரதாயத்தில் இருந்து வருகின்றதோ அவ்விதஸ்வரத்தையே வைத்து அப்யாஸம் செய்யவேண்டும் என்பது இதனாற் பெறப்

பட்டது. இங்குபடிக்கும் ஸ்வரம் முதலியவற்றால் அர்த்தக் ஞானத்திற்கு எவ்வித உபயோகமுமில்லை தானாயினும் சிக்ஷாத்யாயம் என்றவேத பாகத்தால் உபதேசிக்கப்பட்டிருப்பது பற்றி அதிருஷ்டம் (புண்யம்) ஏற்பட்டு அதனால் உபாஸனை செய்வதிலோ, தத்துவக்ஞானத்தையடையவதிலோ உள்ள இடையூறுகள் விலகுவதற்கு உபயோகப் படுவதாகக் கொள்ளல் வேண்டும்.

சங்கை—அங்ஙனமாயின் கர்மகாண்டத்திலும் இந்த சிக்ஷாத்யாயத்தைப் படிக்கவேண்டுவதவசியமல்லவோ ?

உத்தரம்—ஆம். அவ்விதம் படிக்கவேண்டுவது அவசியமானதுதான். ஆயினும் கர்மகாண்டம், ஞானகாண்டம் இவ்விரண்டிற்கும் பொதுவாய் இவ்விருகாண்டங்களுக்கும் நடுவிலிது படிக்கப்பட்டதென அறிந்து கொள்க.

சங்கை—அங்ஙனமாயின் இவ்விருகாண்டங்களுக்கும் பொதுவாக வேதத்தின் ஆரம்பத்திலேயே இந்த சிக்ஷாத்யாயத்தைப் படித்து விடலாமன்றோ ?

உத்தரம்—கர்மகாண்டத்திற்கும் இந்தவிதி அவசியம் தானாயினும் பிரும்மவித்யையில் அதிகம் பிரயோஜனமிருப்பதாலேயே இங்கு இவ்வத்யாயம் படிக்கப்பட்டது. அதாவது:—கர்மகாண்டத்தில் ஒரு ஸமயம் ஸ்வரம், வர்ணம் இவைகள் மாறுவதன் மூலம் அர்த்தமறிவதில் யாதேனும்மாறுதலுண்டாகி அதனின்றும் கர்மானுஷ்டான விஷய மானமாறுதலேற்பட்டு அதனின்றும் பிரத்யவாயம் என்ற பாபம் வருமானால் அந்தப்பாபத்தை பிராயச்சித்தம் முதலியவற்றால் போக்கிக் கொள்ளக்கூடும். இவ்விதமே.

अनाज्ञातं यदाज्ञातं यज्ञस्य क्रियते मिथु ।
अग्ने तदस्य कल्पय त्वंँहि वेत्थ यथातथम् ॥

"ஓ அக்கனிதேவனே! அறியாமையினாலும், தவறாக வறிந்ததாலும் யாகத்தின் விஷயத்தில் என்னால் தவறப்பட்டது என்பது யாதுண்டோ, அத்தவறை நீர் பூர்த்தி செய்து வைக்கவேண்டும். நீர்தான் அதனுண்மையை உள்ளபடி அறிந்திருக்கின்றீர்"

என்றதால் பிராயச்சித்தமாகச் செய்யப்படும் ஆஜ்யாஹுதிமந்திரத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே வித்யாகாண்டத்தின் பொருளை முறைதவறித் தெரிந்து கொள்வதால் நேரும் தோஷத்தை எவ்விதத்தாலும் மாற்றவியலாது. பழுதையைப்பாம்பென்னெண்ணியதாலுண்டாகும் கஷ்டங்களை மந்திரஜபம் முதலியவற்றால் போக்கவியலுமோ? ஒருபொழுதுமியலா. ஆனதுபற்றியே கர்மகாண்டங்களிற் போல பிரும்மவித்யாவிஷயத்தில் நேரும் தோஷத்தைப் போக்குவதற்காக வேறுபிராயச்சித்தம் எதுவும் நமதுசாஸ்திரத்திற் கூறப்படவில்லை. மேலும் "பிரும்மவித்யாப்யாஸம் முதலியவற்றைச் செய்கின்றவனுக்குப் பாபகார்யத்தில் பிரவிருத்தி ஏற்படுமாயின் மேற்கூறிய பிரும்மவித்யாதிகளால் அத்தோஷத்தைப் போக்க வேண்டுமேயின்றி அவ்விஷயத்தில் வேறுமந்திரம் முதலியன பயன்தரா" என்று அடியில் எழுதப்படும் ஸ்மிருதி வசனமும் கூறுகின்றது. அவ்வசனமாவது:—

यदि स्यात्पातकं किञ्चिद्योगी कुर्यात्प्रमादतः ।
योगमेव निषेवेत नान्यं मन्त्रं कदाचन ॥

பிரும்மவித்யாமுதலிய யோகப்பயிர்ச்சி செய்பவன் தவறாக ஏதேனும் கொஞ்சம் பாபத்தைச் செய்து விடநேருமாயின் அத்தோஷத்தை மேற்கூறிய பிரும்மவித்யை முதலியயோகாப்யாஸத்தால் போக்கவேண்டுமேயல்லாது அதற்காக வேறு மந்திரம் முதலியவற்றை ஜபித்தல் எவ்விதத்திலும் பயன்தரா" என்பதாம். ஆனதுபற்றியே பிரும்மவித்யைக்கு எவ்விதக்குறைவுமுண்டாகாவண்ணம் பிரும்மவித்யோபதேசம் செய்யும் உபநிஷத்தை ஸ்வரம், வர்ணம் இவற்றுடன் சேர்த்து ஸம்பிரதாயப்படி ஜபிக்க வேண்டுவதவசியம் என்று இதனாலுபதேசிக்கப்பட்டது. (எ-று)

## விசிஷ்டாத்வைதம்

**शीक्षां व्याख्यास्यामः**-சிக்ஷையை உபதேசிக்கிறோம். அதாவது: சிக்ஷை என்ற வேதாங்கமானது வேதத்திற்கு உபகாரகமாகும் முறையை உபதேசிக்கிறோம். (சிக்ஷா என ஹ்ரஸ்வம் இருப்பதற்குப் பதிலாக வைதிகவிதியை யனுஸரித்து சீக்ஷா

எனத்தீர்க்க முபதேசிக்கப்பட்டது) **बलम्**=அல்பபிராணத்வம், மஹாபிராணத்வம் முதலியன **साम**=க்ருஷ்டம், பிரதமம் முதலிய ஏழுஸ்வரங்கள் **सन्तानः**=வர்ணங்கள், பதங்கள் இவற்றின் சேர்க்கை முதலியன. வர்ணம் ஸ்வரம் முதலியவற்றைப்பற்றின அறிவானது சிக்ஷை என்ற வேதாங்கத்தாலுண்டாகின்றது. ஆகவே இந்த அறிவானது பிரும்மவித்யைக்கு உபயோகப்படுகின்றது எனப்பொருளேற்படுகின்றது. இங்குள்ள சிக்ஷா என்றபதம் ஏனைய வேதாங்கங்களேயும் உபலக்ஷணமுறையால் குறிப்பிடுகின்றது. ஆகவே சிக்ஷை என்றக்கிரந்தத்தினுடைய உபயோக முறையானது உபதேசிக்கப்பட்டுவிட்டது.

குறிப்பு—அத்வைதமதப்படியும், விசிஷ்டாத்வைத மதப்படியும் எந்தவிடத்தில் பொருள் வேறு படுமோ அவ்விடத்தில் இரண்டு பொருளேயுமே எழுதுகிறோம். இரண்டு பொருளுமொன்றாக விருக்குமானுல் அத்வைதமதப்படி மட்டும் பொருள் எழுதுகிறோம். இனி வரும் மந்திரங்களிலுமிவ்விதமே காண்க. (எ - று)

## மூன்ருவது அனுவாகம்.

அத்×ம்—(அ - கை) இரண்டாவது அனுவாகத்தில் திருஷ்டமாயும் அதிருஷ்டமாயு முபகாரத்தைத்தரும் கிரந்தபாடத்தின் நியமம் உபதேசிக்கப்பட்டது. மூன்ருவது அனுவாகத்திலோ இம்மை மறுமை இரண்டிலும் பயன்தரும் ஒரு உபாஸனம் உபதேசிக்கப்படுகின்றது. தொடக்கத்தில் அவ்விஷயமாய் மங்களாசரணம் செய்தற்குரிய மந்திரம் படிக்கப்படுகின்றது. மேலும் முன்னர்படித்த சாந்தி மந்திரத்தால் விக்னத்தின் விலகுதல் வேண்டப்பட்டது. இம்மந்திரத்தால் உபாஸனம், அதன் பயன் இவ்விரண்டும் மேன்மையுள்ளதாயிருத்தல் வேண்டும் என வேண்டப்படுகின்றது.

(मन्त्रः) सह नौ यशः । सह नौ ब्रह्मवर्चसम् ।

(ப - ரை) **यशः**=(ஸாம்ஹிதீ முதலிய உபநிஷத்தை யறிவதாலுண்டாகும்) கீர்த்தியானது **नौ**=சிடன், ஆசிரியர் இருவர்க்

கும் सह=சேர்ந்தே (अस्तु= உண்டாகட்டும்) ब्रह्मवर्चसम्=முற்கூறி யஸம்ஹிதை முதலிய உபநிஷத்தையறிதலாலுண்டாகும் பிராம் மணனுக்குரிய தேஜஸானது नौ=சீடன், ஆசிரியர் இருவருக்கும் सह=சேர்ந்தே (अस्तु=உண்டாகட்டும்)

குறிப்பு—இந்தமந்திரத்தால் யசஸ்ஸையும் பிரும்மதேஜஸ் ஸையும் பிரார்த்திப்பவன் சீடனேயாவன். அடையவேண்டிய வை சீடனுக்குமீத மிருக்கின்றமையின் பிரார்த்தனையும் சீட னைச்சேர்ந்ததென்பது யுக்திக்குப் பொருத்தமுள்ளதாயாகின்றது. அடையவேண்டியவையாவையும் அடைந்தவரே ஆசார்யனாக விருக்கக்கூடுமாதலால் எதையுமடைந்தவர் திரும்பவும் ஒன்றை யடையவேண்டுமென பிரார்த்திக்க நியாயமில்லை. ஆகவே யசஸ், பிரும்ம வர்ச்சஸ் ஆகிய இரண்டின் பிரார்த்தனையையும் வெளி யிடுகின்ற இம்மந்திரத்தை சீடனே ஜபித்தல் வேண்டும். ஆசிரி யர் ஜபிக்கவேண்டிய அவசியமில்லை (எ - று)

(அ - கை) சிஷ்யன் எதற்காக மங்களாசரணத்தைச் செய் தானோ அந்த ஸம்ஹிதோபநிஷத் (உபாஸனம்) தானது உப தேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) अथातस्संहिताया उपनिषदं व्याख्यास्यामः । पञ्चस्वधि-
करणेषु । अधिलोकमधिज्यौतिषमधिविद्यमधिप्रजमध्यात्मम् ।
ता महासंहिता इत्याचक्षते ।

(ப - ரை) अथ=முந்திய அனுவாகத்தால் போதிக்கப்பட்ட வர்ணம், ஸ்வரம், முதலியவற்றின் உச்சாரணம் செய்யவேண்டிய முறையைத்தெரிந்து கொண்ட பிறகு अतः=முன்னர் கூறியபடி யே வர்ணங்களையுச்சரித்து அந்த ஸம்ஸ்காரம் சித்தத்தி லேறினவனாக விருப்பதால் (ஸ்வரவர்ண நியமத்துடன் கிரந்தங் களைமட்டும் ஆவிருத்தி செய்பவனுடைய புத்தியானது விரைவில் அர்த்தமறியும் விஷயத்திலிறங்கு மென்பது சிரமசாத்யமானது பற்றி.) संहितायाः=அக்ஷரங்களின் சேர்க்கையாகிற ஸம்ஹிதை யினுடைய उपनिषदम्=உபாஸனத்தை पञ्चसु=ஐந்துகளான

*अधिकरणेषु - விஷயங்களில், அதாவது: லோகம், ஜ்யோதிஸ், வித்யை, ப்ரஜை, ஆத்மா ஆகிய ஐந்துவிஷயங்களுடன் கூடியதாக व्याख्यास्यामः=தெளிவுற உபதேசிக்கின்றோம், अधिलोकम्= பிருதிவீ முதலியலோகங்களை விஷயமாகக்கொண்டதும் अधिज्यौतिषम्= அக்னிமுதலிய ஜ்யோதிஸ்ஸுகளை விஷயமாகக்கொண்டதும் अधिविद्यम्=ஆசாரியன் முதலியவற்றை விஷயமாகக் கொண்டதும் अधिप्रजम्=மாதா முதலியவற்றை விஷயமாகக் கொண்டதும், अध्यात्मम्= அதாஹனு முதலியவற்றை விஷயமாகக் கொண்டதுமான (याः=எந்த उपनिषदः=உபாஸனங்கள் कथिताः=சொல்லப்பட்டனவோ) ताः=அவ்வுபாஸனங்களை महासंहिता इति=பூஜ்யமான (சிறந்ததான) ஸம்ஹிதோபாஸனங்களென आचक्षते=வேதமறிந்தவர்கள் சொல்லுகின்றனர்

(தா - ம்) உபாஸ்யமான தேவதையின் ஸ்வரூபத்தை சாஸ்திரத்திற் சொல்லியபடி குருபதேசமூலம் மனத்தில் வாங்கி அவ்வித ஸ்வரூபத்தை மனத்தால் இடைவிடாது சிந்தித்தலே உபாஸனம் எனப்படும். ஆகவே உபாஸனம் என்பது நிலைத்தமனத்தால் செய்யப்படவேண்டியதா யாகின்றது. இனி கூறப்படும் உபாஸனத்தில் பிரவிருத்திக்கவேண்டிய அதிகாரியானவன் வெகுகாலமாக வேதாக்ஷரங்களையே ஆவிருத்திசெய்து வந்திருப்பதால் வேதபாடத்தின் ஸம்பந்தமற்ற உபாஸனங்களில் இவனுடைய சித்தமானது சுலுவில் பிரவேசிக்கமுடியாததாக இருக்குமெனக் கருதியே வேதபாட ஸம்பந்தமுள்ள இந்த ஸம்ஹிதோபாஸனம் விதிக்கப்பட்டது. इषेत्वा என்பது யஜுஸ்ஸம்ஹிதாரம்பத்திலுள்ள வாக்யமாகும். இதை உதாஹரணமாய் எடுத்துக்கொள்வோம். 'षे' என்றவிடத்தில் ष्, ए என இரண்டெழுத்துக்களிருக்

---

*இங்குள்ள अधिकरण என்ற பதத்திற்கு உபலக்ஷண முறையால் விஷயங்கள் என்று பொருள் கொள்ளவேண்டும் என்றும், अधिकरणेषु என்ற சப்தத்திலுள்ள ஸப்தமீவிபக்தியை (ஏழாம் வேற்றுமையை) திருதீயாவிபக்தியாக (மூன்றும் வேற்றுமையாக) வைத்துப்பொருள் கொள்ளவேண்டும் என்றும் "வனமாலா" என்ற வியாக்யானத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

கின்றன. இவற்றுள் षे என்ற விடத்திலுள்ள ए என்ற எழுத்தை முதல் எழுத்தாகவும், त्वा என்றவிடத்திலடங்கியுள்ள त्, वा என்ற இரண்டு எழுத்துக்களுள் त् என்ற எழுத்தை ஸம்ஹிதையின் முடிவிலுள்ள எழுத்தாகவும், ए, त् இவ்விரண்டிற்கு மிடையில் வியாகரண சாஸ்திரமுறைப்படி உச்சரிக்கும்பொழுது இருக்க வேண்டிய மற்றொரு त् என்ற எழுத்தை ஸந்தானம் (ஒன்றுடன் மற்றொன்றைச் சேர்த்து உச்சரிக்கப்படும்பொழுது ஒலிக்கக்கூடியது) என்றும், ए என்ற எழுத்துக்கும், त्, त् वा என்ற எழுத்துக்களுக்குமுள்ள இடைவெளியை சந்தி: [ஒரு எழுத்திற்கும், மற்றொரு எழுத்திற்குமுள்ள சற்றும் இடைவெளி (உச்சாரணத்தில் காலதாமதம்) இல்லாதிருத்தல்] என்றும் வைத்துக் கொள்ளவேண்டும். இவ்விதம் வைத்துக்கொண்ட பிறகு ए, त्, त्, वा இவ்வெழுத்துக்கள், இவ்வெழுத்துக்களை யுச்சரிக்கும் பொழுது நேரக்கூடிய இடைவெளி, ஆகிய இவற்றில் अधिलोकं, अधिज्यौतिषं, अधिविद्यं, अधिप्रजं, अध्यात्मं, என ஐந்துவிதமான உபாஸனங்கள் விதிக்கப்படுகின்றன. ஆகவே இனி விதிக்கப்படும் உபாஸனங்கள் ஒவ்வொன்றும் தனித்தனியாக உள்ளதெனக் கொள்ளல் தகாதென்பதைக் காட்டவே உபாஸனத்தை விதிக்கத் தொடங்கும் வாக்யத்தில் पञ्चस्वधिकरणेषु, अधिलोकमधिज्यौतिष-मधिविद्यमधिप्रजमध्यात्मम् என உபாஸனம் தொடங்கப்பட்டதென்றுக் கொள்ளவேண்டும். (எ-று)

(அ - கை) முன்னர் கூறப்பட்ட உபாஸனத்தில், உபாஸ்யமான அவயவங்களைச் சொல்லத்தொடங்கி அவற்றுள் லோகம் என்ற முதலாவது அவயவம் உபதேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) अथाधिलोकम् । पृथिवी पूर्वरूपम् । द्यौरुत्तररूपम् । आकाश स्सन्धिः । वायुस्संधानम् । इत्यधिलोकम् ॥

(ப - ரை) अथ=உபாஸனாரம்பத்தில் अधिलोकम्= லோகத்தைப்பற்றிய உபாஸனம் (उच्यते=சொல்லப்படுகிறது.) पूर्वरूपम्= ஸம்ஹிதையின் முதல் எழுத்தானது (அதாவது: इषेत्वा=என்ற விடத்திலுள்ள षे என்ற எழுத்துக்குமேலுள்ள ए என்ற எழுத்

தானது) पृथिवी=பூமியின் அபிமானிதேவதை (इति, चिन्तयेत्=என்று தியானித்தல்வேண்டும்.) उत्तररूपम्=மேலுள்ள எழுத்தானது (அதாவது: त्वा=என்றவிடத்திலுள்ள त् என்ற எழுத்தானது) द्यौः=த்யுலோகாபிமானி தேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்.) संधिः=इषेत्वा என்றவிடத்தில் षे முதல் त्वा முடியவுள்ள பாகத்தைத் தொடர்ச்சியாக உச்சரிக்குங்கால் அவசியமாக நேருமிடையிலுள்ள அவகாசமானது आकाशः=ஆகாசாபிமானி தேவதை (इतिचिन्तयेत्=என்று தியானித்தல்வேண்டும்.) संधानम्=इषेत्वा=என்ற விடத்திலுள்ள ए என்ற எழுத்துக்கும், त्वा என்ற எழுத்துக்குமிடையில் உச்சாரணமுறையையொட்டி ஏற்படும் மற்றொரு त् என்ற எழுத்தானது वायुः=வாயுதேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்.) अधिलोकम्= லோகத்தைப்பற்றியதாகக் கூறப்பட்ட உபாஸனமானது इति=இவ் விதமாகும்.

(அ - கை) இரண்டாவதான ஜ்யோதிஸ் என்ற உபாஸ்யாவயவம் உபதேசிக்கப் படுகின்றது.

(मन्त्रः) अथाऽधिज्यौतिषम् । अग्निः पूर्वरूपम् । आदित्य उत्तररूपम् ।
आपस्संधिः । वैद्युतस्संधानम् । इत्यधिज्यौतिषम् ॥

(ப - ரை) अथ=பிறகு अधिज्यौतिषम्=ஜ்யோதிஸ்ஸைப்பற்றிய உபாஸனம் (उच्यते=சொல்லப்படுகிறது) पूर्वरूपम्=முற்கூறியபடி ஸம்ஹிதையின் முதல் எழுத்தானது अग्निः=அக்னியின் அபிமானிதேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்.) उत्तररूपम्=மேல் எழுத்தானது. அதாவது:—इषेत्वा=என்றவிடத்தில் त्वा என்றதிலுள்ள त् என்ற எழுத்தானது आदित्यः=ஸூர்யமண்டலாபிமானி தேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்) संधिः इषेत्वा=என்றதைத் தொடர்ச்சியாக உச்சரிக்குங்காலிடையிலுள்ள அவகாசமானது आपः=ஜலாபிமானிதேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்) संधानम्=इषेत्वा=என்றவிடத்தில் ए என்ற எழுத்துக்கும் त् என்ற வெழுத்துக்கு மிடையிலுள்ள மற்றொரு त् என்ற எழுத்தானது वैद्युतः=மின்னலுக்கு அபி

மானிதேவதை (इतिचिन्तयेत्=என்று தியானிக்கவேண்டும்) अधि-ज्यौतिषम्=ஜ்யோதிர் விஷயமாகச் செய்யப்படும் உபாஸனமானது इति=இவ்விதமாகும்.

(அ - கை) மூன்றாவதான வித்யா என்ற உபாஸ்யாவயவம் உபதேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) अथाधिविद्यम् । आचार्यः पूर्वरूपम् । अन्तेवास्युत्तररूपम् । विद्या संधिः । प्रवचनꣳसंधानम् । इत्यधिविद्यम् ॥

(ப - ரை) अथ=பிறகு अधिविद्यम्=வித்யாவிஷயமான உபாஸனம் (उच्यते=சொல்லப்படுகின்றது) पूर्वरूपम् = ஸம்ஹிதையின் முதல் எழுத்தானது. அதாவது: इषेत्वा=என்றவிடத்தில் ஷகாரத்திற்குமேலுள்ள ए காரமானது आचार्यः=ஆசாரியன் (इति=என்றும்) उत्तररूपम् = ஸம்ஹிதையின் மேலுள்ள எழுத்தானது:— அதாவது: इषेत्वा=என்றவிடத்தில் त्वा=என்றதிலுள்ள त् என்ற எழுத்தானது अन्तेवासी=சிஷ்யன் (इति=என்றும்) संधिः=इषेत्वा= என்றவிடத்தில் ए, त्, त् இம்மூன்றையு முச்சரிக்கும் பொழுதுள்ள இடைவெளியானது विद्या=வித்யை (इति=என்றும்) संधा-नम्=इषेत्वा=என்றவிடத்தில் ए, त् இரண்டிற்கும் மத்தியில்வருகின்ற त् என்ற மற்றொரு எழுத்தானது प्रवचनम्=வித்யையைக் கற்பித்தல் (इति=என்றும் चिन्तनीयम्=தியானிக்கவேண்டும்) अधिवि-द्यम्=வித்யாவிஷயமான உபாஸனமானது इति=இவ்விதமாகும்.

(அ - கை) நான்காவதான பிரஜா என்ற உபாஸ்யாவயவமுபதேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) अथाधिप्रजम् । माता पूर्वरूपम् । पितोत्तररूपम् । प्रजा संधिः । प्रजननꣳसंधानम् । इत्यधिप्रजम् ॥

(ப-ரை) अथ=பிறகு अधिप्रजम्=பிரஜாவிஷயமான உபாஸனம் (उच्यते=சொல்லப்படுகின்றது.) पूर्वरूपम्=ஸம்ஹிதையின் முதல் எழுத்தானது: அதாவது:—इषेत्वा = என்றவிடத்தில் ஷகாரத்தி

ற்கு மேலுள்ள प என்ற எழுத்தானது माता-தாய் (इति-என்றும்) उत्तररूपम्-மேலுள்ள எழுத்தானது அதாவது:— इषेत्वा-என்றவிடத்தில் त्वा-என்றதிலுள்ள त् என்ற எழுத்தானது पिता தகப்பன் (इति-என்றும்) संधिः-इषेत्वा என்றவிடத்தில் ष, त्, त् இம்மூன்றையு முச்சரிப்பதற்குள்ள அவசியமான இடைவெளியானது प्रजा=ஸந்ததி (इति-என்றும்) संधानम्-ष, त् இவ்விரண்டிற்கு மிடையிலுள்ள மற்றொரு त् என்ற எழுத்தானது प्रजननम्=பிரஜையை யுண்டுபண்ணுவதற்குரிய காரியம் (इति - என்றும் चिन्तनीयम् = சிந்திக்கவேண்டும்.) अधिप्रजम् - பிரஜாவிஷயமான உபாஸனமானது इति-இவ்விதமாகும்.

(அ - கை) இந்தாவ்தான ஆத்மா என்ற உபாஸ்யாவயவமானது உபதேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) अथाऽध्यात्मम् । अधराहनुः पूर्वरूपम् । उत्तराहनुरुत्तररूपम् । वाक्संधिः । जिह्वा संधानम् । इत्यध्यात्मम् ॥

(ப - ரை) अथ-பிறகு अध्यात्मम्-சரீராவயவத்தை விஷயமாகக்கொண்டு செய்யப்படும் உபாஸனம் (उच्यते-சொல்லப்படுகின்றது.) पूर्वरूपम्-ஸம்ஹிதையின் முதல் எழுத்தானது इषेत्वा=என்ற ஸம்ஹிதையில் ஷகாரத்திற்குமேலுள்ள ष என்ற முதல் எழுத்தானது अधराहनुः-கீழ்மோவாய் கட்டையாகவும் उत्तररूपम् மேலுள்ள எழுத்தானது इषेत्वा=என்றவிடத்தில் त्वा-என்றதிலுள்ள त् என்ற எழுத்தானது उत्तराहनुः-மேல் மோவாய்க்கட்டையாகவும் संधिः-इषेत्वा-என்றவிடத்தில் ष, त्, त् இம்மூன்று எழுத்துக்கு மிடையிலுள்ள அவகாசமானது वाक्=வாக்என்ற இந்திரியமாகவும் संधानम्-इषेत्वा என்றவிடத்தில் ष காரத்திற்கும், त காரத்திற்கும் நடுவில் வருகின்ற त् என்ற எழுத்தானது जिह्वा=நாக்கு என்றும் चिन्तनीयम्-எண்ணவேண்டும். अध्यात्मम्=சரீர விஷயமாகச்செய்யப்படும் உபாஸமானது इति-இவ்விதமாகும்.

(அ - கை) இவ்விதம் கூறப்பட்ட ஸம்ஹிதையின் அவயவங்கள் முடிக்கப்படுகின்றன.

(मन्त्रः) इतीमा महासंहिताः ॥

(ப - ரை) इमाः=இந்த महासंहिताः = மஹாஸம்ஹிதைகள் इति=இவ்விதமாகும்.

(அ - கை) மேற்கூறிய ஸம்ஹிதோபாஸனத்தாலுண்டாகும் திருஷ்டமாயும், அதிருஷ்டமாயுமுள்ள பலனுபதேசிக்கப் படுகின்றது.

(मन्त्रः) य एवमेता महासंहिता व्याख्याता वेद । संधीयते प्रजया पशुभिः । ब्रह्मवर्चसेनाऽन्नाद्येन सुवर्ग्येण लोकेन ॥

(ப-ரை) यः=எவன் व्याख्याताः=விரித்துக்கூறப்பட்ட एताः= இந்த महासंहिताः=மஹாஸம்ஹிதைகளை एवम्=முற்கூறியபடி वेद= உபாஸிக்கின்றானோ (सः=அவன்) प्रजया=ஸந்ததியோடும் पशुभिः= பசுக்களோடும் ब्रह्मवर्चसेन=பிரும்மதேஜஸ்ஸோடும் अन्नाद्येन=உண்ணும் உணவு பொருளுடனும் सुवर्ग्येण=ஸுவர்க்கம் என்ற लोकेन லோகத்துடனும் संधीयते=சேருகிறான். அதாவது பிரஜை, பசு, பிரும்மவர்ச்சஸ், உண்ணும் உணவு என்ற திருஷ்டமான பலத்தையும், சுவர்க்கம் என்ற அதிருஷ்டமான பலனையும் அடைகிறான் என்பதாம்.

(தா - ம்) எவன் எம்மாதிரியான விஷயத்துடன் அடிக்கடி பழகி வருகின்றானோ அவனது மனதானது அவ்விஷயத்திலேயே சுலபமாய் பிரவிருத்திக்கும் என்பது உலகானுபவத்திற் கண்ட விஷயமாகும். அதிலும் ஸ்தூலமான (இந்திரியங்களுக்குப் புலப்படக்கூடிய) விஷயத்துடன் அடிக்கடி பழகி வருபவனுடைய மனதானது ஸ்தூலமான வஸ்துவில் பிரவிருத்திக்குமேயல்லாது ஸூக்ஷ்மமான வஸ்துவில் ஒருபொழுதும் பிரவிருத்திப்பதில்லை. இதுவும் அனுபவத்திற்கண்ட விஷயமேயாகும். ஆகவே ஸம்ஹிதோபாஸனத்தில் பிரவிருத்தி செய்யும்வரை ஸ்தூலமான வேதாக்ஷரங்களையே ஆவிருத்தி செய்துகொண்டிருந்த அதிகாரியின் மனத்திற்கு ஸூக்ஷ்மமான பரமாத்மவஸ்து விஷயத்தில் பிரவிருத்தி ஏற்படுவதென்பது சிரமசாத்தியமாகையாலும், ஸ்தூ

லமான வஸ்துவில் பிரவிருத்திக்கும் மனதை மெள்ளமெள்ள முறையே ஸூக்ஷ்மமான வஸ்துவில் திருப்பி அதைப் பழக்கத்தில் கொண்டுவந்து விட்டபிறகு அதனின்றும் மேலுள்ள ஸூக்ஷ்மமான வஸ்துவிலிறங்கி, இவ்விதமே மெள்ளமெள்ள ஒன்றின் பின் ஒன்றாய் முறையே ஸர்வஸூக்ஷ்மமான பரமாத்ம வஸ்துவில் பிரவிருத்தியானது ஸுலபமாக ஏற்படுமாகையாலும் இந்த ஸம்ஹிதோபாஸனமானது முதன்முதலி லுபதேசிக்கப்பட்டது. ஆகவே ஸ்தூலவஸ்துவில் மனத்தைச்செலுத்திய அதிகாரியானவன் பின் வருமாறு ஸம்ஹிதோபாஸனம் செய்யவேண்டும்.

इषेत्वा என்ற விடத்தை ஸம்ஹிதோபாஸனத்திற்கு திருஷ்டாந்தமாக எடுத்துக் கொள்வோம். इषेत्वा=என்றவிடத்தில் षे என்றதிலுள்ள ष, ए என்ற இரண்டு அக்ஷரங்களுள் ए என்ற அக்ஷரத்தில் பூமிக்கு அபிமானி தேவதாபுத்தியையும் त्वा என்ற விடத்திலுள்ள त्, वा என்ற அக்ஷரங்களுள் त् என்ற அக்ஷரத்தில் த்யுலோகாபிமானி தேவதாபுத்தியையும், ए என்ற எழுத்திற்கும் त्वा என்ற எழுத்திற்குமிடையில் உச்சாரண ஸமயத்தில் வியாகரண சாஸ்திரப்படி ஏற்படும் त् என்ற மற்றொரெழுத்தில் வாயு தேவதா புத்தியையும் ए, त्, त्, वा என்ற அக்ஷரங்களை உச்சரிக்கும்பொழுது அவசியமாக நேரும் உச்சாரணகாலத்திய அவகாசத்தில் ஆகாசாபிமானி தேவதாபுத்தியையும், செய்யவேண்டும். இவ்விதம் செய்யும் உபாஸனமே ஸம்ஹிதையில் லோக புத்திசெய்தல் என்ற லோகவிஷயமான உபாஸனமாகும். இவ்விதமே ए, त्, त् वा என்ற அக்ஷரங்கள், அவ்வக்ஷரங்களை யுச்சரிப்பதில் அவசியமாகநேரும் காலவிளம்பம் இவற்றில் अधिज्यौतिषम्, अधिविद्यम्, अधि प्रजम्, अध्यात्मम् என்றவிடத்திற் சொல்லியபடியெல்லாம் அந்தந்த வஸ்துக்களைப் பாவித்துச்செய்யும் உபாஸனமும் ஸம்ஹிதோபாஸனமாகும்.

அதாவது:—इषेत्वा என்ற விடத்திலுள்ள ए என்ற அக்ஷரத்தை பூமிக்கு அபிமானிதேவதையாகவும், அக்னிதேவதையாகவும், ஆசாரியனாகவும், மாதாவாகவும், கீழ்மோவாய்கட்டையாக

வும், त्वा என்ற விடத்திலுள்ள तू என்ற அக்ஷரத்தை த்யுலோகா பிமானி தேவதையாகவும், ஸூர்யமண்டலாபிமானி தேவதை யாகவும், சிஷ்யனுக்கவும், தகப்பனுகவும், மேல்மோர்வாய் கட்டை யாகவும் ए, त्वा என்ற இவ்விரண்டிற்கு மிடையில் வியாகரண சாஸ்திரப்படி ஸம்ஹிதோச் சாரணகாலத்திலேற்படும் तू என்ற அக்ஷரத்தை வாயுதேவதை யாகவும். மின்னலுக் கபிமானி தேவ தையாகவும், வித்யோபதேசமாகவும் பிரஜையை யுண்டுபண்ணும் காரியமாகவும் ए, तू, त्वा என்ற அக்ஷரங்களை யுச்சரிக்கும் கால் அவச்யமாக நேரக்கூடிய அவகாசத்தை ஆகாசாபிமானி தேவ தையாகவும், ஜலாபிமானி தேவதையாகவும், வித்யையாகவும், பிரஜையாகவும், வாக் என்ற இந்திரியமாகவும், ஒரே ஸமயத்தில் தியானித்தல் வேண்டும்.

ஆகவே ஸாளக்ராவ சிலையை விஷ்ணுவாகப் பாவிப்பது போலவே இந்த அக்ஷரங்களை மேற்சொன்னபடி தியானித்தல் பிரதீகோபாஸ்தியாகும். அத்துடன் **य एवमेता महासंहिता व्याख्याता वेद । संधीयते प्रजयापशुभिः। ब्रह्मवर्चसेनान्नाद्येन सुवर्ग्येण लोकेन** என்று இவ்வுபாஸனத்தை ஒன்றுகவைத்து பலன் சொல்லப்பட் டிருப்பதால் இங்கு சொல்லிய உபாஸனமானது ஒன்றென்றே கொள்ளவேண்டும். மேலும் இந்த மூன்றுவது அனுவாகத்தில் பலன் சொல்லுமிடத்துள்ள **यः वेद** என்றபதத்தால் உபாஸனமே சொல்லப்பட்டதா யறிந்து கொள்ளவேண்டும். எனெனில்—பிரக ரணம் உபாஸனையைக் கூறுதலாயிருத்தலே அதன்காரணமாகும். **इति प्राचीनयोग्योपास्व** "ஹேபிராசீன யோக்யனே! இவ்விதமே நீ உபாஸிப்பாயாக" என்றும் பின்னர் 6 வது அனுவாகத்தில் உபாஸனமே விதிக்கப்பட்டிருக்கிறது. உபாஸனமாவது:—

**उपासनञ्च यथाशास्त्रं तुल्यप्रत्ययसन्ततिः, असंकीर्णाच अतत्प्रत्ययैः शास्त्रोक्तालंबनविषया च**

சாஸ்திரத்திற் சொல்லியபடி தியானஞ்செய்யும் விஷயத் திற்குப் புறம்பான விஷயத்தையுடைய சித்த விருத்தியுடன் இடையிடையே சேருததாயும், சாஸ்திரத்திற் சொல்லிய வஸ்து வையே விஷயமாகக் கொண்டதாயுமிருக்கிற ஒரே விஷயத்தி

ளுள்ள தொடர்ச்சியான சித்தவிருத்திப் பிரவாஹமானது உபா ஸனம் எனப்படும். 'ராஜாவை உபாஸிக்கிறான், குருவை உபாஸிக் கிறான்' என்றவிடங்களில் எவன் ராஜா,குரு முதலியோரை இடை விடாது பணிவிடை செய்துவருகின்றானோ அவனையே உபாஸிக் கிறவன் எனக்கூறுகின்றோம். இவ்விதம் உபாஸிப்பவனே அவ் வுபாஸனத்தின் பலனையுமடைகிறான். ஆகவே மேற்கூறியபடியே உபாஸனம் என்றதின் பொருள். லோகத்திலும் பிரஸித்தமாக அனுபவத்திலிருந்து வருகின்றது. ஆனதுபற்றி இங்குள்ள वेद என்ற பதத்தால் உபாஸனமே கூறப்பட்டதாகக்கொள்ளவேண்டு வது அவசியமாகிவிட்டது. பிரஜை முதலியவற்றுடன் கூடுகிறா னென்று பலன்சொல்லி யிருப்பதிலிருந்தும் மேற்கூறியது தெளி வாகின்றது.

---

## மூன்றாவது அனுவாகம்

(விசி×ம்) **सहनौ यशः। सहनौ ब्रह्मवर्चसम्** என்றதால் குரு சிஷ்யன் இருவரும் இவ்வுபாஸனத்தா லுண்டாகும் பலன் எங்க ளிருவருக்குமே உண்டாகவேண்டும் என வேண்டுகின்றனர்.

(मन्त्रः) अथातस्संहिताया उपनिषदं व्याख्यास्यामः। पञ्चस्वधिकरणेषु। अधिलोकमधिज्यौतिषमधिविद्यमधिप्रजमध्यात्मम्॥

இவ்வனுவாகத்தால் லோகம், ஜ்யோதிஸ், வித்யை, ப்ரஜா சரீரம் என்ற ஐந்து அதிகரணங்களில் ஸம்ஹிதா சப்தத்தால் சொல்லப்படும் ஸந்திவிஷயமான ரஹஸ்யோபதேசங்களை விரி த்துரைக்கப்போகின்றோம் என்று கருத்து. **अधिलोकम्**=லோகத் தில். இவ்விதமே மற்றவிடங்களிலும் பொருள்காண்க.

**ता महासंहिता इत्याचक्षते** லோகம் முதலிய ஐந்து அதிகரண (இட) த்தில் அத்யாஸம் செய்யப்படுகின்ற (சிந்திக்கப்படுகின்ற) அந்த ஸம்ஹிதைகள் மஹாஸம்ஹிதைகளெனப்படும். இங்குள்ள மஹாஸம்ஹிதா என்ற பதத்திலுள்ள மஹா என்பதற்கு பூஜிக் கத்தக்கது என்பது பொருள்.

4

**पृथिवी पूर्वरूपम् । द्यौरुत्तररूपम्** என்றவிடங்களில் கூறியதற்கு உதாஹரணம் பின் வருமாறு:—**अ, उ, म्** என்ற அக்ஷரங்களின் சேர்க்கையில் முதலாவதான **अ** என்ற எழுத்து, பூர்வரூபம் என்றும், **म्** என்ற எழுத்து உத்தரரூபம் என்றும், அக்ஷரங்களைத் தொடர்ச்சியாக உச்சரிப்பது ஸந்தி என்றும், அவ்விதமுச்சாரணத்திற்கு வேண்டிய யத்னமானது ஸந்தானம் என்றும், கொள்ளவேண்டும். இவ்விதங்கொண்டு ஸம்ஹிதையின் அங்கங்களான இன்னுன்கு அவயவங்களையும், லோகம் முதலிய ஐந்து அதிகரணங்களில் உபாஸ்தி செய்யவேண்டிய கிரமத்தை **अथाधिलोकम्** முதலிய வாக்கியங்களுபதேசிக்கின்றன.

குறிப்பு:—விசிஷ்டாத்வைத மதத்தை யனுஸரித்த ரங்கராமாநுஜ பாஷ்யப்படி லோகம் முதலியவற்றில் ஸம்ஹிதாவயவங்களைப் பாவிக்கவேண்டுமென உபதேசிக்கப்பட்டதா யேற்படுகின்றது. அதாவது: லோகம் முதலியவற்றை ஆதாரமாகவும், ஸம்ஹிதாக்ஷரங்களை ஆதேயமாகவுங் கொண்டு லோகங்களில் அக்ஷரபுத்தி செய்யவேண்டுமென்பதாம்.

**वायुस्संधानम्**=கீழ்மேல் லோகங்களிற் சஞ்சரிப்பதை யொட்டி **संधानम्** என்று வாயுகூறப்பட்டது. **इत्यधिलोकम्**=லோகத்தில் செய்யப்படும் உபாஸனமானது இவ்விதம் சொல்லப்பட்டது. இவ்விதமே பின்னருள்ளவிடத்திலும் பொருள் கொள்ளவேண்டும். **अथाधिज्यौतिषम्-अग्नी प्रास्ताऽऽहुतिस्सम्यगादित्यमुपतिष्ठते** என்று கூறி இருப்பதற்கேற்ப ஆஹுதி ஸம்பந்தவிஷயத்தில் அக்னி, ஆதித்யன் இவ்விருவருக்கும் கீழ்மேலாயிருக்கும் தன்மை ஏற்படுகின்றது. **वैद्युतस्संधानम्**-ஜலரூபமானஸந்தி (சேர்க்கை) யானது மின்னலினது அக்னியின் அதீனமாயிருத்தல்பற்றி மின்னல் ஸந்தானம் என்று சொல்லப்பட்டதாயறியவும். **विद्या संधिः**-இங்கு வித்யை என்பது சிஷ்யனிடமுள்ள க்ஞானமாகும். **प्रवचनं संधानम्**=பிறர்க்குபதேசித்தல் பிரவசனம் எனப்படும். **प्रजननम्**-கர்ப்போத்பாதனம் செய்தல். **अधराहनुः**-கன்னத்தின் கீழுள்ளவிடம். **उत्तराहनुः**=கன்னத்தின் மேலுள்ளவிடம் **वाक्**=சப்தம். **य एव.........लोकेन**=இவ்விதமறிந்து உபாஸித்தலின்பலன் இதனாலுபதேசிக்கப்பட்டது. **संधीयते**-கூடியவனாக ஆகிறான்.

குறிப்பு:—விசிஷ்டாத்வைதப்படி எந்தவிடத்தில் பொருள் மாறுகிறதோ அவற்றை எழுதி இருக்கிறோம். மற்றவைகளுக்கு அத்வைதமதப்படி பொருள்கண்டுகொள்ளவும்.

மூன்றாவது அனுவாகம் முற்றிற்று.

---

## நான்காவது அனுவாகம்

(அ - கை) (அத் + ம்) மூன்றாவது அனுவாகத்தில் பிரஜை முதலியபலன் சித்திப்பதற்கு வேண்டி ஸம்ஹிதோபாஸனம் சொல்லப்பட்டது. மேற்கூறிய உபாஸனத்தால் பிரும்மக்ஞானத்திற்குச் சாதனமான சித்த ஐகாக்ரியமும் ஒருவாறு சித்திபெறுகின்றது. பின்னர்-மேதை (குருவினிடமிருந்து கிரஹித்த விஷயத்தை மறவாது தரிக்கும் சக்தி) யற்றவனுக்கு குருவினிடமிருந்து கேட்ட கிரந்தார்த்தத்தின் மறத்த லிருக்குமாதலால் பிரும்மக்ஞானத்தின் உற்பத்தி சம்பவிக்காதானது பற்றியும், ரோகம் முதலியவற்றால் சரீரம் முதலியவற்றின் திறமையற்றும், அன்னவஸ்திரமற்று மிருப்பவர்க்கு பிரும்மக்ஞான முண்டாவதற்கு இன்றியமையாக் காரணமான சிரவணாதிகளிற் பிரவிருத்தி ஏற்படாமை பற்றியும், பிரும்மக்ஞானமுண்டாவதற்கு மேதை முதலியன ஸாதனமாகின்றபடியால், அவை சித்திப்பதற்கு வேண்டிய மந்திரங்கள் நான்காவது அனுவாகத்தி லுபதேசிக்கப்படுகின்றன. அவற்றுள் முதன்முதலில் மேதையையடைய விருப்பமுள்ளவன் ஜபிக்கவேண்டிய மந்திரம் படிக்கப்படுகின்றது.

(मन्त्रः) यश्छन्दसामृषभो विश्वरूपः। छन्दोभ्योऽध्यमृतात्संबभूव। स मेन्द्रो मेधया स्पृणोतु ॥ अमृतस्य देव धारणो भूयासम् ॥

(ப - ரை) **छन्दसाम्**=காயத்ரீ முதலிய சந்தஸ்ஸுடன்கூடிய வேதங்களுக்குள் **ऋषभः**=சிறந்ததாயும் **विश्वरूपः**=ஸர்வஜகத்ரூபமாயு மிருக்கின்ற **यः**=எந்தப் பிரணவமானது **अमृतात्**=நித்யங்களான **छन्दोभ्यः**=வேதங்களைக் காட்டிலும் **अधि**=மிக்கச்சிறந்ததாக **संबभूव**=உண்டாயிற்றோ, அதாவது: பிரும்மதேவனுக்குத் தோற்

றத்தை யடைந்ததோ सः= அந்த इन्द्रः=எல்லாக் காமனைகளையும் தருவதிற் சிறந்த பிரணவமானது मा=என்னை मेधया=மேதையால். (ஒருதடவை கேட்டதை மறவாது தரிக்கும் சக்தியால்) स्पृणोतु= திருப்திசெய்து வைக்கட்டும். அல்லது அறிவின் வலுவைக் கொடுத்துக் கார்க்கட்டும் हेदेव=ஓ பிரணவமே अमृतस्य=மோக்ஷ ஹேதுவான பிரும்மக்ஞானத்தை धारणः = தரிப்பவனாக (கேட்டதை மறவாதிருப்பவனாக) भूयासम्=நான் ஆவேனாக.

(தா - ம்) மேதை, ஐசுவரியம், இவ்விரண்டிலும் விருப்பமுள்ளவனுக்கு அவ்விரண்டும் கிடைப்பதற்குச் சாதனமான ஜபம், ஹோமம், இவைகள் சொல்லப்படுகின்றன. समेन्द्रोमेधया- स्पृणोतु, ततोमेश्रियमावह । "அந்தச் சிறந்த பிரணவம் எனக்கு மேதையைத்தரட்டும். ஆனதுபற்றியே எனக்கு ஐசுவரியத்தையும் கொடுப்பாயாக" எனப் பின்னர் கூறுவதிலிருந்து மேற்கூறிய பொருள் சித்திக்கின்றது. மேலும் பிரணவமானது நாமரூபமான ஸகல பிரபஞ்சத்திலும் ஊடுருவிக் கலந்திருப்பதால் விசுவரூபமாகவும் ஆகின்றது. இவ்விதமே तद्यथा शङ्कुना सर्वाणि पर्णानि संतृण्णानि एवमोंकारेण सर्वा वाक्संतृण्णा. "உலகில் ஆல், அரசு முதலியவற்றின் இலைகள் எவ்விதம் தன்னுள் ஊடுருவிநிற்கும் நரம்புகளா லடர்ந்திருக்கின்றனவோ இவ்விதமே ஓம்காரத்தினல் நாம பிரபஞ்சமானஸகலவாக்கும் ஊடுருவிநிறைவுபெற்றிருக்கின்றது" எனச் சாந்தோக்யோப நிடதத்திலு முபதேசிக்கப்பட்டிருக்கின்றது. ஆனதுபற்றியேதான் ஓங்காரம் "ரிஷபம்" (சிறந்தது) எனச் சொல்லப்பட்டது. மேலும் இவ்விடத்தில் ஓங்காரத்தின் உபாஸனமே விதிக்கப்பட்டமையின் உபாஸ்யமான ஓங்காரத்தை ऋषभः, इन्द्रः, देवः என்ற சப்தங்களால் துதித்தல் பொருத்தமுள்ளதாகவுமாயிற்று. இத்தகைய ஓங்காரமானது நித்யங்களான வேதங்களைக்காட்டிலும் சிறந்ததென ஆதியில் பிரும்மதேவன் எண்ணினார். இவ்விதமே

प्रजापतिर्लोकानभ्यतपत्., तेऽभ्योऽभितप्तेभ्यस्त्रयीविद्या संप्रास्रवत्, तामभ्यतपत्, तस्या अभितप्ताया एतान्यक्षराणि संप्रास्रवन्त, भूर्भुवःस्व रिति, तान्यभ्यतपत्, तेभ्योऽभितप्तेभ्य ओंकारः संप्रास्रवत् ॥

"பிரும்மதேவன் ஸாரமானதுயாதென் உலகங்களையாராயத் தொடங்கினார். ஆராய்ந்த அவ்வுலகங்களுள் ருக், யஜுஸ், ஸாம என்ற மூன்றுவேதங்களே சிறந்தவைகளென அவரது மனதிற் றோற்றமுண்டாயிற்று. பின்னர் அம்மூன்று வேதங்களுள் சிறந்ததை ஆராயத்தொடங்கினார். அப்பொழுது भूः, भुवः, सुवः என்ற இந்த வியாஹ்ருதி அக்ஷரங்களே அவற்றுள் சிறந்தவைகளென அவரது மனதிற் றோற்றமுண்டாயிற்று. அம்மூன்று வியாஹ்ருதிகளுக்குள்ளும் சிறந்ததை ஆராயத் தொடங்கினார். அவற்றுள் ஓங்காரம் சிறந்ததென அவரது மனதிற் றோற்றமுண்டாயிற்று" என்றதால் சாந்தோக்யோப நிடதத்திலு முபதேசிக்கப்பட்டிருக்கின்றது. ஆகவே இங்குள்ள **संबभूव** என்ற பதத்திற்கு நித்யமான ஓங்காரத்திற்கு நேரில் உற்பத்தி ஸம்பவிக்காமை பற்றி பிரும்மதேவனின் மனதில் ஸாரமாகத் தோற்றத்தை யடைந்ததென்றே பொருள்கொள்ளவேண்டுவது அவசியமாகின்றது. இத்தகைய மஹிமைவாய்ந்த பிரணவஜபத்தால் மோக்ஷப்பிராப்திக்குக் காரணமான பிரும்மஞானத்தைக் குருவினிடமிருந்து உபதேசிக்கப்பெற்றும், உபதேசிக்கப்பெற்றபடியே அதை மனத்தில் தரிக்கின்றவனாகவும் ஆகவேண்டும் என் இதனால் வேண்டப்பட்டது.

(அ-கை) மேதையுண்டாவதற்குக் காரணமான மந்திரத்தை உபதேசித்த பின்னர், ரோகம் முதலியனவற் றிருத்தலுக்குக் காரணமான மந்திரம் படிக்கப்படுகின்றது.

(मन्त्रः) शरीरं मे विचर्षणम् । जिह्वा मे मधुमत्तमा । कर्णाभ्यां भूरि विश्रुवम् । ब्रह्मणः कोशोऽसि मेधया पिहितः । श्रुतं मे गोपाय ॥

(ப-ரை) **मे**=என்னுடைய **शरीरम्** = தேஹமானது **विचर्षणम्**=ரோகாதிகளற்று வித்தியாப்யாஸ யோக்யமாக (**भूयात्**=ஆகவேண்டும்) **मे**=என்னுடைய **जिह्वा** = நாக்கானது **मधुमत्तमा**=மிக்க மாதுர்யமுள்ள வார்த்தையைப் பேசுகின்றதாக அல்லது மிக்க இனிமையான வேதாந்த சாஸ்திராப்யாஸத்திற்றிறமை பொருந்தியதாக (**भूयात्**=ஆகவேண்டும்) **कर्णाभ्याम्** = இரண்டுகாதுகளைக்

கொண்டும் **भूरि**=அதிகமாக **विश्रुवम्** = (வித்யையை யுண்டாக்குகின்ற பஹுவிதக் கிரந்தங்களை) கேழ்க்கின்றவனுக ஆகவேண்டும். ஒருபொழுதும் செவிடுமுதலிய தோஷம் எனக்கு உண்டாகாமல் பிரும்மக்ஞான யோக்கியமாகவே எனது சரீரேந்திரியங்களிருக்கவேண்டும் என்பது கருத்து. (**हेप्रणव** = ஓ பிரணவமே! **त्वम्**=நீ) **ब्रह्मणः**=ஜகத்காரணமான பரமாத்மாவுக்கு **कोशः**=உறையாக (ஆலம்பனமாக) **असि**=இருக்கின்ருய் **मेधया**=வேறு லௌகிகமான அறிவினுல் **पिहितः**=மறைபெற்றவனுக (**भवसि**=இருக்கின்ருய்) ஸாமான்ய அறிவுள்ளவர்களால் உனது மஹிமை அறிவதற்கியலாதது என்பது பொருள். **मे**=எனக்கு **श्रुतम्** = கேள்வியாற் கிடைத்த ஆத்மக்ஞானம் முதலியவற்றை **गोपाय**= மறதி முதலியவை யுண்டாகாது காப்பாயாக.

குறிப்பு:—**मेधयापिहितः** என்றவிடத்தில் **मेधया, अपिहितः** எனப் பிரித்துக்கொண்டு **मेधया** = தாரணசக்தியுடன் **अपिहितः**= வியாப்தனுக (கூடியவனுக) என்று வித்யாரண்ய ஸ்வாமிகள் பொருள்கூறி இருக்கின்றனர்.

(தா - ம்) முற்கூறியவாறு பிரணவஜபம் செய்யு மதிகாரியானவன் பிருமக்ஞானத்திற்காக சரீரேந்திரியாதிகள் மிக்க அனுகூலமாக இருக்கவேண்டுமாறும், அவ்வித ஆனுகூல்யத்தையடைந்த பின்னர் குருவினிடமிருந்து கிடைத்த உபதேசங்கள் மறவாதிருக்கவேண்டும் என்றும் இம்மந்திரத்தால் பிரார்த்திக்கிருன் (எ - று)

(அ-கை) அன்னம், பானம், வஸ்திரம், முதலியன சித்திப்பதற்குவேண்டி செய்யப்படும் ஹோமத்தில் உபயோகிக்கப்படுகின்ற மந்திரங்களுள் முதல் மந்திரம் பின்வருமாறு.

(मन्त्रः) आवहन्ती वितन्वाना । कुर्वाणा चीरमात्मनः । वासाꣳसि मम गावश्च । अन्नपाने च सर्वदा । ततो मे श्रियमावह । लोमशां पशुभिस्सह स्वाहा ॥

(ப - ரை) (**हे प्रणव**=ஓ பரமாத்மவாசகமான பிரணவமே!

त्वम्=நீ) **वासांसि**=வஸ்திரங்களையும் **गावश्च**=பசுக்களையும் **अन्नपाने**=அன்னம்,பானம் இவைகளையும் **सर्वदा**-எப்பொழுதும் **मम**-எனக்கு **आवहन्ती**=ஸம்பாதித்துத் தருகின்றதும் **वितन्वाना**=கிடைத்ததை விரிவுபடுத்துகின்றதும் **आत्मनः**-வித்யார்த்தியான எனக்கு **चीरम्**-(விரிவுபடுத்தப்பட்டவை யாவையும்) நீண்டகாலமுள்ளதாக, அல்லது **अचीरम्**=விரைவிலேயே **कुर्वाणा**=நாசமாகாதபடி நிலைத்திருக்கும்படி செய்கின்றதுமான (**याश्रीः**=எந்த ஸம்பத்துண்டோ **ताम्**=அந்த) **पशुभिः**=செம்மறியாடு, வெள்ளாடு முதலியவற்றால் **लोमशाम्**=ரோமங்களடர்ந்ததாயுள்ள **श्रियम्**=ஸம்பத்தை **ततः**=முற் கூறியபடி மேதை ஸித்தித்தற்குப் பின்னர் **मे**=எனக்கு **आवह**=உண்டுபண்ணுவாயாக. **स्वाहा**=(அத்தகைய ஸம்பத்தை ந்தரும் பிரணவ வாச்யமான பரமாத்மாவையும் பொருட்டு இந்த ஆஜ்யம் முதலிய ஹோமத்திரவ்யமானது) ஹோமஞ்செய் யப்பட்டதா யாகட்டும்.

குறிப்பு:—முன் மந்திரத்தால் மேதையைப் பிரார்த்தித்து அத்தகையமேதை ஏற்பட்ட பின்னர் வஸ்திரம், பசு, அன்னபானம் முதலியவை நிறைந்த சம்பத்தானது தனக்கு வேண்டப்பட்டதின் கருத்தை **अमेधसोहिश्रीरनर्थायैव** "மேதையற்றவனுக்கு வரும் ஸம்பத்தானது அனர்த்தத்தையும் பொருட்டேயாகும் என்பது உலகமறிந்த விஷயமன்றோ" என்றதால் ஸ்ரீசங்கர பகவத்பாத பாஷ்யகாரர்களவர்கள் உபதேசித்திருக்கின்றனர். இங்குள்ள **स्वाहा** என்ற சப்தமானது ஹோமம் செய்வதற்குரிய மந்திரத்தின் முடிவைக் குறிக்கின்றது.

(அ-கை) அன்னபானாதிகள் நிரைந்த ஸம்பத்துடன் கூடியவனுக்கு பிரும்மவித்யா ஸம்பிரதாயப் பிரவிருத்தி யுண்டாவதற்காக சிஷ்யஸம்பாதனம் செய்வதற்குவேண்டிய ஐந்து ஹோமமந்திரங்கள் படிக்கப்படுகின்றன.

(मन्त्रः) आ मा यन्तु ब्रह्मचारिणस्स्वाहा। वि मा यन्तु ब्रह्मचारिणस्स्वाहा। प्र मा यन्तु ब्रह्मचारिणस्स्वाहा। दमायन्तु ब्रह्मचारिणस्स्वाहा। शमायन्तु ब्रह्मचारिणस्स्वाहा॥

(ப - ரை) ब्रह्मचारिणः=வைதிக வித்யாப்யாஸத்தில் நோக்கமுள்ள சிஷ்யர்கள் मा=ஸம்பிரதாயப் பிரவிருத்திசெய்யும் ஆசாரியனுன என்னை आयन्तु=நாலாபக்கங்களினின்றும் வந்தடையட்டும். स्वाहा=அதற்குவேண்டி இந்த ஹோமம் செய்யப்பட்டதாயாகட்டும். वि=பற்பல நோக்கமுள்ள, அதாவது: பசுமுதலியவற்றிலும், சுவர்க்கலோகம், பிரும்மலோகம், மோக்ஷம் இவற்றிலும் ஆசைகொண்டு அதற்குரிய சாதனத்தில் நோக்கமுள்ள ब्रह्मचारिणः=பிரும்மசாரிகள் मा=என்னை यन्तु=வந்தடையட்டும். स्वाहा அதற்குவேண்டி இந்த ஹோமஞ் செய்யப்பட்டதாயாகட்டும். प्र=பிரக்ஞையின் (அறிவின்) மேன்மையில் நோக்கமுள்ள ब्रह्मचारिणः=பிரும்மசாரிகள் मा=என்னை यन्तु=வந்தடையட்டும். स्वाहा=அதற்குவேண்டி இந்தஹோமம் செய்யப்பட்டதாயாகட்டும். दम् வெளியிலுள்ள இந்திரிய சேஷ்டைகளாகிற பாலலீலைகளினின்றும் விலகவெண்ணங்கொண்ட ब्रह्मचारिणः=பிரும்மசாரிகள் मा=என்னை आयन्तु=வந்தடையட்டும். स्वाहा=அதற்குவேண்டி இந்த ஹோமம் செய்யப்பட்டதா யாகட்டும். शम् = சித்தத்திலுள்ள குரோதம் முதலியதோஷத்தினின்றும் விலகவெண்ணங்கொண்ட ब्रह्मचारिणः=பிரும்மசாரிகள் मा=என்னை आयन्तु = வந்தடையட்டும். स्वाहा=அதற்குவேண்டி இந்தஹோமம் செய்யப்பட்டதாயாகட்டும்.

(தா - ம்) திருஷ்டமாகவோ, அதிருஷ்டமாகவோ உள்ள விஷயத்தில் பற்றுண்டு அவ்விஷயத்தை வைதிக வித்தியாப்பியாஸத்தால் சாதித்துக்கொண்டு விடலாமென விருப்பங்கொண்ட பிரும்மசாரிகளுள் எவர் என்னை ஆசிரியனுகவந் தடைந்தபோதிலும் அவரவருடைய மனோரதம் நிறைவேறுமாறு வித்யோபதேசஞ்செய்யுந் தன்மை எனக்குண்டாவதற்காக இந்த ஐந்துஹோமங்களை நான் செய்கின்றேன். (எ-று)

(அ - கை) சம்பிரதாய ப்ரவிருத்திசெய்தலால் நேரும் கீர்த்தியை விளக்கும் இரண்டு மந்திரங்கள் படிக்கப்படுகின்றன.

(मन्त्रः) यशो जनेऽसानि स्वाहा । श्रेयान्वस्यसोऽसानि स्वाहा ।

(ப - ரை) ப்ரணவத்தின் பொருளான ஹே பரமாத்மன்! உமது அருளால் நான் **जने**=எல்லா ஜனங்களுக்குள்ளும் **यशः**=கீர்த்திவாய்ந்தவனாக **असानि**=ஆவேனாக **स्वाहा** = அதற்காக இந்த ஹோமம் செய்யப்பட்டதாகவாகட்டும் (**अहम्** = நான்) **वस्यसः**= மிக்க மிக்க தனமுள்ளவர்களைக் காட்டிலுங்கூட **श्रेयान्** = மிக்க மேன்மைபெற்றவனாக **असानि**=ஆவேனாக **स्वाहा**=அதற்கு வேண்டியே இந்த ஹோமஞ் செய்யப்பட்டதாக வர்கட்டும்.

(அ -. கை) நற்கீர்த்தியுள்ளவனா யிருத்தலும், மிக்க மிக்க தனமுள்ளவர்களுக்குள் மிக்க மேன்மையுள்ளவனாக விருத்தலும் சித்திப்பதற்குரிய காரணங்களை யுபதேசிக்கும் மூன்றுமந்திரங்கள் படிக்கப்படுகின்றன.

(मन्त्रः) तन्त्वा भग प्रविशानि स्वाहा । स मा भग प्रविश स्वाहा । तस्मिन्त्सहस्रशाखे । निभगाहं त्वयि मृजे स्वाहा ।

(ப - ரை) **भग**=பிரணவத்தின்பொருளும் ஆறுகுணம் நிறைந்துள்ளவுமான பரமாத்மன்! **तम्** = அத்தகைய மகிமைவாய்ந்த **त्वा**உம்மை (**अहम्**=நான்) **प्रविशानि**=பிரவேசிப்பேனாக **स्वाहा**=அதற்குவேண்டி இந்த ஹோமஞ்செய்யப்பட்டதாகவாகட்டும். (அதாவது இரண்டறக்கலத்தலால் உம்மிடத்திற் பிரவேசித்தவன்போன்று இடைவிடாது உம்மை த்யானிப்பேனாக என்பது கருத்து) **हे भग**=ஓ பரமாத்மன்! **सः**=அத்தகைய மகிமைவாய்ந்த நீரும் **मा** என்னை **प्रविश**=பிரவேசிப்பீராக. (அதாவது என்னிடம் பிரவேசித்தவர்போன்று ஆதரவுடன் என்பால் அருள்புரிவீராக என்று கருத்து) **स्वाहा**=அதற்காக இந்த ஹோமஞ் செய்யப்பட்டதாக ஆகட்டும். **हे भग**=ஓ பரமாத்மன்! **सहस्रशाखे**=வெகுமூர்த்திபேதத்தையுடையவரான **तस्मिन्**=அந்த **त्वयि**=உம்மிடத்தில் (**पापकृत्यम्**=பாபகாரியத்தை **अहम्**=நான்) **निमृजे** = மிக்கச் சுத்திசெய்துகொள்ளுகிறேன் **स्वाहा**=அதற்குவேண்டி இந்த ஹோமஞ் செய்யப்பட்டதாகவாகட்டும்.

(கா-ம்) ऐश्वर्यस्य समग्रस्य वीर्यस्य यशसः श्रियः ।
ज्ञानवैराग्ययोश्चैव षण्णां भग इतीङ्गना ॥

நிறைந்த ஐச்வரியம், நிறைந்த வீரியம், நிறைந்த ஸ்ரீ, நிறைந்த க்ஞானம், நிறைந்த வைராக்யம் ஆகிய இந்த ஆறுக்கும் **भग** (பக) மென்றுபெயர் என்று கூறியிருப்பதால் இந்த மந்திரத்தி லுள்ள **भग** (பக) என்ற பதத்திற்கு மேற்கூறிய ஐசுவரியம்முத லிய ஆறுகுணங்கள் நிறைந்த பரமாத்மா பொருளாகக் கொள் ளப்பட்டது. ஆகவே இத்தகைய குணம்வாய்ந்த தங்களை நான் இரண்டறக்கலந்து உபாஸிப்பதன்மூலம் உமக்கு அருள் கூர்ந்து என்னைத் தாங்கள் அனுக்ரஹம் செய்தல்வேண்டும். இவ்விதம் பக்தானுக்ரஹத்திற்குவேண்டி சிவன், விஷ்ணு முதலிய அனே கம் மூர்த்திபேதத்தை யடைந்த தங்களை நான் த்யானஞ்செய்வ தன்மூலம் எனது பாபங்கள் யாவையும் போக்கிக்கொண்டுவிட்ட படியால் முந்திய மந்திரத்தாற் கோரியபடி நற்கீர்த்தியும் நல்ல சிரேயஸ்ஸும் எனக்குண்டாவதில் யாதும் தடையில்லை (எ-று)

(அ - கை) திருஷ்டாந்தத்தை முன்னிட்டு வெகு சிஷ்யர் களை சம்பாதனஞ் செய்விக்கின்ற மந்திரம் படிக்கப்படுகின்றது.

(मन्त्रः) यथाऽऽपः प्रवता यन्ति । यथा मासा अहर्जरम् ।
एवं मां ब्रह्मचारिणः । धातरायन्तु सर्वतः स्वाहा ॥

(ப - ரை) **आपः**=ஜலங்கள் **प्रवता**=பள்ளமாயுள்ள வழியினுல் **यथा**=எவ்விதம் **यन्ति**=வேகமாகச் செல்லுகின்றனவோ **मासाः**= சைத்ரம், வைசாகம் முதலிய மாதங்கள் **यथा**=எவ்விதம் **अहर्जरम्** வருஷத்தை (**यन्ति**-அடைகின்றனவோ) **एवम्**=இவ்விதமே **धातः**= எல்லாவற்றையும் படைப்பவரே! **ब्रह्मचारिणः**= வேதவித்யை பயி லும் மாணவர்கள் **सर्वतः**=எல்லாதிக்குகளினின்றும் **माम्**=என்னை **आयन्तु**=வந்தடையட்டும்.

குறிப்பு:—**अहर्जरम्-अहानि षष्ट्युत्तरशतत्रयसंख्यानि, जीर्णानि अन्तर्भवन्ति यस्मिन्संवत्सरे सोयमहर्जरः । न खलु कश्चिदपिमासः संवत्सरमतिक्रामति॥** "முன்னூற்றறுபது எண்களுள்ள தினங்கள்எந்த வருஷத்தில் அடங்கி யிருக்கின்றனவோ அந்த ஸம்வத்ஸரமே **अहर्जरम्** (அஹர்ஜரம்) என்ற பதத்தா லுபதேசிக்கப்படும். எந்த மாதமும் மேற்கூறியஸம்வத்ஸர (வருஷ) த்தி லடங்காதிருக்க

முடியாதன்றோ'' என்றதால் வித்யாரண்ய ஸ்வாமிகள் अहर्जरम् என்றபதத்திற்குப் பொருள்கூறிப் பின்னும் மாதம் வருஷத்தை விட்டகலாததுபோல எந்தசிஷ்யர்களும் என்னைவிட்டு வேறிடம் செல்லாதவர்களாயும், ஜலதிருஷ்டாந்தத்தையொட்டி வேகமாக என்னிடம் நாலாபக்கங்களினின்றும் வந்து சேருகின்றவர்களாயுமாகவேண்டும் என்பதற்காக இந்த ஹோமஞ் செய்யப்படுகின்றது என்றும் உபதேசித்திருக்கின்றனர் (எ - று)

(அ - கை) ஹோமமந்திரங்களைப்படித்து பின்னர் உபஸ்தான (முடித்தற்குரிய) மந்திரம் படிக்கப்படுகின்றது.

(मन्त्रः) प्रतिवेशो ऽसि प्र मा भाहि प्रमा पद्यस्व ।

(ப - ரை) प्रतिवेशः=களைப்பைப் போக்கு மிடமானதுபோல असि=இருக்கின்றீர். (अतः=ஆனதுபற்றி) मा = என்னை प्रभाहि= பிரும்மவித்யாசார்யனாய் உலகில் பிரஸித்திபெற்றவனாகச் செய்வீராக. (तदर्थम्=அதற்குவேண்டி) मा=என்னை प्रपद्यस्व அடைவீராக (அனுக்ரஹம் செய்வீராக)

குறிப்பு:— प्रतिवेशः=களைப்பைப் போக்குவதற்காக வீட்டினருகில் கட்டப்பட்ட வீடாக இருக்கிறீர். இவ்விதம், நீர் பிரதிவேசம் போல, உம்மையே இடைவிடாது தியானிப்பவர்க்கு சகல விதமான பாபம், அதன் பயனான துக்கம், இவற்றைப்போக்கும் இடமாக இருக்கின்றீர். ஆனது பற்றி मा=என்னைக்குறித்து प्रभाहि உமது ஆத்மாவை (ஸ்வரூபத்தை) பிரகாசப்படுத்தும். உலகில் ரஸத்துடன் (காந்தத்துடன்) சம்பந்தம் பெற்ற இரும்பு ரஸமயமாவது போல என்னைத்தங்கள் மயமாக்கிக்கொள்ளு வேண்டும் என்பது பொருள், இங்கு பிரம்ம வித்யாப்பிரகரணத்தில் ஸ்ரீகாமனாகச்சொல்லப்பட்டவன், தனத்திலாசை கொண்டவனே யாவன். தனம், கர்மம் செய்வதற்கு இன்றியமையாதது. கர்மமோ பிராப்தமான பாபங்களைத் தேய்ப்பதற்கு அவச்யமாகின்றது. பாபந்தேயத்தேய பிரும்ம வித்யையும் பிரகாசத்தையடைகின்றது. இதையே

ज्ञानमुत्पद्यते पुंसां क्षयात्पापस्य कर्मणः ।
यथाऽऽदर्शतलप्रख्ये पश्यत्यात्मानमात्मनि ॥

"பாபகர்மங்களின் தேய்தலினின்றும் ஞானமுண்டாகின்றது. சுத்தமான கண்ணாடிக்கொப்பான மனதில் தனது ப்ரத்யகாத்ம ஸ்வரூபத்தை உள்ளபடி சாக்ஷாத்கரிக்கிறான்." என்று ஸ்மிருதியிலு முபதேசிக்கப்பட்டிருக்கின்றது என ஸ்ரீசங்கர பகவத்பாத பாஷ்யகாரர் அவர்கள் தமது ஸ்ரீ பாஷ்யத்திலுமுபதேசித்திருக்கின்றனர். (எ று)

நான்காவது அனுவாகம் முற்றிற்று

---

## நான்காவது அனுவாகம்

(விசி-ம்) பிரும்மக்ஞானத்திற்கு வேண்டி பிரணவத்தைப் பிரார்த்திக்கிறான். **छन्दसाम्**=வேதங்களுக்குள் **ऋषभः**=சிரேஷ்டமானதும் **विश्वरूपः**=**विश्व**=விஷ்ணுவை **रूपः**=குறிக்கின்றதாயும் (அதாவது: **विष्णुः रूप्यते=ध्येयतयाप्रतिपाद्यते अनेन** என்றவ்யுத்பத்தியை யொட்டி விஷ்ணுத்யானத்திற்குச் சாதனமாயிருத்தலாலும், அல்லது விஷ்ணுவுக்குச் சாளக்ராமம் போன்று ப்ரதீகமாயிருத்தலாலும் இந்த ப்ரணவம் விஷ்ணுவைக்குறிக்கின்றதாயாகின்றதென்பது கருத்து) அல்லது **विश्वरूपः**=எல்லா சப்த ஸ்வரூபமாயிருப்பதாயும்) அதாவது: ப்ரணவமானது எல்லா சப்தங்களுக்கும் பிரகிருதியாக (காரணமாக) யிருப்பதால் காரணத்திற்குத்தனது காரியம் யாவற்றிலும் வ்யாப்தியிருப்பது நிச்சயமானது பற்றி இது எல்லா சப்தஸ்வரூபமாகவு மிருக்கின்றதென்பது கருத்து) இருக்கிற **यः**=எந்த ப்ரணவமானது **अमृतात्**=பரமாத்மாவினிடமிருந்து **छन्दोभ्यः**=வேதங்களைக்காட்டிலும் **अधि**=சிறந்ததாக **संबभूव**=உண்டாயிற்றோ **इन्द्रः**=மிக்கத்திறமை வாய்ந்த **सः**=அந்த ப்ரணவமானது **मा**=என்னை **मेधया**=க்ஞானத்தால் **स्पृणोतु**=காப்பாற்றட்டும். (அதாவது பரமாத்ம க்ஞானத்தைக் கொடுத்து என்னை நற்பிறவியுள்ளவனாக்கட்டும் என்று கருத்து) **देव**=பிரகாசமுள்ள ப்ரணவமே! **अमृतस्य**=பரமாத்மாவை **धारणः**

மனத்தில் தரிக்கின்ற (தியானிக்கின்ற) வனாக **भूयासम्**=ஆவேனாக (எப்பொழுதும் பிரும்மக்ஞானம் தொடர்ச்சியாகவே யிருக்கட்டும் என்று கருத்து) **विचर्षणम्**=பலம், ஆரோக்யம் முதலியவைகளுடன் காந்தியுள்ளதாக ஆகட்டும். **मधुमत्तमा**=எனது நாக்கு எப்பொழுதும் பிரும்மத்தையே சொல்லுவதால் சிறந்த போக்ய வஸ்துவாக ஆகட்டும். **कर्णाभ्याम्** = காதுகளால் **भूरि**=அதிகமாக **विश्रुवम्**=பிரும்ம ப்ரதிபாதக சாஸ்திரத்தையே கேட்பேனாக. **ब्रह्मणः**=பரமாத்மாவுக்கு **कोशः**=மறைந்து வஸிக்கு மிடமாக **असि** இருக்கின்றாய். (அதாவது பரமாத்ம வாசகமாக நீ இருக்கின்றாய் என்று கருத்து) **मेधया**=மேதையையுண்டுபண்ணுவதாக இருத்தலால், அல்லது மேதையால் நிறைந்திருப்பதால் **पिहितः**=மறைக்கப்பட்டவனாக, அல்லது உண்டு பண்ணுகிறவனாக, அல்லது நிறைந்தவனாக (இருக்கிறாய்) **श्रुतंमेगोपाय**=கேட்க்கப்பட்ட பொருளைக்காப்பாயாக (அதாவது என்னால்கேட்கப்பட்ட பொருள் தவறிப்போகா வண்ணம் காப்பாயாக வென்று கருத்து) பிரும்ம வித்யையிலுபயோகத்தைத்தரும் ஹோமத்திற்குச் சாதனமான மந்திரங்கள் படிக்கப்படுகின்றன. முதலில் லக்ஷ்மீப்பிரார்த்தனை செய்யும் மந்திரம் படிக்கப்படுகின்றது (**हे लक्ष्मीः**=ஓ லக்ஷ்மியே! **त्वम्**=நீ **यतः**=யாது காரணம்பற்றி) **आवहन्ती**=உண்டாக்குகின்றவளாகவும் **वितन्वाना**=விருத்தி செய்விக்கின்றவளாகவும் இருக்கின்றாயோ (**ततः**=அக்காரணம்பற்றி) **आत्मनः**=எனக்கு **चीरम्**=மரவுரியையும் **वासांसि**=மற்ற வஸ்திரங்களையும் **मम**=எனக்கு **गावश्च**=பசுக்களையும் **अन्नपानेच**=அன்னம், பானம் இவைகளையும் **कुर्वाणा**-**सती**=உண்டுபண்ணுகின்றவளாக இருந்துகொண்டு **लोमशाम्**=அதிகமான **श्रियम्**=வேதஸ்வரூபமான ஸ்ரீயை **पशुभिःसह**=யாகாதிகளுக்குபயோகப்படும் பசுமுதலிய திரவியஙகளுடன்கூட **आवह** = உண்டு பண்ணுவாயாக. இந்த மந்திரம் ஹோமார்த்தம் ஏற்பட்டபடியால் **स्वाहा**=என்றதை முடிவிலுடைத்தானதாகவிருக்கிறது.

(அ-கை) பிரும்ம வித்யைக்கு யோக்யமானவர்களும், பிரும்ம சர்ய விரதத்துடன் கூடினவர்களுமான சிஷ்யர்கள் என்னை நோக்கி வரவேண்டுமென ஆசார்யன் அனுகூல சிஷ்யர்களின் வரவைப்ரார்த்திக்கும் மந்திரங்கள் இனிபடிக்கப்படுகின்றன.

आमायन्तुब्रह्मचारिणः स्वाहा...........पाहिप्रमापद्यस्व ॥ हेभग- ஓ ஐச்வரியமே! सहस्रशाखे-ஐச்வரியம், வீரியம் முதலிய அனந்த பிரகாரத்துடன்கூடிய तस्मिंस्त्वयि-அந்த உன்னிடத்தில் अहम्- பிரவேசித்த நான் निमृजे=சுத்தனுகஆகிவிடுவேன். मासाः=மாதங் கள் यथा=எவ்விதம் अहर्जरम्=अहोभिःजीर्यते नव्याद्यादिना. यः सः अहर्जर इत्युच्यते । वृद्ध इतियावत् । காலத்தாலன்றி வியாதி முதலிய வற்ருல் கிழத்தன்மையை யடையாதவன் அஹர்ஜரன் எனப்படு வன். அதாவது: வயது முதிர்ந்தவன் என்பது பொருள். அவ்வி தம் வயது முதிர்ந்தவனை மாதங்கள் எவ்விதம் அடைந்திருக்கின் றனவோ என்று கருத்து. அல்லது अहानिजीर्यन्तियत्रेति अहर्जरः संवत्सरः, अथवा सूर्यः । தினங்கள் எதிலடங்கி யிருக்கின்றனவோ அந்த ஸம்வத்ஸரம் அஹர்ஜரசப்தத்தாற்சொல்லப்படும். ஸம்வ த்ஸரத்தில் நாட்களடங்கியிருப்பது போலவே என்னிடத்தில் சிஷ்யர்களடங்கட்டும் என்று கருத்து. அல்லது "அஹர்ஜரம்" என்றதால் சூரியன் சொல்லப்படுவன். हेधातः=ஓ பரம்பொருளே त्वम्=நீர் प्रतिवेशः=அயல் வீட்டிற்கொப்பாக அதாவது: ஸன்னி ஹிதராக (சமீபத்திலிருப்பவராக) असि=இருக்கிறீர். मा=என்னை *प्रपाहि=நன்கு காப்பாற்றுவீராக प्रपद्यस्व=ப்ரபன்னனுக என்னைச் செய்யும்.

நான்காவது அனுவாகம் முற்றிற்று

---

## ஐந்தாவது அனுவாகம்

(அ×த்ம்) வித்யாரண்ய தீபிகை. சென்ற 4-வது அனுவா கத்தில் மேதை முதலியன சித்திப்பதற்கு வேண்டிய மந்திரங் கள் படிக்கப்பட்டன. பிறகு 5, 6-வது அனுவாகங்களால் பிரும் மோபாஸனத்தை யுபதேசிக்கத் தொடங்கி 5-வது அனுவாகத் தால் பரமாத்மாவின் அங்கங்களான தேவதைகளின் உபாஸன மும் 6-வது அனுவாகத்தால் அங்கியான பிரும்மத்தின் உபாஸன

---

*प्रभाहि என்று அத்வைத ஸம்பிரதாயத்தில் பாடம் கொள்ளப் பட்டிருக்கிறது.

மும் உபதேசிக்கப்படுகிறது, அங்கங்களான தேவதைகளின் தியானத்திற்கு † ப்ரதீகமாக 3-வியாஹ்ருதிகள் படிக்கப்படுகின்றன.

ஸ்ரீசங்கரபாஷ்யம்:--3-வது அனுவாகத்தில் ஸம்ஹிதாவிஷயமான உபாஸனஞ்சொல்லப்பட்டது. பிறகு 4-வது அனுவாகத்தில் மேதை ஐச்வரியம் இவற்றில் விருப்பமுள்ளவனுக்கு அவை சித்திப்பதற்குரிய மந்திரங்கள் படிக்கப்பட்டன. அவைகளும் முறையே பிரும்ம வித்யையிலுபயோகப் படக்கூடியவைகளாகவே ஆகின்றன. பிறகு 5, 6-வது அனுவாகங்களால் भूः भुवः सुवः என்ற 3 வியாஹ்ருதிகளில் பிரும்மபுத்திசெய்தலாகிற பிரதீகோபாஸனம் சொல்லப்படுகிறது. இம்மூன்று வியாஹ்ருதிகளும் மிக்க சிரத்தையை முன்னிட்டுக் கிரஹிக்கப்பட்டனவா யிருப்பதால் அவ்வியாஹ்ருதிகளை விட்டு உபதேசிக்கப்படும் பிரும்மமானது புத்திக்குக்கோசரமாக ஆகாது. ஆனதுபற்றி வியாஹ்ருதியைச் சரீரமா யுடையதாகவே பிரும்மத்தை ஹிருதயத்திற்குள் உபாஸிக்கவேண்டுவது அவசியமாகிறது. ஆகவே வியாஹ்ருதிகளிற் செய்யப்படும் பிரும்மோபாஸனம் அந்தருபாஸனமாகிறது. இவ்வுபாஸனத்திற்கு ஸ்வாராஜ்யம் (ஹிரண்ய கர்ப்ப பிராப்தி) பலனாகச்சொல்லப்படுகிறது. அவ்வித உபாஸனம் 5, 6-வது அனுவாகத்தாலுப தேசிக்கப்படுகிறது.

(मन्त्रः) भूर्भुवस्सुवरिति वा एतास्तिस्रो व्याहृतयः ।

(ப-ரை) भूः=பூ: भुवः=புவ: सुवः=ஸுவ: इति=என்ற एताः= இந்த तिस्रः=மூன்றும் व्याहृतयः=வியாஹ்ருதிகளாக நினைக்கப்படுகின்றன.

(தா-ம்) பூ:, புவ:, ஸுவ:, என்ற இந்த மூன்றும் வியாஹ்ருதிகளெனப்படும் என்பது வேதத்திற் பிரசித்தமானதே.

---

(†) சாளக்ராம சிலையில் விஷ்ணு புத்திசெய்ய வேண்டு மென்று சாஸ்திரம் விதிக்கிறது. இவ்விடத்தில் சாளக்ராம சிலையை ப்ரதீகமாகக்கொள்ளுகிறோம். ஆகவே எதில் பிரும்ம புத்தி செய்கிறோமோ அதை "ப்ரதீகம்" என்று சொன்னதாய் கொள்ளவேண்டும்.

வியாஹ்ருதி என்ற பதத்திற்கு உச்சாரணம் என்று பொருள் பூ:, புவ:, ஸுவ:, என்ற மந்திரங்கள் உச்சாரணத்திற்கு விஷய மாவதால் (அதாவது இவற்றை நாம் உச்சரிப்பதால்) இம்மந்தி ரங்கள் வியாஹ்ருதி சப்தத்தால் சொல்லப்படுகின்றன. அல்லது **वि-विविधेकर्मणि, आह्रियन्ते प्रयुज्यन्त इति व्याहृतयः** = பற்பலகர்மங்க ளிற் பிரயோகிக்கப்படுவதுபற்றி இவை வியாஹ்ருதிக ளெனப் படும். அவ்விதம் பற்பலகர்மங்களிலுள்ள ப்ரயோகமானது பிர ஸித்தமானதென்பதைக்காட்டவே மூலத்தில் **वै** என்ற சப்தம் சொல்லப்பட்டிருக்கிறது. (ஸ்ரீ-று)

(அ - கை) இவ்விதம் கர்மகாண்டப் பிரசித்தமான 3-வியா ஹ்ருதிகளையுபதேசித்து பிரும்மத்திற்கு பிரதீகமாயுள்ள **महः** என்றநான்காவது வியாஹ்ருதியானது உபதேசிக்கப்படுகிறது—

(मन्त्रः) तासामुहस्मै ताञ्चतुर्थीम् । माहाचमस्यः प्रवेदयते । मह इति ।

(ப - ரை) **तासाम्**=முற்கூறிய 3-வியாஹ்ருதிகளுக்கு **चतु-र्थीम्**=நான்காவது எண்ணைப் பூர்த்தி செய்கின்ற **मह इति**=மஹ: என்கிற **एताम्**=இந்த வியாஹ்ருதியை **माहाचमस्यः**=மஹாசமஸ்ய ரின் கோத்ராபத்யரான "மாஹாசமஸ்யர்" என்ற மஹருஷியா னவர் **प्रवेदयते**=முக்கியமாக உபாஸனத்திற்கு வேண்டி உபதேசிக் கிறார் என்பது **उ. ह. स्म.** = மிக்க பிரஸித்தமானது.

(தா - ம்) ஸோமபானத்திற்கு உபயுக்தமானதும், வெகு ஸோமயாகங்களிலுப யோகிக்கப்படுவது பற்றி சிறந்ததுமான **चमसम्** என்ற பாத்திரமானது எந்த மஹர்ஷியினிட மிருக் கின்றதோ அவர் **महाचमसः** எனப்படுவர். ஆகவே அவரது கோத்திரத்திற் பிறந்த ருஷி "**माहाचमस्यः**" என்று கூறப்பட்ட தாய் கொள்ளவேண்டும். மேலும் இங்கு சொன்ன மாஹாசமஸ் யர் என்ற ருஷியையும் சேர்த்தே **महः**=என்ற வியாஹ்ருதியில் பிரும்ம புத்தி செய்யவேண்டும் என பாஷ்யத்திலுப தேசிக்கப் பட்டிருக்கிறது. (எ-று)

(அ-கை) நான்காவ்தான **महः** என்ற வியாஹ்ருதியில் செய்ய வேண்டிய உபாஸனமுப தேசிக்கப்படுகின்றது.

(मन्त्रः) तद्ब्रह्म । स आत्मा । अङ्गान्यन्या देवताः ।

(ப-ரை.) तत्-அந்த நான்காவது வியாஹிருதியான மஹ: என்ற வியாஹிருதியானது ब्रह्म-பிரும்மம் (इति चिन्तयेत्-என்று தியானித்தல்வேண்டும்). सः-நான்காவது வியாஹிருதிரூபமான அந்த பரமாத்மா आत्मा-சரீரமத்தியிலிருக்கின்ற ப்ரத்யகாத்மாவாகவாகும். अन्याः-வேறு देवताः-வியாஹிருதி தேவதைகள் अङ्गानि-பரமாத்மாவின் கை கால் முதலிய அங்கங்கள் (इति चिन्तयेत्) என்று தியானித்தல்வேண்டும்.

(தா-ம்.) சங்கரபாஷ்யம்—மாஹாசமஸ்யரால் காணப்பட்டயாதொரு மஹ: என்ற வியாஹிருதியுண்டோ அது பிரும்மம். மஹத்தானதன்றோ பிரும்மம். வியாஹிருதியும் महती-மஹத்தாகவே யிருக்கிறது. ஆனதுபற்றி அது ஆத்மாவாகவுமாகிறது. आप्लृव्याप्तौ என்ற தாதுவினின்றும் ஆத்மா என்ற பதமேற்படுகிறது. आप्, म என்ற விடத்திலுள்ள प् என்றதற்கு வைதிக முறையையொட்டி त् என்ற யெழுத்து வந்து "ஆத்மா" என்ற சப்தமுண்டாகின்றது. आप् என்றதற்கு எங்கும் நிரைவு என்று பொருள். म என்றதைச் சேர்க்கும்பொழுது எங்கும் நிரைவு பெற்றுள்ள வஸ்துவை "ஆத்மா" என்ற பதம் குறிக்கின்றது. ஆகவே ஆத்மா என்ற பதத்தால் உள்ளும் வெளியும் எங்கும் நிறைந்துள்ள பரமாத்மவஸ்து கூறப்பட்டதாகவேற்படுகிறது. லோகங்கள், தேவதைகள், வேதங்கள், பிராணன்கள் ஆகிய வேறு வியாஹிருதி தேவதைகள் யாவும், ஆதித்யன், சந்திரன், பிரணவம் அன்னம் இவற்றின் உருவமான महः என்ற வியாஹிருதியால் நிரைவு பெற்றிருக்கின்றன. எக்காரணம் பற்றி ஆதித்யன், சந்திரன், பிரணவம், அன்னம் இவற்றால் லோக, தேவ, வேத, பிராணன்கள் நிரைவு பெற்றிருக்கின்றனவோ அக்காரணம் பற்றி தேவர்கள், லோகாதிகள் முதலியயாவும் மஹ: என்ற வியாஹிருதியினுருவமான பிரும்மத்திற்கு அங்கங்களாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

अन्यादेवताः என்ற விடத்திலுள்ள देवताः என்ற பதம் உபலக்ஷண முறையால் லோகங்கள், வேதங்கள், பிராணன்கள் இவைகளையுஞ் சேர்த்துக் கூறுகின்றது. மேலும் சரீரத்திலுள்ள நடுபாகத் தாலேயே ஏனைய அங்கங்கள் நிறைவுபெற்றிருகின்றன வென்பது வெளிப்படை. இங்குள்ள महः என்றதற்கு விருத்தியுள்ளது என்று பொருள். ஆகவே விருத்தியுள்ள மஹ: என்ற வியாஹிருதி யில் எங்கும் நிறைந்த பிரும்மபுத்தி செய்வதென்பது பொருத்த முள்ளதாயாகின்றது.

வித்யாரண்யதீபிகையில் तद्ब्रह्म என்ற பாகத்திற்கு வேறு பொருளும் பின்வருமாறு உபதேசிக்கப்பட்டிருக்கிறது. அதாவது:- महः என்ற வியாஹிருதியானது பிரும்மமாகவாகும். அத்துடன் அது ஆத்மாவாகவும் ஆகும். அதாவது : பூஜாவாசியான மஹ:. என்ற பதத்தால் அந்த நான்காவது வியாஹிருதி சொல்லப்படுவது பற்றி அந்த நான்காவது வியாஹிருதியை பிரும்மம் என்று கூறுவதும் பொருத்தமுள்ளது. அத்துடன் சரீரத்திலுள்ள எல்லா அவயவங்களுக்குள்ளும் சேதனனை ஆத்மா எவ்விதம் மேலான வனோ இது போலவே மற்றெல்லா வியாஹிருதிகளைக் காட்டிலும் இந்த நான்காவது வியாஹிருதியானது மேலானதென்றே கொள் ளப்படுகின்றது. ஆகவே இத்தகைய மஹிமை வாய்ந்த நான்காவது வியாஹிருதியில் பின்வரும் உபாஸனம் செய்தல் தகும். (எ-று.)

(அ-கை.) இதுவரை கூறிய வியாஹிருதிகளில் லோக புத்தி செய்யவேண்டிய முறை உபதேசிக்கப் படுகின்றது.

(मन्त्रः) भूरिति वा अयं लोकः । भुव इत्यन्तरिक्षम् । सुवरित्यसौ लोकः । मह इत्यादित्यः । आदित्येन वा व सर्वे लोका महीयन्ते ॥

(ப-ரை.) अयम् - இந்த लोकोवै - பிரசித்தமான பூலோகமானது भूरिति - பூ: என்ற வியாஹிருதியாகவும் अन्तरिक्षम् - அந்தரிக்ஷலோக மானது भुव इति - புவ: என்ற வியாஹிருதியாகவும் असौ - விலகியிருக்

கின்ற लोकः=சுவர்க்கலோகமானது सुवरिति=ஸுவ: என்ற வியாஹ்ருதியாகவும் आदित्यः=சூரியன் मह इति=மஹ: என்ற வியாஹ்ருதியாகவும் (सन्ति=இருக்கின்றன.) सर्वे=எல்லா लोकाः=லோகங்களும் आदित्येन=சூரியனால் महीयन्ते=பிரகாசத்தை யடைகின்றன என்பது वाव=பிரசித்தமானது.

(தா-ம்.) எல்லா லோகங்களும் சூரியனால் பிரகாசப்படுத்தப் பட்டவைகளாய்க்கொண்டு பூஜ்யங்களாக (அதாவது வியவஹார க்ஷமங்களாக) வாகின்றன. ஆனதுபற்றி மஹ: என்ற வியாஹ்ருதியை ஆதித்யரூபமாகச் சொன்னது மிகவும் பொருத்தமுள்ளதாக வாகின்றது (எ-று.)

குறிப்பு:—உலகில் ஒரு மனிதசரீரத்தினுடைய நடுபாகத்திற்கு, அந்த நடுபாகத்தையொட்டி விருத்தியடைவதுபற்றி பாதம் முதலியன அங்கங்களாகச் சொல்லப்படுகின்றன. நடுபாகமானது அங்கியெனச் சொல்லப்படுகின்றது. ஏனெனில் பாதம் முதலிய அங்கங்கள் விருத்தியடைவதற்கு இந்த நடுபாகங் காரணமாயிருப்பதே அதன் காரணமாகும். இதுபோலவே லோகாதிரூபங்களான மற்ற வியாஹ்ருதிகள், பாதம் முதலிய அங்கங்களாகவும், ஆதித்யாதி ரூபமான நான்காவது மஹ: என்ற வியாஹ்ருதியானது அங்கியாகவும் சாஸ்திரத்தாற் கற்பித்து உபதேசிக்கப்படுகிறது. ஏனெனில் ஆதித்யன், சந்திரன், பிராணவம், அன்னம் இவற்றின் ரூபமான மஹ: என்ற வியாஹ்ருதியானது மற்றவைகளின் விருத்திக்கு ஹேதுவாகவிருப்பதும் லோக, தேவ, வேத, பிராணரூபங்களான வேறு வியாஹ்ருதிகள் மேற்கூறியவற்றாலேயே விருத்தியை (வியவஹார யோக்யதையை) யடைவதுமே அதன் காரணமாகும். மேலும் பூ: என்ற முதலாவது வியாஹ்ருதியை பாதங்களாகவும், புவ: என்ற இரண்டாவது வியாஹ்ருதியைக் கைகளாகவும், ஸுவ: என்ற மூன்றாவது வியாஹ்ருதியைச் சிரஸ்ஸாகவும், மஹ: என்ற நான்காவது வியாஹ்ருதியை மேற்கூறியவை போக மீதமுள்ள சரீரத்தின் நடுபாகமாகவும் கற்பித்துக்கொண்டு அந்த வியாஹ்ருதிமயமான சரீரத்தில் அங்கியாகக் கற்பிக்கப்பட்ட மஹ: என்ற வியாஹ்ருதியில் तद्ब्रह्म, स आत्मा என்றதால் பிரும்மபுத்தி விதிக்கப்படு

கின்றது என்று கொள்ளல்வேண்டும். அவற்றுள் ஆதித்யன் முதலியவற்றிற்கு லோகாதிகளின் விருத்திக்குக் காரணமாயிருக்குந் தன்மையானது

आदित्येन वाव सर्वे लोका महीयन्ते । चन्द्रमसा वाव सर्वाणि ज्योतींषि महीयन्ते । ब्रह्मणा वाव सर्वे वेदा महीयन्ते । अन्नेन वाव सर्वे प्राणा महीयन्ते ॥

எனப் பின்வரும் வாக்கியங்களால் தெளிவாயுபதேசிக்கப்படுகின்றது. அதாவது: லோகங்கள் யாவும் ஆதித்யனால் பிரகாசப்படுத்தப்பட்டு பிராணிகளின் வியவஹாரத்திற்கு உபயுக்தமான விருத்தியை யடைந்திருப்பது பிரஸித்தமானதே. இதுபோலவே அக்னி, வாயு, ஆதித்யதேவதாரூபமான ஜ்யோதிஸ்ஸுகள்யாவும் சந்திரனால் விருத்தியடைகின்றனவென்பது "प्रथमां पिबते वह्निः" "முதலாவது கலையை அக்னி சாப்பிடுகிறான்" என்ற சுருதிவாக்கியத்தால் தெளிவாகின்றது. சந்திரனுடைய கலையைப் பானஞ்செய்தே மேற்கூறிய அக்னிமுதலிய தேவர்களுக்கு விருத்தியேற்படவேண்டுவதும் அவசியமாகின்றது. இதுபோலவே எல்லா வேதங்களும் பிரணவோச்சாரணத்தை முன்னிட்டு அத்யயனஞ் செய்யவேண்டியனவாயிருத்தல்பற்றி பிரணவத்தால் வேதங்கள் பிரகாசத்தை யடைகின்றனவென்பதும் பொருத்தமானதே. எல்லாப் பிராணன்களும் அன்னத்தாலேயே விருத்தியடைகின்றன வென்பதும் பிரசித்தமானதே. ஆகவே முதலாவதான பூ: என்ற வியாஹ்ருதியானது இந்தப் பூலோகமாகவும் அக்னியாகவும், ருக்வேதமாகவும், பிராணனாகவுஞ் சிந்திக்கவேண்டியதாக வாகிவிடுகிறது. இவ்விதமே இரண்டாவதான புவ: என்ற வியாஹ்ருதியானது அந்தரிக்ஷமாகவும், வாயுவாகவும், ஸாமங்களாகவும், அபானன் என்ற பிராணனாகவும் சிந்திக்கவேண்டியதாகவாகின்றது. இவ்விதமே மூன்றாவதான ஸுவ: என்ற வியாஹ்ருதியானது ஸுவர்லோகமாகவும், ஆதித்யனாகவும், யஜுஸ்ஸுகளாகவும், வியானன் என்ற பிராணனாகவும் சிந்திக்கவேண்டியதாக வாகின்றது. இது போலவே நான்காவதான மஹ: என்ற வியாஹ்ருதியானது ஆதித்யனாகவும், சந்திரனாகவும், ஓங்காரமாகவும் அன்னமாகவுஞ் சிந்திக்கவேண்டியதாக வாகின்றது. ஆகவே மேற்கூறியபடி ஒவ்வொரு வியாஹ்ருதியும்

நான்கு, நான்குவிதமாகச் சிந்திக்க (தியானிக்க) வேண்டியதாக வாகிவிட்டது என வனமாலை யென்ற பாஷ்ய வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கிறது (எ-று.)

(அ-கை.) முற்கூறிய வியாஹ்ருதிகளில் தேவவிசேஷ புத்தி செய்யும் முறை உபதேசிக்கப்படுகின்றது.

**(मन्त्रः) भूरिति वा अग्निः । भुव इति वायुः । सुवरित्या-दित्यः । मह इति चन्द्रमाः । चन्द्रमसा वाव सर्वाणि ज्योतींषि महीयन्ते ॥**

(ப-ரை.) **भूरितिवै**=பூ: என்ற வியாஹ்ருதியானது **अग्निः**=அக்னி என்றும் **भुव.इति**=புவ: என்ற வியாஹ்ருதியானது **वायुः**=வாயுவென்றும் **सुवरिति**=ஸுவ: என்ற வியாஹ்ருதியானது **आदित्यः**=ஆதித்யனென்றும் **मह इति**=மஹ: என்ற வியாஹ்ருதியானது **चन्द्रमाः**=சந்திரன் என்றும் (**चिन्तयेत्**=தியானிக்கவேண்டும்) **सर्वाणि**=ஸமஸ்தமான **ज्योतींषि**=ஜ்யோதிரபிமானி தேவதைகள் **चन्द्रमसा**=சந்திரனால் **महीयन्ते**=விருத்தியடைகின்றனர் (**इति**=என்பது) **वाव**=வேதப்பிரசித்தமானது.

(தா-ம்) **प्रथमां पिबते वह्निः**=சந்திரனுடைய முதலாவது கலையை அக்னிபானஞ் செய்கிறான் என்றபடி சந்திரனுடைய கலையினாலேயே அக்னி முதலிய தேவர்கள் விருத்தியடைந்து வருகின்றனர் என்பது வேதப்பிரசித்தமானதே (எ-று.)

குறிப்பு:—சந்திரனைச் சுற்றியுள்ள நக்ஷத்திர ஜ்யோதிஸ்ஸுக்கள் யாவும் சந்திரனாலேயே பிரகாசத்தை யடைகின்றன வென்று வித்யாரண்ய தீபிகையிற் சொல்லப்பட்டிருக்கிறது.

(அ-கை.) முற்கூறிய வியாஹ்ருதிகளில் வேத திருஷ்டி செய்யும் முறை உபதேசிக்கப்படுகிறது.

**(मन्त्रः) भूरिति वा ऋचः । भुव इति सामानि । सुवरिति यजूंꣳषि । मह इति ब्रह्म । ब्रह्मणा वाव सर्वे वेदा महीयन्ते ॥**

(ப-ரை.) **भूरितिवा**=பூ: என்ற வியாஹ்ருதியானது **ऋचः**=ருக்வேதத்திலுள்ள மந்திரங்களென்றும் **भुव इति**=புவ: என்ற வியாஹ்ருதியானது **सामानि**=சாம வேதத்திலுள்ள மந்திரங்களென்றும் **सुवरिति**=ஸுவ: என்ற வியாஹ்ருதியானது **यजूंषि**=யஜுர்வேதத்திலுள்ள மந்திரங்களென்றும் **मह इति**=மஹ: என்ற வியாஹ்ருதியானது **ब्रह्म**=பிரணவமென்றும் (**चिन्तयेत्**=எண்ண வேண்டும்.) **सर्वेवेदाः**=எல்லா வேதங்களும் **ब्रह्मणा**=ஓங்காரத்தால் **महीयन्ते**=விருத்தியடைகின்றன (**इति**=என்பது) **वाव**=அனுபவத்திற் கண்டதே.

(தா-ம்.) வேதாரம்பஞ் செய்யத் தொடங்குமுன்னர் ஓங்காரத்தை யுச்சரித்துத் தொடங்குவதாலேயே அந்த வேதாத்யயனம் மிக்க விருத்தியை யடைகின்றதென்பது அனுபவத்திற் கண்ட விஷயம் (எ-று.)

(அ-கை.) வியாஹ்ருதிகளில் பிராணதிருஷ்டி செய்யும் முறை யுபதேசிக்கப்படுகிறது.

**(मन्त्रः) भूरिति वै प्राणः । भुव इत्यपानः । सुवरिति व्यानः । मह इत्यन्नम् । अन्नेन वाव सर्वे प्राणा महीयन्ते ॥**

(ப-ரை.) **भूरितिवै**=பூ: என்ற வியாஹ்ருதியானது **प्राणः**=பிராணன் என்றும் **भुव इति**=புவ: என்ற வியாஹ்ருதியானது **अपानः**=அபானன் என்றும் **सुवरिति**=ஸுவ: என்ற வியாஹ்ருதியானது **व्यानः**=வியானன் என்றும் **मह इति**=மஹ: என்ற வியாஹ்ரு

ருதியானது अन्नम्=அன்னமென்றும் (चिन्तयेत्=தியானித்தல் வேண்டும்.) सर्वेप्राणाः=எல்லா பிராணன்களும் अन्नेन=அன்னரஸத்தாலேயே महीयन्ते=விருத்தியடைகின்றனவென்பது वाव=அனுபவத்திற் கண்ட விஷயமே.

(தா-ம்.) சரீரத்திற்குள்ளிருக்கும் வாயுவே பிராணன் ஆயினும் அதன் வேலையிலுள்ள மாறுபாட்டையொட்டி வெவ்வேறு பெயரையடைகின்றதென பாஷ்யாதிகளிற் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது சரீரத்திற்குள்ளிருந்து வெளிநோக்கிவருவது பிராணன் என்றும், வெளியிலிருந்து சரீரத்திற்குள் நோக்கிச் செல்லுவது அபானன் என்றும், உட்கொண்ட ஆகாரத்தை ரக்தமாக்குவது ஸமானன் என்றும், சரீரம் உயரக்கிளம்புவதற்குக் காரணமாயுள்ளது உதானன் என்றும், ரக்தத்தைச் சரீரம் முழுதும் பரவும்படி செய்வது வியானன் என்றும் கூறப்படும். அவற்றில் இங்கு பிராணன், அபானன், வியானன் என்ற மூன்று விருத்திகளே பூ: முதலிய வியாஹ்ருதிகளில் முறையே தியானம் செய்ய வேண்டியதாக உபதேசிக்கப்பட்டது. மேலும் மேற்கூறிய பிராணன் முதலிய விருத்திகள் உட்கொண்ட ஆஹாரத்தின் ரஸத்தாலேயே மேன்மேலும் விருத்தியாகிக்கொண்டு வருவதென்பது பிரசித்தமானதே. (எ-று.)

(அ-கை.) வியாஹ்ருதிகளில் லோகாதிபுத்தி செய்யவேண்டுவதாகக் கூறப்பட்ட விஷயம் முடிக்கப்படுகிறது.

(मन्त्रः) ता वा एता श्चतस्रश्चतुर्धा । चतस्रश्चतस्रो व्याहृतयः ।

(ப-ரை.) एताः=இதுவரை கூறப்பட்ட ताः=அந்த चतस्रोवा=நான்கு வியாஹ்ருதிகளும் चतुर्धा=லோகம், தேவதை, வேதம், பிராணன் என்ற திருஷ்டிகளால் நான்கு விதங்களாகின்றன. (तथाच=ஆகவே) व्याहृतयः=வியாஹ்ருதிகள் चतस्रःचतस्रः=ஒவ்வொன்றும் நான்கு நான்கு விதங்களாக அதாவது மொத்தமாக 16 விதங்களாக (भवन्ति=ஆகின்றன).

(தா-ம்.) ஒவ்வொரு வியாஹ்ருதியிலும் நான்கு நான்கு பதார்த்ததிருஷ்டி செய்யவேண்டியதாகக் கூறிய வாக்கியங்களி லிருந்தே ஒவ்வொன்றும் நான்கு நான்கு விதமாகவும் மொத்தமாக 16 விதமாகவும் கிடைக்கக் கூடியதாயிருக்க திரும்பவும் "चतस्र-श्चतुर्धा" என்று சொன்னதின் கருத்து யாதெனின்? கூறுவாம். "भूरिति वा अयं लोकः" என்பது முதலிய வாக்கியங்களால் வியாஹ்ருதிகள் துதிக்கப்பட்டன வென்று ஒரு சமயம் எண்ணக் கூடுமாதலால் அவ்வித சங்கைக்கிடமில்லாமலிருக்க வேண்டி பூ: முதலிய வியாஹ்ருதிகளை இங்கு கூறியபடி உபாஸிப்பதற்காகவே இவ்விதம் கூறப்பட்டதென்பதைக் காட்டவே "चतस्रश्चतुर्धा" எனத்திரும்பவுமுபதேசிக்கப்பட்டது (எ-று)

(அ-ங்க.) அந்த வியாஹ்ருதிகளிற் செய்யவேண்டிய உபா ஸனம் உபதேசிக்கப்படுகிறது.

(मन्त्रः) ता यो वेद । स वेद ब्रह्म । सर्वेऽस्मै देवा बलि-मावहन्ति ॥

(ப-ரை.) ताः=முற்கூறியபடி வியாஹ்ருதிகளை यः=எவன் वेद=உபாஸிக்கின்றானோ अस्मै=இந்த உபாஸகனுக்கு सर्वेदेवाः=இந்திரன் முதலிய எல்லா தேவர்களும் बलिम्=பூஜையை आवहन्ति=செய்கின்றனர். (यस्मात्=யாதுகாரணம்பற்றி यःपुमान्=யாதொரு புருஷன் व्याहृतीर्वेद=வியாஹ்ருதிகளை உபாஸிக்கின்றானோ அக் காரணம் பற்றி) सः=அப்புருஷன் ब्रह्म=அடுத்த அனுவாகத்திற் கூறப்பட்ட பிரும்மத்தை वेद=உபாசிக்கின்றவனாகின்றான்.

(தா-ம்.) அடுத்த 6வது அனுவாகத்திற் சொல்லப்படும் பிரும்ம உபாஸனமே பிரதானமானது. வியாஹ்ருதியுபாஸன மானது அந்த பிரும்மோபாஸனத்திற்கு அங்கமாயுள்ளது. ஆகவே பிரும்ம உபாஸனத்தின் பலனான பிரும்மபிராப்தி யேற் பட்டவுடன் இந்திரன் முதலிய எல்லா தேவர்களும இவனைப் பூஜிக்கின்றனர் என்று சொன்னது யுக்தமாகவே ஆகின்றது.

ஸ்ரீசங்கரபாஷ்யம்—**तद्ब्रह्म, स आत्मा** "அது பிரும்மம், அது ஆத்மா" என இந்த அனுவாகத்திற் றெளிவாய் கூறியிருப்பதிலிருந்தே பிரும்மம் அறியப்பட்டதாக வாகுமாதலால் இங்கு திரும்பவும் **तां यो वेद, स वेद ब्रह्म,** "அந்த வியாஹிருதிகளை எவனறிகின்றானோ அவன் பிரும்மத்தை யறிகிறான்" என்றதால் அறியப்படாததை இதனால் புதிதாயறிகிறான் என்று கூறியதின் கருத்து யாதெனின்? உத்தரம்—கூறுவாம். நான்காவது வியாஹிருதியானது பிரும்மம் எனமுன்னர் கூறியது உண்மைதானாயினும் உபாஸ்யமான பிரும்ம மானது ஹிருதயத்திற்குள் உபலப்யம் (பிரகாசிப்பது) என்றாவது, அடுத்த அனுவாகத்திற் கூறப்போகும் மனோமயத்வம் முதலியதும், சாந்தி ஸமிருத்தம் முதலியதுமான தர்மங்களுடன் கூடியது என்றாவது ஏற்படவில்லை. ஆகவே அந்த பிரும்மத்தை மேற்கூறியபடி உபாஸிக்கவேண்டுமென்பதைக் கூறவே "**स वेद ब्रह्म**" என்று திரும்பவும் கூறப்பட்டதென்ப் பொருள் கொள்ளப்படுவதால் கூறியது கூறல் என்ற தோஷத்திற்கிடமில்லை யென்றேற்படுகிறது. ஆகவே இனிவரும் 6வது அனுவாகமும், இந்த 5-வது அனுவாகமும் சேர்ந்து ஒரே பிரும்மோபாஸனத்தை விதிப்பதாகவே கொள்ளல்வேண்டும். இரண்டு அனுவாகமும் ஒரே பிரும்மோ பாஸனத்தையே விதிக்கின்றதென்றதற்கு ஆதாரமுமிருக்கின்றது. அதாவது 5-வதான வியாஹிருத்யனுவாகத்திற் சொல்லிய பூ: முதலிய வியாஹிருதிகளில் அக்னி முதலிய புத்திகளுக்கு, 6வது அனுவாகத்தில் "**भूरित्यग्नौ प्रतितिष्ठति**" என்பனவற்றால் பலன் கூறியிருப்பதே அதன் ஆதாரமாகும். மேலும் 5 வது அனுவாகத்திற் கூறிய உபாஸனத்தையும் 6வது அனுவாகத்திற் கூறப்படும் உபாஸனத்தையும் வேறுபடுத்திக் காட்டக்கூடிய விதியில்லா திருப்பதும் மற்றொரு ஆதாரமாகும். ஆனால் 5 வது அனுவாகத்தில் "**तां यो वेद**" என்ற விடத்திலுள்ள **वेद** என்ற பதத்தால் உபாஸனம் தனியாய் உபதேசிக்கப்பட்டிருப்பதாய் கொள்ளக்கூடாதோ வெனின் கூறுவாம். அந்த அங்கங்களான வியாஹிருதிகளை அடுத்த 6வது அனுவாகத்திற் சொல்லப்படும் அங்கியான பிரும் மத்துடன் சேர்த்து எவன் உபாஸிக்கின்றானோ என்று பொருள் கொள்ளப்படுவதால் இந்த ஆசங்கைக்கிடமில்லை

மேலும் ஐந்தாவது அநுவாகம் பொதுவாய் பிரும்மத்தை உபதேசிக்கின்றதென்றும் முன்னரே எழுதியிருக்கிறோம். ஆகவே சகல தேவதைகளையும் அங்கங்களாக வுடைய ஸகுணபிரும பிராப்தி, உபாஸகனுக்குக் கிடைத்த பின்னர் எல்லாத்தேவர்களும் இவனைப் பூஜிக்கின்றனர் என்பதும் பொருத்தமுள்ளதாயாகி விடுகின்றது. (எ-று.)

அத்வைதமதப்படி ஐந்தாவது அநுவாகம் முற்றிற்று.

[விசி×ம்) அ-கை-பின்னர் சொல்லப்படும் பரவித்யைக்கு அங்கபூதமான வியாஹ்ருதியின் உபாஸனம் உபதேசிக்கப் படுகின்றது.

**( मन्त्रः ) भूर्भुवस्सुवरितिवा......अङ्गान्यन्यादेवताः ॥**

(பதை-ர) **भूर्भुवस्सुवरिति**=பூ:, புவ:, ஸுவ: என்றஇந்தமூன்றும் **व्याहृतयः**= வியாஹ்ருதிகளென **वै**=பிரஸித்தமானதே. **तद्ब्रह्म**- **तत्**=மஹ: என்றசப்தத்தால் சொல்லப்பட்டது எதுவோ அதே **ब्रह्म**=மிக்கப்பெரிதாகவிருப்பதால், அதாவது: ஒப்புயர்வற்றதாயிருப்பதால் பிரும்மசப்தத்தாலும். **सआत्मा—सः** அந்தமஹ: என்ற வியாஹ்ருதியானது **आत्मा**=ஆத்மசப்தத்தாலும் சொல்லப்படுகிறது. **अन्यादेवताः**=வேறுதேவதைகள் **अङ्गानि**=அந்தஆத்மாவுக்குச்சரீரங்களாகின்றனர். ஆகவே ஒப்புயர் வற்ற மஹத்வமானது (பெரிதாயிருத்தலானது) வேறுதேவதைகளுக்கு இல்லாமைபற்றி மஹ: என்ற சப்தத்தால் வேறுதேவதைகள் சொல்லப்படமாட்டா என்றுபொருள்.

(அ-கை) இவ்விதம் மஹ: என்ற சப்தத்தின் வாஸ்தவமான பொருளை (உண்மையான பொருளை) உபதேசித்து **भूः**, **भुवः**, **सुवः**, **महः** என்ற நான்கு வியாஹ்ருதிகளில் நான்குவித மான உபாஸனங்களை. **भूरितिवाअयं लोकः** என்றது முதலியவாக்கியங்களால் சுருதி உபதேசிக்கத்தொடங்குகின்றது. அதாவது:-பூ: புவ:, ஸுவ:, மஹ: என்ற இந்நான்குவியாஹ்ருதிகளிலும் முறையே பூலோகம், அந்தரிக்ஷலோகம், ஸ்வர்க்கலோகம், ஆதி

த்யன் ஆகிய இன்னொன்கு விதமான பதார்த்ததிருஷ்டியானது செய்யவேண்டும் என்பதாம்.

**( मन्त्रः ) भूरितिवा अयं लोकः......प्राणा महीयन्ते ॥**

(ப-ரை) **महीयन्ते**=பூஜிக்கப்படுகின்றனர். **मह्यन्ते= पूज्यन्ते** என்ற வ்யுத்பத்தி முறையைக்கொண்டு **महः**=என்ற சப்தத்தின் பொருளை ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். ஆகவே ஆதித்யனுக வெ ண்ணப்பட்ட மஹ: என்ற வியாஹ்ருதியானது எல்லா லோக ங்களுடைய் பூஜையை (பிரகாசத்தை) யடைவதற்கு ஹேதுவாக விருக்கின்றது என்று கூறியதாக வேற்பட்டது.

**( मन्त्रः ) ता वा एताश्चतस्रश्चतुर्धा ।...बलिमावहन्ति ॥**

(ப-ரை) **तावा...र्धा**=அந்த நான்கு வியாஹ்ருதிகளும் இது வரை கூறிய முறையால் நான்கு விதமான உபாஸனத்துடன் கூடினவைகளாகின்றன என்று பொருள். **चतस्र...व्याहृतयः-भूः** முதலிய நான்கு வியாஹ்ருதிகளும் முற்கூறிய விதமாக ஒவ் வொன்றும் நான்கு விதங்களாக வாகி, மொத்தம் 4வியாஹ்ரு திகளும் சேர்ந்து 16 வியாஹ்ருதிகளாகி விடுகின்றன. **ता यो वे-द**=மேற்கூறியவாறு 16விதங்களாக வியாஹ்ருதிகளை உபாஸிக்கி றவனுக்கு பிரும்மவித்யை சித்திக்கின்றது. எல்லாத்தேவர்களும் இவனைப் பூஜிக்கின்றனர் என்று பொருள்.

விசிஷ்டாத்வைதமதப்படி ஐந்தாவது அநுவாகம் முற்றிற்று.

## ஆருவது அநுவாகம்.

(அத்×ம்) அவதாரிகை—வித்யாரண்யஸ்வாமிகள் சொல்லி யபடி ஐந்தாவது அநுவாகத்தில் அங்கபூதமான உபாஸனத்தை உபதேசித்து அங்கியான பிரும்மோபாஸனத்தை உபதேசிப்பதற் காக இந்த ஆருவது அநுவாகம் ஆரம்பிக்கப் படுகின்றது. தொ டக்கத்தில் உபாஸ்யமான பிரும்மத்தின் ஸ்வரூபமானது உபதே சிக்கப்படுகின்றது என்று அவதாரிகை ஏற்படுகின்றது.

ஸ்ரீசங்கரபகவத்பாத பாஷ்யப்படியோ வெனில்—**भूः, भुवः, सुवः** என்ற இந்தவியாஹ்ருதிகளின் ஸ்வரூபர்களான இதர தேவதைகள் மஹ: என்ற வியாஹ்ருதிஸ்வரூபமான பிரும்மத்தினது அங்கங்கள் என்பதாக **अङ्गान्यन्या देवताः** என்றதானுபதேசிக்கப் பட்டது. எந்தப் பிரும்மத்திற்கு முற்கூறிய அந்தத் தேவதைகள் அங்கமாகின்றனவோ அத்தகைய பிரும்மத்தை நேரில் காண்பிக்கக் கூடியதும், அல்லது பிரும்மத்தை யுபாஸிப்பதற்கு உபயோகப் படக்கூடியதுமான ஹ்ருதயாகாசமானது விஷ்ணுவுக்கு ஸாளக்ராமசிலையானது போல ஸ்தானமாக ஆகும் என்பதை உபதேசிக்க வேண்டியும் ஹ்ருதயாகாசமாகிற அந்த ஸ்தானத்தில் மனோமயத்வம் முதலிய தர்மத்துடன் கூடியதாக அந்தப் பிரும்மமானது உபதேசிக்கப் படுமானால் உள்ளங்கை நெல்லிக்கனி போல நேரில் அறியப்படுகின்ற தென்பதைக் காட்டவும், ஸர்வாத்மக பிரும்மபாவத்தை யடைவதற்கு வேண்டிய மார்க்கத்தை உபதேசிக்கவேண்டியும், இந்த ஆறுவது அனுவாகம் ஆரம்பிக்கப் படுகின்றது என்று அவதாரிகை ஏற்படுகின்றது—

**(मन्त्रः) स य एषोऽन्तर्हृदय आकाशः। तस्मिन्नयं पुरुषो मनोमयः। अमृतो हिरण्मयः।**

(ப—ரை) **अन्तर्हृदये**=ஹ்ருதயத்திற்குள் (தாமரஸ புஷ்பம் போன்று உள்ளிருக்கின்ற ஓர்வகை மாம்ஸ பிண்டம் ஹ்ருதயம் எனப் படும்.) **य एषः**=யாதொரு இந்த **आकाशः**=இடைவெளி யுண்டோ **तस्मिन्**=அந்த ஹ்ருதயாகாசத்தில் **मनोमयः**=மனத்தைப் பிரதானமாயுடைய வனும் **अमृतः**=அழிவற்றவனும் **हिरण्मयः**=ஜ்யோதிர் மயனும், அதாவது: ஸ்வயம் பிரகாசனுமிருக்கின்ற **सः**=அங்கி எனப்பிரஸித்தி பெற்ற **अयम्**=இந்த **पुरुषः**=புருஷசப்தத்தால் சொல்லப்படும் பரமாத்மா (**उपास्यते**=உபாஸகர்களால் வழிபடப்படுகிறான்.)

(தா—ம்) சரீரத்தி னுட்புரத்தில் நடுமார்பிற்கு நேராக தாமரை மொக்குக்கு (மொட்டுக்கு) நிகராக ஓர் வகை மாம்ஸ பிண்டமானது, பிராணசப்தவாச்யனான பரமாத்மா பிரகாசிப்ப

தற்கு ஆதாரமாகவும், அனேகம் நாடிகளுக்கு ஆச்ரயமான ஓட்டைகளை யுடையதாகவும், கீழ் நோக்கிய நுனியும் மேல் நோக்கிய காம்பு முள்ளதாகவும் இருக்கின்ற தென்பது பசு முதலியதை அறுக்கும் பொழுது பார்ப்பவர்க்கு நன்றாய் புலப் படக்கூடியதே. அந்த மாம்ஸ பிண்டமே இங்குள்ள **हृदयम्** என்ற பதத்தால் உபதேசிக்கப்பட்டதாய்க் கொள்ளவேண்டும். உடல் பெருத்து முகம்குறுகிய கரகம் என்ற பாத்திரத்திற்குள் ஆகாசமானது இருப்பது போன்று, அத்தகைய ஹிருதயத்திற் குள்ளிருக்கும் ஆகாசத்தில் (அதாவது மிக்கநுட்பமான மனத் தில்) பரமாத்மா பிரகாசிக்கிறார். இவ்விதமே **योऽयमन्तर्हृदय आकाशः** என்ற சுருதியிலும் பிரசித்தமாயிருக்கிறது. ஆகவே அந்த ஆகாசத்தில் ஹிருதய குகையில் பிரகாசிப்பது பற்றியும், அல் லது பூ: முதலிய லோகங்கள் எவனால் நிறையப் பெற்றிருக்கின் றனவோ அவன் புருஷன் எனப்படுவன் என்ற படியும், **पुरुषः** என்றசப்தத்தால் சொல்லப்படுகின்ற வரும், **मनोमयः** க்ஞான ஸ்வரூபியா யிருப்பவரும், அல்லது உபாஸனை ஸம்ஸ்காரம் பெற்ற மனத்தால் அறியப் படுவது பற்றி மனோமயனா யிருப்பவரும் **अमृतः** மரணமற்றவரும், **हिरण्मयः** ஜ்யோதிர் மயனாயிருப்பவரு மான பரமாத்மா வானவர் உபாஸகர்களால் உபாஸனைபலத்தா லறியப்படுகிறார். (எ—று)

(அ—கை) உபாஸ்யமான பரமாத்மாவின் ஸ்வரூபத்தை யுப தேசித்து மேலுள்ள இந்த மந்திரத்தால் உபாஸக னுக்கு உபாஸ் யமான பரமாத்மாவை யடைவதற்கு வேண்டிய மார்க்க முப தேசிக்கப் படுகின்றது.

**( मन्त्रः ) अन्तरेण तालुके । य एष स्तन इवाऽवलंबते । सेन्द्रयोनिः । यत्रासौ केशान्तो विवर्तते । व्यपोह्य शीर्षकपाले ।**

(ப—ரை) **तालुके अन्तरेण**=வாய்க்குள்ளும் நாக்கின் அடிபாகத் திற்கு மேலுமுள்ள இடது வலது பாகங்கள் தாலுகை எனப் படும். அத்தகைய தாலுகைக்கு நடுவில் **स्तन इव**=கன்றின் முலைக் காம்பு போல **य एषः**=யாதொரு மாம்ஸபிண்டமானது **अवलंबते**

தொங்குகின்றதோ **तस्य चान्तरेण**=அந்த மாம்ஸபிண்டத்திற்கு உள்வழியாய் **यत्र**=எந்த விடத்தில்—அதாவது: எந்தத் தலைப்பிர தேசத்தில் **केशान्तः—केश**=தலையிலுள்ள ரோமங்களின் **अन्तः** அடிப் பாகமானது **विवर्तते**=பிரிந்து நிற்கின்றதோ. (**तं देशं प्राप्यमाणा**= அந்தப் பிரதேசத்தை யடைந்ததும்) **शीर्षकपाले—शीर्ष**=தலையி லுள்ள **कपाले**=மண்டை யோடுகளை **व्यपोह्य**=விலக்கிக் கொண்டு (**निर्गता**=வெளிவந்ததாயு முள்ள **या**=எந்த நாடியுண்டோ) **सा**= அந்த நாடியானது **इन्द्रयोनिः—इन्द्र**=பரமாத்மாவினுடைய **योनिः**= மார்க்கமாக, அதாவது: பரமாத்மாவின் ஸ்வரூபத்தை யடை வதற்கு வழியாக வாகின்றது.

(தா—ம்) மேற்கூறிய ஹிருதயத்தினின்றும் ஸுஷும்ந என்ற நாடியானது ஊர்த்வ முகமாகக் கிளம்பிச் செல்வதாக யோகசாஸ்திரங்களிற் றெளிவாய்க் கூறப் பட்டிருக்கிறது. அவ் விதம் உயர்நோக்கிச் செல்லும் அந்த ஸுஷும்ந நாடியானது, வாய்க்குள்ளும், நாக்கின் அடி பாகத்திற்கு மேலுமுள்ள இடது வலது பாகங்களான தாலுகை என்ற பாகத்திற்கு நடுவில் கன் றின் மூலைக்காம்பு போல் தொங்கும் ஒருவகை மாம்ஸ பிண்டத் தினுடைய உள்வழியாய்ச் சென்று தலையிலுள்ள ரோமங்களின் அடி பாகங்களுள்ள விடத்தை யடைந்து, பிறகு மண்டை யோடு களை விலக்கிக் கொண்டு வெளியிற் செல்லுகின்றது. அவ்விதம் ஹிருதயம் முதல் தலையிலுள்ள ரோமக்கால்கள் வழியாக ஊடு ருவிச் சென்றும், மண்டையிலுள்ள இரண்டு ஓடுகளை விலக்கிக் கொண்டும் பிரும்ம ரந்திரம் வரை சென்றுமிருக்கும் ஸுஷும் ந நாடியானது இந்த 5, 6-வது அநுவாகங்களிற் சொல்லியபடி ஸகுணப்பிரும்மோபாஸனம் செய்கின்ற உபாஸகனுக்குப் பிரும் மத்தையடைவிக்கும் மார்க்கமாக வுபதேசிக்கப்பட்டது. (என்று)

(அ—கை) உபாஸகன் உபாஸனத்தின் பலனை யடைவதற்கு வேண்டி சரீரத்தினின்றும் வெளிக்கிளம்பும் வழியை உபதே சித்து, பின்னருள்ள மந்திரபாகத்தால் உபாஸனத்தாலுண்டா கும் பலனின்னதெனு உபதேசிக்கப் படுகின்றது.

(मन्त्रः) भूरित्यग्नौ प्रतितिष्ठति । भुव इति वायौ ।
सुवरित्यादित्ये । मह इति ब्रह्मणि ।
आप्नोति स्वाराज्यम् । आप्नोति मनसस्पतिम् ।
वाक्पतिश्चक्षुष्पतिः । श्रोत्रपतिर्विज्ञानपतिः ।
एतत्ततो भवति । आकाशशरीरं ब्रह्म । सत्यात्म-
प्राणारामं मन आनन्दम् । शान्ति स मृद्धममृतम् ।
इति प्राचीनयोग्योपास्व ॥

(ப—ரை) एवंवित्=மனோமயாத்ம உபாஸகனானவன் (तया मूर्ध्नो विनिष्क्रम्य=அந்த ஸுஷும்ந நாடியினால் மூர்த்தாவினின்றும் வெளிக்கிளம்பி) भूरित्यग्नौ=பூ: என்ற வியாஹ்ருதிரூபமான அக்னியில் प्रतितिष्ठति=பிரதிஷ்டையை யடைகிறான். भुव इति वायौ= புவ: என்ற வியாஹ்ருதி ரூபமான வாயுவில் (प्रतितिष्ठति=பிரதிஷ்டையை யடைகிறான்.) सुवरित्यादित्ये=ஸுவ: என்ற வியாஹ்ருதி ரூபமான ஆதித்யனிடத்தில் (प्रतितिष्ठति—பிரதிஷ்டையை யடைகிறான். मह इति ब्रह्मणि—மஹ: என்ற நான்காவது வியாஹ்ருதி ரூபமான பிரும்மத்தினிடத்தில் (प्रतितिष्ठति—பிரதிஷ்டையை யடைகிறான். तेष्वात्मभावेन स्थित्वा—முற்கூறிய வியாஹ்ருதிகளின் ஆத்மபாவத்தை யடைந்தவனாகவிருந்து) स्वाराज्यम्—தானே ராஜாவாக (அதிபதியாக) இருக்கும் தன்மையை आप्नोति—அடைகிறான். मनसस्पतिम्—எல்லா மனத்திற்கும் பதியான பிரும்மத்தை आप्नोति—அடைகிறான். वाक्पतिः—எல்லா வாக்கிற்கும் பதியாகவும், चक्षुष्पतिः—எல்லா சக்ஷுரிந்திரியங்களுக்கும் பதியாகவும் श्रोत्रपतिः—எல்லா சுரோத்திரேந்திரியங்களுக்கும் பதியாகவும் विज्ञानपतिः—எல்லா விக்ஞானங்களுக்கும் பதியாகவும்(भवति—ஆகிறான்) ततः அவ்விதமானதற்குப்பிறகு आकाशशरीरम्-ஆகாசத்தையே சரீரமாக வுடையதும், ஆகாசத்தைப் போல ஸூக்ஷ்மமான (அதாவது எங்கும் வியாபகமான) சரீரத்தை யுடையதும் सत्यात्म—सत्य—மூர்த்தாமூர்த்தாத்மகமான பிருதிவீ, அப், தேஜஸ், வாயு, ஆகாசம் இவைகளை आत्म—ஆத்மாவாக (ஸ்வபாவமாக) வுடையதும் प्राणारामम्—प्राण—ஸர்வேந்திரியங்களிலும் आरामम्—கிரீ

டிருக்கின்றதும், அல்லது—**प्राण**—எல்லா இந்திரியங்களுக்கும் **आराममू**—கிரீடா ஸ்தானமாக வானதும் **मनआनन्दम्**—மனத்தில் ஆனந்தத்தையுடையதும் **शान्तिसमृद्धम्—शान्ति**—சாந்திரூப மானதும் **समृद्धम्**—எங்கும் நிறைவு பெற்றதும், அல்லது—**शान्तिसमृद्धम्**—சமம் என்ற குணத்தால் நிறையப் பெற்றதும் **अमृतम्**—மரணமற்றதுமான **एतत्**—இந்த **ब्रह्म**—பிரும்மமாக **भवति**—ஆகிறான். ஆகவே—**प्राचीनयोग्य**—பிராசீனயோக்யன் என்ற ஸிஷ்யனே! **इति**—முற்கூறிய மனோமயத்வாதிதர்மங்களுடன் கூடிய பிரும்மத்தை **उपास्व**—நீ உபாஸிப்பாயாக.

(தா-ம்) **मनो मयः, अमृतः, हिरण्मयः** என்ற பதத்தாற் கூறிய படி பிரும்மோபாஸனம் செய்த உபாஸகனானவன் முற்கூறிய படி ஸுஷும்னா நாடி வழியாக மூர்த்தாவினின்றும் வெளிக்கிளம்பி இந்தப்பிருதிவீலோகத்திற்கு அதிஷ்டாதாவாயும், மஹத் என்ற சப்தத்தால் சொல்லப் படுகின்ற பிரும்மத்திற்கு அங்கமாயும் **भूः** என்ற வியாஹிருதிரூபமாயுமிருக்கின்றயாதொரு அக்னியுண்டோ அந்த அக்கினியில் பிரதிஷ்டையை யடைகிறான். இதிலிருந்து **भूः** என்ற வியாஹிருதிரூபமான ருக்வேதத்திலும், **भूः** என்ற வியாஹிருதிரூபமான பிராணனிலும் பிரதிஷ்டையை யடைகிறான் என்று கூறியதாகக் கொள்ளவேண்டும். அதாவது:- அக்னி ரூபனாகவே தானாகி இந்தபிருதிவீ லோகம் முழுவதுமே நிறைவு பெற்று நிர்க்கின்றான் என்பதாம். இவ்விதமே ருக்வேத ரூபனாகவே தானாகியும், பிராண ரூபனாகவே தானாகியும், ருக்வேதம், பிராணன் ஆகிய யாவற்றிலும் நிறைவு பெற்று நிற்கிறான் என்று உபதேசித்ததாயும் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். இதுபோலவே புவ: என்ற இரண்டாவது வியாஹிருதி ரூபமாயுள்ளதும், இந்த அந்தரிக்ஷலோகத்திற்கு அதிஷ்டாதா வாயுள்ளதும், மஹத் என்ற சப்தத்தாற் சொல்லப்படும் பிரும்மத்திற்கு அங்கமாயுள்ளதுமான வாயுவில் பிரதிஷ்டையை யடைகிறான். அதாவது: வாயுரூபனாகவே தானுமாகி அந்தரிக்ஷ லோகம் முழுவதும் நிறைவு பெற்று நிற்கிறான் என்பதாம். இவ்விதமே ஸாமங்கள்

ரூபமாகவும், அபானன் என்ற பிராணன் ரூபமுமாகவே தானுகி யாவற்றிலும் நிறைவுபெற்று நிற்கின்றுன் என்றும் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். இவ்விதமே सुवः என்ற மூன்றாவது வியாஹ்ருதி ரூபமானதும், ஸுவர்க்க லோகத்திற்கு அதிஷ்டாதாவா யுள்ளதும், மஹத் என்ற சப்தத்தால் சொல்லப்படும் பிரும்மத்திற்கு அங்கமாக ஆனதுமான ஆதித்யனிடத்தில் பிரதிஷ்டையை யடைகிருன். அதாவது: ஆதித்ய ரூபனுகத் தானுகி சுவர்க்கலோகம் யாவற்றிலும் நிறைவுபெற்று நிற்கிருன் என்பதாம். இதுபோலவே யஜுர் வேதம், வியானன் என்ற வாயுவிருத்தி இவற்றின் உருவத்தை யடைந்து இவ்வுலகில் நிலை பெற்று விடுகிருன் என்றும் கூறியதாகக் கொள்ளல் வேண்டும்.

**महरिति ब्रह्मणि**= மஹ: என்ற நான்காவது வியாஹ்ருதி ரூபமானதும், ஸர்வத்தையு மங்கமா யுடையதுமான பிரும்மத்தில் பிரதிஷ்டையை யடைகிருன். அதாவது: பிரும்ம ரூபமாகத் தானுகி அங்கமான எல்லாவற்றிலும் நிறைவு பெற்று நிற்கின்றுன் என்றேற்பட்டது. இவ்விதமே சந்திரன், வேதம், அன்னம் முதலிய ஸர்வபதார்த்தங்களுக்கும் ஆத்மாவாகி விடுகிருன் என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

இவ்விதம் பிரும்மத்தின் அங்கங்களான அக்கினி, வாயு, ஆதித்யன், இவற்றில் அந்தந்த உருவமான நிறைவைப் பெற்று நிற்கின்றுன் என்றதிலிருந்து சர்வத்திற்குமாத்மாவான பரமாத்ம பாவத்தை யடைந்து விடுகிருன் என்பது தெளிவாகின்றது. இதிலிருந்து ஸர்வத்திற்கு மாத்மாவான பரமாத்ம பாவமே இவனுக்கேற்படும் பொழுது மற்றெல்லாத் தேவர்களுக்கும் இவன் அதிபதியாகி விடுகிருன் என்பதில் யாதும் தடையில்லை என்றேற்பட்டது. இந்த நிலையே आप्नोति स्वाराज्यम्, என்றதா லுபதேசிக்கப் பட்டதா யேற்படுகின்றது. सर्वेऽस्मै देवा बलिमाहरन्ति இந்நிலையை யடைந்தவன் எவனே அவனுக்கே எல்லாத் தேவர்களும் பூஜையைச் செய்கின்றனர் என முன்னர் கூறப்பட்டது. மேலும் ஸர்வாத்மகமான எந்தப் பரமாத்ம வஸ்துவானது எல்லோருடைய மனத்தையும் தன்மனதாகவும், எல்லோருடைய வாக்கையும் தன் வாக்காகவும் எல்லோருடைய கண்ணையும்

தனது கண்ணாகவும், எல்லோருடைய காதையும் தனது காதாக வும், எல்லோருடைய விக்ஞானத்தையும் தனது விக்ஞானமாக வும் கொண்டு அவ்வவற்றிற்குறிய கார்யங்களைச் செய்வதாக வாகின்றதோ அவ்விதமே ஸர்வாத்மாவான பிரும்மத்தை அபின் னமாக உபாஸித்தவனும் ஸர்வாத்மக பிரும்மபாவத்தையடைந்து விட்டபடியால் உபாஸ்யமான பிரும்மத்திற்குச் சொல்லிய ரூபமுள்ளவனாகவே யாகிவிடுகிறான் என்றும் ஏற்படுகிறது. மேலும் இதுவரை கூறிய நிலை ஏற்படுவதுடன் பின்னர் எழுதப் படும் நிலையும் இவனுக்கு ஏற்படுகிறது. அதாவது: ஆகாசத் தைச் சரீரமாயுடையதும், அல்லது ஆகாசம் போல் சூக்ஷ்மமான சரீரமுடையதுமான பிரும்மமாகவு மாகிறான். அந்தப் பிரும்ம மானது எப்படியுள்ளது எனில், அதை **सत्यात्म प्राणारामं मनआनन्दम् । शान्तिसमृद्धममृतम् ।** என்ற பின்வரும் மந்திர பாகம் உபதேசிக்கிறது. இந்த மந்திர பாகத்தாற் சொல்லப்படும் சில தர்மங்களையும் **तस्मिन्नयं पुरुषो मनोमयः** என்றவிடத்திற் சொல்லிய **मनोमयः, अमृतः, हिरण्मयः** என்ற பிரம்ம குணங்க ளுடன் சேர்த்தே பிரும்மோபாஸனம் செய்யவேண்டும் என ஸ்ரீ சங்கர பகவத்பாத பாஷ்யகாரர் அவர்கள்—**एतच्चाधिकतरं विशेषणं तत्रैव मनोमय इत्यादौ द्रष्टव्यमिति** என்றதா லுபதேசித்திருக் கின்றனர்.

அதாவது: இங்குள்ள **सत्यात्म** என்றதில் **सत्, त्य, आत्म** என மூன்றுபதங்க ளடங்கியிருக்கின்றன. அவற்றுள் **सत्** என்ற பதத்தால் பிருதிவீ, அப்பு, தேஜஸ் என்ற மூர்த்த பதார்த்தங்க ளும், **त्य** என்ற பதத்தால் வாயு, ஆகாசம் என்ற அமூர்த்த பதார்த்தங்களும் சொல்லப் படுகின்றன. ஆகவே மூர்த்தங்க ளான பிருதிவீ, அப்பு, தேஜஸ் இவைகளையும், அமூர்த்தங்க ளான வாயு ஆகாசம் இவைகளையும் ஆத்மாவாக (சரீரமாக) வுடையது என்பதாம். அதாவது: இந்த மூர்த்தா மூர்த்தங்கள் யாவும் இந்த பரமாத்ம வஸ்துவுக்கு சரீரமாக சாஸ்திரங்களா லுபாஸனைக்காகக் கற்பிக்கப் பட்டிருக்கிறது என்பது பொருள். அல்லது **सत्यम्**=முக்காலத்திலும் மாறாத **आत्मा** ஸ்வரூபமுடை யது என்றும் பொருள் கொள்ளலாம். மேலும் **प्राणारामम्**=

உபாதி ஸம்பந்தத்தால் நிகழ்ந்த ஜீவபாவத்தை யடைந்த பொழுது இந்த பரமாத்ம வஸ்துவானது **प्राणेषु=** விஷயங்களுடன் கூடிய இந்திரியங்களில் **आरामम्** விளையாடக்கூடியது என்று பொருள். அல்லது **प्राणानाम्=**இந்திரியங்களுக்கு **आरामः=** தத்தமது விஷயங்களில் ரமித்தல் என்பது எந்தப் பரமாத்ம வஸ்துவைச் சார்ந்ததோ என்று பொருள். மேலும் **मनआनन्दम्=** மனத்தி லுண்டான ஆனந்தானுபவத்தை யுடையது. இதுவும் ஜீவபாவகாலத்திய அனுபவத்தைக் குறிக்கின்றதென வனமாலை யென்ற வியாக்கியானத்தில் கூறப்பட்டிருக்கிறது.

மேலும் **शान्ति समृद्धम्=शान्तिः=उपशमः, शान्तिश्च तत् समृद्धं च शान्तिसमृद्धम्=** அதாவது: சாந்தியென்ற பதத்திற்கு எல்லா வஸ்துவினின்றும் விலகினது என்று பொருள். இதினின்றும் அவித்யை, அதன் காரியமான த்வைத பதார்த்தங்கள் ஆகிய இவற்றின் நிவிருத்தியுருவமாயுள்ளது என்றேற்படுகின்றது. இந்த அத்வைத சித்தாந்தத்தில் அக்ஞானம், அதன் காரியம் இவற்றின் நாசத்தை அவித்யாதிகளுக்கு அதிஷ்டானமான பிரும்மஸ்வரூபத்தைவிட வேறில்லை என அங்கீகரித்திருப்பதால் இங்குள்ள சாந்தி யென்ற பதத்திற்கு எல்லாவித த்வைத வஸ்துக்களின் நிவிருத்தி யுருவமாயுள்ளது என்று பொருள் கூறப்பட்டது. **समृद्धम्=**சர்வத்திற்கும் ஆத்மாவாக எங்கும் நிறைவு பெற்றது என்று பொருள். அல்லது **शान्तिसमृद्धम्=शान्त्या समृद्धम्** நிர்விகல்ப சமாதி நிலையில் எல்லா விதமான விருத்திகளும் ஒடுங்கி விடுவதால் அவ்வித நிர்விகல்ப சமாதி நிலையே இங்குள்ள **शान्ति** என்ற பதத்தால் சொல்லப்பட்டதாக ஏற்பட்டது. ஆகவே அத்தகைய சாந்தியுடன் **समृद्धम्=**பூர்ணானந்த ரூபமாக வுள்ளது என்றுபொருள். **अमृतम्=**மரண தர்மமற்றது என்பதாம்.

வித்யாரண்ய தீபிகை.—ஹிருதய கமலத்தின் நடுவில் உபாசகனுடைய கட்டைவிரலளவுள்ள ஆகாசமிருக்கின்றது. முற்கூறியபடி ஆகாசமிருப்பதானது யோகசாஸ்திரத்திலும், இதே உபநிடதத்திலும் பிரசித்தமாயுள்ளது என்பதை **सः एषः=**என்ற இவ்விரண்டு பதங்களும் விளக்குகின்றன. **तस्मिन्=**அந்த ஆகாசத்தில் **अयंपुरुषः=**பூர்ணனான இந்தப் பரமாத்மா பிரகாசிக்கின்

றது. பரமாத்ம வஸ்துவானது இயற்கையில் எங்கும் பிரகாசிக்கக்கூடியதுதானாயினும் எங்கும் பிரகாசிக்கின்ற அந்தப் பரமாத்ம வஸ்துவை அறிந்து கொள்வதற்கு வேண்டியும், பரமாத்மாவை உபாஸிப்பதற்கு வேண்டியும், ஹிருதய கமலமானது ஸ்தானமாக உபதேசிக்கப் பட்டது. மனத்தை யடக்கி ஹிருதயகமலத்தில் அதை ஏகாக்ரப் படுத்துபவனுக்கே பரமாத்ம ஸாக்ஷாத்கார முண்டாகின்றதென்பது வெளிப்படை. இவ்விதமே **दृश्यते त्वग्र्यया बुद्ध्या** 'யோகப்பழக்கத்தால் ஏகாக்ரப் படுத்தப் பட்ட ஸூக்ஷ்மமான மனததினால் பிரும்மம் அறியப்படுகின்றது' என்று வேறு சுருதியும் உபதேசிக்கின்றது. மேலும் இங்குள்ள **अयम्** என்ற பதத்தால் இவ்விதம் உபாஸிப்பவனுக்கு பரமாத்ம வஸ்துவானது ஸாக்ஷாத்காரத்தை யடையும் யோக்யதையுடையது என்பது தெளிவுபடுத்தப்படுகிறது. ஆகவே, அத்தகைய பரம புருஷனை ஹிருதயகமலத்தின் நடுவில் உபாஸிப்பவனுக்கு அவர் பிரகாசிக்கிறார். ஆனது பற்றியே, தஹர, சாண்டில்ய வித்யைகளில் பரமாத்மோபாஸனத்திற்கு ஹிருதய கமலம் ஸ்தானமாக உபதேசிக்கப் பட்டிருக்கிறது. அவ்விதம் உபாஸிக்கத்தகுந்த அந்தப் பரமபுருஷன் **मनोमयः**=மனத்தைப் பிரதானமா யுடையவன். ஜிக்ஞாஸுக்கள் அப்புருஷனை மனத்தாலேயே ஸாக்ஷாத்கரிக்கின்றனர். உபாஸகர்களும் அப்புருஷனை மனத்தாலேயே தியானஞ் செய்கின்றனர். ஆனது பற்றியே அவர் மனோமயனாகிறார். **अमृतः**=விநாச மற்றவராகவும் **हिरण्मयः**=ஸ்வப்பிரகாசராகவும் ஆகிறார். இதுவரை உபாஸ்யமான பிரும்மத்தின் ஸ்வரூபத்தை உபதேசித்து உபாஸகன் உபாஸ்யப் பிரும்மத்தை அடையும் மார்க்கம் இனி உபதேசிக்கப் படுகின்றது:—

**( मन्त्रः ) अन्तरेण तालुके......शीर्षकपाले ।**

முகத்திற்குள்ளும் அடிநாக்கிற்கு மேலும் இடது வலது பக்கங்களின் நடுவில் கன்றின் முலைக்காம்புபோல ஒரு மாம்ஸ பிண்டமானது தொங்குகின்றது. அவ்விதம் மாம்ஸ பிண்டம் தொங்குவது யோக சாஸ்திரத்தில் பிரஸித்தமானது என்பதை

இங்குள்ள **य:** என்ற பதம் தெரிவிக்கின்றது. பிரத்யக்ஷமாயும் அதைக் காணலாகும் என்பதை **एष:** என்ற பதம் விளக்குகின்றது. அதாவது லம்பிகா யோகம் செய்வதில் விசேஷப் பயிற்சி பெற்ற யோகிக்கு நாக்கின் நுனியால் தொடப் பட்டதாயாவதால் அது பிரத்யக்ஷமாகவே ஆகிவிடுகிறது. மேலும் பிறர் முகத்தினுள் உற்று நோக்கும் பொழுதும் அது நேரில் காணக் கூடியதாகவே ஆகின்றது. **सः**=அத்தகைய மாம்ஸ பிண்டமானது **इन्द्रयोनि:**=இந்திர சப்த வாச்யனை பரமாத்மாவினுடைய பிராப்திக்கு ஸ்தானமாகின்றது. அதாவது : அந்த மாம்ஸ பிண்டம் சாகாக்ரசந்திர தர்சனநியாயத்தை யொட்டி உபலக்ஷண முறையால் தனது ஸமீபத்திலிருப்பதும் யோகசாஸ்திரப் பிரஸித்தமானதுமான ஸுஷும்ந என்ற நாடியைக் குறிக்கின்றது. அத்தகைய ஸுஷும்ந நாடியில் பிரவேசித்த மனது ஏகாக்ரப்பட்டு பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதற்குத் தகுதியுள்ளதாகவாகின்றது. இவ்விதமே க்ஷுரிகோப நிடதத்திலும்—

**एकोत्तरं नाडिशतं, तासां मध्ये वरा स्मृता ।**
**सुषुम्ना तु परे लीना विरजा ब्रह्मरूपिणी ॥**
**इडा तिष्ठति वामेन, पिङ्गला दक्षिणेन तु ।**
**तयोर्मध्ये परं स्थानं यस्तं वेद स वेदवित् ॥**

"நாடிகள் 101 ஆகும். அவற்றுள் ஸுஷும்ந நாடியானது சிறந்தது. அது பிரும்மத்தை யடைவிக்கின்றதாயும் எவ்வித தோஷமு மற்றதாயும், பரவஸ்துவில் லீனமாயு மிருக்கின்றது. இடது பக்கத்தில் இளா நாடியும், வலது பக்கத்தில் பிங்களா நாடியும், அவ்விரு நாடிகளுக்கும் நடுவில் பரமாத்ம பிராப்திக்குரிய நாடியு மிருக்கின்றது. அதை எவன் அறிவனோ அவன் வேத ரஹஸ்ய மறிந்தவனாகி விடுகிறான்" என்றதாலுபதேசிக்கப் பட்டிருக்கிறது. ஆனது பற்றியே அந்த ஸுஷும்ந நாடியானது பரமாத்ம ஸ்தானமாகி விட்டது. மேலும், மோக்ஷப் பிராப்திக்கு மார்க்கமாயிருப்பதாலுமே அது பரமாத்ம ஸ்தானமாகவு மாகின்றது. இவ்விஷயமானது சாந்தோக்யம், கடம் என்ற உபநிடதங்களிலு முபதேசிக்கப் பட்டிருக்கிறது.

இவ்விதம் உபாஸகனுக்கு பலப்பிராப்திக்காக வெளிக்கிளம்பும் வழியை யுபதேசித்து உபாஸன பலன் இன்னதென்பதைப் பின்வரும் மந்திர பாகம் உபதேசிக்கின்றது.

( मन्त्रः ) भूरित्यग्नौ......सुवरित्यादित्ये ॥

அக்கினி, வாயு, ஆதித்யன் இவர்களுடைய ஐசுவர்யத்தை யடைகிறான். **मह इति ब्रह्मणि**=நான்காவது வியாஹிருதித் தியானத்தால் ஸத்யலோக வாஸியான பிரும்மத்தினுடைய ஐசுவரியத்தை யடைகிறான். **आप्नोति स्वाराज्यम्**=அக்னி முதலிய அங்க தேவதைகளுக்கு உபாஸகன் தானே ராஜாவாக வாகிறான். ராஜாவாக விருப்பதாலேயே எல்லாத் தேவர்களும் இவனைப் பூஜிக்கின்றனர் என்று முன்னர் கூறப்பட்டிருக்கிறது. **आप्नोति मनसस्पतिम्**=எல்லாப் பிராணிகளுடையவும் மனத்திற்குப் பதியாயிருக்கும் தன்மையையும் அடைகிறான். அதாவது: ஸர்வ பிராண்யாத்மகனாகவாகி வாக்முதலிய யாவற்றிற்கும் அதிபதியாகிறான் என்று உபதேசிக்கப் பட்டதா யேற்படுகிறது. அந்தக்கரணம் என்பது ஒன்றுதானாயினும் சக்திபேதத்தை யொட்டி மனஸ் என்றும், விக்ஞானம் என்றும், வெவ்வேறு சப்தங்களால் பிரித்துக் கூறப்படுகின்றது. அதாவது: தியானத்திற்கு காரணமாயிருத்தல் என்ற காரண சக்தியையொட்டி மனஸ் என்றும், தானே தியானம் செய்தல் என்ற கர்த்திரு சக்தியால் விக்ஞானம் என்றும் சொல்லப்பட்டதாயாகின்றது. ஆகவே, இந்த உபாஸகன் முன்னர் தனது தேஹத்தில் மட்டுமிருக்கும் மனம், வாக்கு முதலியவற்றிற்கு அதிபதியாகவிருந்தான். இப்பொழுதோ, உபாஸனையின் பலத்தால் ஸர்வாத்மகமான விராட்புருஷனுடைய தேஹபாவத்தை யடைந்தவனாகி எல்லாத் தேஹத்திலுமிருக்கும் மனோ வாக்கு முதலியவற்றிற்கு அதிபதியாகிறான் என்றேற்பட்டது. (**ततः**=ஸமஷ்டிரூபமான விராட்பிராப்திக்குப் பிறகு) பிரும்மக்ஞானத்தை யடைந்தவனாய் அவித்யா நாசமேற்பட்டதும் பின்னர் சொல்லப்படும் பிரும்ம ஸ்வரூபமாக ஆகிறான். **आकाश शरीरं ब्रह्म** என்றது முதலிய வாக்கியங்களால் பிரும்ம ஸ்வரூப முபதேசிக்கப்படுகின்றது. ஆகாசம் போல மூர்த்தி

யற்ற ஸ்வரூபத்தை யுடைய பிரும்மமாயிருக்கிறான். அல்லது பிரும்மமானது ஸர்வஜகக் கல்பனைக்கும் அதிஷ்டானமாயிருப்பதுபற்றி ஸர்வாத்மகமாயிருப்பதால் ஜகத்திற் சேர்ந்த ஆகாசமும் பிரும்மத்தின் சரீரமாகவே ஆகின்றது. அதாவது: ஆகாசத்தில் ஸச்சிதானந்த ரூபமான அதிஷ்டான பாகமும், நாமரூபாத்மகமான ஆரோப்யபாகமும் காணப்படுகின்றது. அவற்றுள் நாமரூபங்கள் மித்தையானதுபற்றி பிரும்மமாக இருக்கும் தன்மை நாமரூபங்களுக்கில்லாவிடினும் அதிஷ்டானமானது ஸத்யமாயிருப்பது பற்றி அதற்கு பிரும்மமாயிருக்கும் தன்மை பொருந்தும். இந்த அபிப்ராயத்தாலேயே **सत्यात्म** என்றுபிரும்மம் சொல்லப்படுகின்றது.

அதாவது: **सत्यं=अबाधितं जगत्कल्पनाधिष्ठानं, आत्मा=स्वरूपमस्येति सत्यात्म** । பாதிக்கப்படாத ஸர்வ ஜகத்கல்பனாதிஷ்டானமான ஸ்வரூபத்தையுடையது என்பது அதன் பொருள். **प्राणारामम्**=பிராணனுடைய உத்பத்தி முதலிய வியாபாரமுள்ளது. **मनआनन्दम्**=மனத்திற்கு எந்தப் பிரும்மத்தினிடத்தில் பிரவேசித்தலால் ஆனந்தமுண்டாகின்றதோ அது மனஆனந்தம். அதாவது: மனது விஷயப்பற்றை நீக்கி பிரும்மாபிமுகமாக எப்பொழுது திரும்புகின்றதோ அப்பொழுது அதிக சுகம் மனத்திற்குண்டாகின்றது. **शान्तिसमृद्धम्**=மனத்திலுள்ள சாந்தியால் நிறைவுபெற்றது. அல்லது ஸ்வரூப பூதமான சாந்தியால் எவ்வித விகாரமு மற்றிருத்தலால் நிறைவுபெற்றது. **अमृतम्**= மரணதர்மமற்றது. அதாவது:**मृङ् प्राणत्यागे** என்ற வ்யுத்பத்தியால் பிராணவியோகமானது "மிருதம்" என்று சொல்லப்படுகின்றது. அவ்வித பிராண வியோக ரூபமான மரணமானது ஜீவனுக்குத்தான் ஸம்பவிக்கும். உண்மையில் பிராணஸம்பந்தமற்ற பரப்பிரும்மத்திற்கு ஸம்பவிக்காமை பற்றி அது **अमृतम्** என்று சொல்லப்பட்டது.

இது வரை உபாஸ்யமான பிரும்மத்தினுடைய ஸ்வரூபம், அதை அடைவதற்குரிய மார்க்கம், அதனாலேற்படும் பலன் இவைகள் உபதேசிக்கப்பட்டன. இனி உபாஸனமானது உபதேசிக்கப்படுகின்றது: **इति प्राचीनयोग्योपास्व** । **प्राचीनयोग्य=प्राचीनैः**

பூர்வகாண்டத்திற் சொல்லப்பட்ட நித்யம், நைமித்திகம் முதலிய கர்மங்களால் பிரும் மோபாஸனையில் யோக்யனுகவான ஓ சிஷ்யனே! ( त्वम्=நீ ) इति=முற்கூறியபடி उपास्व=பிரும்மத்தை உபாஸிப்பாயாக.

மாஹாசமஸ்யர் என்ற குருவானவர் நித்யம், நைமித்திகம் முதலிய கர்மங்களால் பாபங்கள் யாவும் விலகி சித்தசுத்தியை யடைந்த சிஷ்யனைப் பார்த்து आकाशशरीरं ब्रह्म முதலியவாக்கியங்களால் உபதேசிக்கப்பட்டபடி பரப்பிரும்மத்தை நீ உபாஸிப்பாயாக என்று உபதேசித்தார்.

அத்வைதமதப்படி ஆருவது அனுவாகம் முற்றிற்று.

(விசி+ம்) அவதாரிகை—இதுவரை அங்கங்கள் உபதேசிக்கப்பட்டன. இனி பாவித்யையானது உபதேசிக்கப்படுகின்றது:—सयएषोऽन्तर्हृदय आकाशः ஹிருதயத்திற்குள்ளிருக்கும் யாதொரு ஆகாசமுண்டோ तस्मिन्नयं पुरुषो मनोमयः—அந்த ஆகாசத்தில் மிக்கப்பரிசுத்தமான மனத்தால் கிரஹிக்கத் தகுந்தவராயும் अमृतः=அஸம்ஸாரியாயும் हिरण्मयः=கமனீய (அழகு பொருந்திய) திருமேனியை யுடையவராயுமிருக்கிற இந்தப் பரம புருஷன்(उपासितव्यः= உபாஸிக்கத் தகுந்தவராகிறார்). இந்த வாக்கியத்தை ஸ்ரீ பாஷ்யகாரர் सर्वत्र प्रसिद्धोपदेशात् (ब्र. सू. अ.१ ,पा २ सू०१) என்ற அதிகரணத்தில் பரமாத்ம பரமாகவே உதாஹரித்திருக்கின்றார். அவ்விதமே வியாஸாசாரியரும் வியாக்யானம் செய்திருக்கிறார். ஆகவே இந்த வாக்கியத்தை ஜீவாத்மபரம் என்று சங்கித்தல் பொருந்தாது.

இனி அர்ச்சிராதி மார்க்க முபதேசிக்கப்படுகின்றது:— तालुके अन्तरेण=நாவுக்கு உள்ளில் स्तनइव=பசுவின் ஸ்தனம்போல எது தொங்குகின்றதோ सा=அது தான் ஹிருதய புண்டரீகம். அது इन्द्रयोनिः= इन्द्रस्य= சமீபத்திற்கிடைக்கக்கூடிய முக்தைசுவர்யத்தை யுடையவனை ஜீவனுக்கு योनिः= வெளிக்கிளம்பும் மார்க்கமாக விருக்கிறது. அல்லது इन्द्रस्य= பரமாத்மாவுக்கு योनिः=இருப்பிட மாயிருக்கிறது. यत्र= எந்தவழியில்केशान्तः= क= பிரும்ம தேவன्ईश=சிவன் இவர்களுக்கு अन्तः= அவதியாக (காரணமாக) வான असौ=இந்தப் பகவான் विवर्तते=விசேஷமாகப் பிரகாசிப்பவரா

கவிருக்கிறார். कश्चित् अग्रणो नाम ईशोऽहं सर्वदेहिनाम् என்ற தால் கேசவ சப்தத்திற்குப் பிரித்துப் பொருள் கூறப்பட்டிருக் கிறது. व्यपोह्य शीर्षकपाले பிராயணகாலத்தில் மண்டை யோடு களைப் பிளந்து கொண்டு भूरिति=பூ: என்பதாக உபாஸிக்கப் பட்ட வியாஹ்ருதியால் अग्नौ=அக்னிலோகத்தில் प्रतितिष्ठति நிலை பெறுகின்றான். அதாவது : பூ: என்ற வியாஹ்ருதியானது அக்னிலோகத்தை யடையும்படி செய்கின்றது என்று பொருள். ஆனால் அர்ச்சிராதி மார்க்கம் வழியாகப் போகின்றவர் யாவர்க் கும் அக்னி லோகத்தை யடைதல் அவசியமுண்டு தானாயினும், பூ: முதலிய வியாஹ்ருதிகளின் உபாஸனா மஹிமையினால் அக்னி லோகத்தில் இவன் கொஞ்ச காலம் நிலை பெறுகிறான் என்று உபதேசிக்கப் பட்டதாகப் பொருள் கொள்ளவேண்டும்.

स्वाराज्यम्=கர்மங்களுக்கு வசப்பட்டவனாக வில்லாதிருத்தலை आप्नोति= அடைகிறான். அதாவது: தனது ஸங்கல்பப்படி உண் டாக்கிக் கொள்ளப்பட்ட ஸர்வேந்திரியங்களையு முடையவன் என்பது பொருள். அல்லது, இந்திரிய நிரபேக்ஷக் ஞானமுள் ளவன் என்று பொருள். (ततः=அதற்குப் பிறகு एतद्भवति=இது உண்டாகின்றது) அது யாதெனில்: आकाशशरीरं ब्रह्म—आ= நாலாபக்கத்திலும் काश=பிரகாசிக்கின்ற शरीरम्=திவ்யசரீரயுக்த மான ब्रह्म=பிரும்மரூபமானது ஆவிர்ப்பவிக்கின்றது. सत्यात्म प्राणारामम्—सत्य=எப்பொழுதும் ஒரே விதமாக இருப்பது பற்றி ஸத்யர்களான आत्म= நித்யமுக்த ஜீவர்களுடைய प्राण= பிரா ணனைப்போல பரமப் பிரேமைக்கு ஆஸ்பத பூதனான பரமாத் மாவை आरामम्=ஸர்வவித போக்ய பூதனாக வுடையவனாகிறான். मनआनन्दम्=ஸங்கல்ப மாத்திரத்தால் சித்திக்கின்ற ஆனந்தத்தை யுடையதும், यं कामं कामयते सोऽस्य संकल्पादेव समुत्तिष्ठति "எந்த விஷயத்தைச் சங்கற்பிக்கின்றானோ அவ்விஷயம் சங்கற்பத்தா லேயே சித்தித்து விடுகின்றது" என்றதால் வேறு சுருதியும் உபதேசிக்கின்றது. மேலும் शान्ति समृद्धम्= அழிவற்ற சாந்தி யுடன் கூடியதும், अमृतम्= அஸம்ஸாரியானது மான பிரும்ம மாயாகிறான் என்று முன்வாக்யத்துடன் சேர்த்துப் பொருள் கொள்ளவேண்டும். इतिप्राचीनयोग्योपास्स्व— இவ்விதம் பிராசீன

யோக்யன் எனப் பெயரிய சிஷ்யனைக் குறித்து குரு உபதேசித்தார் என்று சேர்த்துக் கொள்ளவேண்டும்.

விசிஷ்டாத்வைதமதப் படி ஆறுவது அனுவாகம் முற்றிற்று.

## ஏழாவது அனுவாகம்.

(அத்+ம்) அவதாரிகை—முந்தின 6வது அனுவாகத்தில் வியாஹ்ருதி ரூபமாகப்பிரும்மோபாஸன முபதேசிக்கப்பட்டது. இந்த 7வது அனுவாகத்தில் பிருதிவீ முதலிய ஐந்து பதார்த்தங்கள் ஸ்வரூபமாக பிரும்மோபாஸனம் செய்யும் முறை உபதேசிக்கப் படுகின்றது.

**( मन्त्रः ) पृथिव्यन्तरिक्षं द्यौर्दिशोऽवान्तर दिशाः । अग्नि र्वायु रादि त्यश्चन्द्रमा नक्षत्राणि । आप ओषधयो वनस्पतय आकाश आत्मा। इत्यधिभूतम्। अथाध्यात्मम् । प्राणोव्यानोऽपान उदानस्समानः । चक्षुः श्रोत्रं मनो वाक् त्वक् । चर्म माँसँ स्नावास्थि मज्जा । एतदधिविधाय ऋषिरवोचत् । पाङ्क्तं वा इदँसर्वम् पाङ्क्तेनैव पाङ्क्तँ स्पृणोतीति ॥**

(ப—ரை) **पृथिवी**=பூமி **अन्तरिक्षम्**=ஆகாசம் **द्यौः**=த்யுலோகம் **दिशः**=திக்குகள் **अवान्तर दिशः**=கோணதிக்குகள் **अग्निः**=அக்கினி **वायुः**=வாயு **आदित्यः**=ஸூரியன் **चन्द्रमाः**=சந்திரன் **नक्षत्राणि**=நக்ஷத்திரங்கள் **आपः**=ஜலம் **ओषधयः**=கொடிகள் **वनस्पतयः**=பூவில்லாது பலன் தரக்கூடிய மரங்கள் **आकाशः**=ஆகாசம் **आत्मा**=விராட் புருஷன் ஆகிய **इति**=இவ்விதம் **अधिभूतम्**=பூதச்ப்தத்தால் சொல்லப்படும் பிருதிவீ முதலியவற்றில் செய்யவேண்டிய உபாஸனமாகும். **अथ**=பூதவிஷயமான உபாஸனத்திற்குப் பிறகு **अध्यात्मम्**=சரீரத்திலுள்ளவற்றில் செய்யவேண்டிய உபாஸனம் ( **उच्यते**=சொல்லப்படுகின்றது) **प्राणः**=வெளியிலிருந்து உள் நோக்கிச் செல்லும் வாயு விருத்தியும் **व्यानः**=சரீரம் முழுவதும் நிறைந்து நிற்கும் வாயுவிருத்தியும் **अपानः**= உள்ளிருந்து வெளி நோக்கி வரும் வாயுவிருத்தியும் **उदानः**=ஹிருதயத்திலிருந்து கண்டதேசம் வரையுள்ள வாயுவிருத்தியும் **समानः**=புக்தமான ஆஹாரத்தை

ரக்தமாகச் செய்யும் வாயு விருத்தியும் **चक्षुः**=சக்ஷுரிந்திரியமும் **श्रोत्रम्**=சுரோத்தி ரேந்திரியமும் **मनः**=மனதும் **वाक्**=வாகிந்திரியமும் **त्वक्**=த்வகிந்திரியமும் **चर्म**=தோலும் **मांसम्**=மாம்ஸமும் **स्नावा**=ஸ்நாயுக்களும் **अस्थि**=எலும்பும் **मज्जा**=எலும்பைப்பற்றி நிற்கும் திரவமானஓர்வஸ்துவும் அத்யாத்ம மாகும் **एतत्**=இவைகளை **अधि विधाय**=கற்பித்து **ऋषिः**=வேதமானது, அல்லது ஒரு ருஷியானவர் **इदंसर्वम्**=இந்த முற்கூறியவை யாவும் **पाङ्क्तम्**= ஐந்து வரிசை யுள்ளதாகவே இருக்கின்றது. **पाङ्क्तेनैव**=இங்கு கூறிய ஐந்து வரிசைகளிற் சேர்த்து செய்யப்படும் பிரும்மோபாஸனத்தாலேயே **पाङ्क्तम्**=இந்த 5 வரிசைகள் வடிவமாயிருக்கிற பிரும்மத்தை **स्पृणोति**=அடைகிறான் **इति**=என்று **अवोचत्**=உபதேசித்தது. அல்லது உபதேசித்தார்.

(தா-ம்) வேதத்தில் பங்க்தி என்று ஒரு சந்தஸ் (விருத்தம்) உண்டு. அதில் ஐந்து அக்ஷரங்களடங்கி யிருக்கும். ஆகவே, கர்மகாண்டங்களிலோ பிரும்மகாண்டத்திலோ எந்த விடங்களில் ஐந்து ஐந்து பதார்த்தங்கள் அவசியமாய்ச் சேர்த்தே உபதேசிக்கப்படுமோ அவைகளையும் பங்க்திஎன்ற சந்தஸ் போலுள்ளதென உபதேசிக்கவேண்டி அவ்வைந்து வஸ்துக்களடங்கிய கூட்டங்களை பாங்க்தம் என்று உபதேசிப்பது வேதத்தில் ஆங்காங்கு வழக்கத்திலிருந்து வருகிறது. அம்முறையை யொட்டி(1)பத்தினீ(2)யாகம்செய்யும் யஜமானன்(3)அவனது புத்திரன்(4) தைவ வித்தமென்ற உபாஸனம், (5)மானுஷ வித்தமென்ற பசு முதலியன ஆகிய இவ்வைந்தையும் சேர்த்து **पाङ्क्तम्**= (பாங்க்தம்) என்ற சப்தத்தால் பிருஹதாரண்யகம் முதலிய உபநிடதங்களி லுமுபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அம்முறைப்படி இந்த ஏழாவது அநுவாகத்தில் பிருதிவீ அந்தரிக்ஷம், த்யௌ:, திக்குகள், கோண திக்குகள், ஆகிய இவ்வைந்து வஸ்துக்களடங்கிய இந்தக் கூட்டமானது **पाङ्क्तम्**= (பாங்க்தம்) என்றே சொல்லப்பட்டதாகிறது. இதிலிருந்து இவ்வைந்து வஸ்துக்களடங்கிய கூட்டத்தை பிரும்மமாக உபாஸிக்கவேண்டுமென்று உபதேசித்ததாக யேற்படும். இவ்விதமே அக்னி, வாயு, ஆதித்யன், சந்திரன், நக்ஷத்திரங்கள், ஆகிய இவ்வைந்து

வஸ்துக்களடங்கிய கூட்டமும், ஓஷதி, வனஸ்பதி, ஆகாசம், ஆத்மா என்ற விராட், ஆகிய இவ்வைந்து வஸ்துக்களடங்கிய கூட்டமும் पाङ्क्तम् (பாங்க்தம்) என்றே சொல்லப்படும். இவ்வைந்து பதார்த்தங்க ளடங்கிய ஒவ்வொரு கூட்டத்திலும் பிரும்மபுத்தி செய்தல் வேண்டும் என உபதேசித்ததாக ஏற்பட்டது. மேலும் பிருதிவீ முதல் கோணதிக்கு முடியவுள்ள இந்தும் லோக பாங்க்தம் என்றும் அக்கினி, முதல் நக்ஷத்திரம் முடியவுள்ள ஐந்தும் தேவதா பாங்க்தம் என்றும், ஜலம் முதல் ஆத்மா முடியவுள்ள ஐந்தும் பூதபாங்க்தம் என்றும் சொன்னதாய் பிரித்தறிந்து கொள்ள வேண்டும். மேலும் மந்திரத்தில் इत्यधि भूतम् என்று மூன்றுவதான பூதபாங்க்தத்தை மட்டும் சொல்லியிருந்தபோதிலும் உபலக்ஷணமுறையால் इत्यधिलोकम् என்று अवान्तरदिशः என்றதற்குப்பிறகு கூறியதாகவும், इत्यधिदैवम् என்று नक्षत्राणि என்றதற்குப் பிறகு கூறியதாகவும் சேர்த்துப்பொருள் கொள்ளவேண்டும்.

ஏனெனில் லோகபாங்க்தத்தையும் தேவதாபாங்க்தத்தையும் தனித்தனி கூறியிருப்பதே அதன்காரணமாகும். ஆகவே இங்கு கூறிய பாங்க்தோ பாஸனத்தை बाह्यम्=சரீரத்திற்கு வெளியிலுள்ளதையாச்ரயித்தது என்றும, अध्यात्मम्=சரீரத்திலுள்ளதையாச்ரயித்தது என்று இரண்டுவிதமாகப்பிரித்துக் கொண்டு இதுவரை பிருதிவீமுதல் ஆத்மாமுடியவுள்ள லோக, தேவ, பூத விஷயமான பாங்க்தோபாஸனங்களை பாஹ்யமானபாங்க்தோபாஸனங்களாய் கூறப்பட்டதாகக்கொள்ளல் அவசியமானது.

இனி அத்யாத்ம விஷயமான பாங்க்தோபாஸனம் உபதேசிக்கப்படுகிறது. அவற்றுள் பிராணன் முதல் ஸமானன் முடியவுள்ள ஐந்தும் வாயுபாங்க்தம் என்றும், சக்ஷுஸ் முதல் த்வக் முடியவுள்ள ஐந்தும் இந்திரியபாங்க்தம் என்றும், சர்மம் முதல் மஜ்ஜாமுடியவுள்ள ஐந்தும் தாதுபாங்க்தம் என்றும் பிரித்தறிந்து கொள்ளவேண்டும். ஆகவே சரீரம் முதல் ஆத்மாவென்ற விராடவரையுள்ள ஒவ்வொன்றும் மேற்கூறியவற்றை விடவேறாகயில்லாததுடன் ஒவ்வொன்றும், பங்க்தியென்ற சந்தஸ்போல ஐந்

த்தைந்தாய்ச்சேர்ந்தவைகளாகவே காணப்படுவதிலிருந்து பாங்க்தம் என்றும் சொல்லப்படுகின்றது. ருஷி என்ற வேதமும், அல்லது ஒரு மகருஷியும் இவ்விதமே ஸ்தூலதிருஷ்டிகளான மனிதர்களுக்காகக்கற்பித்து உபதேசித்தது, அல்லது உபதேசித்திருக்கிறார். ஆகவே இதுவரைகூறியபடி பிருதிவீமுதல் மஜ்ஜா முடியவுள்ள ஆதிபௌதிக ஆத்யாத்மிகாதி சகலபதார்த்தங்களை பிரும்மமாக எவன் உபாஸிக்கிறானோ அவன் ஸர்வஜகத்தையும் சரீரமாயுடைய ஹிரண்யகர்ப்ப பாவத்தையடைந்து முடிவில் அவருடன்கூட நிர்விகற்ப முக்தியையும் அடைந்துவிடுகிறான் என்றும் கொள்ளவேண்டும் (எ-று)

வித்யாரண்யதீபிகை— ஆறுவது அநுவாகத்தில் மனோமயத்வம் முதலிய குணங்களுடன் கூடிய பிரும்மோபாஸனம் உபதேசிக்கப்பட்டது. உபாஸ்யமான அந்தப் பிரும்மமானது கண்ணுக்குப் புலப்படக்கூடிய குணங்களற்றிருக்கின்றமையின் அது உத்தமாதிகாரிகளாலேயே அறியத்தக்கதாகவாகும். ஆகவே மந்தாதிகாரியைக்குறித்து கண்ணுக்குப்புலப்படக்கூடிய குணங்களுடன் கூடிய பிரும்மோபாஸனமானது இந்த 7வது அநுவாகத்தால் உபதேசிக்கப் படுகின்றது. அவற்றுள் முதன்முதலில் தனித்தனி ஐந்தைந்து பதார்த்தங்கள் சேர்ந்ததாக மூன்றுவகுப்புக்கள் உபதேசிக்கப்படுகின்றது

**( मन्त्रः ) पृथिव्यन्तरिक्षं......इत्यधिभूतम् ॥**

பிருதிவீ முதலியன லோகபஞ்சகமாகும். அக்கினி முதலியன தேவதாபஞ்சகமாகும். ஆப:என்பது முலியன திரவியபஞ்சகமாகும். இங்குள்ள **आत्मा** என்றபதத்தால் ஸமஷ்டிரூபனை விராட்புருஷன் சொல்லப்படுகிறார், **इत्यधिभूतम्=** இவ்விதம் கூறப்பட்ட இந்த மூன்று பஞ்சகமானது அதிபூதம் எனப்படும். எந்த வகுப்பில் தனித்தனி ஐந்து வஸ்துக்களடங்கியிருக்கின்றனவோ அந்தவகுப்பை பஞ்சகம் என்று சொல்வது வழக்கம். "நான்" என்ற அறிவிற்றோற்றத்தை யடைகின்ற பின்னர் கூறப்படும் பிராணன் முதலியவற்றைவிட வேறானவைகளும், 'இது, 'இது, என்ற தோற்றத்தில் புலப்படக்கூடியதுமான பிருதிவீ முதலிய

பூதங்களை ஆச்ரயித்திருப்பது எதுவோ அது அதிபூதம் எனப் படும். அதாவது:- பிருதிவீ முதலிய பூதவிஷயமான உபாஸனம் உபதேசிக்கப்பட்டதென்பது பொருள்.

**( मन्त्रः ) अथाध्यात्मम् ।......मज्जा ॥**

பூதவிஷயமான உபாஸனத்தை உபதேசித்தபிறகு ஆத்மவிஷயமான உபாஸனமுபதேசிக்கப்படுகின்றது. அதாவது: தேஹம், இந்திரியம் முதலிய எந்த ஸங்காத (கூட்ட)த்தில் சாஸ்திர ஸம்ஸ்கார மில்லாத ஸாமான்யஜனங்களுக்கு 'நான்' என்ற தோற்றமுண்டாகுமோ அந்தத்தேஹேந்திரியஸங்காத (கூட்ட) மானது லோகப்பிரசித்தமான ஆத்மாவாகும். ஆகவே அத்தகையதேஹேந்திரியக்கூட்டத்தை ஆச்ரயித்து விதிக்கப்படும் உபாஸனமும் அத்யாத்மோபாஸனமாகும். தேஹத்திற்குள்ளிருக்கும் வாயு ஒன்றாயிருந்தபோதிலும் அதன் காரியபேதத்தை யொட்டி **प्राणः, व्यानः, अपानः, उदानः, समानः** எனத் தனித்தனி உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே பிராணன் முதலியவற்றால் வாயுப்பஞ்சகமும், சக்ஷுஸ் முதலியவற்றால் இந்திரியபஞ்சகமும், சர்மம் முதலியவற்றால் தாது பஞ்சகமும் சொல்லப்பட்டது. ஆகவே அதிபூதம், அத்யாத்மம் என்றதால் சொல்லப்பட்ட 5 பஞ்சகங்களாலும் பிரும்மத்தில் அத்யஸ்தமான சகலப்பிரபஞ்சமும் கூறப்பட்டதாயாகி விட்டது. ஆகவே இத்தகைய ஜகத்ரூபத்துடன் கூடியதாக பிரும்மத்தை உபாஸிக்கவேண்டுமென்று ஏற்பட்டது.

**(मन्त्रः) एतदधिविधाय......स्पृणोति ॥**

அதீந்திரியமான (இந்திரியங்களுக்குப் புலப்படாத) சாஸ்திரார்த்தத்தை நேரில் கண்ட ஒரு மஹருஷியானவர் பிருதிவீ அந்தரிக்ஷம் முதலிய முற்கூறியஸ்வரூபம் வாய்ந்த பிரும்மத்தை நேரில் உபாஸனபலத்தாலறிந்து ஸ்வானுபவத்தால் ஸர்வாத்மக மான விராட்ரூபத்தை யடைந்து தனது அநுபவத்திற்கண்ட பொருளை சிஷ்யர்களுக்கு உபதேசித்திருக்கிறார் எனச் சொன்னாரென்பது பின்னருள்ள **इदंसर्वं** என்ற வாக்கியத்தால் வெளியாகின்றது. அதாவது:—பிரத்யக்ஷாதிப் பிரமாணங்களாலறியப்

படும் எல்லா ஜகத்தும் விராட் ரூபமாயிருப்பதுடன் பங்க்தி என்ற சந்தஸ்ஸின் சம்பந்தமுள்ளதாகவுமாகிறது. என்பது வை= பிரசித்தமானதே. அதாவது; பங்க்திச்சந்தஸ்ஸானது पञ्चाक्षरा पङ्क्तिः என்ற சுருதிப்படி ஐந்து எண்ணுள்ளதாகவாகிறது அவ் விதமே ஜகத்தும் ஐந்து எண்ணுடன் கூடியதாக விருக்கிறது. பஞ்சீகிருத பஞ்சமஹாபூதங்களும், அதன் காரியமும் ஆகிய யாவும் விராட் என்றே சம்பிரதாயமறிந்தவர்கள் சொல்லுகின்ற னர். அதிலிருந்து ஜகத்திற்கு பங்க்திச் சந்தஸ்ஸோடுகூட ஸாதிருச்யரூபமான சம்பந்தமிருப்பது தெளிவாகிறது. அத் தகைய பாங்க்த உபாஸனத்தாலேயே பாங்க்தமான விராட்டை உபாஸகர்களடைந்து விடுகின்றனர், இவ்விதம் கூறிய அர்த்த வாதத்தினின்றும் பங்க்திரூபமான விராட்டை யடைய விருப்ப முள்ளவன் இவ்விதம் உபாஸிக்கவேண்டும் என உபாஸனவிதி யைக் கற்பித்துக்கொள்ளவேண்டும். விராட்பிராப்தி யுண்டான தும் தத்துவக்ஞான முண்டாகி கிரமமுக்தியை யடைகிறான் என்றும் சேர்த்துக் கொள்ளவேண்டும்.

அத்வைதமதப்படி ஏழாவது அனுவாகம் முற்றிற்று.

(விசி×ம்) (मन्त्रः) पृथिव्यन्तरिक्षम्......मज्जा ॥

(1) பிருதிவீ முதலிய பஞ்சகம் (2) அக்னி முதலிய பஞ் சகம் (3) அப்பு முதலிய பஞ்சகம் ஆகிய மூன்றும் அதிபூதத் தில் மூன்று பஞ்சகங்களாகின்றன. (1) பிராண பஞ்சகம் (2) சக்ஷுராதி பஞ்சகம் (3) சர்மாதி பஞ்சகம் ஆகிய மூன்றும் அத்யாத்மத்தில் மூன்று பஞ்சகங்களாகின்றன. ஆகவே இவ் விரண்டும் சேர்ந்து ஆறு பஞ்சகங்களாகின்றன. पञ्चाक्षरापङ्क्तिः என்ற சுருதியை யொட்டி ஐந்து என்ற எண்ணுடன் கூடியிருப் பதுபற்றி இவ்வாறு பஞ்சகங்களும் பாங்க்தங்களென்றேற்படு கின்றது.

**விசிஷ்டாத்வைதமதப்படி ஏழாவது அனுவாகம் முற்றிற்று.**

## எட்டாவது அனுவாகம்.

(அத்+ம்) அவதாரிகை—வியாஹ்ருதிரூபமான பிரும்மத்தின் உபாஸனம் 6-வது அனுவர்கத்திலும், பாங்க்தரூபமான உபாஸனம் 7-வது அனுவாகத்திலும் சொல்லப்பட்டது. பிறகு இந்த 8-வது அனுவாகத்தால் எல்லா உபாஸனத்திற்கும் அங்க பூதமானப் பிரணவத்தின் உபாஸனம் விதிக்கப்படுகின்றது. நிற்குணப் பிரும்ம ரூபமாகவும், சகுணப் பிரும்ம ரூபமாகவும் உபாஸிக்கப் படும் பிரணவமானது, கேவலம் சப்த ரூபமாயிருந்த போதிலும் நிர்க்குண சகுணப்பிரும்மப்பிராப்திக்குச் சாதனமாக ஆகின்றது. அந்தப்பிரணவமானது விஷ்ணுவுக்குப் பிரதிமைபோல நிர்க்குண ஸகுணப் பிரும்மங்களுக்கு ஆலம்பனமாகின்றதென்பது வெளிப் படை. एतेनैवाऽयतनेन एकतरमन्वेति இந்தப் பிரணவமாகிற ஆலம்பனத்தாலேயே நிற்குணப் பிரும்மம், ஸகுணப்பிரும்மம் ஆகிய இவ்விரண்டுள் ஒன்றை நிச்சயமா யடைகிறான். என்று உபநிடதம் கூறுகிறது. ஆனது பற்றியே பிரணவோபாஸனம் செய்தலவசிய மென்பதை இதனு லுபதேசிக்கின்றது.

(मन्त्रः) ओमिति ब्रह्म । ओमितीदꣳसर्वम् । ओमित्ये तदनुकृति ह स्मवा अप्योश्रावयेत्याश्रावयन्ति । ओमिति सामानि गायन्ति । ओꣳशोमिति शस्त्राणि शꣳसन्ति । ओमित्यध्वर्युः प्रतिगरं प्रतिगृणाति । ओमिति ब्रह्मा प्रसौति । ओमित्यग्निहोत्रमनुजानाति । ओमिति ब्राह्मणः प्रवक्ष्यन्नाह ब्रह्मोपाप्नवानीति। ब्रह्मैवोपाप्नोति ॥

(பதவுரை) ओमिति=ஓம் என்ற சப்தஸ்வரூபத்தை ब्रह्म=பிரும்மமென்று (मनसा ध्यायेत्=மனத்தால் தியானம் செய்தல் வேண்டும்) इदꣳसर्वम्= இந்தச்சப்த ஸ்வரூபம் யாவும் ओमिति ஓங்காரத்தாலேயே நிறையப் பெற்றிருக்கிறது, ओमित्येतत्=ஓம் என்ற இந்த சப்தமானது अनुकृतिः=அனுகரித்தல் ரூபமானது इति=என்பது ह स्मवै=மிக்க பிரசித்தமானது அல்லது ओश्रावय=ஓ! ஆக்னீத்ரன் என்ற ருத்விக்கே! நீ தேவர்களைக் குறித்து ஹவிஸ்ஸைக் கொடு

க்கும் ஸமயத்தைத் தெரிவிப்பாயாக. इति=என்று சொல்லப்படும் ओश्रावय என்ற மந்திரத்திலுள்ள ओंकार மானது ओमित्येतद्-नुकृति=ஓம் என்ற ஓங்காரத்திற்குச் சமமாகவே உள்ளது. (ओमिति) आश्रावयन्ति=அத்வர்யுக்களும் ஓம் என்ற ஓங்காரத்தாலேயே பிரதித்வனி செய்கின்றனர். सामानि= ஸாமவேதங்களை ओमिति=ஓம் என்று தொடங்கி गायन्ति= கானம் செய்கின்றனர். ருக்வேதிகளான ஹோதாக்கள் சஸ்திரம் சொல்லும்பொழுது ओंशोमिति= ओंशोम् என்று சப்தோச்சாரணம் செய்தே शस्त्राणि= சஸ்திரங்களை शंसन्ति=சொல்லுகின்றனர். अध्वर्युः= யஜுர்வேதியான ருத்விக்கானவன் ओमिति=ஓம் என்பதாய் प्रतिगरम्=ஹோதா என்ற ருத்விக்குக்கு ஊக்கத்தை யுண்டுபண்ணும் சப்தத்தை प्रतिगृणाति=சொல்லுகிறான். ब्रह्मा=பிரும்மா என்ற பிரதான ருத்விக்கானவர் ओमिति=ஓம் என்றதாய் प्रसौति=அநுமதிவசனத்தைச் சொல்லுகிறார். अग्निहोत्रम्= அக்கினிஹோத்திரம் என்ற கர்மத்தை ओमिति=ஓம் என்ற சப்தத்தைச் சொல்லியே अनुजानाति=செய்யும்படி அநுமதியளிக்கிறான். ब्रह्म= வேதத்தை उपाप्नवानि=அடைவேன் என்று கருதி प्रवक्ष्यन्=அத்யயனம் செய்யத்தொடங்கும் ब्राह्मणः=பிராம்மணன் ओमित्याह=ஓங்காரத்தைச் சொல்லியே தொடங்குகிறான், அல்லது—ब्रह्म=பரமாத்மாவை उपाप्नवानीति=அடைவேனாக என்று प्रवक्ष्यन्=சங்கற்பித்துக்கொண்ட ब्राह्मणः=பிரும்மவித்தானவன் ओमित्याह=ஓம் என்ற பிரணவத்தைச் சொல்லுகிறான். ब्रह्मैव=வேதத்தையே, அல்லது பரமாத்மாவையே उपाप्नोति=அடைந்து விடுகிறான்.

(தா—ம்) ஓங்காரோச்சாரணத்தை முன்னிட்டுத்தொடங்கப்படும் கார்யங்களுக்கு நிச்சயமாகப் பலனுண்டாவதைக் காணுவதால் அத்தகைய மஹிமை வாய்ந்த ஓங்காரத்தை பிரும்மமாக உபாஸிக்கவேண்டுவது அவசியமானது.

அத்வைதமதப்படி எட்டாவது அநுவாகம் முற்றிற்று.

(விசி×ம்) அவதாரிகை—உபாஸிப்பதற்குவேண்டிப் பிரணவம் ஸ்துதிக்கப் படுகின்றது.

**( मन्त्रः ) ओमिति ब्रह्म......ब्रह्मैवोपाप्नोति ॥**

**ओमितिब्रह्म**=பிரும்மத்திற்குப் பிரதீகமாகையாலும், பிரும்மத் தியானத்திற்குச் சாதனமாயிருப்பதாலும் பிரணவமானது பிரும்மமே. **ओमितीदं सर्वम्**=பிரணவமானது பிரும்மாத்மகமாயிருப்பதாலேயே ஸர்வாத்மகமாகவுமாகிறது. **ओमित्येदनुकृति ह्स्मवा अपि**=விதி நிஷேத வடிவமான ஸர்வத்திற்கும் ஓம் என்பதாக ஒரேவிதமான சப்தோச்சாரணமே பொருத்தமாகிறது **ह्स्मवा**=என்பது அநுபவப்பிரசித்தமானதே. **ओमिति सामानि**=ஓம் என்று தொடங்கியே உத்காதாக்களான ஸாமவேதிகள் ஸாமங்களை **गायन्ति**=கானம் செய்கின்றனர். **ओंशोमिति शास्त्राणि शंसन्ति**=ஹோதாக்களென்ற ருத்விக்குகள் ஓம் என்று தொடங்கியே சஸ்திரங்களைச் சொல்லுகின்றனர். **ओमित्यध्वर्युः प्रतिगरं प्रतिगृणाति**= ஹோதாவானவன் சஸ்திரம் சொல்லும் பொழுது அத்வர்யுவானவன் ஒவ்வொரு ருக்கு தோறும் ஓம் என்றே அதை ஆமோதிக்கிறான். **ओमिति ब्रह्मा प्रसौति**=ஓம் என்றதாலேயே பிரும்மா என்ற பிரதான ருத்விக்கானவன் அனுக்ஞை தருகிறான். **ओमिति ब्राह्मणः प्रवक्ष्यन्नाह ब्रह्मोपाप्नवानीति**—வேதத்தை யடைவேனாக என்று அநுஸந்தானம் செய்து கொண்டு அத்யயனம் செய்யப்போகும் பிராம்மணன் ஓம் என்று சொல்லுகிறான். **ब्रह्मैवोपाप्नोति**= அவ்விதமே வேதத்தை அடைந்தும் விடுகிறான். என்பது அனுபவத்திற் கண்டவிஷயமே என்று பொருள்.

விசிஷ்டாத்வைதமதப்படி எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

## ஒன்பதாவது அனுவாகம்.

(அத்+ம்) அவதாரிகை—விக்ஞானத்தாலேயே ஸ்வாராஜ்யம் என்ற மோக்ஷத்தையடைகிறான் என்று கூறியதிலிருந்து க்ஞானமானது மோக்ஷத்திற்குச் சாதனமானது என்று ஏற்படுவதினின்றும் சிரௌத ஸ்மார்த்த கர்மங்கள் தேவையானதன்று என்றேற்பட்டு அக்கர்மங்களை யநுஷ்டிப்பது அநாவசியமானதென்றேற்படக்கூடும் எனவெண்ணி சிரௌதஸ்மார்த்த கர்மங்களிலேற்படும் அநாதரவைப் போக்கி அவற்றிலாதரவை யுண்டு பண்ணுவதற்காகவும், அக்கர்மங்கள் புருஷார்த்தமான மோக்ஷத்

திற்குச் சாதனமானவைகள் என்பதைக் காட்டவேண்டியும் இந்த ஒன்பதாவது அநுவாகம் தொடங்கப்படுகிறது.

( मन्त्रः ) ऋतञ्च स्वाध्यायप्रवचने च । सत्यं च स्वाध्यायप्रवचने च। तपश्च स्वाध्यायप्रवचने च। दमश्च स्वाध्यायप्रवचने च। शमश्च स्वाध्यायप्रवचने च। अग्नयश्च स्वाध्यायप्रवचनेच । अग्निहोत्रं च स्वाध्यायप्रवचने च। अतिथयश्च स्वाध्यायप्रवचने च । मानुषं चस्वाध्यायप्रवचने च । प्रजाच स्वाध्यायप्रवचने च। प्रजनश्च स्वाध्यायप्रवचने च । प्रजातिश्च स्वाध्यायप्रवचने च । सत्यमिति सत्यवचा राथीतरः । तप इति तपोनित्यः पौरुशिष्टिः। स्वाध्यायप्रवचने एवेति नाको मौद्गल्यः । तद्धि तपस्तद्धितपः ॥

(ப—ரை) **ऋतंच**=சாஸ்திர மூலம் இது இவ்விதமெனநிச்சயிக்கப்பட்ட தர்சம் முதலிய கர்மஸமூஹத்தையும், **स्वाध्याय प्रवचनेच=स्वाध्याय**=வேதாத்யயனத்தையும் **प्रवचनेच**=பிறர்க்குச் சொல்லிவைத்தல், அல்லது பிரும்மயஜ்ஞம் இவற்றையும் (**अनुतिष्ठत्**=அநுஷ்டித்தல்வேண்டும்) **सत्यंच**=ஸத்யவசனத்தையும், அல்லது சாஸ்திரத்தைக் கொண்டு நிச்சயித்தறிந்தபடி வாக்கினாலும், சரீரத்தினாலும் அநுஷ்டித்தலையும் **स्वाध्यायप्रवचनेच**= ஸ்வாத்யாயப் பிரவசனங்களையும் செய்யவேண்டும். **तपश्च**=கிருச்ரம் முதலிய விரதத்தையும் **दमः**=வெளியிலுள்ள இந்திரிய ஜயத்தையும் **शमः**, **च** அந்தக்கரணஜயத்தையும் செய்யவேண்டும். **अग्नयः**, **च**=அக்கினிகளும் ஆதானம் செய்யத்தக்கன. **अग्निहोत्रंच**=ஹோமத்தையும் செய்யவேண்டும். **अतिथयश्च**=போஜன ஸமயத்தில் வந்த விருந்தாளிகளும் பூஜிக்கத்தக்கனர். **मानुषंच**=விவாஹாதிகளில் பந்து முதலியோரை உபசரித்தல் முதலிய லௌகிக கார்யத்தையும் செய்தல்வேண்டும். **प्रजाच**=பிரஜோத்பத்திக்கு வேண்டிய புத்திர காமேஷ்டி முதலியவற்றைச் செய்தலும் வேண்டும். **प्रजनश्च**=ருதுகாலத்தில் பார்யா கமனம் செய்தலும் வேண்டும்.

**प्रजातिश्च**=புத்திரனுக்கு விவாஹம் செய்வித்தல் முதலியனவும் தகும். **सत्यवचाः**=உண்மையான வார்த்தையை யுடையவரான அல்லது ஸத்யவசஸ் என்று பெயருள்ள**राथीतरः**= ரதீதர கோத்திரத்திற் பிறந்த ஆசாரியர்**सत्यमिति**=ஸத்யமே அனுஷ்டிக்கத்ததென்று எண்ணுகிறார் அதாவது: சாஸ்திர மூலமறிந்தபடி கர்மங்களை யனுஷ்டித்தல் வேண்டும் என்பதாம்.**तपोनित्यः**=தவத்திலேயே பிரவிருத்தித்த, அல்லது தபோநித்யர் என்று பெயருள்ள **पौरुशिष्टिः**=புருசிஷ்டி என்ற ஆசாரியரின் புத்திரர் **तपइति**= கிருச்சிரம், சாந்திராயணம் மிதாஹாரம் செய்தல், பொருளுதவி செய்தல் முதலிய தவத்தையே செய்யவேண்டும் என்று எண்ணுகிறார் **स्वाध्यायप्रवचने एवेति**= ஸ்வாத்யாயம் பிரவசனம் ஆகிய இவ்விரண்டையுமே செய்தல் வேண்டுமென **मौद्गल्यः**=முத்கலருடைய அபத்யமான**नाकः**= நாகரென்ற மஹருஷி எண்ணுகிறார் ஏனெனில்-**तद्धि तपः**, **तद्धि तपः**= அந்தஸ்வாத்யாயப் பிரவசனங்களன்றோ தவமாகும், அவைகளன்றோ தவமாகும் என்கிறார்.

(தா—ம்)இந்த ஒன்பதாவது அனுவாகத்தில்**ऋतं च स्वाध्यायप्रवचने च** என்று தொடங்கி **प्रजातिश्च स्वाध्यायप्रवचने च** என்றது முடிய (1) ருதம் (2) ஸத்யம் (3), தபஸ் (4) தமம் (5) சமம் (6) அக்கினி (7) அக்கினிஹோத்திரம் (8) அதிதி (9) மானுஷம் (10) பிரஜா (11) பிரஜனனம் (12) பிரஜாதி ஆகிய 12 கார்யங்களைச் செய்யவேண்டுவது அவசியமானது என்று உபதேசித்தவிடத்தில் ருதம் முதலிய ஒவ்வொருகாரியத்துடனும் வேதம் ஓதல், ஓதுவித்தல், அல்லது பிரும்மயக்ஞம் இவற்றைச் செய்யவேண்டும் என்று சேர்த்துச் சேர்த்து உபதேசிக்கப் பட்டிருக்கிறது. அதன் கருத்து யாதெனின் கூறுவாம். இங்கு கூறிய 12 காரியங்களுள் எதைச்செய்த போதிலும் ஸ்வாத்யாயம், பிரவசனம் என்ற இவ்விரண்டையும் தவறாது அனுஷ்டிக்க வேண்டும் என்பதைக் காட்டவே அவ்விதம் சேர்த்து உபதேசிக்கப் பட்டது. மேலும் வேதாத்யயனமூலமே அர்த்தக்ஞான முண்டாக வேண்டியிருக்கிறது. பிரவசனமோ மறவாதிருப்பதற்கு வேண்டியும், தர்மவிருத்திக்கு வேண்டியும் அவசியமாகி விடுகிறது. ஆகவே இவ்விரண்டினும் மிக்க ஆதரவு காட்டல் வேண்டும் என்பதற்காக

அடிக்கடி स्वाध्यायप्रवचने என்று உபதேசித்திருப்பதாகக் கொள்ள வேண்டும்.

அத்வைதமதப்படி ஒன்பதாவது அனுவாகம் முற்றிற்று.

(விசிஷ்டம்) அவதாரிகை—இந்த அனுவாகமானது பிரும்ம வித்யைக்கு அங்கமாக அனுஷ்டிக்க வேண்டிய கர்மத்தை உபதேசிக்கிறது.

(मन्त्रः) ऋतं च स्वाध्याय......तद्धि तपः ॥

ऋतम्=பிரியவார்த்தைபேசுதல் स्वाध्यायः= வேதாத்யயனம் प्रवचनम्= வேதாத்யாபனம். ஆகிய இவைகளை அனுஷ்டிக்க வேண்டும் என்று கருத்து सत्यम्= ஸமமான தர்சனம் तपः= சரீர சோஷணம் செய்தல் दमः=வெளியிலுள்ள இந்திரியங்களையடக்கல் अग्नयः=கார்ஹபத்யம் முதலிய அக்கினிகள் अग्निहोत्रम्= அக்கினி சாத்யமான அக்கினிஹோத்திரம் முதலிய நித்தியகர்மங்கள் मानुषम्=இறந்து போனவர்களைக் குறித்து செய்யப்படும் சிராத்தம் முதலியன, அல்லது

नृणामयं परो धर्मः सर्वेषां समुदाहृतः ।
त्रिंशल्लक्षणवान् साक्षात् सर्वात्मा येन तुष्यति ॥

என்றபடி பகவானுடைய பிரீதிஹேதுவான பகவதாராதனம், प्रजनः= ருதுகாலத்தில் ஸ்வபார்யா கமனம். प्रजातिः=அதிகமாக பௌத்திராதிகளினுத்பத்தி सत्यवचाः ஸத்யத்தைச் சொல்லுகிறவரும் राथीतरः=ரதீதருடைய பிள்ளையுமான ராதீதரன் என்றமஹருஷி सत्यमिति= உண்மைபேசலொன்றே முக்கியமானதென்றும், ஸ்வாத்யாயம், பிரவசனம் இவ்விரண்டும் முக்கியமானதல்லவென்றும் எண்ணுகிறார் पौरुशिष्टिः=பௌருசிஷ்டி எனப் பெயரிய तपोनित्यः= தவத்திலேயே முக்கியநோக்கங் கொண்ட மஹருஷியானவர் तपइति தவம் ஒன்றுதான் பிரதானம் என்றும் ஸ்வாத்யாயம் பிரவசனம் இவைகள் முக்கியமல்லவென்றும் எண்ணுகிறார் नाको-मौद्गल्यः= முத்கலருடைய புத்திரரான நாகரென்ற மஹருஷியானவர் ஸ்வாத்யாயம், பிரவசனம் என்ற இவ்விரண்டுந்தான் முக்கியமான தவம் என்று எண்ணுகிறார்.

விசிஷ்டாத்வைதமதப்படி ஒன்பதாவது அனுவாகம் முற்று.

## பத்தாவது அநுவாகம்

(அத்+ம்)அவதாரிகை—**अहंवृक्षस्य रेरिवा** என்ற மந்திரமானது ஜபிப்பதற்கு வேண்டிப்படிக்கப் படுகின்றது.

**(मन्त्रः) अहं वृक्षस्य रेरिवा । कीर्तिः पृष्ठं गिरेरिव । ऊर्ध्वप-वित्रो वाजिनीव स्वमृतमस्मि । द्रविणꣳसवर्चसम् । सुमेधा अमृतोक्षितः । इति त्रिशङ्कोर्वेदानुवचनम् ॥**

(ப—ரை) **अहम्**=பிரும்மதத்துவ சாக்ஷாத்காரத்தையடைந்த
நான் **वृक्षस्य**= நாசமாக்கக்கூடிய நிலையிலுள்ள ஸம்ஸாரவிருக்ஷத்
திற்கு அந்தர்யாமியாயிருப்பதால் பிரேரகனுகிறேன். **कीर्तिः**=எனது
கீர்த்தியானது **गिरेः**= மஹாமேருவினுடைய **पृष्ठमिव**= கொடிமுடி
போல (**उच्छ्रिता**=உயர்ந்திருக்கின்றது.) **ऊर्ध्व पवित्रः—ऊर्ध्वं**= உயர்
ந்ததும், அதாவது: உண்மையில் ஸம்ஸாரஸம்பந்தமற்றவனும் **पवि**
**त्रम्**=பரிசுத்தமானவனுமான, அதாவது: அவித்யா முதலியவற்றின்
ஸம்பந்தமற்றவனுமான நான் **वाजिनीव**= ஸூரியனிடத்துள்ளது
போன்ற **स्वमृतम्**=சுத்தப்பிரும்மமாக **अस्मि**=இருக்கின்றேன். **सवर्च-**
**सम्**=மேலான காந்தியுள்ள **द्रविणम्**= தனமான (**तदेव**=அந்த தத்துவ
மாகவே **अस्मि**=இருக்கிறேன். அல்லது **द्रविणम्**=மோக்ஷசுகத்தைத்
தரும் தனமான **सवर्चसम्**= மிக்கஒளிபொருந்திய பிரும்மக் ஞான
மானது (**मयाप्राप्तम्**= என்னாலடையப்பட்டது) **सुमेधाः**=ஸர்வக்ஞ
லக்ஷணமான மேதையையுடையவனுகவும் (**अतएव**= ஆனது
பற்றியே) **अमृतः**= மரணமற்றவனுகவும் **अक्षितः**= நாச மற்றவனு
கவும், அல்லது ஆயுதங்களால் செய்யப்பட்ட எவ்விதகெடுதலு
மற்றவனுகவும் (**अस्मि**=இருக்கின்றேன்) **इति**= இவ்விதம் **त्रिशङ्कोः**
த்ரிசங்கு என்ற பிரும்மக் ஞானியான மஹருஷியினுடைய **वेदा**
**नुवचनम्**= ஆத்மக் ஞானத்தினுடையப் பிராப்தியேற்பட்ட பிறகு
ள்ள உபதேசமாகும்

(தா—ம்) இந்த மந்திரமானது ஜபத்திற்காகவேண்டி இந்தப்
பிரகரணத்தில் படிக்கப்பட்டிருக்கிறது. இந்த மந்திர ஜபத்தால்
சித்தசுத்திவாயிலாக ஆத்மக்ஞான முண்டாகக்கூடுமென்றே
கொள்ளல்வேண்டும். வித்யாப்ரகரணத்தில் படிக்கப்பட்டிருப்

பதைக்கொண்டும், வேறு பொருள்கொள்ள இடமில்லாதிருப்பதைக்கொண்டும் மேற்கூறியபடி பொருள்கொள்ளப்பட்டது. மேலும் பரப்பிரும்ம சாக்ஷாத்கார்ரத்தையடைந்த த்ரிசங்கு என்ற மஹருஷியானவர் கர்ப்பத்திலிருக்கும் பொழுதே ஆத்மதத்துவ சாக்ஷாத்காரத்தையடைந்தவாமதேவர் என்ற மஹருஷியானவர் போல தான் அடையவேண்டியவை யாவையும் அடைந்து விட்டபடியால் கிருதகிருத்யனுகி விட்டேன் என்று தனது அனுபவத்தை வெளிப்படுத்துவதற்குவேண்டி தனது தபோமஹிமையால் கண்டுபிடித்த இம்மந்திரத்தை லோகக்ஷேமார்த்தம் வெளியிட்டிருக்கிறார். **ऋतं चस्वाध्याय प्रवचनेच** என்றதால் கர்மங்களையுபதேசித்தபின்னர் இம்மந்திரத்தைப்படித்திருப்பதிலிருந்து சாஸ்திர விஹிதமானசிரௌத ஸ்மார்த்த தர்மங்களைத் தவறுது செய்துவருபவனும், நிஷ்காமனும், பரமாத்ம தத்துவஸாக்ஷாத்காரத்தை யடைய விருப்பமுள்ளவனுமான உத்தமாதிகாரிக்கு ஆத்மா முதலியவற்றைப் பற்றிய ஆர்ஷக்ஞானமானது இயற்கையிலுண்டாகக் கூடும் என்பது நன்கு வெளியாகின்றது.

வித்யாரண்யதீபிகை.—(அ—கை) ஒன்பதாவது அனுவாகத்தில் பிரும்மோபாஸனத்துடன் சிரௌத ஸ்மார்த்த கர்மங்களும் சேர்த்து உபதேசிக்கப்பட்டன. அவற்றுடன் பிரும்மயக்ஞமே மேலான தவமாகும் என்று முபதேசிக்கப்பட்டது. ஆயினும் எவ்வித சிரத்தையுள்ளவனுயினும் அறிவின் குறைவால் நேர்ந்த தோஷத்தால் வேதபாடமில்லாமைபற்றி பிரும்மயக்ஞத்தில் சமர்த்தனுவதற்கிடமில்லாவனுகவா கூடும். ஆகவே அவ்விதம் குறைந்த அறிவுள்ளவனுக்கும் பிரும்மயக்ஞ பலன் சித்திப்பதற்கு வேண்டி ஜபிக்கவேண்டிய மந்திரமானது இந்த 10வது அனுவாகத்தில் படிக்கப்படுகிறது.

**( मन्त्र: ) अहं वृक्षस्य......वेदानुवचनम् ॥**

**वृक्षस्य=**தத்துவக்ஞானத்தால் நாசம் செய்யப்படுவது பற்றி ஸம்ஸாரமானது விருக்ஷமாகிறது. ஆகவே அத்தகைய ஸம்ஸாரமாகிய விருக்ஷத்திற்கு **अहम्=** முமுக்ஷுவானநான் **रेरिवा=** விஷய் வைராக்கியமாகிற கத்தியால்வெட்டுகின்றவனுக (**भूयासम्=**

ஆவேனாக) மேலும் ஸம்ஸாரவிருக்ஷமானது என்னால் வெட்டப் பட்டதாயானவுடன் என்னுடைய कीर्तिः=மோக்ஷவிஷயமான கீர்த்தியானது गिरेःपृष्ठमिव=மிக்க உயர்ந்த மலையின் நுனி யானதுபோல தேவலோகங்களிலும் பரவுகின்றது. ஆனதுபற் றித் தேவர்களுங்கூட எனது புருஷார்த்தத்தைக் கெடுக்கச் சக்தியற்றவர்களாகின்றனர். மேலும் वाजिनि=மிக்க வேகமாகச் செல்லுகின்ற சூரியனிடத்திலுள்ள स्वमृतम्=மிக்கச் சோபன மான அமிருதம் போல (अहम्=நான்) ऊर्ध्वपवित्रः=மிக்க வுயர்ந்த பரிசுத்தியை யுடையவனாக अस्मि=கிறேன். அத்தகைய எனக்கு सवर्चसम्=காந்தியுடன் கூடின தனமானது (सिध्यतु= உண்டாக ட்டும்) மானுஷவித்த மென்றும், தைவவித்த மென்றும் தனமா னது இரண்டு வகைப்படும். அவற்றுள் கண்ணால் காணக்கூடிய ஸ்வர்ணம், வெள்ளி முதலியன மானுஷவித்தமாகும். காதால் கேட்கப்படுவதும் வேதசாஸ்திரங்களாலறியப்படுவதுமான பிரு ம்மயக்ஞம் முதலியன தைவவித்தமாகும். இவ்விதமே பிருஹதா ரண்ய கோபநிடதத்திலும் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே அவ் விரண்டு வித்தங்களுள் இங்குள்ள सवर्चसम्=என்றதால் தைவ வித்தமானது பிறித்துக் கூறப்பட்டதெனக் கொள்ளல் வேண் டும். सुमेधाः=அழகிய மேதையுள்ளவனாகவும், அதாவது: பிரும்ம க்ஞானத்தை யுபதேசிக்கும் சாஸ்திரார்த்தங்களை மனத்தில் தரிக்கும் சக்தியுள்ளவனாகவும், अमृतोक्षितः=பிரும்மானந்தரஸத் தால் நனைக்கப்பட்டவனாகவும் ஆவேனாக, इति=என்பனவற்றை யுபதேசிக்கும் இம்மந்திரமானது त्रिशङ्कोः திரிசங்கு வெனப் பெயரிய மகருஷியினுடைய वेदानुवचनम्=குருவை யாசிரயித்து செய்யப்படும் வேதாத்தியயனத்திற்குப்பிறகு செய்யப்படும் பிரும் மயக்ஞரூபமான தவத்தைக் குறிக்கின்றதாகவாகும் (எ—று)

அத்வைதமதப்படி பத்தாவது அனுவாகம் முற்றிற்று.

(வி+ம்) அ—கை) வித்யாங்கமாக ஜபிக்கவேண்டிய மந்திர மானது இந்த 10வது அனுவாகத்தில் படிக்கப்படுகின்றது.

( मन्त्रः ) अहं वृक्षस्य.........वेदानुवचनम् ॥

(ப—ரை) अहम्=நான் वृक्षस्य=விருக்ஷம்போல் நாசம் செய்யத் தகுந்த அஹங்காரம் முதலியவற்றிற்கு रेरिवा=நாசகனுகவும், அதாவது: தேஹாபிமான மற்றவனுகவும், गिरेःपृष्ठमिव=மேரு முதலியமலையின் மேல்பாகம்போல कीर्तिः=கீர்த்தியுள்ளவனுகவுமிருக்கிறேன். ऊर्ध्वपवित्रः=எல்லாவற்றிற்கும் மேலான பரிசுத்தியுள்ளவனுகி वाजिनि=போக்தாவும், ஸர்வசேஷியுமான பகவானிடத்தில் स्वमृतमिव=அதிசயித்த போக்யவஸ்துவாகவும் सुमेधाः=பகவானுடைய சேஷபூதன் என்ற திருடக்ஞான முள்ளவனுகவும், अमृतः=மரணமற்றவனுகவும், அதாவது: அஸம்ஸாரியாகவும் अक्षितः= பாவவஸ்துக்களுக்குள்ள ஆறுவித விகாரமற்றவனுகவும், ((अस्मि=இருக்கிறேன்) इति=என்பது त्रिशङ्कोर्वेदानुवचनम्=திரிசங்கு வென்றவரால் காணப்பட்ட மந்திரமாகும். (எ-று)

விசிஷ்டாத்வைதமதப்படி பத்தாவது அனுவாகம் முற்றிற்று.

## பதினென்றுவது அனுவாகம்.

(அக்ஷம்) (அ—கை) இந்த அனுவாகத்தில், பிரும்மக்ஞானமுண்டாவதற்கு முன்னர் சிரௌத (சுருதியாற் செய்யவேண்டுவதாக விதிக்கப்பட்ட) கர்மங்களையும், ஸ்மார்த்த (ஸ்மிருதியாற் செய்யவேண்டுவதாக விதிக்கப்பட்ட) கர்மங்களையும் சித்த சுத்தியையடைவதற்கு வேண்டி செய்யவேண்டுவது வசியமானது என்பது உபதேசிக்கப்படுகின்றது. சித்தசுத்தியை யடைந்தவனுக்கே பரமாத்ம விஷயகமான க்ஞானமானது எவ்விதத்தடையுமின்றி உண்டாகின்றது.

तपसा कल्मषं हन्ति विद्ययाऽमृतमश्नुते ॥

"தவத்தால் கல்மஷம் என்ற சித்த தோஷத்தைப் போக்குகிறான்; ஆத்ம க்ஞானத்தால் அமிருதம் என்ற மோக்ஷத்தை யடைகிறான்" என மனுஸ்மிருதியினு முபதேசிக்கப் பட்டிருக்கின்றது. மேலும் "तपसा ब्रह्म विजिज्ञासस्व "தவத்தினுல் பிரும்மத்தை யறிந்து கொள்ள முயர்ச்சிப்பாயாக" என்று இதே உபநிஷத்து முபதேசிக்கப் போகிறது. ஆகவே ஆத்ம க்ஞானமுண்டாவதற்கு வேண்டி கர்மங்களை யனுஷ்டித்த லவசியமான

தென்றே யேற்பட்டது. மேலும் இந்த அனுவாகத்தில் **ஆசா-ர்யோऽந்தேவாஸின மனுஶாஸ்தி** என்றதால் "கர்மங்களைச் செய்தல் அவசியமானதென ஆசிரியர் சிஷ்யனுக்குக்கட்டளை யிடுகிறார்" என்று கூறுகின்றது. இதனின்றும் லோகத்தில் நியாயமான மார்க்கத்தில்பிரஜைகளையாரேனும் மஹாராஜனுடைய ஆக்ஞையை மீறிநடப்பவன் எவ்விதம் மஹாராஜனுடைய பிரஸாதபூர்வகமான க்ஷேமலாபத்தை யடையமாட்டானோ அவ்விதமே க்ஞானோத்பத்திக்கு முந்தி கர்மானுஷ்டானத்தைச் செய்யாதவன் சித்தசுத்தி வாயிலாக ஆத்மக்ஞானம், அதன் பலனான மோக்ஷம் இவற்றை யொருபொழுதும் அடைய மாட்டான் என ஆசிரியர் சிஷ்யனுக்குக் கட்டளையிட்டிருக்கிறார் என்பது வெளியாகிறது. மேலும் ஆசாரியனுடையகட்டளையை மீறுவதால் தோஷமுமுண்டாகின்றது என்பதும் வெளிப்படை. ஆனால் ஆத்மக்ஞானம் உண்டாவதற்கு முந்தி கர்மங்களை யனுஷ்டித்தல் அவசியமானது போலவே ஆத்மக்ஞானமானது உண்டான பிறகும் கூட கர்மங்களை யனுஷ்டித்தலவசியமானது என்றும் ஏற்படாதோ வெனின்? அதனுண்மை பின்வருமாறு.

ஆத்மக்ஞானமானது உண்டாவதற்கு முன்னரே கர்மங்கள் உபதேசிக்கப்பட்டன. அதனின்று சித்தசுத்தி, குருபதேசபிராப்தி இவைவாயிலாக ஆத்ம க்ஞானமானது உண்டானதும் **"अभयं प्रतिष्ठां विन्दते" "न बिभेति कुतश्चन" "किमहं साधु ना करवम्"** "பயஹேதுவான இரண்டாவது வஸ்துவற்றிருக்கும் படியாக பிரதிஷ்டையை, அதாவது: ஆத்மபாவத்தை வித்யையால் அடைகிறான். ஏனெனில் பயஹேதுவான அவித்யையானது ஆத்மக்ஞானமாகிற வித்யோதயமானதும் விலகிவிடுவதே அதன் காரணமாகும். ஆத்மக்ஞானமுண்டானதும் பயஹேது வான அவித்யை முதலியவைகள் விலகிவிடுகின்றமையின் எதனிடமிருந்தும் பயத்தையடைவதில்லை 'நான் நற்கர்மங்களை ஏன் செய்யாதுவிடுத்தேன்' என்பது முதலிய தாபத்தை யடைவதில்லை" என்றது முதலியவாக்கியங்கள் கர்மாவேண்டுவதில்லை என்பதைத்தெளிவாயுபதேசிக்கின்றன. ஆகவே முன்னர் சம்பாதிக்கப்பட்ட பாபங்களை நிவிருத்தி செய்யும் வாயிலாக க்ஞானத்தை யுண்டு பண்ண

வேண்டியே கர்மங்கள் உபதேசிக்கப்படுகின்றன என்றேற்படும். மேலும்

अविद्यया मृत्युं तीर्त्वा विद्ययाऽमृतमश्नुते ।

"கர்மத்தால் பாபங்களை விலக்கிக் கொண்டு வித்யையினால் (ஆத்மக்ஞானத்தினால்) மோக்ஷத்தை யடைகிறான்" என்றும் மந்திரவர்ணமிருக்கின்றது. மேலும் கர்மங்களுக்கு ஸ்வாராஜ்யரூபமான மோக்ஷத்தில் எவ்விதஉபயோகமும் கிடையா. ஆனது பற்றி கர்மங்களை யனுஷ்டித்தல் வீணே என்ற ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரம் செய்யவேண்டி கர்மங்கள் மோக்ஷமார்க்கத்தில் உபயோகப்படும் முறையைக்காட்டவே 9வது அநுவாகத்தில் ருதம் முதலியன உபதேசிக்கப்பட்டன. இந்த அநுவாகத்தில் ஆத்மக்ஞான முண்டாவதற்குரியசித்தசுத்தியானது கர்மங்கள் மூலமே உண்டாவதால் அவற்றை அவசியம் அநுஷ்டித்துத் தீரவேண்டும் என்பதைக் காட்டவே கர்மங்கள் உபதேசிக்கப் படுகின்றன. ஆகவே "கூறியதைக்கூறல்" என்ற தோஷமிங்கேற் படுவதற்கிடமில்லை.

(मन्त्रः) वेदमनूच्याऽऽचार्योऽन्तेवासिनमनुशास्ति । सत्यं वद । धर्मं चर । स्वाध्यायान्मा प्रमदः । आचार्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः । सत्यान्न प्रमदितव्यम् । धर्मान्न प्रमदितव्यम् । कुशलान्न प्रमदितव्यम् । भूत्यै न प्रमदितव्यम् । स्वाध्यायप्रवचनाभ्यां न प्रमदितव्यम् ॥१॥

देवपितृकार्याभ्यां न प्रमदितव्यम् । मातृदेवो भव । पितृदेवो भव । आचार्यदेवो भव । अतिथिदेवो भव । यान्यनवद्यानि कर्माणि। तानि सेवितव्यानि । नो इतराणि । यान्यस्माकꣳसुचरितानि । तानि त्वयोपास्यानि ॥२॥

नो इतराणि । ये के चास्मच्छ्रेयाꣳसो ब्राह्मणाः । तेषां त्वयाऽऽसने न प्रश्वसितव्यम् । श्रद्धया देयम् । अश्रद्धयाऽदेयम् । श्रिया देयम् । ह्रिया देयम् । भिया देयम् । संविदा देयम् । अथ यदि ते कर्मविचिकित्सा वा वृत्तविचिकित्सा वा स्यात् । ॥३॥

ये तत्र ब्राह्मणास्संमर्शिनः । युक्ता आयुक्ताः । अलूक्षा धर्मकामास्स्युः । यथा ते तत्र वर्तेरन् । तथा तत्र वर्तेथाः । अथाभ्याख्यातेषु । ये तत्र ब्राह्मणास्संमर्शिनः । युक्ता आयुक्ताः अलूक्षा धर्मकामास्स्युः । यथा ते तेषु वर्तेरन् । तथा तेषु वर्तेथाः । एष आदेशः । एष उपदेशः । एषा वेदोपनिषत् । एतदनुशासनम् । एवमुपासितव्यम् । एवमु चैतदुपास्यम् ॥४॥

(ப—ரை) आचार्यः—ஆசாரியன் वेदम्—வேதத்தை अनूच्य—அத்யயனம் செய்துவைத்த பிறகு अन्तेवासिनम्—சிஷ்யனை अनुशास्ति—अनु—கிரந்தங்களைச் சொல்லிவைத்தபின்னர் शास्ति—அதன் பொருளை யுபதேசிக்கிறார். அவரது உபதேசமுறை பின்வருமாறு:— सत्यम्—பிரமாணங்களாலுள்ளபடி அறியப்பட்டதும், அவசியம் சொல்லவேண்டியதுமான உண்மை வார்த்தையை वद—சொல்லுவாயாக धर्मम्—உண்மையான தர்மத்தை चर—அனுஷ்டிப்பாயாக. आचार्याय—ஆசாரியனுக்கு प्रियम्—இஷ்டமான धनम्—தனத்தை आहृत्य— கொண்டு வந்து கொடுத்து प्रजातन्तुम्— பிரஜாரூபமான வம்சத்தொடரை मा व्यवच्छेत्सीः= நிறுத்தி விடாதே सत्यात्= உண்மை பேசுவதினின்றும் न प्रमदितव्यम्= தவறுதலையடைய வேண்டாம். அதாவது: மறந்தும் பொய் சொல்ல வேண்டாம். धर्मात्=தர்மானுஷ்டானத்தினின்றும் न प्रमदितव्यम्= தவறுதலை யடைய வேண்டாம். அதாவது: தர்மானுஷ்டானம் செய்யாமல் ஒருபொழுது மிருக்கவேண்டாம் என்று கருத்து. कुशलात्=சரீரரக்ஷணார்த்த மேற்பட்ட ரோகசிகித்ஸை செய்துகொள்ளுதல் முதலிய காரியத்தினின்றும் न प्रमदितव्यम्= தவற வேண்டாம். அதாவது: சரீரம் நித்யமானதன்று என்ற எண்ணத்தால் அதிலுண்டான ரோகாதிகளை நிவிருத்தி செய்வதற்கேற் பட்ட ஔஷத ஸேவை முதலிய வற்றைச் செய்துகொள்ளுதில் தவறுதே. சரீரம் போய்விடுமானல் வேறு எதைக் கொண்டு நீ புருஷார்த்தத்தை யடையமுடியும் என்று கருத்து. भूत्यै—மங்களார்த்தமான கர்மங்களையும் பொருட்டு, (அதாவது

வைதிகமாயும் லௌகிக மாயுமுள்ள பிரதிக்கிரஹம் முதலிய வற்றினின்றும் என்று கருத்து.) न प्रमदितव्यम्= தவறவேண்டாம். स्वाध्यायप्रवचनाभ्याम्=வேதத்தை ஓதல், ஓதுவித்தல் ஆகிய இவ்விரண்டினின்றும் न प्रमदितव्यम्=தவறுதே. அதாவது: இவற்றைச் செய்தே தீருவதென்ற உறுதியுடன் செய்து முடிப்பாயாக என்று கருத்து.

देवपितृकार्याभ्याम्=தேவர்கள், பிதுருக்கள் இவர்களைக் குறித்துச் செய்யவேண்டிய காரியங்களினின்றும், न प्रमदितव्यम्= தவற வேண்டாம். मातृदेवः=மாதாவைத் தைவமாயுடையவனாக भव= ஆவாயாக. पितृदेवः= பிதாவைத்தைவமாகவுடையவனாக भव = ஆவாயாக आचार्यदेवः= ஆசாரியனைத் தைவமாக வுடையவனாக भव=ஆவாயாக अतिथिदेवः= அதிதியை (போஜன ஸமயத்தில் வந்த விருந்தாளியை) தேவனாக வுடைவனாக भव=ஆவாயாக. அதாவது: தைவத்தை யெப்படி பய பக்தியுடன் உபாஸிப்பாயோ அவ்விதமே இவர்களையு முபாஸிக்கவேண்டு மென்பது கருத்து. अनवद्यानि=சிஷ்டாசாரரூபங்களான कर्माणि=கர்மங்கள் यानि=எவைகளுண்டோ तानि=அவைகள் सेवितव्यानि= அனுஷ்டிக்கத் தக்கன. அதாவது: பிரத்யக்ஷமான சாஸ்திரவிதிகளுக்கு முறண்படாத சிஷ்டாசாரங்களை நீ பின்பற்றுவாயாக என்று கருத்து इतराणि=தோஷமுள்ள கர்மங்களை சிஷ்டர்கள னுஷ்டிப்பினும் नो= உன்னால் அநுஷ்டிக்கத் தகாதவைகளே யாகும். अस्माकम्=ஆசாரியனன் நம்முடைய सुचरितानि=சோபன சரித்திரங்கள் यानि= எவைக ளுண்டோ அதாவது: சஸ்திர விதிக்கு முறண்படாதகாரியங்கள்எவைகளுண்டோ तानि=அவைகளே त्वया உன்னால் उपास्यानि=உறுதியுடன் பின்பற்றத் தக்கன. इतराणि= சாஸ்திர விருத்தங்களாயிருந்து ஆசாரியனன என்னால் செய்யப்படினும் கூட அக்காரியங்கள் नो=உன்னால் விலக்கத்தக்கன.

अस्मत्=ஆசாரியனன என்னைக் காட்டிலும் श्रेयांसः= பல விஷயங்களி லுமுயர்ந்த வர்களும் ब्राह्मणाः= பிராம்மண ஜாதியிற் பிறந்தவர்களுமான ये के च=யாவரேனும் சில பெரியவர்களுண்டோ तेषाम्=அப்பெரியாருக்கு आसनेन= இருக்க விடம் கொடுத்தல் முதலிய வற்றால் त्वया=உன்னால் प्रश्वसितव्यम्= களைப்பாற்றல்

தரும். அல்லது. **तेषाम्=** அத்தகைய பெரியாருடைய **आसने=** கோஷ்டி நிமித்தமானதுண்டானதும் **त्वया=**உன்னால் **नप्रश्वसित-व्यम्=**மூச்சு விடாமலிருத்தல் வேண்டும். அதாவது: முற்கூறிய பெரியோர்களுடன் சேர்ந்து ஒரேகோஷ்டியில் வஸிக்கக்கூடிய சமயம் நேரும் பொழுது அவர்கள் என்ன சொல்லுகின்றனர் என்பதைக் கேட்க வேண்டுமேயொழிய நீகுறிக்கிட்டு எதையும் பேசுதல் தகாதென்பதாம். **देयम्=** கொடுப்பனவற்றை **श्रद्धया=** சிரத்தையுடன் கொடுப்பாயாக. **अश्रद्धया=**சிரத்தையில்லாமல்**अदे-यम्=**தானம் செய்தல்தகா. **श्रिया=** தனது ஐசுவர்யத்தை யனுஸரித்து **देयम्=**தானம் செய்தல்வேண்டும். **ह्रिया=** ஸ்வல்பம்தானே கொடுக்கின்றோம் என்ற வெட்கத்துடன் **देयम्=**தானம் செய்தல் வேண்டும். **भिया=** பரலோகத்தின் கணுள்ளபயத்தால் **देयम्=** தானம் செய்யவேண்டும். **संविदा=**மித்திரன் முதலியோரின் காரியத்திற்காக **देयम्=**தானம் செய்தல்வேண்டும்.

(**एवं सति=**இவ்விதமிருக்கும் பொழுது **ते** சிஷ்யனை உனக்கு) **कर्मविचिकित्सा=** சிரௌதஸ்மார்த்த கர்மவிஷயமான சந்தேஹமோ **वृत्तविचिकित्सा=**ஆசாரவிஷயமானஸந்தேஹமோ **यदिस्यात्=** உண்டாகுமானால் **तत्र=**அந்த நீவஸிக்குமிடத்தில், அல்லது அவ்வித ஸந்தேஹமுண்டானகாலத்தில் **संमर्शिन:=** சாஸ்திரார்த்த விசாரம் செய்யும் திறமையுள்ளவர்களும், **युक्ता:=**கர்மானுஷ்டானத்திலோ, அல்லது நடத்தையிலோ, முறைப்படி எதையும் செய்கின்றவர்களும் **अयुक्ता:=**ஸ்வதந்திரர்களும் **अलूक्षा:=** குரூரமானபுத்தியில்லாதவர்களும், **धर्मकामा:=** தர்மத்தில்பற்றுள்ளவர்களுமான **ब्राह्मणा:=**பிராம்மணர்கள் **ये=**எவர்களுண்டோ **ते=**அவர்கள் **तत्र=** அக்கர்மானுஷ்டானத்திலோ நடத்தையிலோ, **यथा=** எவ்விதம் **वर्तेरन्=** இருப்பார்களோ **तथा=** அவ்விதம் **तत्र=** கர்மானுஷ்டானத்திலோ, நடத்தையிலோ **वर्तेथा:=** நீயுமிருப்பாயாக. **अथ=**மேலும் **अभ्याख्यातेषु=**தோஷமுள்ளவைகளெனச்சந்தேஹிக்கப்பட்ட கர்மங்களில், அல்லது நடத்தைகளில் **संमर्शिन:=** சாஸ்திரார்த்தவிசாரம் செய்யும்திறமைவாய்ந்தவர்களும் **युक्ता:=**கர்மானுஷ்டானத்திலோ, அல்லது நடத்தையிலோ முறைப்படி எதையும் செய்கின்றவர்களும் **अयुक्ता:=** ஸ்வதந்திரர்களும் **अलूक्षा:=**

கொரமானபுத்தியில்லாதவர்களும் **धर्मकामाः**= தர்மத்தில் பற்றுள்ளவர்களுமான **ब्राह्मणाः**= பிராம்மணர்கள் **ये**= எவர்களுண்டோ **ते**=அவர்கள் **तेषु**= தோஷமுள்ளவைகளெனச்சந்தேஹிக்கப்பட்ட கர்மங்களில் **यथा**= எவ்விதம் **वर्तेरन्**= விலகிநடப்பார்களோ **तथा**=அவ்விதமே **तेषु**=ஸந்தேஹ விஷயமானகர்மங்களில் **वर्तेथाः**= நீயும் விலகிநடப்பாயாக. **एषः**= இது வரைசொல்லியதானது **आदेशः**=கட்டளையாகும். **एषः**= இது **उपदेशः**= புத்திரன் முதலியோருக்கு பிதாமுதலியோரால் செய்யப்படும் உபதேசமாகும். **एषा**=இது **वेदोपनिषत्**=வேதரஹஸ்யமானது. **एतत्**=இது **अनुशासनम्**=ஆண்டவனுடைய வார்த்தையாகும். ஆனதுபற்றி **एवम्**=இவ்விதமுபதேசிக்கப்பட்டவையாவும் **उपासितव्यम्**=அவசியமநுஷ்டிக்கத்தக்கன. **एतत्**=இது **एवमु च**=இவ்விதமே **उपास्यम्**=செய்யத்தக்கது. இதுவரைகூறியகர்மாநுஷ்டானத்தில் தக்கமுயற்சியெடுக்க வேண்டும் என்பதைக்காட்டவேண்டி **एवमुपासितव्यम्** என்றதையே **एवमु चैतदुपास्यम्** என்றதால் திரும்பவுமுபதேசித்திருப்பதாகக் கொள்ள வேண்டும்.

வித்யாரண்யதீபிகை— 10வது அநுவாகத்தில் பிரும்மயக்ஞத்திற்குப் பிரதிநிதியாக (பதிலாக) ஜபிக்க வேண்டிய மந்திரம் சொல்லப்பட்டது. அதனால் மந்தப் பிரக்ஞனுக்கு பிரும்மயக்ஞா நுஷ்டானமானது சுலுவாகிவிடுகிறது. அவ்விதமே **ऋतं च स्वाध्यायप्रवचने च** என்று தொடங்கி முன்ன ருபதேசிக்கப்பட்ட உபாஸனத்துடன் ச்ரௌத, ஸ்மார்த்த கர்மங்களையும் சேர்த்து அநுஷ்டிப்பதால் கிரம முக்தி ரூபமான பலனும் நிலை நாட்டப் பட்டது. இனி 11வது அநுவாகத்தால் உபாஸனத்துடன் சேராத தனியான கர்மமானது விவிதிஷையை(ஆத்மதத்துவக்ஞானத்தி லாசையை) உண்டாக்கும் வாயிலாக முறையே மோக்ஷத்திற்கு ஹேதுவாக வாகின்றதென்பதை உபதேசிக்க வெண்ணங்கொண்டு அவ்விஷயமான கட்டளையைச்சுருதியானது வெளியிடுகின்றது.

**(मन्त्रः) वेदमनूच्य......एवमु चैतदुपास्यम् ॥**

**आचार्यः**=ஆசாரியன் அதாவது:

उपनीय तु यः शिष्यं वेदमध्यापयेद्द्विजः ।
सकल्पं सरहस्यं च तमाचार्यं प्रचक्षते ॥

"எந்தத் துவிஜன் (பிராம்மணன்) உபநயனம் செய்வித்து கல்பத்துடனும், ரஹஸ்யம் என்ற உபநிஷத்துடனும் வேதத்தை சிஷ்யனுக்கு உபதேசிப்பனோ, அவனே ஆசாரியன் எனப்படுவன்" என்ற மனுவசனப்படி ஆசிரிய லக்ஷணம் பொருந்தியவன். अन्तेवासिनम्=முற்கூறிய ஆசாரியனுடைய அருகில் எப்பொழுதுமிடைவிடாது வஸிப்பவனை, அதாவது:

छायाभूतोऽपरित्यागी नित्यमेव वसेद्गुरौ ॥

என்ற ஸ்மிருதி வசனத்திற் சொல்லிய படி நிழல் போன்று இணைபிரியாது வஸிக்கும் மாணுக்கனை वेदमनूच्य= உபநயனம் செய்வித்தபின்னர் வேதத்தையும் அத்யயனம் செய்வித்து अनुशास्ति=கிரந்தத்தை உருப்போட்டு மனத்திலேற்றிக் கொண்டபின்னர் அனுஷ்டிக்கவேண்டிய பொருளையும் உபதேசிக்கத்தொடங்குகிறார். இவ்விதம் சொல்லியதிலிருந்து வேதங்களைக் கற்று அதன் பொருளான தர்மத்தை விசாரம் செய்யாது குருகுலம் விட்டு விலகுதல் கூடாதென்பது பெறப்படுகிறது. உபதேசத்தின் சுருக்கம் முதலிற் கூறப்படுகிறது. सत्यं वद, धर्मं चर ॥ सत्यम् என்றதால் ஸ்மிருதியிற் கூறப்பட்ட அஹிம்ஸை, ஸத்யம் முதலியவற்றையும், धर्म என்றதால் பிரத்யக்ஷசுருதியாலுபதேசிக்கப்பட்ட அக்கினிஹோத்திரம் முதலிய வைதிககர்மங்களையும் அனுஷ்டிக்க வேண்டும் என உபதேசித்திருப்பதாய்ப் பொருள் கொள்ள வேண்டும். இதிலிருந்து सकृत् कृते कृतः शास्त्रार्थः "ஒருதடவை செய்ததாலேயே சாஸ்திரார்த்தத்தை யனுஷ்டித்த தாக வாகக்கூடும்" என்ற நியாயப்படி முற்கூறியசிரௌத ஸ்மார்த்த கர்மங்களை யொருவன் ஒருதடவை அனுஷ்டித்தாலே போதுமானது, பிறகு அவற்றை விட்டுவிடலாம் என்று ஏற்படும் எனக்கருதி அவ்விதம் ஒருதடவை அனுஷ்டித்து, பிறகு அவற்றை விட்டு விடல் கூடாதென்பதை உபதேசிக்கிறார். स्वाध्यायान्मा प्रमदः ...न प्रमदितव्यम् । स्वाध्यायात्= அத்யயனபூர்வகமாய் கிரஹித்த வேதத்தினின்றும் मा प्रमदः=தவருதே. அதாவது: அவற்றை மறந்துவிடாதே. ஏனெனில்,

ब्रह्महत्यासमं ज्ञेयमधीतस्य च नाशनम् ॥

என்றபடி அத்யயனம் செய்த வேதத்தை மறத்தல் பிரும் மஹத்திக் கொப்பானதாக வருமாதலால் அதை மறத்தல் தகா தென்பதாம். आचार्याय प्रियं धनमाहृत्य प्रजातन्तुं मा व्यवच्छेत्सीः । ஆசாரியனுக்குப் பிரியமான பசு, ஸுவர்ணம், வஸ்திரம் முத லிய தனத்தை வித்யையின் தக்ஷிணைக்காக ஆசாரியனுக்குக் கொடுத்து விட்டுப் பிறகு விவாஹம் செய்து கொண்டு प्रजातन्तुम्=प्रजा=புத்திர பௌத்திராதி ரூபமான பிரஜையினுடைய तन्तुम्=விஸ்தாரத்தை माव्यवच्छेत्सीः=விலக்கிவிடாதே.

सत्यान्न प्रमदितव्यम् । धर्मान्न प्रमदितव्यम् ॥ முற்கூறிய ஸத்யம், தர்மம் ஆகிய இவற்றை அனுஷ்டிக்காதிருத்தல் என்ற தவறைச் செய்யாதே. कुशलान्न प्रमदितव्यम्–कुशलात्=க்ஷேமத்தைத்தரத்தக்க வேதத்திற்சொல்லிய இஷ்டி முதலிய வற்றினின்றும், சரீரா ரோக்யத்தைத் தரத்தக்க ரஸாயனாதி ஸேவையினின்றும் தவ றாதே. भूत्यै...व्यम्=वायव्यं श्वेतमालभेत भूतिकामः=பூதியில் ஆசை யுள்ளவன் வாயுதேவதையைக் குறித்து சுவேதபசுவை ஆலம் பனம் செய்யவேண்டும் என்றுகூறிய வைதிக கர்மத்தினின்றும், பிரதிக்ரஹம் முதலிய லௌகிககர்மத்தினின்றும் தவறாதே. இதி லிருந்து குசலம், பூதி இவ்விரண்டு மில்லாவிடில் முக்திக்கு முறை யே ஹேதுவான கர்மானுஷ்டானமானது ஸம்பவிக்காதானது பற்றி இவ்விஷயத்தில் தவறாமையை உபதேசிக்க வேண்டுவது மவசியமாகிவிட்டது. स्वाध्यायात् मा प्रमदः. வேதமோதுவித்தல், ஸ்வயம் பிரும்மயக்ஞத்தை யனுஷ்டித்தல் இவ்விரண்டிலும் தவறா தே. देवपितृकार्याभ्यां न प्रमदितव्यम् புராணோக்தமான விநாயக விரதம், அனந்த விரதம் முதலிய தேவகாரியத்திலும், ஒவ்வொரு ஆண்டிலும் செய்யவேண்டிய பிதுருசிராத்தம் முதலிய வற்றி லும் தவறாதே. मातृ देवो भव மதா வினிடத்தில் மனுஷ்ய புத்தி செய்யாது தேவபுத்தி செய்வாயாக. पितृ देवो भव, आचार्य देवो भव । अतिथि देवो भव । இவ்விதமே பிதா முதலிய வர்களிடத் திலும் மனுஷ்ய புத்தியை விலக்கி தேவன் என்ற எண்ணம் கொள் வாயாக.

மேலும், "பூதியினின்றும் தவறாதே, குசலத்தினின்றும் தவறாதே" என்று கூறியதில் வேறு சில விசேஷமுபதேசிக்கப் கப்படுகிறது. அதாவது:—**यान्यनवद्यानि कर्मणि— अनवद्यानि**=ஆயுஷ் காமேஷ்டி, பிரதிக்கிரஹம், யாஜனம் முதலிய குற்றமற்ற வைக ளையே நீசெய்வாயாக. **इतराणि नो**=சத்துருவதம்வாயிலாக இம்மை யில் க்ஷேமத்தைத் தரக்கூடியனவாயினும் அதனால் நரகம் வரு மாதலால், ஆபிசாரம் முதலிய கெட்ட காரியங்களைச் செய்யா தே. மேலும் **यान्यस्माः सुचरितानि × णि** ஆசாரியனும், சிஷ்டனு மான என்னிடம் காணப்படும் தைவசம்பத்ரூபமான காரியங் களையே நீ அனுஷ்டிப்பாயாக. ஆசுர ஸம்பத் ரூபமான தம்பம் முதலியவற்றை விலக்குவாயாக. பகவத்கீதை 16வது அத்தியா யத்தில் **अभयं सत्वसंशुद्धिः**=என்று தொடங்கி **निबंधायासुरीमता,** என்றது வரையுள்ள சுலோகங்களால் தைவ, ஆசுர ஸம்பத்துக் கள் உபதேசிக்கப் பட்டிருக்கின்றன. பின்னர் மஹாபுருஷர் களைச் சேவிக்கும் விஷயத்திலும் சில விசேஷமுண்டு. அவைகளா வன— **येकेचास्मत्×न्यम्**=வயது, வித்யை, முதலிய குணங்களால் உனது ஆசாரியனான என்னைக்காட்டிலும் கூடப் பெரியவர் களான மஹான்களுக்கு ஆசனதானம், கால்பிடித்தல் முதலிய வற்றால் பணிவிடை செய்து களைப்பைப் போக்குவாயாக.

அவ்விதமே தானம் செய்வதிலும் ஓர் விசேஷமுண்டு. அது பின் வருமாறு. **श्रद्धया देयम्...संविदा देयम् ।** பிராம்மணர்களுக் குத் தானம் கொடுக்குங்கால் சிரத்தையுடனேயே கொடுப்பா யாக. சிரத்தையில்லாது எதையும் எவர்க்கும் கொடுக்கலாகாது. சிரத்தையில்லாது கொடுத்தல் கூடாதென்பது

**अश्रद्धया हुतं दत्तं तपस्ततं कृतं च यत् ।**
**असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥**

என்று கீதையிலும் கூறப் பட்டிருக்கிறது. **अश्रद्धयादेयम्** என்ற விடத்தில் **अदेयम्** என்று பதம் பிரித்து இதுவரை பொருள் கூறப்பட்டது. **देयम्**=என்றும் பதம்பிரித்துக் கொள்ள லாம். அவ்விதம் பிரித்துக் கொண்டால் உனக்குச் சிரத்தையில் லாவிடினுங்கூட தானம் செய்வது மட்டும் மேலானது தான்.

வெனெனில் இவ்விதம் சிரத்தையில்லாத தானத்தால் ஸாத்விகமான பலன் வேண்டுமானால் நேராதே யொழிய ராஜஸ தாமஸ பலன் அதற்குக் கட்டாய முண்டாகும். இவ்விதமே கீதையில்

यत्तु प्रत्युपकारार्थं × तत्तामसमुदाहृतम् ।

என்ற வசனங்களாலுபதேசிக்கப் பட்டிருக்கின்றது. **श्रिया=** விபவ மிருந்தால் கொடுக்கவேண்டும். அதாவது: எனது பணத்தை வேலைக்காரன் வேலைக்காரிகள் இவர்கள் எவ்விதம் கொள்ளையிடுகின்றனரோ, அவ்விதமே பிராம்மணர்களும் கொள்ளையிடத் தொடங்கி விட்டனர் என்ற எண்ணத்துடன் தனமதிக மிருப்பதை யொட்டி எந்தத் தானமனுஷ்டிக் கப்படுமோ அது தாமஸ தானமாகும். அவ்வித மெண்ணின போதிலும் தானம் செய்வது மேலானது என்று இதனு லுபதேசிக்கப் பட்டது. **ह्रिया=**லஜ்ஜை காரணமாய் தானம் செய்தல் வேண்டும். அதாவது: என் போன்ற வர்கள் தானம் செய்யும் பொழுது நான் மட்டும் தானம் செய்யாதிருப்பது அதிகம் வெட்க கரமானது என்ற எண்ணத்துடன் தானம் செய்வது ராஜஸதானமாகும். எவ்விதத்திலும் தானம் செய்வது மேலான தாகவே யாகும் என்பதாம். **भिया देयम्=**சாஸ்திர பயத்தால் தானம் செய்தல் வேண்டும். அதாவது: ருத்விக் முதலியோருக்குத் தானம் செய்யும்படி சாஸ்திரம் விதித்திருப்பதை யொட்டி தானம் செய்யாவிடில் தோஷம் வரும் என்ற பயத்தால் செய்யப்படும் தானம் ஸாத்விக தானமாகும். இவ்விதமாயும் தானம் செய்தல் வேண்டும். **संविदा देयम्=** தேசம், காலம், பாத்திர விசேஷம் இவற்றை யொட்டி தானம் செய்தல் வேண்டும். அதாவது: அத்வர்யு முதலிய நான்கு ருத்விக்குகளுக்கு யாகத்தில் ஸம்பூர்ண தக்ஷிணையையும், பிரதிபிரஸ்தாதா முதலியோருக்கு அதில் பாதி தக்ஷிணையையும், நேஷ்டா முதலிய ருத்விக்குகளுக்கு மூன்றி லொருபங்கு தக்ஷிணையையும், உன்னேதா முதலிய ருத்விக்குகளுக்கு நான்கில் ஒருபங்கு தக்ஷிணையையும் பங்குபிரித்துக் கொடுத்தலே **संविदा देयम्** என்றதாலுபதேசிக்கப்பட்ட தென்பதாம். இவ்விதம் பாத்திர விசேஷங்களுக்குத் தக்கபடி தக்ஷிணையைப் பங்கிட்டுத் தானம் செய்தலா

னது ஸாத்விக தானமாகும் என்று பொருள் கொள்ளலாம். அல்லது, **श्रिया, ह्रिया, भिया, संविदा** என்ற வாக்கியங்களுக்கு வேறு விதமாயும் பொருள் கொள்ளலாம். அது பின்வருமாறு:— **वित्तशाठ्यं न कर्तव्यम्**·என்று சாஸ்திர வசனமிருப்பதை யொட்டி தனது சக்திக்குத் தக்கபடி தானம் செய்தல் வேண்டும். **भिया=** ஸ்வல்பம் தானம் செய்வதென்பது பிரபுவான நமக்கு அழகல்ல என்ற எண்ணத்துடன் தானம் செய்தல் வேண்டும். **भिया संविदा** முதலிய வற்றிற்கு முன் போலவே பொருள் கொள்ள வெண்டும்.

இவ்விதமறியாத விஷயத்திலனுஷ்டிக்க வேண்டிய முறையை யுபதேசித்து, இனி அனுஷ்டிக்க வேண்டிய விஷயத்தில் சந்தேஹம் வருமிடத்து ஆதை நிர்ணயித்துக் கொள்வதற்கு வேண்டிய முறை யுபதேசிக்கப் படுகின்றது— **अथ यदि ते कर्मविचिकित्सा- ......तथा तत्र वर्तेथाः ॥ कर्मविचिकित्सा=उदिते जुहोति,** ஸூரியனு தயமானபிறகு ஹோமம் செய்தல் வேண்டும் என்று ஒரு வாக்கியமும், **अनुदिते जुहोति=**ஸூரியனுதகமாகா முன்னரே ஹோமம் செய்யவேண்டும் என்று மற்றொரு வாக்கியமு மிருக்க, எதன்படி செய்வது என்று சிரௌத கர்ம விஷயமான ஸந்தேஹமாவது, சந்தியாதேவதை ஸ்திரீ மூர்த்தி என்று சிலஸ்மிருதிகளும், புருஷ மூர்த்தி என்று சில ஸ்மிருதிகளும் கூறுவதால் எந்த ஸ்மிருதிப்படி சந்தியா தேவதையைத் தியானிப்பது என்று ஸ்மார்த்தமான தேவதா மூர்த்திபேத விஷயமான ஸந்தேஹமாவது, **वृत्तविचिकित्सा =** மாதுல ஸுதையை (அம்மான் பெண்ணை) விவாஹஞ் செய்யலாகுமா? கூடாதா? என்ற சந்தேஹமாவது உதயமாகும் பொழுது தான் எந்தத் தேசத்தில், எந்தக் காலத்தில், எந்தகுலத்திற் சேர்ந்தவனு யிருக்கின்றானோ அதே தேசம், அதேகாலம், அதேகுலம் இவற்றில் இருக்கின்றவர்களும் **संमर्शिनः=**ராகம் துவேஷம், பரபரப்பு முதலிய தோஷமற்று நன்கு சாஸ்திரார்த்த நிர்ணயஞ் செய்வதில் திறமை வாய்ந்த வர்களும், **युक्ताः=**நித்திய நைமித்திக கர்மங்களை ஸ்வயம் அனுஷ்டிப்பவர்களும், **आयुक्ताः=**அதிலும் எவ்விதக் குறைவுமின்றி உள்ளபடி அனுஷ்டிப்போம் என்று திருட-

சங்கற்ப முள்ளவர்களும், अलूक्षा:=குரோதம், பிடிவாதம் முதலியனவற்றவர்களும் धर्मकामा:=லாபம், பூஜை இவற்றில் விருப்பமில்லாது தர்மமொன்றில் மட்டும் பற்றுள்ளவர்களுமான ब्राह्मणा:=பிராம்மணர்கள் तत्र=முற்கூறியவற்றில் यथावर्तेरन्= எவ்விதமிருப்பார்களோ (அதாவது: அவற்றை எவ்விதமனுஷ்டிப்பார்களோ) तथा तेषु वर्तेथा:=அவ்விதமே நீயும் அவற்றில் இருப்பாயாக.

இவ்விதம் சந்தேஹாஸ்பதமான விஷயத்தில் நிர்ணயஞ் செய்து கொள்ள வேண்டிய முறையை யுபதேசித்து இனி நிந்திக்கத் தகுந்த புருஷர்களிடத்து சம்பந்தம் முதலிய வியவஹாரஞ் செய்ய வேண்டிய விஷயத்தில் நிர்ணயஞ் செய்ய வேண்டிய முறையுபதேசிக்கப்படுகின்றது. अथाभ्याख्यातेषु......वर्तेथा:॥ இம்மந்திரத்திற்கு முன் மந்திரம் போலவே பொருள் கொள்ள வேண்டும்.

இதுவரைகூறியஉபதேசமானது முடிக்கப்படுகின்றது. एष आदेश:......एवमुचैतदुपास्यम्॥ "சத்தியம் சொல்லு" என்று தொடங்கி இதுவரை சொல்லப்பட்ட இந்த உபதேசமானது சுருதியின் கட்டளை யாகும். அரசன் தனது வேலைக் காரனை கட்டளையிடுவது போல வைதிக விதியானது கர்மானுஷ்டானம் செய்பவனைக் கட்டளை யிடுகிறது. एष उपदेश:—उप=வேதத்திற்கு அடுத்தபடி யிலுள்ள ஸ்மிருதியினுடையவும் देश:= உபதேசமானது இவ்விதமாகும். மேலும் एतदनुशासनम्=இது ஆண்டவனுடைய கட்டளை யுமாகும். ஆகவே இங்கு கூறிய படியே செய்தல் வேண்டும். (எ—று)

## சிக்ஷாவல்லீ விசாரம்.

கர்மத்தால் ஏற்படும் பலன் இன்னது தானென்றும் வித்யை(க்ஞான) யினால் ஏற்படும் பலன் இன்னது தானென்றும் தெளிவாயறிந்து கொள்வதற்கு வேண்டியே இந்த விசாரமானது தொடங்கப்படு கின்றது.

(1) தனிக் கர்மங்களினின்றும் மோக்ஷமுண்டாகின்றதா?

(2) அல்லது பரமாத்மக்ஞானத்தை யங்கமாயுடைய அங்கியான் கர்மங்களால் மோக்ஷ முண்டாகின்றதா!

(3) அல்லது பரமாத்ம க்ஞானமும், கர்மங்களும் ஸமப்பிரதானமாயிருந்து அவற்றால் மோக்ஷமுண்டாகின்றதா ?

(4) அல்லது கர்மங்களை யங்கமாயுடைய அங்கியான பரமாத்மக் ஞானத்தால் மோக்ஷமுண்டாகின்றதா?

(5) அல்லது எவ்விதத்திலும் கர்ம ஸம்பந்தம் பெறாத தனி க்ஞானத்தால் மோக்ஷமுண்டாகின்றதா?

என மோக்ஷ ஸாதன விஷயத்தில் ஐந்து விதங்களான சந்தேஹங்களுண்டாகின்றன. இவற்றுள் வாதி சொல்லுவதாவது:— வித்தியாஸம்பந்த மில்லாத தனிக் கர்மங்களினின்றே மோக்ஷமுண்டாகின்ற தென்றுதான் கொள்ளவேண்டும். ஏனெனில் எல்லா வேதார்த்த க்ஞான முள்ளவனுக்கே கர்மானுஷ்டானத்திலதிகார மேற்படுவதிலிருந்தும், அவ்விதமே

**वेद: कृत्स्नोऽधिगन्तव्य: सरहस्यो द्विजन्मना ।**

"பிராம்மணன் உபநிஷத்துடன் கூட எல்லாவேதங்களையுமறிந்து கொள்ளவேண்டும்." என்ற ஸ்மிருதி வசனத்தால் குருகுலத்திலேயே உபநிஷத்தின் பிரயோஜனமான ஆத்ம க்ஞானத்துடனேயே வேதார்த்தத்தை யறிதல் வேண்டும் என்று விதிக்கப்பட்டிருப்பதிலிருந்தும், **विद्वान् यजते** அறிந்தவன் (வித்யை யுள்ளவன்) யாகம் செய்தல் வேண்டும் **विद्वान् याजयति** அறிந்தவன் யாகம் செய்விக்க வேண்டும் என்பன வற்றாலும், ஆங்காங்கு வித்வானுக்கே கர்மங்களி லதிகாரம் சொல்லப் பட்டிருப்பதிலிருந்தும், **ज्ञात्वा नुष्ठानम्** அறிந்தனுஷ்டித்தல் வேண்டும் என்ற ஸ்மிருதியினு பதேசத்தாலும், க்ஞானத்திற்குப் பிறகு செய்யப்படும் கேவலகர்மங்களே மோக்ஷஸாதனமாகின்றதெனப் பெறப்படுகின்றது. மேலும் ஜைமினி, சபரஸ்வாமி முதலிய வர்களும் **कृत्स्नश्च वेदः कर्मार्थपरेति मन्यन्ते** எல்லாவேதங்களும் கர்மானுஷ்டானத்தையே பிரயோஜனமாயுடையதென க்கூறுகின்றனர். அத்துடன் கர்மங்களை மோக்ஷஸாதனங்களாக ஒப்பாவிடில் வேதமே பொ

ருளற்றதாக வாகிவிடும், ஆகவே கேவல கர்மங்களினின்றே மோக்ஷ முண்டாகின்றதென்பதை ஒப்பியே தீரவேண்டும் என்றேற்படுகின்றது.

சித்தாந்தி— இவ்விதம் பூர்வபக்ஷி சொல்வது சரியல்ல. ஏனெனில் மோக்ஷம் நித்யமானது என்றல்லவோ யாவராலு மொப்பப்படுகிறது. கர்மத்தா லுண்டாவதெல்லாம் அனித்ய மாகின்ற தென்பதோ லோகப்பிரஸித்தம். ஆகவே கர்மத்தினின்றும் மோக்ஷமுண்டாவதாகச் சொல்லுவோமானல் மோக்ஷ மனித்யமாகிவிடும். மோக்ஷத்தை யனித்யமென்று சொல்லுவதில் எவர்க்குமிஷ்டமிராது. ஆனது பற்றி கேவல கர்மத்தினின்றும் மோக்ஷ முண்டாவதாகச் சொல்லும் வாதியின் வாதம் ஒப்பத் தக்கதன்று.

பூர்வபக்ஷி—அங்ஙனமாயின் வேறு முறை கூறுவாம். அதாவது: காமியங்களென்றும், பிரதிஷித்தங்களென்றும், நைமித்திகங்களென்றும், நித்யங்களென்றும், கர்மங்கள் நான்கு விதங்களாகின்றன. அவற்றுள் காமியம், நைமித்திகம், பிரதிஷித்தம் என்ற இந்த மூன்று விதகர்மங்களும் அததற்கேற்பட்டபலனுடன் விதிக்கப்பட்டிருப்பதால், அம்மூன்று கர்மங்களையும் நாமனுஷ்டிக்காமலிருந்து விடுவோமாயின், அதன் மூலம் பின்னரேற்படும் அனித்யமான பலனேற்படுவதற் கிடமில்லாததாக வாகிவிடுகின்றது. மேலும் சென்ற ஜன்மங்களிற் செய்த முற்கூறிய காமிய பிரதிஷித்த நைமித்திக கர்மங்கள் ஒன்று சேர்ந்து இந்தச் சரீரத்தையும், அதுள்ளவரை நேரவேண்டிய சுகதுக்கங்களையும் தருகின்றன வாதலால் இவைகளைப் பிராரப்த கர்மங்களென்கின்றோம். இந்தப் பிராரப்த கர்மங்களின் பலனை இதே ஜன்மத்தி லனுபவிப்பதிலிருந்து அவை அடியோடு நாசமாகி விடுகின்றன. நித்ய கர்மங்களை மட்டு மனுஷ்டிப்பதால் பிரத்யவாயம் என்ற பாபம் வருவதற்கிடமில்லை. ஆகவே ஆத்மக் ஞானத்தின் எவ்வித உதவியுமின்றியே மோக்ஷ முண்டாகலாமன்றோ?

சித்தாந்தி—அதுவும் பொருத்த மற்றதே. ஏனெனில் முமுக்ஷுவுக்கு நடப்பிலிருக்கும் தேஹமானது உண்டாவதற்கு

இவனால் முந்தின ஜன்மங்களிற் செய்யப்பட்ட பற்பல கர்மங்களுள் இந்தச் சரீராரம்பத்திற்கு பயோகப்படக் கூடிய சிலகர்மங்கள் ஒன்று சேர்ந்து இந்தச் சரீரத்தை யுண்டுபண்ணுகின்றனவே யொழிய எல்லாக்கர்மங்களும் ஒரே ஸமயத்தில் ஒன்று சேர்ந்து விடுவதில்லை. சிலகர்மங்களுக்குச் சுவர்க்கமும், சிலகர்மங்களுக்கு நரகமும், சில கர்மங்களுக்கு மனிததேஹமும் பலனாக விருக்கும் பொழுது ஒன்றுக் கொன்று நேர்விருத்தமான பலனைத் தரும் கர்மங்கள் ஒன்று சேர்ந்து ஒரே தேஹத்தைத் தருவதாக எவ்விதம் ஒப்ப முடியும். ஆகவே மனித தேஹத்தைக் கொடுத்த கர்மங்கள் போக மீதமுள்ள பலனைத் தரக்கூடிய கர்மங்களும் பாக்கியிருப்பது பற்றி அவ்வித கர்மம் காரணமாய் வேறு சரீர முண்டாகக் கூடுமாதலாலும், அம்மீத கர்மங்கள் விரோத மில்லாமை பற்றி நித்ய கர்மானுஷ்டானத்தால் தேயாமைபற்றியும், பூர்வபக்ஷி கூறியபடி மோக்ஷ முண்டாவதற்கிடமில்லாத தாகிவிட்டது, ஆகவே இவ்விதம் கூறுவதும் பொருத்த மானதன்று. மேலும் எல்லா வேதங்களுடையவும் அர்த்தக்ஞானமுள்ளவனுக்கே கர்மானுஷ்டானத்தி லதிகாரம் என்று முன்னர் சொன்னதும் ஸரியானதன்று. ஏனெனில் வேதத்தின்பொருளை ஆசாரியனிடமிருந்து கேட்டலாலுண்டாகும் க்ஞானமானது ச்ருதக்ஞானமாகும். ஒருஸமயம் அந்தச்சுருதக்ஞானமானது கர்மாவுக்கு அங்கமாக ஆனபோதிலும் கூட அதைவிட வேறான உபாஸனாரூபமான க்ஞானம் மோக்ஷஸாதனமாக ஆகலாம். ஆகவேகர்மா ஒன்றினாலேயே மோக்ஷமுண்டாகலாமென்பது பொருத்த மில்லாததாகிறது. கர்மானுஷ்டானத்தில் பிரவிருத்திப் பதற்கு ஆசாரியனிடமிருந்து கேட்டறிந்த வேதார்த்தக்ஞானம் மட்டுமே போதுமானது. கர்மபிரவிருத்திக்கு உபாஸனாபேக்ஷை யில்லை. உபாஸனமோ வேதார்த்தக் ஞானத்தை விட உண்மையில் வேறாகவும், மோக்ஷ ரூபமான பலனை யுடையதாகவும், தனியாக விதிக்கப்பட்டிருக்கின்றது. மேலும் **श्रोतव्य:** = ஆத்மவிஷயகமாக சிரவணம் செய்யவேண்டும் என்று விதித்துப் பிறகு **मन्तव्य:**, **निदिध्यासितव्य:** என்றதால் மனனம், நிதித்யாஸனம் என்றஇவ்வி

ரண்டும் சுருதக் ஞானத்தை விடவேறாக உபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே கேவல கர்மங்களாலேயே மோக்ஷமுண்டாகின்றதென்று பூர்வபக்ஷி சொல்லுவது சரியாகாது.

பூர்வபக்ஷி— இவ்விதமாயின் வித்யையை யங்கமாயுடைய அங்கியான கர்மத்தாலேயே மோக்ஷமுண்டாகலா மென்று சொல்லுவோம். தனிக் கர்மமானது அனித்யமான பலனைத்தரக்கூடியதாயினும் வித்யையுடன் (உபாஸனத்துடன்) சேர்ந்த மஹிமையால் நித்தியமான மோக்ஷத்தை யுண்டுபண்ணும் சக்தியை அது அடைந்து விடுகிறது. உலகில் விஷமானது மரணத்தையும், குளிர் ஜ்வரத்தையும் தனிமையி லுண்டாக்கும் திறமையுடையதாக விருக்கின்றது. ஆயினும் மந்திரத்துடன் கூடின விஷமானது சரீரத்திற்குப் புஷ்டியையும், வெல்லம் சர்க்கரை முதலியவற்றுடன் கூடின தயிரானது ஜ்வரநிவிருத்தி, சரீரபலம் இவற்றையும் தருவதை நாம் அநுபவத்தில் காண்கிறோம். ஆகவே ஒருவஸ்துவுக்கு வேறொரு வஸ்துவினுடைய சேர்க்கையால் விபரீதமையுள்ள தோஷமானது விலகி எதிர்பாராதபடி வேறு விதமான பலனுண்டாவதை நாம் கண்கூடாகக் காண்கின்றோமன்றோ? இதுபோலவே வித்யையுடன் கூடின கர்மங்களால் மோக்ஷமானது ஏன் உண்டாகக் கூடாது. கட்டாயமுண்டாகலா மெனின்?

சித்தாந்தி—இதுவும் சரியானதன்று. ஏனெனில் "எது உண்டு பண்ணப்படுமோ அது நிச்சயம் அனித்யமாகவே தானாகும்", என்ற அநுபவபூர்வகமான நியாயத்தையொட்டி கர்மோபாஸனங்களா லுண்டுபண்ணப்படும் மோக்ஷமானது அனித்யமாகவே தானாகும். இதில் யாதும் தடையில்லை.

பூர்வபக்ஷி—இவ்விதம் மறுப்பது கேவலம் யுக்தி வாதமேயாகும் **नातिभारोस्ति नो बुद्धेः शास्त्रंचेत्तत्परं भवेत्** "சாஸ்திரமானது இது இவ்விதம் தான் என்று சொல்லிவிடுமாயின் அதற்குப் பிறகு நமது புத்திக்கு அவ்விஷயத்தில் அதிகம் கவலை எதற்காக" என்றபடி சாஸ்திர மானது வித்யா ஸஹிதமான கர்மங்களால் மோக்ஷமானது உண்டுபண்ணப்படுகிறது, அந்த மோ

க்ஷம் நித்தியமாகவுமிருக்கின்றது என்று கூறுமானால் அவ்விஷயத்தில் வேதசாஸ்திரங்களை நம்பின ஆஸ்திகன் சந்தேஹங்கொள்ளுவது நியாயமாகுமோ எனின் ?

ஸித்தாந்தி—சாஸ்திரமானது எந்த வஸ்து எவ்வித மிருக்கின்றதோ அவ்விதமே அவ்வஸ்து விஷயகமான க்ஞானத்தை மட்டு முண்டுபண்ணும் திறமை யுள்ளதே யின்றி இல்லாததை உண்டென்று சொல்லுவதற்கு எவ்வளவு சாஸ்திரத்தாலும் முடியாததொரு காரியமாகும். नह्यागमाश्शतमपि घटं पटयितुमीशते ஆயிரக்கணக்கான சாஸ்திரங்களாலும் குடத்தைத் துணியாக்க முடியாதன்றோ. ஆகவே ஆயிரம் சாஸ்திர மொன்றுசேர்ந்த போதிலும் நித்தியமாயுள்ளதை உண்டுபண்ணவும் முடியாது. உண்டு பண்ணப்பட்டதை நித்தியமாக்கவும் முடியாது. ஆகவே வித்யையை யங்கமாயுடைய அங்கியான கர்மத்தால் மோக்ஷமுண்டாவதாகச் சொல்லுவது மோக்ஷத்தை யனித்தியமாயொப்பினலல்லாது ஒருபொழுதும் முடியாததே. எந்த வாதியும் மோக்ஷத்தை அனித்தியமென்று கூறுவதில்லை. இதினின்றும் கர்மாவும், வித்யையும் சரிசமமாக ஒன்றுசேர்ந்து அதாவது: அங்கியாகவே (பிரதானமாகவே) இருந்து மோக்ஷத்தை யுண்டாக்கட்டும் என்ற வாதத்திற்கும் பதில் சொல்லப்பட்டதாக வாகிவிட்டது.

பூர்வபக்ஷி—பிரத்யகாத்மவஸ்துவே உண்மையில் பிரம்மமாயினும் அவித்யாதி பிரதிபந்தகத்தால் அவ்விதப் பிரும்மத்வமானது தடைப்பட்டிருக்கின்றதென்றும், பிரதிபந்தகமான அவித்யாதிகளின் நிவிருத்தியே மோக்ஷமென்றும் ஒப்பப்படுகிறது. ஆகவே மோக்ஷப் பிரதிபந்தகமான அவித்யாதிகளை வித்யை, (உபாஸனம்) கர்மம் ஆகிய இவ்விரண்டும் நிவிருத்திக்கக் கூடுமாதலால் வித்யை கர்மம் ஆகிய இவ்விரண்டும் மோக்ஷஹேதுவாக வாகலாமன்றோ?

ஸித்தாந்தி—அதுபொருந்தாது. ஏனெனில் நாமொன்றை ஒன்றிற்குச் சாதனமாகச் சொல்லும் பொழுது சாஸ்திரமும் அதைச் சாதனமாக அங்கீகரித்திருக்கின்றதா என விசாரித்தறிய வேண்டுவதவசியமானது. சாஸ்திராநுபவமூலம் கர்மாவானது வேு

ன்றிற்குச் சாதனமாயிருப்பதாய்த் தெரிகிறது. அதாவது: புரோடாசத்தின் உத்பத்திக்கும், வ்ரீஹி முதலியவற்றின் ஸம்ஸ்காரத்திற்கும், ஸோமலதையையிடித்துப் பிழிவதற்கும், பால்முதலியவற்றை யடைவதற்கும் கர்மாவானது ஸாதனமாகின்றதென்பது வைதிககர்மகாண்டங்களில் பிரஸித்தமாயிருக்கிறது. இதினின்றும் கர்மாவுக்கு உத்பத்தி:, ஆப்தி:, விக்ருதி:, ஸம்ஸ்க்ருதி: என்ற இந்நான்கும் பலன்களாகின்றனவே யின்றி அவித்யாதிகளின் நிவிருத்தியானது பலனாகவாகாதென்றேற்படுகிறது. மோக்ஷமோ, உத்பத்தி, விகாரம், ஆப்தி, ஸம்ஸ்காரம் என்ற பலன்களுக்கு நேர்மாறானதாக விருக்கிறது. ஆகவே கர்மங்கள் அவித்யாதிகளின் நிவிருத்தியை யுண்டுபண்ணும் வாயிலாக மோக்ஷஹேதுவாக எவ்விதமாகக்கூடும்?

பூர்வபக்ஷி—அவித்யா நிவிருத்தி யுண்டாவதில் கர்மாபேக்ஷையில்லை என்பதையும், கர்மங்களின் பலன் உத்பத்திமுதலியன வென்பதையும் நீங்கள் சொல்லுவீர்களானால் "**सूर्यद्वारेण विरजाः प्रयान्ति,**" "**तयोर्ध्वमायन्नमृतत्वमेति**" "எவ்வித தோஷமுமற்ற பிரும்மவித்துக்கள் ஸூர்யன் வழியாக மோக்ஷத்திற்குச் செல்லுகின்றனர். பிரும்ம ரந்திரத்திலுள்ள ஸுஷும்னு நாடியாலுயரக் கிளம்பி மோக்ஷத்தை யடைந்தனர்" என்று சுருதி உபதேசித்திருப்பதால் மோக்ஷமானது அடையக்கூடியதாகவே தானாகிறது. ஆகவே மோக்ஷமும் பிராப்யமாகவே தானாகக்கூடும்.

சித்தாந்தி—அவ்விதம் சொல்லுவது பொருந்தாது. ஏனெனில் பிரும்மத்தை ஆகாசாதி ஸகல ஜகத்திற்கும் காரணமென்றும் இதே சுருதி சொல்லி இருப்பதால் அது ஸர்வகதமாக (எங்கும் நிறைவு பெற்றதாக) ஏற்படுகின்றது. ஆகவே மோக்ஷத்தை யடைகின்றவனாக வாதியால் சொல்லப்படும் விக்ஞானாத்மா (ஜீவாத்மா) வானவன் பிரும்மத்தை விட வேறில்லாதவன் என்றே தான் கொள்ளவேண்டும். இவ்விதம் எங்கும் நிறைந்த பிரும்மத்தை விட எவ்விதத்திலும் வேறாக இல்லாதவன் எங்கு போவது? எதை அடைவது? ஆகவே எங்கும் நிறைந்த பிரும்மஸ்வரூபாவஸ்தானரூபமான மோக்ஷமானது எவ்விதம் பிராப்ய

மாக வாகக்கூடும். ஒருபொழுதுமாகாது. உலகில் போகிறவன் எவனோ அவனிருக்கும் தேசத்தை விடவேறான தேசத்திலிருக்கும் வஸ்துவை யன்றோ பிராப்யம் என்கிறோம். எது எதை விட வேறில்லையோ (அதாவது: எவ்விதத்திலும் வேற்றுமையில்லாத வஸ்துவானது எதுவோ) அது, அதையே அடைந்தது என்று சொல்வது யுக்தி அனுபவம் இவற்றிற்குப் பொருந்துமோ? எங்கும் நிறைந்த பிரும்மத்தை விடவேறில்லை என்பதை "तत्सृष्ट्वा, तदेवाऽनुप्राविशत्। क्षेत्रज्ञं चापि मां विद्धि அதை (ஆகாசாதி ஸர்வ பிரபஞ்சத்தை) சிருஷ்டித்து அதையே (ஆகாசாதி ஸர்வபிரபஞ்சத்தையே) தானும் பிரவேசித்திருக்கின்றது. எல்லாக்ஷேத்திரங்களிலுமுள்ள க்ஷேத்திரக்ஞனை நானாகவே அறிந்து கொள்" என்றதால் நூற்றுக்கணக்கான சுருதிஸ்மிருதிகளுமுபதேசிக்கின்றன. ஆனதுபற்றி எங்கும்நிறைந்த பிரும்ம ஸ்வரூபாவஸ்தானரூபமான மோக்ஷத்தைப் பிராப்யமாகச் சொல்லுவது சுருதி, அனுபவம் இவைகளுக்குப் பொருந்தாது.

பூர்வபக்ஷி—மோக்ஷமானது பிராப்யமல்ல என்று சொல்லுவீரேல் முற்கூறிய "विरजाः प्रयान्ति, अमृतत्वमेति" என்ற சுருதிக்கும், "स एकधा भवति, द्विधा भवति, स यदि पितृलोककामः, स्त्रीभिर्वा यानैर्वा" என்று முக்தனுக்கு மோக்ஷத்தில் கிடைக்கக்கூடிய ஐசுவரியத்தைக் கூறும் சுருதிகளுக்கும் விரோதம் வருமல்லவா ! ஆதல் பற்றி மேற்கூறிய சுருதியைக் கொண்டு மோக்ஷமானது பிராப்யமானதென்று ஏன் சொல்லக்கூடாது ?

சித்தாந்தி — ஸகுணம், என்றும், நிர்க்குணம் என்றும் பிரும்மத்தைச் சாஸ்திரங்களுபதேசிக்கின்றன. இதையே காரியப்பிரும்மமென்றும், காரணப்பிரும்மமென்றும் சொல்வதுண்டு. ஆகவே காரியப்பிரும்மப் (ஸகுணம்) பிராப்தியில் கதி, ஸ்திரீ முதலிய ஐசுவரியம் சம்பவிக்கலாமே யொழிய காரண (நிர்க்குண) பிரும்ம விஷயத்தில் மேற்கூறிய கதி முதலியவை. சம்பவிப்பதில்லை. காரணமான நிர்க்குணப்பிரும்மத்தைப் பற்றி உபதேசிக்குமிடத்து "एकमेवाऽद्वितीयम्" "यत्रान्यत्पश्यति" "तत्केन कं पश्येत्"

"பிரும்மமானது ஒன்றே. அதாவது: (1) **सजातीयविजातीयस्वगतभेदशून्यम्**" என்றும் "வேறாகயிருந்துகொண்டு ஒன்றைப்பார்க்கிறான் என்பது எதனிடத்திலில்லையோ," என்றும் "அப்பொழுது (எங்கும் நிறைந்த பிரும்மமாக ஆனபொழுது) எதைக் கொண்டு எதைப்பார்ப்பது" என்றும் சுருதிகள் பிரும்மத்தினிடத்தில் எவ்வித் துவைதவஸ்துவுமில்லை யென்பதை வற்புறுத்திக் கூறுகின்றன. ஆனதுபற்றி பிரும்மரூபமான மோக்ஷமானது பிராப்யமாக ஒருபொழுது மாகாது. ஆகவே, அவித்யாதிகளை நாசமாக்குவதில் கர்மங்களுக்கு எவ்வித உபயோகமு மில்லாமையாலும், எங்கும் நிறைந்த பிரும்மபாவரூபமான மோக்ஷமானது கர்மாவினால் உண்டுபண்ணக் கூடிய தல்லவாதலாலும், முக்தி விஷயத்தில் ஐக்கிய ஸாக்ஷாத்காரரூபமான வித்யையே ஹேதுவாகின்றபடியாலும், வித்யை கர்மம் இவ்விரண்டினுடைய ஸமுச்சயமானது மோக்ஷ ஹேது வென்பது பயனற்றவாதம் என்றேற்பட்டது.

மேலும் பிரும்ம ஸாக்ஷாத்கார ரூபமான வித்யைக்கும் கர்மங்களுக்கும் ஸமுச்சயமானது (சேர்க்கையானது) ஒருபொழுதும் சம்பவிக்கவும் முடியாது. ஏனெனில் வித்யையோ கர்த்தாவாக விருக்குந்தன்மை, போக்தாவாக விருக்கும் தன்மை முதலிய எவ்வித விசேஷமுமில்லாத சுத்த சைதன்னிய வடிவமான பரமாத்ம தத்துவத்தை விஷயமாகவுடையது. கர்மாவோ அதற்கு நேர் விரோதமான; கர்த்தா வாகவிருக்கும் தன்மை போக்தாவாக விருக்கும் தன்மைமுதலிய விசேஷங்களைமுன்னிட்டு செய்யப்பட வேண்டியதாகின்றது. ஆகவே கர்த்திருத்வம் முதலிய விசேஷ மற்ற பிரும்மக்ஞானத்திற்கும், கர்த்திருத்வாதி விசேஷத்தை முன்னிட்டுச் செய்யப்பட வேண்டிய கர்மாவுக்கும் ஸமுச்சயமான்து (சேர்க்கையானது.) எவ்விதமேற்படும். இவ்விதமே.

**अर्थी दक्षो द्विजोऽहं बुध इति मतिमान्कर्मसूक्तोऽधिकारी**
**शान्तोदान्तः परिव्राड्परमपरमो ब्रह्मविद्याधिकारी ।**

---

(1) இதன் பொருளை பிரும்மவல்லியில் விரிவாய் எழுதப்போவதால் இங்குஎழுதவில்லை.

इत्थं भेदे विवक्षन् समुदितमुभयं मुक्तिहेतुं सुशीतं
नीरं वैश्वानरं चोभयमहह तृषाच्छेदकामः पिबेत्सः ॥

என்றதால் மஹான்களும் இந்த ஞான கர்ம ஸமுச்சயவாதத்தைப் பரிஹஸித்திருக்கின்றனர். ஆகவே வித்யை, கர்மம் இவ்விரண்டினுள் ஒன்றை மித்யையென்றும் மற்றொன்றை ஸத்தியமானதென்றும் ஒப்பித்தீரவேண்டுவது அவசியமாகிறது. இவ்விதமேற்படும் பொழுது வெகு காலப்பழக்கத்தால் நேர்ந்துள்ள அக்ஞானத்திற்கு விஷயமான த்வைதப்பிரபஞ்சத்தை மித்யை யென்று சொல்லுவது தான் பொருத்தமானதாகின்றது. இதையே, (1) "यत्र हि द्वैतमिव भवति, मृत्योस्समृत्युमाप्नोति, अथ यत्रान्यत्पश्यति तदल्पम्, अन्योऽसावन्योऽहमस्मीति न स वेद, उदरमन्तरं कुरुते अथ तस्य भयं भवति" என்றது முதலிய நூற்றுக்கணக்கான சுருதிகளும் உபதேசிக்கின்றன. இவ்விதமே "एकमेवाऽद्वितीयम्, ब्रह्मैवेदं सर्वम्, आत्मैवेदं सर्वम्" முதலிய சுருதிகள் வஸ்து ஒன்றாயிருத்தலே சத்தியமானது என்பதையுபதேசிக்கின்றன. மேலும் கர்மானுஷ்டானமானது கர்த்தாவாகிய நான் ஆஜ்யத்தை ஸ்ருக் என்ற பாத்திரத்தினால் கர்மகாண்டங்களினின்றும் கிடைத்த அறிவு காரணமாய் என்னைவிட வேறான தேவதையையும் பொருட்டு பாத்திரத்தினின்றுமெடுத்து அக்னியில் ஹோமஞ் செய்கின்றேன் என்று பேதக்ஞான மில்லாதவனுக்கு ஒருபொழுதும் சம்பவிப்பதற்கிடமில்லை. வித்யா விஷயத்திலோ எவ்வித பேதக்ஞானமும் கூடாதென ஆயிரக்கணக்கான சுருதிகள் மறுத்துக் கூறுகின்றன. ஆனது பற்றி வித்யைக்கும், கர்மத்திற்கும் பரஸ்பரம் விரோதமேயின்றி ஸமுச்சயம் ஸம்பவிக்காது. இதிலிருந்து வித்யை கர்மம் இரண்டுஞ் சேர்ந்து மோக்ஷத்தை யுண்டாக்குகின்றது என்று பூர்வபக்ஷி சொன்னது ஒருபொழுதும் பொருத்த முள்ளதாகவே ஆகாது என்றேற்பட்டது.

---

(1) இந்தச் சுருதிகளின் பொருளை இவ்விடத்திலெழுதுவதானால் பின்னும் அதிகமாக பக்கம் வளருமாதலாலும் பின்னுள்ள விடங்களிலெழுதவேண்டியிருப்பதாலும் இங்கு எழுதவில்லை.

பூர்வபக்ஷி—கர்த்திருத்வம் முதலிய விசேஷங்களையே விலக்கி ஆத்மக்ஞானத்தைச் சுருதியுபதேசிக்குமாயின் கர்த்திருத்வம் முதலிய விசேஷங்களை முன்னிட்டு விதிக்கப்பட்ட கர்மகாண்ட சுருதிகளுக்கு விஷயமே யில்லாமலாகிவிடுவதால் அந்தச் சுருதிகள் வீணாகி விடுமன்றோ? சாஸ்திரங்களோ கர்மங்களை விதித்திருக்கின்றன. ஆதலால் பிரும்ம காண்டமான உபநிஷத்தானது சுருதியாகையால் அதை எவ்விதம் விலக்கவியலாதோ அவ்விதமே கர்மகாண்டங்களும் சுருதிகள் தானாகையால் அதையும் விலக்க முடியாது. ஆகவே பிரமாணபூதங்களான கர்மகாண்டங்களுக்கும் பிரமாண பூதங்களான பிரும்ம காண்டங்களுக்கும் நேர்விரோத மேற்படுவது நியாயமில்லாமைபற்றி நீர்சொல்லுவதை எவ்விதம் ஒப்ப முடியுமெனின்?

சித்தாந்தி—பூர்வபக்ஷி சொல்லுகிறபடி சுருதி விரோதமானது வராது. ஏனெனில்:—சுருதியானது பரமாத்ம வித்யையை யுபதேசிக்கத் தொடங்கி ஸம்ஸாரபந்தத்தினின்றும் புருஷனை விடுவிக்க வேண்டுமெனக் கருதி ஸம்ஸார ஹேதுவான அவித்யையை பரமாத்ம வித்யையினால் நிவிருத்தி செய்வதற்காக பரமாத்ம வித்யைப் பிரகாசப்படுத்தப் பிரவிருத்தித்திருக்கின்றது. ஆனது பற்றி விரோதமேற்படாது.

பூர்வபக்ஷி—இங்ஙனமாயினும், கர்த்தா முதலிய காரகபதார்த்தங்களை நிலையுள்ளதென உபதேசித்திருக்கும் கர்மசாஸ்திரங்கள் வித்யா சுருதியால் பாதிக்கப்படுமன்றோ? அதாவது: த்வைதபதார்த்தம் சத்யமானதன்று என்று உபதேசிக்கும் வித்யாசுருதிக்கும் த்வைதபதார்த்தம் சத்தியமானது என்று உபதேசிக்கும் கர்ம சுருதிக்கும் ஒன்றுக்கொன்று விரோதமேற்படுமன்றோ எனின்?

சித்தாந்தி — பொதுவாய் சாஸ்திரமனது அநாதிகாலந் தொட்டு பிரம மூலமாயேற்பட்டிருக்கும் கர்த்திருத்வாதிகாரகங்களை வைத்துக்கொண்டு முமுக்ஷுக்களுக்குப் பாபநிவிருத்திக்காக நித்யகர்மங்களையும், ஸ்வர்க்காதி பலனில் ஆசையுள்ளவர்க்கு ஜ்யோதிஷ்டோமம் முதலிய காம்யகர்மங்களையும் விதிக்கின்றதே

யொழிய கர்த்திருத்வம் முதலிய காரகங்கள் ஸத்திய மென்று வது, அல்லது மித்தியை யென்றுவது சொல்வதற்குப் பிர விருத்திக்கவில்லை. அதாவது : முதலில் கர்மகாண்டமானது ஜீவனுக்கு அனாதிகாலந்தொடங்கி பிரமமூலமேற்பட்டிருக்கும் கர்த்திருத்வம் முதலியவற்றை சத்தியமானதென்றோ அசத்திய மானதென்றோ ஒன்றுமே சொல்லாது ஜீவனுக்கு பிரமமூலமேற் பட்ட கர்த்திருத்வம் முதலியவற்றை வைத்துக்கொண்டே முமு க்ஷுவாயுள்ளவர்க்கு சித்தசுத்திக்கு வேண்டிய நித்திய கர்மங் களையும், பலேச்சையுள்ளவர்க்கு பின்னர் வைராக்கியத்தையுண் டாக்கவேண்டி காம்யகர்மங்களையும் விதித்திருக்கின்றது. ஆனது பற்றிகர்மகாண்டங்கள் கர்த்திருத்வம் முதலிய வற்றை சத்திய மென்று உபதேசித்திருந்தா லல்லவோ கர்த்திருத்வம் முத லியதை மித்யையென்று உபதேசிக்கும் பிரும்மகாண்டத்துடன் விரோதத்தையடையும். ஆகவே கர்மகாண்டமும், பிரும்மகாண்ட மும் ஒரேபொருளை யுபதேசிப்பதால் இவ்விரண்டிற்கும் எவ்வித விரோதமும் எற்படுவதிற்கில்லை. மேலும் துரித ரூபமான பிரதி பந்தகம் விலகாதவனுக்கோ வித்யையுண்டாவதற்கிடமில்லை. பிரதி பந்தகம் தேயத்தேய வித்யோத்பத்தியானது பெருகிக்கொண் டே வருகின்றது. அத்தகைய வித்யையினின்றும் அவித்யா நிவிருத்தியுண்டாகின்றது. அவ்வித்யை நிவிருத்தி யடையவே நிச்சேஷமான ஸம்ஸாரநிவிருத்தி யேற்பட்டுவிடு கின்றது. ஆக வே கர்மகாண்டமானது, பரம்பரையாய் மோக்ஷத்தில் முடிவை யடைகின்ற துரிதக்ஷயத்திற்கும் வைராக்யஹேதுவான ஸ்வர்க் காதிபலனுக்கும் சாதனமான கர்மங்களை உபதேசிப்பதில் கருத் துள்ளதாகையால் கர்மகாண்டங்களும் புருஷார்த்தமான மோ க்ஷத்தை யுபதேசிப்பதாகவே தான் ஏற்படுகிறது. ஆனால் பிரும் மகாண்டமானது நேரில் அவித்யா நிவிருத்திவாயிலாக ஆத்மதத் துவத்தையும், கர்மகாண்டமானது பரம்பரையாய் துரிதக்ஷயம், வைராக்யம் இவற்றையுபதேசிக்கும் வாயிலாக அவித்தியா நிவி ருத்தியேற்படுவதற்குரிய மார்க்கத்தையும் உபதேசிப்பதாக ஏற்படுகின்றது.

மேலும், அனாத்மங்களான (ஆத்மவஸ்துவுக்குப்புறம்பான) வஸ்துக்களிலேயே திருஷ்டியுள்ளவனுக்கு அந்த அனாத்மவஸ்துக்களில் காமனையுண்டாகின்றது. அவ்விதம் காமனையுள்ளவன் அதற்கு வேண்டிய கர்மங்களைச் செய்கின்றான். அக்கர்மங்களினின்றும் ஜனனமரண ரூபமான ஸம்ஸாரமுண்டாகின்றது. இதற்கு நேர்மாறாக ஜீவபிரும்ம ஐக்கியத்தில் விருப்பமுள்ளவனுக்கு இதை விடவேறான வஸ்துவில்லாததால் காமனையுண்டாவதற்கிடமில்லை. ஆத்மாவானது தனது பிரத்யகாத்மாவானதுபற்றி காமமுண்டாவதற் கிடமில்லாமல் போகவே ஸ்வரூபாவஸ்தான ரூபமான மோக்ஷம் நிலைபெறுகின்றது. ஆனதுபற்றியும் வித்தையையும், கர்மாவும் வெவ்வேறான விஷயங்களை உடைத்தாயிருப்பது பற்றி ஒன்றுக் கொன்று நேர்விரோதமான வைகளாதலால் இவ்விரண்டிற்கும் ஸமுச்சயமானது ஸம்பவிப்பதற்கிடமில்லை. வித்யையானது அவித்யா நிவிருத்தித்வாரா ஆத்மப்பிராப்தி ரூபமான மோக்ஷத்தை யுண்டுபண்ணும் விஷயத்தில் எவ்விதத்திலும் தனக்கு விருத்தமான கர்மங்களை யபேக்ஷிப்பதில்லை. ஆயினும் வித்யையானது (அகண்டாகாராந் தக்காரண விருத்தியானது) உண்டாவதற்குப் பிரதிபந்தக நிவிருத்தி வாயிலாக நித்திய கர்மங்களின் உதவி அவசியமாகவே யிருக்கின்றது. ஆனது பற்றி இந்தப் பரமாத்மவித்யாப் பிரகரணத்தில் கர்மங்களும் உபதேசிக்கப்பட்டன. இதினின்றும் கர்மகாண்ட சுருதிகளுக்கு பிரும்மகாண்ட சுருதியுடன் எவ்விதவிரோதமும் கிடையாது. ஆகவே பிரும்மவித்யையொன்றினாலேயே ஸ்வரூபாவஸ்தானமென்ற மேலான சிரேயஸ்ஸானது (மோக்ஷமானது) ஏற்படுகின்றது என்பது திண்ணம்.

## இனி ஆசிரமங்களைப்பற்றியவிசாரம்.

பூர்வபக்ஷி—இவ்விதமாயின், கர்மங்கள் மூலமே வித்யையுண்டாவதாலும், கிருஹஸ்தாசிரமம் ஒன்றிலேயே எல்லாக்கர்மங்களும் விதிக்கப்பட்டிருப்பதாலும், கிருஹஸ்தாசிரமம் ஒன்றே போதுமானதாதலால் ஸன்னியாஸாசிரமம் ஒன்றுதனியாய் வேண்டுவதில்லை என்றேற்படுகின்றது. இவ்விதம் சொல்லுவ

தற்கு "यावज्जीवमग्निहोत्रंजुहोति" உயிருள்ளவரை அக்னிஹோத்திரஞ் செய்தல்வேண்டும் என்பது முதலிய சுருதிகள் மிக்க அநுகூலங்களாகவே யிருக்கின்றன.

சித்தாந்தி—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் கர்மங்கள் அனேகவிதங்களாக விருப்பதே அதன் காரணமாகும். அதாவது: அக்கினிஹோத்திரம் முதலியன தான் கர்மங்கள், மற்றவைகர்மங்களல்லவென்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில் வேறு ஆசிரமங்களில், பிரும்ம சரியம், தபஸ், ஸத்தியவசனம், சமம், தமம், அஹிம்ஸா, முதலிய கர்மங்கள் சாஸ்திர விஹிதங்களாகக் காணக்கிடக்கின்றன. அத்துடன் தாரணை, தியானம் முதலியனவும் வேறு ஆசிரமங்களிலுண்டு. ஆகவே இந்தக்கர்மங்களே வேறு கர்மங்களின் கலப்பில்லாமல் வித்யோத்பத்தியில் நெருங்கின ஸாதனங்களாக ஆகலாம். இதே சுருதியும் "तपसाब्रह्मविजिज्ञासस्व" "தவத்தால் பிரும்மத்தை யறிய முயற்சிப்பாயாக" என்று சொல்லப் போகிறது. மேலும் வேறு ஜன்மங்களிற் செய்த கர்மங்களினின்றே கிருஹஸ்தாசிரமத்தை யடையாமலே ஒருவனுக்கு வித்யோத்பத்தி யேற்படலாகும். கிருஹஸ்தாசிரமமானது கேவலம் கர்மானுஷ்டானத்திற்காக மட்டுந்தான் ஏற்பட்டது. கிருஹஸ்தாசிரமத்திற் செய்யப்படும் கர்மங்கள் மூலம் உண்டாகும் வித்யோத்பத்தியானது ஒருவனுக்கு பிரும்ம சரியாசிரமத்திலிருக்கும் பொழுதே உண்டாகுமானல் அவன் விஷயத்தில் கிருஹஸ்தாசிரமமானது எவ்விதப் பயனையுமடையாதென்பதில் என்னதடை.

மேலும், "पुत्रेणायं लोकः, कर्मणा पितृलोकः, विद्यया देवलोकः" என்றசுருதிகள் கிருஹஸ்தா சிரமத்திலிருந்துகாம்ய கர்மானுஷ்டானம் செய்பவனுக்கு, புத்திரனல் இந்தப் பூலோகப் பிராப்தியையும், கர்மங்களால் பிதுருலோகப் பிராப்தியையும், கர்மாங்கமாகவோ, ஸ்வதந்திரமாகவோ செய்யப்படும் உபாஸனத்தால் பிரும்மலோகப் பிராப்தியையும் பலனுக வுபதேசிக்கின்றன. மேற்கூறிய பூலோகம், பிதுரு லோகம், தேவலோகம் இவற்றி லாசையில்லாதவனும், நித்ய சித்தமான ஆத்மாவாகிற லோகத்தில் திருஷ்டியுள்ளவனும், கர்மங்களில் எவ்விதப்பிரயோஜனத்தையும் எதிர்பாராதவனுமான உத்தமாதிகாரிக்கு கர்மங்களில் எவ்விதம்

பிரவிருத்தியுண்டாகும்? கர்மங்களில் பிரவிருத்தி யுள்ளவனுக்கே கிருஹஸ்தாசிரமப்பிராப்தி யென்பது பூர்வபக்ஷியும் ஒப்பினவிஷயம். மேலும், கிருஹஸ்தாசிரமத்தை யடைந்து கர்மானுஷ்டானம் செய்துவருபவனுக்கு வித்யோத்பத்தி யுண்டாகி வித்யையின் முதிர்ச்சியால் (பரிபாகத்தால்) விரக்தியையடைந்து இனி கர்மங்களால் எவ்விதப்பிரயோஜனமு மேற்படுவதற்கில்லை என்று எண்ணுகின்றவனுக்கு, தான் அனுஷ்டிக்கும் கர்மங்களினின்றும் நிவிருத்தியேற்பட்டுவிடுகின்றது. இவ்விஷயம் "**प्रव्रजिष्यन्वाअरेऽयमहमस्मात्स्थानात्**" "ஓமைத்ரேயி! நான் இந்த கிருஹஸ்தாசிரமத்தினின்றும் நீங்கி வேறுஸ்தானத்தை (அதாவது: ஸன்னியாஸத்தை) அடைய வெண்ணங்கொள்ளுகிறேன்" என்றபிருஹதாரண்யகோபநிடதத்திலுள்ள கிருஹஸ்தரான யாக்ஞ்ய வல்கியருடைய வசனத்தினின்றும் தெளிவாயேற்படுகின்றது. ஆதல்பற்றி கிருஹஸ்தா சிரமத்தைத் தவிற வேறு ஆசிரமம் வேண்டுவதில்லை யென்றும் சொல்லுவதற்கில்லை.

பூர்வபக்ஷி—பொதுவாய் வேதங்களைக் கவனிக்கும் பொழுது அக்னிஹோத்திரம் முதலிய கர்மங்களிலேயே சுருதியானது அதிகம் முயர்ச்சி செய்திருப்பது விளங்கும். அக்னிஹோத்திராதி கர்மங்களோ வெகு ஸாதங்களைக் கொண்டு செய்யவேண்டுவதாயிருப்பதுடன், மிக்கப் பாடுபட்டு செய்யவேண்டியவைகளாகவும் இருக்கின்றன. வேறு ஆசிரமங்களில் பிரசித்தமான தபஸ் பிரும்மசர்யம் முதலிய கர்மங்கள் கிருஹஸ்தா சிரமங்களிலும் உள்ளவைகளானது பற்றியும், வேறு ஆசிரமங்களில் அக்னிஹோத்திரம் முதலிய ஸாதனங்களில்லாமை பற்றியும் கிருஹஸ்தாசிரமியை இதர ஆசிரமிகளுடன் ஸரிஸமனாகச் சொல்லுவது யுக்தமாகாது.

சித்தாந்தி—அக்னிஹோத்திராதி கர்மங்களிலேயே சாஸ்திரங்களுக்கு அதிகம் ஆதரவிருப்பதாயும், அதனால் கிருஹஸ்தாசிரமம் ஒன்றுதானுண்டென்று சொல்ல வேண்டுமென்று சொன்னது பொருந்ாது. ஏனெனில் வேறு ஜன்மங்களிற் செய்த அக்னிஹோத்திரம் முதலிய கர்மங்களும், பிரும்மசர்யம் முதலியனவும் இந்த ஜன்மத்தில் வித்யோத்பத்தியை யுண்டுபண்ணலாம். எவ்வி

தமெனின்! சிலர் பிறக்கும் பொழுதே தீவிர வைராக்கிய முள்ள வர்களாகக் காணப்படுகின்றனர். சிலர் இதே ஜன்மத்தில் கர்மாக் களில் பிரவிருத்தித்த போதிலும் வைராக்கியத்தையே யடையா மலிருப்பதுடன், பிரும்மவித்யையில் தீவிர த்வேஷமுள்ளவர் களாகவும் காணப்படுகின்றனர். ஆகவே வேறுஜன்மங்களிற் செய்த கர்மங்களினின்றும் வைராக்கியத்தை யடைந்த வர்களுக்கு வேறு ஆசிரமப்பிராப்தியே ஆவசியம்என்று எண்ணப் படுகின் றது. மேலும் புத்திரன், பசு, ஸ்வர்க்கம், பிரும்மவர்ச்சஸம் முத லிய கர்மபலன்கள் அனந்தமாகையாலும், அந்தந்த பலன்களில் புருஷர்களுக்கு இயற்கையில் ஆசையதிகமேற்படுவது ஸஹஜமா கையாலும், அதற்குவேண்டி கர்மகாண்ட சுருதி அந்தந்த பலன் களுக்குச் சாதனங்களான கர்மங்களை யுபதேசிப்பதில் அதிகம் அக்கரைகொண்டிருக்கின்றது என்றேற்படுகின்றது. மேலும் லோ கத்திலோ "இது எனக்குண்டாகட்டும், அது எனக்குண்டா கட்டும், இது எனக்குண்டாகட்டும்" என்று எதிலும் ஆசை மேலிட்டிருப்பதை நாம் அனுபவத்தில் காண்கிறோம். மேலும் கர்மங்கள் பிரும்மவித்யைக்குச் சாதனங்களாகின்றன வென்பதை நாமும் அங்கீகரித்திருக்கிறோம். ஆன்து பற்றி உபாயத்தில் முயர்ச் சித்தல் வேண்டுமே யொழிய பலனில் முயர்ச்சி செய்தல் அவ வசியமானது. சாதனமிருந்தால் பலன்தனக்குத்தானே வருமன் றோ? ஆதலால் கர்மகாண்டமானது வித்யோத்பத்திக்கு நெருங் கின ஸாதனங்களான கர்மங்களை யுபதேசிப்பதில் அதிகம் அக் கரைகொண்டிருப்பதாக யேற்பட்டது.

பூர்வபக்ஷி—முன் ஜன்மங்களில் நேர்ந்த துரித(பாபம்)மாகிற பிரதிபந்தக நிவிருத்தியானது கர்மங்களாலுண்டானபிறகு பிரும் மவித்யை யுண்டாகின்றது என்று ஒப்புவதானால் கர்மங்களை விடத்தனியாய் உபநிஷத் சிரவணத்தில் அதிகம்முயர்ச்சி யெடுக் கவேண்டிய அவசியமில்லை யன்றோ?

சித்தாந்தி—பிரதிபந்தகநிவிருத்தி யேற்படுவது ஒன்றி லிருந்தே பிரும்மவித்யையானது உண்டாகிவிடுகின்றது என்றும், ஈசுவரப்பிரஸாதம், தவம், பிரும்மசர்யம் தியானத்யனுஷ்டானம்

இவற்றாலுண்டாவதில்லை யென்றும் ஒருநியமம் கூறமுடியாது. அஹிம்ஸை, பிரும்மசர்யம் முதலியவைகளும், பிரும்மவித்யை யுண்டாவதில் உபகாரத்தைச்செய்யக்கூடியவைகளாகவே தானு கின்றன. ஆனால் சிரவண, மனன, நிதித்யாஸனங்கள் பிரும்ம வித்யைக்கு நேர் ஸாதனங்களாகின்றன. ஆகவே சிரவணாதிகளில் அவகாசத்தைத் தரும் வேறு ஆசிரமங்களும் அவசியமிருக்க வேண்டுமென்றே யேற்பட்டுவிட்டது. எல்லா ஆசிரமிகளுக்கும் பிரும்மவித்யையில் அதிகாரமுண்டு. பரமசிரேயஸ்ஸான மோக்ஷ மானது பரப்பிரும்ம வித்யையொன்றினால் தானுண்டாகின்றது என்பது திண்ணம் (எ—று)

அத்வைதமதப்படி பதினொன்றாவது அநுவாகம் முற்றிற்று.

(வி×ம்) (मन्त्र;) वेदमनूच्याचार्यो-एवमुचैतदुपास्यम् ॥

(ப—ரை) आचार्य:= ஆசாரியன் वेदमनूच्य= வேதாத்யயனஞ் செய்து வைத்து अन्तेवासिनम्= சிஷ்யனை अनुशास्ति= பின்வரும் தர்மங்களை உபதேசிக்கவேண்டும். स्वाध्यायान्मा प्रमद:= வேதாத் யயனஞ் செய்யும் விஷயத்தில் தவறாதே. அவ்விஷயத்தில் ஸாவ தானனாயிருப்பாயாக என்று பொருள் आचार्याय......व्यवच्छेत्सी:। ஆசாரியனுக்குப் பிரியமானவற்றை குரு தக்ஷிணை யாகக் கொடுத்து புத்திர சந்ததிக்கு விச்சேதம்வாராவண்ணம் பாரியை யை விவாஹஞ்செய்து கொள்ளுவாயாக. कुशलात्= தேவதார்ச் சன ரூபமான மங்களாசரணத்தினின்றும் தவறாதே. भूत्यै= ஐசுவரியத்திற்கு வேண்டி கர்மாவைச் செய். எவ்விதசிரே யஸ்ஸுக்கும் ஐசுவரியமே சாதனமானது என்று கருத்து. मातृदेवो भव= தேவனைப்போல மாதாவைப்பூஜிப்பாயாக. இவ்விதமே மேலுள்ள पितृदेवो भव= என்றது முதலியவாக்கியங்களுக்கும் பொருள் கொள்ளவேண்டும். यान्यस्माकं सुचरितानि= சிஷ்டாசாரங் களிலும் சுருதிஸ்மிருதிகளுக்கு விரோதமில்லாத நடத்தை களையே கிரஹித்துக்கொள்ளவேண்டுமேயல்லாது, லோபத்தை முன்னிட்ட நடத்தைகளை சிஷ்டாசாரமாக எண்ணுதல் தகா. ये के चास्मच्छ्रेयांसो ब्राह्मणा: । तेषां त्वयासने न प्रश्वसितव्यम्॥ தன்னை விடப் பெரியோர்களான பிராம்மணர்களுடைய படுக்கை முதலிய

ஆசனத்தில் அவர்களுக்கு ஸமானமாக விச்ராந்தி செய்து கொள்ளாதே. **श्रिया देयम्** தானஞ்செய்யும் பொழுது முகசோபையுடன் கொடு. அதாவது: முகத்தைச் சுணுக்கிக்கொண்டு கொடுக்காதே **भिया देयम्**=நன்றாய் தானஞ்செய்யாவிடில் தோஷம் வரும் என்ற பயத்துடன் கொடுக்கவேண்டும் என்றுபொருள். **संविदा देयम्**= சங்கல்ப பூர்வகமாகவே தானஞ்செய்ய வேண்டும் என்று பொருள். **अथ यदि ते कर्मविचिकित्सा वृत्तविचिकित्सा वा स्यात्-कर्म**= அக்னிஹோத்திரம் முதலியவற்றிலோ **वृत्त**= சிஷ்டாசாரப் பிரமாணமான ஹோளாகா (வஸந்தோத்ஸவம்) முதலியவற்றிலோ சந்தேஹம் வருமானால் என்று பொருள் **संमर्शिन:**= விசாரஸமர்த்தர்கள் என்றுபொருள். **युक्ता:**=வேதசாஸ்திரங்களில் பற்றுள்ளவர்கள். **आयुक्ता:**= லௌகிகமான காரியங்களிலும் சாமர்த்தர்கள் என்றுபொருள். **अलूक्षा:**= குரோதம், லோபம் முதலியன வற்றவர்கள். **अभ्याख्याता:**= அபிசஸ்தர்கள் (குற்றமுள்ளவர்) என்றுபொருள். **आदेश:**=சாஸனம். அதாவது:கட்டளை ராஜனுடைய ஆக்ஞைக்கொப்பானது என்று பொருள். **उपदेश:**= ஹிதைஷியான பிதாமுதலியோரின் வசனம். **वेदोपनिषत्**= வேதங்களின் ரஹஸ்யோபதேசம். **एतदनुशासनम्**= சிஷ்யனைக் குறித்து ஆசாரியன் செய்ய வேண்டிய அனுசாஸனமிது. **एवमुपासितव्यम्**= இவ்விதம் கட்டளை யிட்டபடியே செய்யவேண்டும் என்று பொருள். இவ்விதமே தான் செய்ய வேண்டுமென்று பொருள்.

விசிஷ்டாத்வைதமதப்படி பதினொன்றாவது அனுவாகம் முற்றிற்று.

## பன்னிரண்டாவது அனுவாகம்.

(அ×ம்) அவதாரிகை—ஆரம்பத்தில் **शन्नो...शान्ति:**=என்றதால் இதுவரை கூறிய வித்யாப்ராப்தி விஷயத்தில் நேரும் இடையூறுகளைப் போக்குவதற்காக சாந்தியானது படிக்கப்பட்டது. இனி, பிரும்மவல்லியில் உபதேசிக்கப்படும் பரப்பிரும்மவித்யாப்பிராப்தி விஷயத்தில் நேரும் இடையூறுகளைக் குறைப்பதற்காகச் சாந்தி மந்திரமானது படிக்கப் படுகின்றது.

**(मन्त्र:) शं नो मित्रश्शं वरुण:। शंनो भवत्वर्यमा। शं न इन्द्रो बृहस्पति:। शं नो विष्णुरुरुक्रम:। नमो ब्रह्मणे। नमस्ते वायो।**

**त्वमेव प्रत्यक्षं ब्रह्मासि। त्वामेव प्रत्यक्षं ब्रह्मावादिषम्। ऋत-मवादिषम्। सत्यमवादिषम्। तन्मामावीत्। तद्वक्तारमावीत्। आवीन्माम्। आवीद्वक्तारम्। ओंशान्तिश्शान्तिश्शान्तिः। सहनाववतु। सहनौ भुनक्तु। सहवीर्यं करवावहै। तेजस्विना-वधीतमस्तु। मा विद्विषावहै। ओं शान्तिश्शान्तिश्शान्तिः॥**

(ப—ரை) **नौ**=சிஷ்யன், ஆசாரியன் இருவர்களையும் **सह**=சேர்த்தே (**ब्रह्म** பரப்பிரும்மமானது). **अवतु**=காப்பாற்றட்டும். **सह नौ भुनक्तु**=இருவரையும் காப்பாற்றட்டும். **सह**=இருவரும் சேர்ந்தே. **वीर्यम्** வித்யாநிமித்தமான சாமர்த்தியத்தை. **करवावहै**=சம்பாதித்துக் கொள்ளுவோமாக **नौ**=எங்களிருவர்களாலும் **अधीतं**=அத்யயனஞ் செய்யப்பட்ட வேதபாகமானது **तेजस्वि**= நன்கு அத்யயனஞ் செய்யப்பட்டதாக, அதாவது: அர்த்தக்ஞானயோக்யமாக **अस्तु**=இருக்கட்டும். **माविद्विषावहै**= சிஷ்யனான நானும் என்னுடைய ஆசாரியனுமான நாங்களிருவரும் ஏதோ தவறுதலாலேற்படும் அபவாதத்தால் துவேஷத்தை யடையாமலிருப்போமாக **शान्तिः, शान्तिः, शान्तिः,** இதன் பொருள் முன்னமே சொல்லப்பட்டிருக்கிறது. இனிசொல்லப்படும் பரமாத்ம வித்யாவிஷயத்தில் நேரும் இடையூறுகளைப் போக்குவதற்காக இந்தச்சாந்தி படிக்கப்படுகிறது. எவ்வித இடையூறுமின்றி வித்யாப்பிராப்தியுண்டாகவேண்டும் என்றுகருத்து. ஏனெனில் அத்தகையவித்யாபிராப்தியாலன்றோ பரமசிரேயஸ்ஸான மோக்ஷமுண்டாகின்றது.

வித்யாரண்யதீபிகை—**शंनो मित्रः......शान्तिः** இந்தமந்திரத்திலுள்ள பதங்களுக்கு ஆரம்பத்திலேயேவிரிவாய் பொருள் கூறப்பட்டிருக்கிறது. இங்கு கருத்துரை மட்டும் எழுதப்படுகிறது. சிக்ஷாவல்லியின் ஆரம்பத்தில் இதுவரைபிரும்மத்தை உபதேசிக்காததால் **ब्रह्मवदिष्यामि**= இனி உபதேசிக்கப் போகிறேன் என்று படிக்கப்பட்டது. அவ்விதமே விக்ன மில்லாதிருப்பதற்கு வேண்டியும் **तन्मामवतु**= அது என்னை ரக்ஷிக்கட்டும் என்றும் படிக்கப்பட்டது. முடிவிலோ, பிரும்மவிஷயமான உபதேசஞ் செய்திருப்பதாலும், விக்னங்கள் விலகிவிட்டபடியாலும், **अवा-**

ஷிஷம் சொன்னேன் என்று சொல்லப்பட்டது. விக்கின நிவிருத்தி யேற்பட்டிருந்தும் திரும்பவும் அதைப்படித்ததானது கிருத க்னத்துவதோஷத்தை(செய்நன்றி மறத்தல் என்றதோஷத்தைப்) போக்குவதற்காகவே என்று கொள்ளவேண்டும். அவ்விதமில் லாவிடில் மித்ரன், வருணன் முதலியதேவர்களால் செய்யப்பட்ட உபகாரத்தை அறியாதவனுன முமுக்ஷுவுக்கு செய்நன்றி மறத் தல் என்ற தோஷம் வரும்.

ब्रह्मघ्ने निष्कृतिर्दृष्टा कृतघ्नेनास्ति निष्कृतिः॥ "பிரும்மஹத்தி செய்த வனுக்குப் பிராயச்சித்தமுண்டு. செய்நன்றி மறந்தவனுக்குப் பிராயச்சித்தம் கிடையா" என்று ஸ்மிருதிவசனமிருப்பதால் அத்தகையதோஷம் வராவண்ணம் நடக்கவேண்டுவது அவசிமா கிறது. அவ்வித கிருதக்னத்வ தோஷமானது நேருமானுல் எவ் வளவு ஸாதனங்களை இவன்பூர்ணமாக அனுஷ்டித்தபோதிலும் மேற்கூறிய தோஷத்தால் அதன் பலன்வராது போய்விடும். அவ்விதப் பிரதிபந்தம் வரவேண்டாமெனக்கருதியே சாந்தி யானது உண்டாகிவிட்டதாகக் கூறும் வயிலாக தேவர்களால் செய்யப்பட்ட உபகாரமானது நினைவுக்குக் கொண்டுவரப் பட்டது. (எ—று)

அத்வைத மதப்படி பன்னிரண்டாவது அனுவாகம் முற்றிற்று.

(வி×ம்) (அ—கை) இதுவரை படிக்கப்பட்ட உபநிஷத்துக்களின் முடிவில் படிக்கவேண்டிய சாந்தியானது படிக்கப் படுகின்றது.

**(मन्त्रः) शंनोमित्रः.........शान्तिः ॥**

இந்த வாக்கியங்களுக்கு முன்னரே உரையெழுதப்பட்டிருக் கிறது. இதுவரை தனக்கு நிகழ்ந்தவற்றைக்குறிக்கவேண்டியே இங் கு **अवादिषम्, आवीत्** முதலியவாக்கியங்கள் படிக்கப் பட்டன.

விசிஷ்டாத்வைத மதப்படி பன்னிரண்டாவது அனுவாகம் முற்றிற்று.

**சிக்ஷாவல்லீ முற்றிற்று.**

# இரண்டாவது ஆனந்தவல்லீ.

## முதலாவது அனுவாகம்.

(அ—கை) சிக்ஷாவல்லியில் கர்மங்களுடன் எவ்விதவிரோதமுமில்லாத ஸம்ஹிதா விஷயங்களான உபாஸனங்களுபதேசிக்கப்பட்டன. பிறகு பிரும்மலோகப் பிராப்தியைப் பலனாகவுடையதும், வியாஹ்ருதியைக்கொண்டு செய்யவேண்டுவதுமான ஸகுணப் பிரும்மோபாஸனமானது உபதேசிக்கப்பட்டது. இத்தகைய கர்மஸமுச்சித (சேர்ந்த) ஸகுணப்பிரும்மோபாஸனத்தால் மட்டும் ஸம்ஸாரபீஜமான (காரணமான) அவித்யை முதலியவற்றிற்கு முற்றிலும் நிவிருத்தியானது ஒரு பொழுதும் உண்டாக மாட்டாது. ஆனதுபற்றி எல்லாவிதமான உபத்திரவங்களுக்கும் காரணமான அக்ஞானத்தின் நிவிருத்தி யுண்டாவதற்காக எவ்வித உபாதி ஸம்பந்தமுமற்ற சுத்த பரமார்த்த வஸ்து க்ஞானோபதேசம் செய்யவேண்டி இந்த ஆனந்தவல்லியானது ஆரம்பிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) ब्रह्मविदाप्नोति परम्। तदेषाऽभ्युक्ता। सत्यं ज्ञानमनन्तं ब्रह्म। योवेद निहितं गुहायां परमे व्योमन्। सोऽश्नुते सर्वान्कामान्सह। ब्रह्मणा विपश्चितेति। तस्माद्वा एतस्मादात्मन आकाशस्संभूतः। आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी। पृथिव्या ओषधयः। ओषधीभ्योऽन्नम्। अन्नात्पुरुषः। स वा एष पुरुषोऽन्नरसमयः। तस्येदमेव शिरः। अयं दक्षिणः पक्षः। अयमुत्तरः पक्षः। अयमात्मा। इदं पुच्छं प्रतिष्ठा। तदप्येष श्लोको भवति ॥ १ ॥**

(ப—ரை) **ब्रह्मवित्**=பிரும்ம ஸாக்ஷாத்காரத்தை யடைந்தவன் (அதாவது: ஜீவப்பிரும்மைக்ய விஷயமான அகண்டாகாராந்தக் கரணவிருத்தியை யடைந்தவன்) **परम्**=மேலானதை (அதாவது: முற்கூறிய அகண்டாகார விருத்தியும் விலகி அதற்கடுத்தபடியாயுள்ள ஸ்வரூபாவஸ்தானத்தை) **प्राप्नोति**=அடைந்தவனாகின்றான்.

तत्=அந்தச்சூத்திர ரூபமான பிராம்மண வாக்கியத்திலுபதேசிக்கப்பட்ட பொருளைப்பற்றியே एषा=பின்வரும் ருக்கு अभ्युक्ता=சொல்லப்பட்டிருக்கிறது. सत्यंज्ञानमनन्तं ब्रह्म सत्यम्=நிலைத்துள்ளதாயும் (அதாவது: முக்காலத்திலும் அழிவுள்ள வஸ்துவைவிட வேறானதாயும் தான் முக்காலத்திலும் நிலைத்துள்ளதாயும்) ज्ञानम्=அறிவுருவமாயும் (அதாவது: தன்னைப் பிரகாசப்படுத்துவதற்கு மற்றொன்றின் பிரகாசத்தை யெதிர்பார்க்கும் வஸ்துவைவிட வேறானதாயும், தான் பிரகாச வடிவமானதாயும்) अनन्तम्=குறைவற்றதாயும் (அதாவது: பலவிடத்திலும் பலவிதத்திலும் குறைவுள்ள வஸ்துவைவிட வேறானதாயும் தான் எவ்விடத்திலும் எவ்விதத்திலும் குறைவற்றதாயும்) இருக்கின்ற ब्रह्म=பரமாத்ம வஸ்துவை यः=எவன் गुहायाम्=ஹிருதய குஹையிலுள்ள परमे=மேலான व्योमन्=ஆகாசத்தில் निहितम्=நிச்சயமா யறியக்கூடிய படி மறைந்து பிரகாசிக்கின்றதாக वेद=ஸாக்ஷாத்கரிக்கின்றானோ सः=அந்த மஹாபுருஷன் सर्वान्=எல்லாவிதமான कामान्=ஆனந்தங்களையும் (அதாவது: அந்தந்த வஸ்துக்கள் கிடைத்ததும் சித்தத்தில் தனித்தனி உதயமாகின்ற ஆனந்தம் யாதுண்டோ அந்த ஆனந்தம் யாவற்றையும்) सह=ஒரே ஸமயத்தில் विपश्चिता=ஸர்வக்ஞமான ब्रह्मणा=பிரும்மமாக விருந்து (அதாவது: ஆனந்தவடிவமான பிரும்மமாகவே இவனாகி விடுவதால் விஷயப் பிராப்தி காலத்தில் சித்தத்திலுண்டாகும் அந்தந்த அற்ப ஆனந்தமும் இவனடைந்த ஆனந்தரூப பிரும்மப் பிராப்தியிலுள்ளடங்கி விடுகின்றது என்று கருத்து) अश्नुते=அநுபவிக்கின்றான். इति=இவ்விதம் ருக் முடிகின்றது. மேலும், तस्मात्=அந்த एतस्मात्=(முன்னர் பிரும்ம சப்தத்தாற் சொல்லப்பட்ட) இந்த आत्मनः वै=பிரத்யகாத்ம வஸ்துவினிடமிருந்தே आकाशः=ஆகாசமானது संभूतः=வெளித்தோற்றத்தை யடைந்தது. (அதாவது: பிரத்யகாத்மாவே ஆகாசரூபமான தோற்றத்தை யடைந்தது என்று கருத்து) आकाशात्=ஆகாசரூபமான தோற்றத்தை யடைந்த பிரத்யகாத்மாவினிடமிருந்தே वायुः=வாயுவானது (संभूतः=தோற்றத்தை யடைந்தது) वायोः=வாயுரூபமான தோற்றத்தை யடைந்த பிரத்யகாத்மாவினிடமிருந்தே अग्निः=அக்கினியானது (संभूतः=தோற்

றத்தை யடைந்தது) अग्नेः=அக்கினிரூபமான தோற்றத்தையடைந்த பிரத்யகாத்மாவினிடமிருந்தே आपः=ஜலமானது (संभूताः=தோற்றத்தை யடைந்தது.) अद्भ्यः=ஜலரூபமான தோற்றத்தை யடைந்த பிரத்யகாத்மா வினிடமிருந்தே पृथिवी=பூமியானது (संभूता=தோற்றத்தை யடைந்தது) पृथिव्याः=பிருதிவீ ரூபமான தோற்றத்தை யடைந்த பிரத்யகாத்மா வினிடமிருந்து ओषधयः= ஓஷதிகள் (संभूताः=தோற்றத்தை யடைந்தன) ओषधीभ्यः=ஓஷதிரூபமான தோற்றத்தையடைந்த பிரத்யகாத்மாவினிடமிருந்தே अन्नम्=ஆஹாரோபயோகியான பதார்த்தமானது (संभूतम्=தோற்றத்தை யடைந்தது) अन्नात्=அன்னமான தோற்றத்தை யடைந்த பிரத்யகாத்மாவினிடமிருந்தே पुरुषः=சரீரமானது (संभूतः=தோற்றத்தை யடைந்தது) सवाएषपुरुषः=சரீரமான தோற்றத்தை யடைந்த அந்த இந்தப் பிரத்யகாத்மாவானவன் अन्नरसमयःवै= உணவுபொருளின் மாறுருவமானசரீரமயனுகவே (भवति=தோற்றுகின்றான்) तस्य=சரீரமயமான தோற்றத்தையடைந்த அந்தப்பிரத்யகாத்மாவுக்கு इदं शिरएव=இந்தப்பிரசித்தமான சிரஸ்ஸே(शिरः=சிரஸ்ஸாகின்றது)अयम्=இந்தदक्षिणः=வலதானपक्षः=பக்கமே (दक्षिणः पक्षः=வலது பக்கத்து இரக்கையாகின்றது) अयम्=இந்த उत्तरः=இடதான पक्षः=பக்கமே (उत्तरः पक्षः=இடது பக்கத்து இரக்கையாகின்றது.) अयम्=இந்த आत्मा=நடுப்பாகமே (आत्मा= நடுவுடலாகின்றது) इदम्=இந்த पुच्छम्=நிலைத்து நிற்றலுக்குக்காரணமான प्रतिष्ठा=பூமியானது [पुच्छं प्रतिष्ठा=நிலைத்து நிற்றலுக்குக் காரணமான (ஆதாரமான)வாலாகின்றது] तदपि=இதுவரைகூறிய அவ்விஷயத்தில் एषः=பின்வரும் श्लोकः=மந்திரமும் भवति=இருக்கின்றது.

(தா—ம்) ज्ञानञ्चाप्यद्वितीय स्वरस सुखघनानन्तचिन्मात्ररूप ब्रह्मात्मैकत्वबोधः स भवति सुमतेस्तत्वमस्यादिवाक्यात्॥ என்றபடி ஜீவப்பிரும்ம ஐக்கிய விஷயமான அகண்டாகார அந்தக்கரண விருத்தியாதுண்டோ அதுவே க்ஞானம் என்றும் வேதனம் என்றும் ஸாக்ஷாத்காரம் என்றும் சொல்லப்படும். இத்தகைய ஜீவப்பிரும்ம ஐக்கிய விஷயமான க்ஞானத்தை யடைந்தவனே பிரும்மவித் எனப்படுவன். இந்த அகண்டாகாரமான விருத்தியும் விலகி

ஸ்வரூபத்தில் நிலைபெறுதலே இங்குள்ள परमाप्नोति என்ற பதத்தாலுபதேசிக்கப் பட்டிருக்கின்றது. அகண்டாகார விருத்தியும் முடிவில் விலகவேண்டு மென்பதை

> इत्थं वाक्याग्निमृष्टादरणिविमथनाज्ज्वाह्निकीलेव सद्यः
> संभूताऽखंडवृत्तिस्तृणमिव निखिलं द्वैतजालं समोहम् ।
> दग्ध्वा निर्वाणसंज्ञे निरतिशयसुखे नित्यसिद्धात्मतत्वे
> सद्यो याति प्रणाशं कतकरजइवोदस्य पंकं जलस्य ॥

என்றதால் பெரியாருமுபதேசித்திருக்கின்றனர். (எ—று)

சங்கரபாஷ்யம் — இத்தகைய பிரும்ம வித்யைக்கு ஜீவப் பிரும்மபேதத்தையும், ஸகண்டமான தத்விஷயகஜ்ஞானத்தையும் உண்டாக்கும் அவித்யை யாதுண்டோ அதன் நிவிருத்தியே மேலான பிரயோஜனமாகின்றது. அத்தகைய அவித்யா நிவிருத்தியினின்றும் துக்காத்மகமான ஸம்ஸாரத்திற்கு அடியோடு நிவிருத்தி யேற்படுகின்றது. विद्वान्न बिभेति कुतश्चन=பிரும்மஸாக்ஷாத்காரத்தையடைந்தவன் எதனிடமிருந்தும் பயத்தை யடைவதில்லை (அதாவது: பயோபலக்ஷிதமான ஸம்ஸார துக்கத்தை யடைவதில்லை யென்று பொருள்.) என்றதால் இதே உபனிஷத்தும் உபதேசிக்கப்போகின்றது. ஸம்ஸார நிவிருத்தியானது இதினின்றும் ஏற்படாவிடில் अभयं प्रतिष्ठां विन्दते, नैनं कृताकृते तपतः பயமற்றிருக்கும்படி நிலையைப்பெறுகின்றான் என்றும், இந்த ஆத்மவித் விஷயத்தில் புண்ணிய பாபங்கள் தாபத்தை யுண்டுபண்ணுவதில்லை என்றும், பின்னர் கூறுவது வீணாகிவிடும். ஆகவே இது போன்ற வசனங்களைக்கொண்டு ஸர்வாத்மக பிரும்மவிஷயமான இந்தப் பிரும்ம க்ஞானத்தால் நிச்சேஷஸம்ஸார நிவிருத்தியானது உண்டாகி விடுகின்றது என்றே ஏற்படுகின்றது.

சுருதியே முதலில் தன்னாலுபதேசிக்கப்படும் பரமாத்மவித்யைக்கும், தனக்கும், உள்ள ஸம்பந்தத்தையும், அந்தவித்யைமூலமேற்படும் பிரயோஜனத்தையும், ஞாபனஞ் செய்யவேண்டி ब्रह्मविदाप्नोति परम् என்று உபதேசிக்கின்றது. அதாவது: आप्नोति परम् என்றதால் பிரும்ம வித்தியாப் பிரயோஜனமான ஸம்ஸார நிவிருத்தியையும், ब्रह्मवित् என்றதால் தனக்கும், வித்

யைக்கும் உள்ள பிரயோஜன, பிரயோஜனிபாவரூபமான ஸம்பந்தத்தையும் உபதேசித்திருக்கின்றது என்பதாம். மேலும், ஸம்பந்தம், பிரயோஜனம் இவ்விரண்டையும் தெளிவாயறிந்தபின்னரே குருமுகமாக வித்தியாவிஷயமான சிரவணஞ் செய்வதிலும், சிரவணஞ்செய்தபின்னர் அதுவிஷயமான அறியாமையைப் போக்கி அதைக் கிரஹிப்பதிலும், கிரஹிக்கப்பட்ட பொருளை மனத்தில் தாரணம் செய்வதிலும், தாரணஞ் செய்தபொருளை யுக்திகளைக் கொண்டு அநுசிந்தனரூபமான அப்பியாஸம் செய்வதிலும் புருஷன் பிரவிருத்திக்கின்றான். மேலும்,பிரும்மவித்யையின் பயனான நிச்சேஷ ஸம்ஸார நிவிருத்தியானது சிரவணாதிகளை முன்னிட்டே யேற்படுகின்றதென்பது சாஸ்திரங்களில் பிரசித்தமானது. श्रोतव्यः, मन्तव्यः, निदिध्यासितव्यः, சிரவணம், மனனம் நிதித்யாஸனம் என்ற இவைகளால் அந்த பரமாத்மா அறியத்தக்கதென பிருஹதாரண்ணியகம் முதலிய வேறு சுருதிகளும் உபதேசிக்கின்றன. மேலும் இந்தச் சுருதியும் ब्रह्मविदाप्नोति परम्=என்று உபதேசிக்கின்றது. அதைப்பற்றி இனிகவனிப்போம். ब्रह्म=பின்னர் கூறப்போகும் லக்ஷணத்தையுடைய பிரும்மத்தை वित्=அறிந்தவன் परम्=நிரதிசயமான அதேபிரும்மத்தை आप्नोति=அடைகின்றான். அறிவதொன்றை, அடைவதுமற்றொன்றை யென்பது ஸம்பவிக்குமோ? ஒழுபொழுதும் ஸம்பவிக்காது स योऽह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति "எவனொருவன் மேலான அந்தப்பிரும்மத்தை யறிகின்றானோ (அதாவது: ஸாக்ஷாத்கரிக்கின்றானோ) அவன் பிரும்மமாகவே ஆகிவிடுகின்றான்" என சுருதியும் பிரும்மவித்தாயுள்ளவனுக்கு பிரும்மப் பிராப்தியையே தெளிவாயுபதேசித்திருக்கின்றது.

## பிரும்மப்பிராப்தியைப்பற்றிய விசாரம்

சங்கை—பிரும்மம், ஸர்வகதம் அதாவது இல்லாதவிடமில்லாதது என்றும், ஆனதுபற்றியே ஸர்வத்திற்கும் ஆத்மாவாகவானது என்றும், சாஸ்திரமுபதேசிக்கப் போகின்றது. ஆனதுபற்றி பிரும்மவித்தானவன் அந்தப்பிரும்மத்தை யடைகின்றான் என்று சொன்னது எவ்விதம் பொருந்தும்? அடைதல் என்பது

அடைகின்ற அன்னியனைவிட வேறானதும், பரிச்சின்னமும் ஆன வஸ்துவுக்கேதான் ஏற்படுகின்றதென்பது வெகுவாகநம்மாற் காணப்பட்டிருக்கின்றது. பிரும்மமோ, எவ்விதபரிச்சேதமும் அற்றதாகவும் எல்லா வற்றிற்கும் ஆத்மபூதமாகவும் இருப்பதால், பரிச்சின்ன மாயும், அநாத்மாவாயுமுள்ள வஸ்துவுக்கு ஏற்படும் பிராப்தியானது பிரும்மத்திற்கு எவ்விதம் பொருந்தும் எனின்? உத்தரம்—இந்ததோஷமிங்குவருவதற்கிடமில்லை. எவ்விதமெனின் பிரும்மத்தின் க்ஞாநக்ஞானத்தை யபேக்ஷித்தே அதன். பிராப்தியும், அப்பிராப்தியும் ஏற்படுகின்றது. அதாவது—இந்த ஜீவன் உண்மையில் பரம்பிரும்மரூபந்தாயினும், ஆகாசாதி ஐம்பூதங்களாற் செய்யப்பட்டதும், ஆத்மாவுக்குப்புறம்பானதும், பரிச்சின்னமானதுமான அன்னமயாதி கோசங்களில் ஆத்மபுத்தியை யடைந்து அந்தக்கோசங்களிலேயே பதிந்து கிடக்கும் சித்தத்தையுடையவனும் பரமார்த்தமான பிரும்மஸ்வரூபத்தின் மறைத்தலையே லக்ஷணமாகவுடைய அவித்யையினால் உண்மையில் ஆத்மஸ்வரூபத்திற்குப் புறம்பானதும் அநாத்மங்களும் (அதாவது அசேதனங்களும்) ஆன அன்னமயாதிகோசங்களையே ஆத்மா வெனவெண்ணி அன்ன மயாதிகளைவிட எவ்விதத்திலும் வேறுபட்டவனாய் நானிருக்கின்றேன் என்ற அறிவற்றவனாயிருக்கின்றான். பத்து செம்படவர்கள் நதியில் மீன்பிடித்துப் பிறகு கரையேறி நம்முள்பத்துப் பெயர்களும் இங்கிருக்கின்றோமா? என்பதை ஒவ்வொரு வரும் எண்ணத்தொடங்கினர். அவ்விதம் எண்ணுங்கால் ஒவ்வொரு வரும் தன்னை விட்டே எண்ணிப்பார்த்தனர். அவ்விதம் எண்ணிப்பார்க்கையில் ஒருவர் குறைவதைக் கண்டு கடுந்துயறமுற்று ஒன்றுமே தோன்றாதவர்களாய் தயங்கலாயினர். இங்குகவனிப்போம், ஒவ்வொருவரும் தன்னைமறந்து தனக்குப் புறம்பானவெளியிலுள்ளவர்களையே எண்ணும்பொழுது பத்தாவது எண்ணைப்பூர்த்தி செய்யுந்தான் அக்கூட்டத்தில் அங்கேயே இருந்தும் அதையறிந்து கொள்ளாக்குற்றத்தால் தம்முள் பத்தாவது மனிதனை நதியில் இழந்து விட்டதா கத்துக்கப்படநேர்ந்தது. அச்சமயம் அவ்வழிசென்ற வொருவன் இவர்களிருக்குமிடம் வந்து இவர்களுடைய துயரத்தின் கார

ணத்தைக் கேட்டறிந்து உடனே அவர்களுள் ஒவ்வொருவனாக எண்ணி அப்புறம் போகச் செய்தான். அவ்விதம் ஒவ்வொருவனாகப்போகும் பொழுது கடையில் வந்தவனைப்பார்த்து நீதான் பத்தாவது மனிதன் என்றான். அதினின்று பத்தாவது மனிதனை அவர்களடைந்தனர். அப்பொழுது பதின்மரும் தென்பட்டனர். இங்குகவனிப்போம். இவர்களுள் பத்தாவது மனிதன் முதலில் எங்கு சென்றிருந்தான் அந்தமனிதன் கணக்கிட்டுக்காட்டும் பொழுது எங்கிருந்து வந்தான்? ஒருவிடத்திற்கும்போகவுமில்லை ஒருவிடத்தினின்றுவரவுமில்லை. அவர்களிற்றான் இருந்தான். முன்னர் அவர்களால் இல்லை யென்று எண்ணப்பட்டான். பின்னர் ஒருவர் காட்டிக்கொடுத்ததும் பத்தாவது மனிதனை யடைந்ததாகவே எண்ணி ஒவ்வொருவரும் சந்தோஷத்தை யடைந்தனர். இத்தன்மை போலவே தன்னைத்தானறியாமையாலேயே அன்னமயாதிகோசங்களை விடதான் தனியாயிருப்பதாக எண்ணாமல் விசேஷமான அனர்த்தங்களையடைகிறான். இம்முறையில் பிரும்மமானது ஆத்மபூதமாகயிருப்பினும் அறிவின்மையால் அடையப்படாததாகவாகின்றது. அங்குசெம்படவர்க்கு வேறொருவருபதேசித்ததும் அதன்மூலமுண்டான அறிவினால்பத்தாவது மனிதன் தென்பட்டது போலவே குருமுகமாகச் செய்யப்பட்ட வேதாந்த வாக்கிய சிரவணத்தால் ஏற்பட்ட ஆத்மவித்தை யினால் ஆத்மப்பிராப்தியானது உண்டாகின்றது. இதையே சுருதியும் **आप्नोति**=அடைகிறான் என்றதா லுபதேசிக்கின்றது. இதுவரை கூறியதிலிருந்து தன்னுள்ளிருக்கும் வஸ்துவுக்கு அக்ஞானத்தால் அடையாமையும் க்ஞானத்தால் அடைதலும் ஏற்படக் கூடும் என்றும், இதையே இங்குள்ள **आप्नोति** என்றதால் சுருதி உபதேசிக்கின்றதென்று மேற்பட்டது.

### பிரும்ம சப்தார்த்த விசாரம்.

மேலும், **ब्रह्मविदाप्नोति परम्**=பிரும்மவிதாப்னோதிபரம் என்ற வாக்கியமானது இந்த ஆனந்த வல்லியில் கூறப்படும் பொருளுக்குச் சூத்திரவடிவமாயுள்ளது. **ब्रह्मवित्**=என்ற விடத்திலுள்ள **ब्रह्म**=என்ற பதத்தால் **बृहत्वात्=ब्रह्म**=பெரிதாயிருப்பதால் பிரும்ம

மெனப்படும் என்ற வ்யுத்பத்தியைக்கொண்டு பெரிதாயுள்ள ஒரு வஸ்து இருப்பதாகமட்டும் ஏற்படுகின்றது. இதைக்கொண்டு பிரும்மத்தின் ஸ்வரூபவிசேஷம் இன்னதென அறியப்பட்டதாக வாகாது. ஆகவே எல்லாவற்றினின்றும் பிரும்ம ஸ்வரூபவிசே ஷத்தைப் பிரித்துக்காட்டும் லக்ஷணத்தை யுபதேசித்து ஸ்வரூப நிர்த்தாரணம் செய்ய வேண்டுவது அவசியமாகின்றது. ஆகவே பிரும்மஸ்வரூப லக்ஷணம் கூறவேண்டியும், அத்தகைய பிரும்ம மானது பிரத்யகாத்மரூபமாகவே யிருக்கின்றது என்பதைக்கூற வேண்டியும், பிரும்மவித்துக்கு பரப்பிராப்திரூபமான யாதொரு பிரும்ம வித்யாபலனுண்டோ அது ஸகல ஸம்ஸார தர்மமற்ற பிரும்மரூபமென்றும், அதுதான் ஸர்வாத்ம பாவமென்றும், இதைவிட வேறொன்று பிரும்ம வித்யாபலனாக ஆகாதென்றும், காட்டவே பின்வரும் ருக்கானது படிக்கப் பட்டிருக்கின்றது. तत्=பிராம்மண வாக்கியத்திற் சொல்லிய அர்த்தத்தில் एषा=இந்த ருக்கானது अभ्युक्ता=சொல்லப் பட்டிருக்கின்றது सत्यंज्ञानमनन्तं ब्रह्मेति=ஸத்தியம்,ஞானம், அனந்தம் என்பது பிரும்மத்தின் லக்ஷ ணத்தைக் கூறும் வாக்கியமாகும். ஸத்யம், ஞானம் அனந்தம் என்ற இந்த மூன்று பதங்களும் பிரும்ம என்ற விசேஷ்யத்திற்கு விசேஷணங்களாகின்றன. வேத்யமாக (அறியத்தக்கதாக) சொல் லப்படுவதால் பிரும்மமானது விசேஷ்யமாக ஆகின்றது. ஸத்யம், ஞானம், அனந்தம் என்றபதங்கள் விசேஷணங்களாகவும், பிரும் மம் விசேஷ்யமாகவும் இருப்பதாலேயே ஓரேவிபக்தி (வேற்றுமை) யுள்ளவைகளாக இங்கு सत्यं ज्ञानं अनन्तम् என்ற இந்தப்பதங்கள் படிக்கப்பட்டிருக்கின்றன. ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற மூன்று விசேஷணங்களுடனும் ஸம்பந்தத்தை யடையும் விசேஷ் யமான பிரும்மபதமானது பிரும்மத்தை வேறு விசேஷ்யங்களி னின்றும் விலக்கிக்காட்டுகின்றது. பிரும்மமானது தன்னை விட வேறானவைகளிடமிருந்து விலக்கப்படுமானால்தான் அப்பொழுது அது நன்கு அறியப்பட்டதாகவாகும். எவ்விதமெனின்? கூறு வாம். கறுத்ததாயும், பெரிதாயும், நறுமணம் பொருந்தியதாயும் உத்பலமிருக்கின்றது என்றவிடத்தில் கறுத்ததாயும், பெரிதாயும் நறுமணமுள்ளதாயும், என்ற விசேஷணங்களால் விசேஷ்யமான

உத்பலத்தை எவ்விதம் ஏனைய விசேஷ்யமான வஸ்துக்களினின்றும் பிரித்து அறிகின்றேமோ, அவ்விதமே இங்கும் காண்க.

சங்கை—உலகில் அனேகம் விசேஷணங்களுடன் சேரக்கூடிய ஒரே ஜாதியிற் சேர்ந்த அனேகம் விசேஷ்யங்கள் இருக்கும்பொழுது யாதேனும் சில விசேஷணங்களால் ஒரு விசேஷ்யத்தைப் பிரித்துக் காட்டுவது வழக்கத்திற் காணக்கிடக்கின்றது. அதாவது: நீலமான (கருத்த) உத்பலமென்றும், ரக்தமான (சிவந்த) உத்பலமென்றும் இருவகை உத்பலமிருப்பதால் நீலம் (கருத்த) உத்பலம் என்ற விடத்திலுள்ள நீல என்ற விசேஷணத்தால் ரக்தமான (சிவந்த) உத்பலம் விலக்கப்படுவதைக் காண்கின்றேம். வஸ்துவானது ஒன்றாகவே யிருந்து விசேஷணமில்லாவிடினுங்கூட விசேஷ்யமாத்திரத்தைச் சொன்னபோதிலும் அவ்வான்றேறு எங்கு அறியப்படுமோ அங்கு விசேஷணங்களுக்கு எவ்விதப் பிரயோஜனமும் ஏற்படுவதில்லை. எவ்விதமெனின்? "ஒரு சூரியன்" என்ற விடத்தில் விசேஷ்யமான சூரியனுக்கு "ஒரு" என்ற விசேஷணத்தால் எவ்விதப் பிரயோஜனமும் ஏற்படுவதற்கில்லை என்பது எவ்விதமோ, அவ்விதமே விசேஷ்யமான பிரும்மமும் ஒன்றாகவே யிருப்பதாலும், விலக்கிக் காட்டுவதற்குரிய வேறு பிரும்மங்கள் இல்லையாதலாலும், பிரும்மத்தை விசேஷ்யமாகக் கொண்டு மற்றவைகளிடமிருந்து அதை விலக்கிக் காட்டுவதற்காக லோக நியாயத்தி லொப்பப்பட்டபடி, ஸத்யம், ஞானம், அனந்தம் முதலிய விசேஷணங்கள் அனுவசியமானவைகளன்றோ? எனின்?

உத்தரம் — முற்சொன்ன தோஷமிங்குவரு. ஏனெனில் லக்ஷண விசேஷண மென்றும், ஸ்வரூப விசேஷண மென்றும் விசேஷணமானது இரண்டுவகைப்படும். அவற்றுள், நீலம், ரக்தம் உத்பலம் என்ற விடத்தில் நீலம், என்ற விசேஷணங்கொடுத்து உத்பலத்தைச் சொல்லுங்கால் அங்குள்ள நீலம் என்ற விசேஷணமானது ரக்தமான (சிவந்த) உத்பலத்தினின்றும்இதை விலக்கி உத்பலத்தின் கருத்த ஸ்வரூபத்தைக்காட்டுவதாக ஆகின்றது. ஆகவே இங்குள்ள நீலம் என்ற விசேஷணத்தை "ஸ்வரூப விசேஷணம்" என்று கூறுகிறேம். இங்குள்ள ஸத்யம், ஞானம்,

அனந்தம் முதலிய மூன்று லக்ஷண விசேஷணங்களும் முற்கூறிய நீலம் முதலிய ஸ்வரூப விசேஷணங்கள் போல ஸஜாதீய ('தன்னைப்போன்ற' அல்லது தனது வகுப்பிற்சேர்ந்த) வஸ்துவினின்றுமட்டும் விசேஷ்யமான பிரும்மத்தை விலக்கிக்காட்டாமல் விசேஷ்யமான பிரும்மத்தை தன்னைத்தவிரவேறு எல்லாபதார்த்தங்களினின்றும்விலக்கிக்காட்டுவதாக ஆகின்றன. அதுபற்றித் தான் இந்த ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற இந்தப்பதங்களை லக்ஷண விசேஷணங்க ளென்கிறோம். ஆகவே விசேஷ்யமான பிரும்மத்திற்கு விலக்கக்கூடிய ஸஜாதீயமான (தன் வகுப்பிற் சேர்ந்த) வேறு பிரும்மம் ஒன்று இல்லாவிட்டாலும் கூட பந்த காலத்தில் வேறாகத்தோன்றும் ஸகல பதார்த்தங்களினின்றும் பிரும்மமானது பிரித்துக் காண்பிக்கப் பட்டதாக ஆவதுடன் இந்த ஸத்யாதிபதங்களால் விசேஷ்யமான பிரும்மத்தின் ஸ்வரூபமும் உபதேசிக்கப் பட்டதாகவே ஆகின்றது. ஆகவே முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை.

சங்கை—லக்ஷணம், லக்ஷ்யம், என்பதற்கும், விசேஷணம், விசேஷ்யம் என்பதற்கும் உள்ள விசேஷம் (வேற்றுமைக்குரிய காரணம்) யாதெனின்?

உத்தரம்—கூறுவாம். உலகில் விசேஷணங்களாக எவற்றைக் கூறுகின்றோமோ அவை விசேஷ்யத்தை ஸஜாதீயத்தினின்றும் (தனது வகுப்பைச்சேர்ந்தவைகளினின்றும்) விலக்கிக்காட்டுகின்றன. லக்ஷணமோவெனில் எல்லா வஸ்துக்களினின்றும் லக்ஷ்யமான வஸ்துவை விலக்கிக்காட்டுகின்றது. இதுதான் ஸாதாரண விசேஷணத்திற்கும், லக்ஷணவிசேஷணத்திற்கும் உள்ளவேற்றுமையாகும். எவ்விதமெனில் **अवकाशदात् आकाशम्** "இடைவெளி தருவது ஆகாசம்" என்ற விடத்திலுள்ள **अवकाशदात्**=இடைவெளிதருவது என்ற விசேஷணமானது மஹா பூதவர்க்கத்திற் சேர்ந்த பிருதிவீ முதலிய ஸஜாதீயத்தினின்றும், விஜாதீயமான ஆத்மா முதலியவற்றினின்றும் விசேஷ்யமான ஆகாசத்தை விலக்கிக் காட்டுகின்றதாக ஆகின்றதுபோல வென்பதாம். இந்த விடத்திலோ ஸத்யாதி பதங்களை லக்ஷண விசேஷணங்களென முன்னர் சொல்லியிருக்கிறோம்.

மேலும், ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற இப்பதங்கள் தனித்தனி ஒன்றுடன் ஒன்று ஸம்பந்தத்தை யடைவதில்லை. பின்னையோவெனில் விசேஷ்யமான "பிரும்மம்" என்ற பதத்துடனேயே நேரில் ஸம்பந்தத்தை யடைகின்றன. ஆகவே ஸத்யம், முதலிய இம்மூன்றுவிசேஷண பதங்களும் ஒன்றையொன்று எதிர்பாராமல் விசேஷ்யமான பிரும்ம சப்தத்துடனேயே ஸம்பந்தப் படுகின்றன. அதாவது: ஸத்யம் பிரும்ம, க்ஞானம் பிரும்ம, அனந்தம் பிரும்ம என்பதாம்.

மேலும், இங்குள்ள லக்ஷண விசேஷணமான ஸத்யசப்தத்தின் பொருள் யாதெனில்? கூறுவாம். यद्रूपेण यन्निश्चितं तद् तद्रूपं न व्यभिचरति तत्सत्यम्=எது எந்த ரூபத்துடன் கூடியதாக நிச்சயிக்கப்பட்டதோ அது அந்த ரூபத்தை விட்டுவிலகாதிருப்பதாயின் அது ஸத்தியமென்று சொல்லப்படும். எந்த ரூபத்துடன் கூடியதாக நிச்சயிக்கப்பட்ட எது அந்த ரூபத்தைவிட்டு விலகுமோ அது அந்ருதம் (பொய்யானது) என்று சொல்லப்படும். அதாவது: ரஜ்ஜுத்தன்மை பொருந்திய ரூபத்துடன் நிச்சயிக் கப்புட்ட ரஜ்ஜுவடிவமான வஸ்துவானது ஒரு பொழுதும் தனது ரஜ்ஜுத்தன்மை பொருந்திய ரூபத்தைவிட்டு விலகாதிருக்கின்றது. ஆகவே அது அவ்வுருவத்தால் ஸத்தியமென்று சொல்லப்படுகின்றது. ரஜ்ஜுவடிவமான அதேவஸ்துவானது ஸர்ப்பத்தன்மை பொருந்திய ரூபத்துடன் கூடியதாக நிச்சயிக் கப்பட்டு காலாந்தரத்தில் ஸர்ப்பத்தன்மை பொருந்தியரூபத்தை விட்டு விலகுவதால் ஸர்ப்பத்தன்மை பொருந்திய ரூபத்தால் அது அந்ருதம் என்று சொல்லப்படுகின்றது. இவ்விதம் கூறியதிலிருந்து எதற்கு எந்த ரூபம் சிலகாலமே யிருக்கக்கூடியதோ அவ்வஸ்துவின் அந்த ரூபம் அந்ருதம் (பொய்யானது) என்று பெறப்பட்டது. ரஜ்ஜு முதலியவற்றிற்கு ஸர்ப்பம் முதலிய ரூபமும் ம்ருத் முதலியவற்றிற்கு குடம் முதலிய ரூபமும் இதற்கு உதாஹரணமாகும், என்று ஏற்பட்டது. இவ்விதம் கூறியதிலிருந்து காரியமானது (இடையில் வந்தரூபமானது) அஸத்தியமென்று ஏற்பட்டது. இவ்விதமே "वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम्" "एवं सदेव सत्यमित्यवधारणात्" குடம், என்

றும், சராவம் (மடக்கு) என்றும் சப்தத்தால் சொல்லப்படும் காரிய ரூபமானது வெறும் பெயர் மட்டுமே (சொல்மட்டுமே) யொழிய சத்தியமாகாது. ஏனெனில் **सदेव** காரணவாசியான ஸத் என்ற சப்தத்தாற் சொல்லப்படும் காரணப்பொருளே ஸத்தியமானது என்பதைக் காட்டுவதற்காக சுருதியில் **एवं सोम्य स आदेशो भवति** ஹே ஸோம்ய! அழகிய முகமுள்ள சுவேதகேதோ! உனக்கு உபதேசிக்கப்பட்ட **स:** அந்தக்காரணமான ஸத்பதார்த்தமானது **एवमेव** இவ்விதமே அதாவது: காரண பதார்த்தமே ஸத்தியமானது, என்றதால் சாந்தோக்கிய சுருதியில் நிச்சயித்திருப்பதே அதன் காரணமாகும்.

**एवं सदेवसत्यमित्यवधारणात्**=என்றதால் ஆசாரியபாஷ்யத்தில் **एवं सोम्य स आदेशो भवति** என்ற உபநிஷத் வாக்கியத்தாற் கிடைத்த பொருளையே அர்த்தத்துடன் அனுவாதம் செய்திருப்பதாகக் கொள்ளவேண்டும். ஆகவே விகாரமானது ஸத்தியமன்றுஎன்று ஏற்படுவதிலிருந்துஇங்குள்ள **सत्यम्** என்ற லக்ஷண விசேஷணமானது காரணமான பிரும்மத்தை விகாரமான காரியத்தினின்றும் விலக்கிக் கூறுவதாக ஏற்படுகின்றது. ஆனால் இவ்விதம் கூறியதிலிருந்து விசேஷ்யமான பிரும்மத்திற்கு காரணத்வமானது சொல்லப்பட்டதாகவாகும். அதாவது: பிரும்மம் காரியமாக இல்லாவிட்டாலும் காரணமாக ஆகலாம் என்றுவரும் என்பதாம். பிரும்மத்தைக் காரணமென்று சொல்லுவோமானால்உலகில் காரணமாகவுள்ளதுஎதுவோ அதைக்காரகமாக (கிரியையுடன் கூடியிருப்பதாக) க்காண்கிறோம். குடமான காரியத்திற்குக் காரணமான மிருத்தானது கிரியையுடன் கூடிருப்பதுடன் அசேதனமாயுமிருக்கின்றது. ஆகவே காரணமாக ஆன பிரும்மமும், கிரியையுள்ளதென்றும், அசேதனம் என்றும் ஏற்படும் எனக்கருதி அதை விளக்குவதற்காக **ज्ञानं ब्रह्म**=“க்ஞானம் பிரும்ம” என்றதால் பிரும்மம் சேதனமாயுள்ளது என்று கூறப்பட்டது.

சங்கை—**ज्ञानम्=ज्ञायते अनेनेति ज्ञानम्**=என்ற வியுத்பத்தியால் “க்ஞானரூபமான கிரியையுள்ளது பிரும்மம்” என்று ஏற்படும். இவ்விதம் ஏற்படுவதிலிருந்து எது கிரியையுள்ளதோ அதை

அசேதனமாயும், அனித்யமானதாகவுமே காண்பதால் பிரும்ம மும் அசேதனமென்றும், அனித்யமானதென்றும் தான் ஏற்படும் எனின்?

உத்தரம்—இங்குள்ள **ज्ञानम्**=என்றபதமானது **ज्ञायत इति ज्ञानम्** என்ற வியுத்பத்தியால் "**ज्ञा**" என்ற **धातु** (தாது) வின் மேல் **भावार्थ** (பாவார்த்த) த்தில் **ल्युट्** (ல்யுட்) என்ற பிரத்யயம் வைத்து ஏற்படுகின்றது. இவ்விதமே பாஷ்யத்தில் **भावसाधनो ज्ञानशब्दः** என்றதாற் கூறப்பட்டிருக்கின்றது **भावे=भावार्थे, साधनः=प्रत्ययः यस्य सः** என்று விக்கிரஹம் செய்துகொண்டு பாவார்த்தப் பிரத்யய முள்ளது "ஞான சப்தம்" என்பது பாஷ்யத்தின் கருத்து. **भाव** என்ற பதத்திற்கு **धात्वर्थः** தாதுவின் அர்த்தம் என்றுபொருள். ஆகவே பாவார்த்த ப்ரத்யயமமைந்த ஞானசப்தத்தால் ஞானஸ்வரூபம் என்று மட்டுந்தான் பொருள் ஏற்படும். இதிலிருந்து பிரும்மத்திற்குக் காரணத்வம் கூறியதி னின்றும் ஏற்பட்ட கிரியாசிரயத்வமும், அசேதனத்வமும் உண் டாகும் என்ற சங்கை விலக்கப்பட்டதாக ஆகிவிடுகின்றது. ஆகவே பிரும்மம் காரணமாயினும், சேதனமாயும், கிரியையற்ற தாயும் இருக்கின்றது என்று ஏற்பட்டது.

மேலும், **ज्ञानशब्द** த்தை **भावार्थ** ப்ரத்யய மமைந்துள்ளதாக ஒப்புவதற்கு **सत्यं अनन्तं** என்ற சப்தங்கள் பிரும்மத்திற்கு விசே ஷணங்களாகயிருப்பதுபோல **ज्ञान** சப்தமும் பிரும்மவிசேஷண்மா யிருப்பதே மற்றொரு காரணமுமாகும். **ज्ञानकर्तरि** க்ஞானரூப மான கிரியாசிரயமான வஸ்துவினிடத்தில், ஸத்தியத்தன்மையும், அனந்தத் தன்மையும் எப்படிப் பொருந்தும்? க்ஞானரூபமான கிரியையுள்ளதானால் பிரும்மம் விகாரத்தை யுடையது என்று ஏற்படும். எது விகாரமுடையதோ அதை ஸத்தியமென்று (விகாரமற்றதென்று) எவ்விதம் சொல்லமுடியும்? மேலும் எது எதனின்றும் வேறுபட்டிருப்பதில்லையோ அது அனந்தம் எனப் படும். பிரும்மமானது க்ஞானக்கிரியையுள்ளதாக ஆகுமானால் க்ஞேயமானவஸ்து, க்ஞானம் ஆகிய இவ்விரண்டையும் விடவே றாகவேதான் அதைச் சொல்லவேண்டிவரும். அவ்விதம் வரும் பொழுது அந்தப் பிரும்மத்தை அனந்தம் என்று (எக்காலத்தி

னும் எதையும் விட வேறாகயில்லாதது என்று) சொன்னது எவ்விதம் பொருந்தும்? ஒருபொழுதும் பொருந்தாது. ஆகவே "सत्यं," "अनन्तं" என்ற இந்த இரண்டு விசேஷணங்களைக் கொண்டும் ज्ञानम्=என்ற பதமானது பாவப்பிரத்யயம் வைத்தே இங்கு உபதேசிக்கப்பட்டிருப்பதாய் பொருள் கொள்ளவேண்டுவது அவசியமாகிவிட்டது. மேலும், "यत्रनान्य द्विजानाति सभूमा" "अथयत्रान्यद्विजानाति तदल्पम्" அன்னியனாக இருந்து கொண்டு அன்னியத்தை அறிகிறான் என்பது எதனிடமில்லையோ அதே பூமா (அனந்தம்) எனப்படும். அன்னியனாக விருந்து கொண்டு அன்னியத்தைப் பார்க்கின்றான் என்பது எதனிடமிருக்கின்றதோ அது அல்பம் (அனந்தமற்றது) எங்கும், எதையும்விட வேறுபட்டதுஎன்றும் சாந்தோக்யோபனிடதத்தில் भूम (பூம) வித்யையிலு முபதேசிக்கப் பட்டிருப்பதும் ஞான சப்தத்தை பாவப்ரத்யயாந்தமாக ஒப்பவேண்டுவதற்குத் தக்க ஆதாரமாகும்.

சங்கை—नान्यद्विजानाति வேறொன்றையறிவதில்லை என மறுத்திருப்பதிலிருந்து தன்னை யறிகின்றான் என்று ஏற்படாதோ எனின்?

உத்தரம் — அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் यत्रनान्यद्विजानाति सभूमा என்ற வாக்கியமானது பூமசப்தத்தாற் சொல்லப்படும் வஸ்துவுக்குலக்ஷணஞ்சொல்ல வேண்டியேற்பட்டதாகும். அதாவது அன்னியனுயுள்ள ஒருவன் தன்னை விட வேறான மற்றொன்றைப் பார்க்கின்றான் என உலகப்பிரசித்தமாயுள்ள முறை எந்தவஸ்துவினிடம் கிடையாதோ அது பூமா எனப்படும் என்பதாய் பூம வஸ்துவைப்பற்றிய அறிவையுண்டு பண்ண வந்ததே யொழிய தன்னைபார்க்கின்றான் என்று சொல்ல வந்ததல்ல. "தன்னைபார்க்கின்றான்" என்ற பொருள் அந்தவாக்கியத்திற்கிருக்கு மானால் "தன்னைதான் பார்ப்பதென்பது" உலகப்பிரசித்தமானதால் அதை விதித்த சாஸ்திரமானது ப்ரமாணாந்தரங்களாலறியப்பட்ட பொருளை விதிப்பதுபற்றி अनधिगत अबाधितफलवदर्थबोधकत्वं शास्त्रस्य प्रामाण्यम् எந்தப் பிரமாணத்தாலும் அறியப்படாததும், அறிந்த பின்னர் வேறுபிரமாணங்களால்

பாதிக்க (மறுத்துக்கூற) ப்படாததும், பலனுள்ளதுமான பொருளைக் கூறுவதாயிருத்தலே சாஸ்திரத்தின் பிராமணத் தன்மையாகும். என்று கூறிய தனது பிராமாண்ணியத்தையே சாஸ்திரமானது இழந்ததாக ஆகிவிடும். ஆகவே, சங்கிக்கப்பட்டபொருள் பொருத்தமுள்ளதாக ஆகாது. மேலும் यत्रनान्य द्विजानाति என்ற வாக்கியமானது பூமசப்தத்தாற் சொல்லப்படும் வஸ்து வினிடத்தில்பிராப்தமான சிலதர்மங்களை விலக்கவேண்டியே பிரவிருத்தித்திருப்பதாய் நன்கு விளங்குகின்றது. ஆகவே பிரமமூலமேற்படும் ஞாதாமுதலியத்வைதபதார்த்தத்தை அனுவாதம்செய்துகொண்டெந்த வஸ்து வினிடத்தில் ஞாதிருத்வம் முதலியன கிடையாதோ அது பூமா எனப்படும் என்றுதான் பொருளேற்படும். ஆனதுபற்றியும் சங்கிக்கப்பட்ட பொருள் இங்கு பொருந்தாது. மேலும், ஒருவன் ஒன்றைப் பார்ப்பதென்றால்,பார்க்கின்றவனைவிட, பார்க்கப்படுவது உண்மையில் வேறாகவே இருத்தல் வேண்டும். இங்கு தன்னையேதான் பார்ப்பதென்றால் ஆத்மாவினிடத்தில் பார்க்கும் அம்சம் பார்க்கப்படும் அம்சம் என இரண்டு அம்சங்களைக்கற்பிக்கவேண்டிவரும். அவ்விதம் சொன்னால் निष्कलंनिष्क्रियम् எவ்வித அம்சமும் அற்றது ஆத்மா என்ற வாக்கியமானது வீணாகிவிடும். அதுடன் தரிசனம் என்ற ஒரேகிரியையில் எதுகர்த்தாவோ அதேசமயத்தில் அதேவஸ்துவானது கர்மாவாகவும் (பார்க்கப்படுவதாகவும்) ஆகின்றது என்று சொல்லுவது யுக்தி அனுபவங்களுக்குப்பொருத்தமுள்ளதாக ஒருபொழுதுமாகாது. ஆகவே ஆத்மாவை விக்ஞேயமாக (பார்க்கப்படுவதாக) ஒப்பினால் விக்ஞாதா (பார்க்கின்றவன்) அதேசமயத்தில் இல்லாமலாகிவிடும். ஆனது பற்றியும் சங்கையிற் சொல்லிய பொருள் பொருந்தாது.

சங்கை—ஒரே ஆத்மா, க்ஞேயனாகவும், க்ஞாதாவாகவும், ஆகலாம் என்று சொல்லலாமன்றோ ? எனின்.

உத்தரம்—அதுபொருந்தாது. ஏனெனில் ஆக்மாவை நிரவயவனென்று சாஸ்திரம் கூறுவதால் நிரவயவனான ஆத்மாவுக்கு ஒரேஸமயத்தில் க்ஞேயத்துவம்,க்ஞாதிருத்துவம் ஆகிய இவ்விரண்டும் ஸம்பவிப்பதற்கிடமில்லை. மேலும் குடம் முதலிய வற்

றைப்போலவே ஆத்மாவையும் விக்ஞேயமாக (அறிவுக்கு விஷயமானதாக)ச் சொல்லுவோமானால் ஆத்மவிஷயமான க்ஞானோபதேசம் செய்திருப்பது பயனற்றதாக ஆகிவிடும். குடம் முதலியவற்றைப்போல அறிவுக்கு விஷயமாகக்கூடியபடிப்பிரஸித்தமான பொருளை யுபதேசிப்பதில் யாது பயன்? ஆதலால் ஆத்மாவைக் ஞாதாவாக ஒப்பினால் அனந்தன் என்று கூறியது பொருத்தமில்லாமலுமாகிவிடும். அத்துடன், க்ஞானக்கிரியைக்குக் கர்த்தாவாகயிருக்கும் தன்மை முதலிய விசேஷங்களை ஆத்மாவினிடம் சொல்லுவதானால் ஸன்மாத்திரனாயிருப்பதாகக் கூறியதும் அடியோடு வீணாகிவிடும். "**तत्सत्यम्**" என்ற சுருதியைக் கொண்டு ஸன்மாத்திரமாயுள்ளதே ஸத்யமானது என்று ஏற்படுகின்றது. ஆகவே இதுவரைகூறிய வெகுவான காரணங்களைக் கொண்டு பார்க்கும்பொழுது ஸத்தியம், அனந்தம், என்ற சப்தங்களுடன் கூடக்ஞான சப்தத்தையும் லக்ஷண விசேஷணமாகக் கூறியிருப்பதைக் கொண்டும் **ज्ञानम्** என்ற சப்தமானது பாவார்த்தத்தில் விதிக்கப்பட்ட **ल्युट्** பிரத்யத்தாலேற்பட்டதென்றேதான் கொள்ளவேண்டியதாகின்றது. ஆகவே **ज्ञानं ब्रह्म** என்றதால் கர்த்தா முதலிய காரகங்களற்றதென்றும் மிருத் முதலியன போன்று அசேதனமல்லவென்றும் பிரும்மம் உபதேசிக்கப் பட்டதாயறிய வேண்டும் என்றேற்பட்டது.

சங்கை—**ज्ञानं ब्रह्म** என்று கூறியதினின்றும் பிரும்மமானது அந்தமுள்ளது என்றுதான் ஏற்படும். ஏனெனில்— லௌகிகமானக்ஞானமானது அந்தமுள்ளதாக நம்மால் பார்க்கப்படுவதே அதன் காரணமாகும். எனின்?

உத்தரம்—அந்த சங்கையை விளக்கவேண்டியே பிரும்மத்தை **अनन्तम्** என்று சுருதி உபதேசிக்கின்றது. எவ்விதத்தாலும் எவ்விடத்தாலும், எதனாலும் அழிவற்றது. என்பது அதன் பொருளாகும்.

சங்கை—ஸத்யம் பிரும்ம, க்ஞானம் பிரும்ம, அனந்தம் பிரும்ம, என்ற இந்த வாக்கியங்களால் அநிருதாதிகளான தர்மங்களே விலக்கப்பட்டதாக ஏற்படுகின்றன. ஆனதுபற்றி விசேஷ

யமாகச் சொல்லப்படும் பிரும்மமோ உத்பலாதிகளைப் போலப்பிரசித்தமான தாகக்காணப்படுவதில்லை. ஆகவே ஸத்யம், க்ஞானம், அனந்தம் என்ற இந்தவாக்கியத்திற்கு, எவ்விதப்பொருளும் ஏற்படுவதற் கிடமில்லாமலாகின்றது. मृगतृष्णांभसिस्नातः खपुष्पकृतशेखरः। एष वंध्यासुतो याति शशशृङ्गधनुर्धरः॥ "கானல் நீரில் மூழ்கி ஆகாசபுஷ்பத்தையும் தலையிலணிந்து, முயற் கோம்பாலாயவில்லையும் கையிற்றாங்கி மலடியின் இந்த அருமைப்புதல்வன் செல்லுகின்றான்" என்ற வாக்கியத்தைக் கேட்குங்கால் எவ்விதப் பொருளுதயமாகுமோ அவ்விதமே தான் இங்கும் உதயமாகும் ஆகவே பிரும்மத்திற்கு லக்ஷணம் கூறவந்த இந்தவாக்கியத்திற்கு இதுவரைகூறியபொருளை எவ்வித மொப்பமுடியுமெனின்?

உத்தரம்—அவ்விதம் பொருளில்லாமை யென்ற தோஷம் இவ்வாக்கியங்களுக்கு வருவதற்கில்லை. ஏனெனில்? கூறுவோம். ஸத்யம், க்ஞானம், அனந்தம் என்ற இந்தப்பதங்கள் விசேஷணங்கள் என்று கூறினோமாயினும் பிரும்மத்தின் லக்ஷணங்கூறுதலையே முக்கியமாயுடையன வென்பதையும் முதலிலேயே சொல்லியிருக்கின்றோம். ஆகவே லக்ஷ்யமானது சூன்யமாக யிருந்தாலன்றோ அதன் லக்ஷணவசனம் பயனற்றதெனச் சொல்லக் கூடும். லக்ஷ்யமான பிரும்மமோ சூன்யமானதன்று. ஆகவே நீசொல்லும் தோஷம் ஒருபொழுதும் ஸம்பவிப்பதற்கிடமில்லை. மேலும் ஸத்யாதிபதங்கள் பிரும்மத்திற்கு விசேஷணங்களாயினும் (இதரநிவிருத்தியை அப்பதங்கள் போதிக்கின்றனவாயினும்) அப்பதங்களால் போதிக்கப்படும் இதரநிவிருதியானது ஸத்தியாதிபதங்களினின்றும் நேர்பொருளாக ஏற்படாமல் ஆர்த்திகமாக (மறைபொருளாக) ஏற்படுவதாகத்தான் கொள்ளல் வேண்டும். ஆனதுபற்றியே ஸத்தியாதி பதங்கள் வெரும் விசேஷணங்கள் என்று மட்டும் சொல்லாமல் லக்ஷண விசேஷணங்கள் என்றும் சொல்லப்பட்டன. ஸத்தியாதி பதங்கள் இதரநிவிருத்தியைக் குறிப்பிடும் வெரும் விசேஷணங்களென்றே வைத்துக் கொண்டு பார்த்தபோதிலும் விசேஷ்யமானது சூன்யமாக ஆகாதென்பதை இனிவிளக்குவோம். ஸத்தியாதி பதங்கள் விசேஷணங்களாக (இதரநிவிருத்தி போதகங்களாக) இருப்பதற்காக அப்பதங்களுக்குப்

பொருளேயில்லை, அதன் பொருள் சூன்யமே. என்று சொல்லமுடியுமோ ? அவ்விதம் அவற்றிற்கு பொருளே யில்லாமலிருந்தால் விசேஷ்யத்தை விலக்கிக்காட்டும் திறமை எங்கிருந்துண்டாகும். ஸத்தியாதியான பொருள்களால் அப்பதங்கள் பொருளுள்தாயின் அதற்குநேர் மாறான அந்ருதஜடபரிச்சின்னங்களானதர்மங்களுடன்கூடினவைகளான விசேஷ்யங்களினின்றும் விசேஷ்யமான ப்ரும்மத்தை விலக்கிக்காட்டுகின்றனவாக ஆகக்கூடும் என்பது பொருந்தும். உலகில் நீலம் உத்பலம் என்ற விடத்திலுள்ள நீலம் என்ற விசேஷணமானது உத்பலத்திலுள்ள நீலத்தன்மையைப் போதிக்கும் வாயிலாகவே சிவப்பு முதலிய தர்மமுள்ள உத்பலத்தினின்று அதைவிலக்கிப் போதிப்பதை நாம் அனுபவத்திற்காண்கின்றோம் அன்றோ. ஆகவே ஸத்யாதி பதங்கள் விசேஷணங்களாயினும் அந்ருதஜடபரிச்சின்னமான இதரபதார்த்த வியாவிருத்தி (விலக்கு) செய்வதுடன் ஸத்திய, க்ஞான, அனந்தம் என்ற பொருளுள்ளவைகளாகவுமேதானிருக்கின்றன என்றேற்பட்டது. மேலும் உத்பலாதிகளைப்போல, இங்கு விசேஷ்யமான ப்ரும்மமானது ப்ரஸித்தமாக இல்லாமைபற்றி அதை இல்லை யென்றுதான் சொல்லவேண்டும் என்று முன்னர் சொன்னதும் பொருந்தாது. ஏனெனில் விசேஷ்யத்தைக் கூறும் ப்ரும்மசப்தமானது எல்லாவற்றிற்கும் மேலான விருத்தியுள்ள வஸ்துவைப்பொருளாக உடையதாதலால் விசேஷ்யத்தைச் சூனியம் என்று சொன்னதும் பொருந்தாது. மேலும் ப்ரும்மஸ்வரூப லக்ஷணபோதகங்களான ஸத்தியாதிபதங்களுள் "அனந்த" என்ற பதமானது எவ்வித பரிச்சேதமும் ப்ரும்மத்திற்கில்லை யென்பதைப் போதிக்கும் வாயிலாக பரிச்சின்னமான வஸ்துவினின்றும் ப்ரும்மத்தை விலக்கி யுபதேசிக்கின்றது. ஸத்ய, க்ஞான சப்தங்களோவெனில் ஸச்சித்ரூபத்வ லக்ஷணமான தனது பொருளைப் போதிக்கும் வாயிலாகவே அந்ருத ஜடவியாவிருத்திகளைச் செய்து விசேஷணங்களாக ஆகின்றன. மேலும், तस्माद्वा एतस्मादात्मनः என்ற விடத்தில் ப்ரும்மத்தினிடத்திலேயே ஆத்மசப்தப் ப்ரயோகஞ் செய்திருப்பதால் க்ஞானத்தை யடைகின்றவனுடைய ஆத்மாப்ரும்மம், (அதாவது: எவனொருவன் ஆத்ம

க்ஞானத்தை யடைகின்றானோ அவனுடைய ப்ரத்யக்ஸ்வரூபமும் பிரும்மமும் ஒன்றே, இவ்விரண்டும் வேறானதன்று) என்றேற் படுகின்றது. இவ்விதமே एतमानन्द मयमात्मान मुपसंक्रामति= என்ற பின்வரும் வாக்கியமானது பிரும்மந்தான் ஆத்மா என்பதை ஞாபகப்படுத்துகின்றது. மேலும் तत्सृष्ट्वा । तदेवानुप्राविशत् அந்தப் பிரபஞ்சத்தை சிருஷ்டித்து அந்தப் பிரபஞ்சத்தையே பிரும்மம் பிரவேசித்தது என்றதால் பிரும்மமே ஜீவரூபமாகப் பிரகாசிப்பதாகவும் பின்னர் உபதேசிக்கப் படப்போகின்றது. இதினின்றும் க்ஞாதாவின் ஸ்வரூபமே பிரும்மம் என்பது விளங்கும்.

சங்கை—இங்ஙனமாயின் பிரும்மமானது ஆத்மாவாக ஆகுமானால் பிரும்மமானது க்ஞாதாவாக (அதாவது: க்ஞானானுகூல வியாபாரமுள்ளதாக) ஆகிவிடும். லோகத்திலோ ஆத்மாவானவன் க்ஞாதாவாக விருக்கிறான் எனப்பிரஸித்தமா யிருக்கின்றது. சுருதியிலும் सोऽकामयत 'அது காமனையை யடைந்தது' என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து முற்கூறியதை உறுதிசெய்ய இடமிருக்கிறது. எவன் காமனையுள்ளவனோ அவன் க்ஞானகர்த்தா என்பதும் அனுபவப் பிரசித்தமானதே. ஆனது பற்றிக்ஞான கர்த்தாவாக பிரும்மம் ஆகிவிடுவதால் "க்ஞானஸ்வரூபம் பிரும்மம்" என்று சொன்னது எவ்விதம் பொருந்தும். மேலும், "க்ஞானஸ்வரூபம் பிரும்மம்" என்று சொன்னபோதிலும் அதாவது: ज्ञा-धातुவின் प्रकृत्यर्थமான அறிவுருவமாக மட்டும் பிரும்மத்தைச் சொன்னபோதிலும் பிரும்மத்திற்கு அநித்யமாயிருக்குந் தன்மை ஏற்படுவதுடன் பரதந்திரம் என்றும் ஏற்பட்டுவிடும். ஏனெனில் धातुவின் அர்த்தம் கிரியையர்கையால் "ज्ञा" धातुவின் அர்த்தமான கிரியைக்கு காரக (அதன் ஸாதன) ங்களின் அபேக்ஷையுண்டாகும். இவ்விதம் காரகாபேக்ஷை யுண்டாவதிலிருந்து ज्ञानंब्रह्म என்று சொன்னபொதிலும் க்ஞானம் என்ற கிரியை எங்கிருக்கின்றதோ அங்கு அந்தக்ஞானக் கிரியை யுண்டாவதற்குறிய சாதனங்களும் இருந்துதான் தீரவேண்டும் என்றும் ஏற்படும். இவ்விதம் பார்க்கும்பொழுது பிரும்மஸ்வரூபகமாகச் சொல்லும் க்ஞானமானது தன்னைவிட வேறான ஸாதன (காரக)

ங்களை யபேக்ஷித்து ஏற்படவேண்டிவருவதால் அந்தக்ஞானமானது பாதந்திரம், அதாவது: தன்னைவிட வேறான காரகங்களை எதிர்பார்த்தே தனது ஸ்வரூப லாபத்தை யடையக் கூடியது என்றேற்படுவதால் க்ஞானரூபமான பிரும்மமும் பாதந்திரமானது என்றேற்பட்டு விடுமன்றோ? எனின்.

உத்தரம்—அந்த அநித்யத்வமும், பாதந்திரத்வமும் க்ஞானஸ்வரூபமான பிரும்மத்திற்கு ஒரு பொழுதும் வருவதற்கிடமில்லை. ஏனெனில் **साक्षी, चेता केवलो, निर्गुणश्च—साक्षी** தன்னில் அத்யஸ்தமான ஸகல வஸ்துப் பிரகாசகமாயும், **चेताकेवलः**= தனி॰ அறிவுருவமாயும் **निर्गुणश्च**=எவ்வித குணமற்றதாயும், ஆத்மாவிருக்கின்றது, என்ற சுருதி வாக்கியத்தால் ஆத்மாவின் ஸ்வரூபமானது கேவலம் (தனி) அறிவுருவமானதே யொழிய ஆத்ம ஸ்வரூபத்தைவிட க்ஞானமென்பது எவ்விதத்திலும் வேறுபட்டதன்று என்று தெளிவாகின்றது. ஆகவே **ज्ञान**த்தை **ज्ञाधातु**வின் **प्रकृत्यर्थ**மான **क्रिये**யாக சப்தப்பிரயோக முறையை யொட்டிக்கூறியதே யொழிய உண்மையில் பிரும்மஸ்வரூபமாக வான **ज्ञान**த்திற்கு **क्रियात्व** மானது ஸம்பவிக்காது. ஆகவே **ज्ञान**த்திற்கு அனித்யமாயிருக்கும் தன்மையோ **पारतन्त्र्य**மோ (பாதந்திரமாயிருக்கும் தன்மையோ) ஸம்பவிப்பதற்கிடமில்லை. ஆதலால் அது நித்யமென்றே ஏற்பட்டுவிட்டது. உண்மை இவ்விதமாயினும், சக்ஷுஸ் முதலிய இந்திரிங்கள் வாயிலால் விஷயாகாரமான பரிணாமத்தை யடைந்தும் உபாதிலக்ஷணம் பொருந்தியது மான புத்தியினுடையசப்தாதிஸ்வரூபமானயாதொரு விருத்திகள் (தோற்றங்கள்) உண்டோ அத்தோற்றங்கள் (விருத்திகள்) ஆத்மஸ்வரூபக்ஞானத்தால் பிரகாசப்படுத்துப்.படுவதுபற்றி தாம் உண்டாகும்பொழுது ஆத்மஸ்வரூப க்ஞானத்தின் ஸம்பந்தத்தையடைந்தவைகளாகவேதான் உண்டாகின்றன. ஆகவே ஆத்மஸ்வரூப க்ஞானத்தினால் பிரகாசப்படுத்தப்பட்டவைகளான அத்தகைய விருத்திகளை விக்ரியா ரூபங்களான ஆத்மதர்மங்களென அவிவேகிகள் கற்பிக்கின்றனர். பிரும்மத்தின் க்ஞானம் என்பது யாதுண்டோ அது சூரியனது பிரகாசம் போலும், அக்னியினது உஷ்ணம் போலும் பிரும்மஸ்வரூபத்தை விடவேறு படாததாய் பிரும்மஸ்

வரூபமாக இருகின்றதுடன் அது வேறுகாரணத்தை எதிர்பாரா ததாகவுமிருக்கின்றது. ஞானரூப பிரும்மமானது—நித்தியாத்ம ஸ்வரூபமாயிருத்தலாலும், தேசத்தாலோ காலத்தாலோ பிரும்ம ஸ்வரூபத்தை விட்டுப் பிரிந்ததான பதார்த்தமே இல்லாதிருத் தலாலும் பிரும்மமே காலம், ஆகாசம் முதலியவற்றிற்குக்காரண மாயிருத்தலாலும், நிரதிசய சூக்ஷ்மமாயிருத்தலாலும் அதற்கு அன்னியமாயும், அதனாலறியப்படாததாயும், சூக்ஷ்மமாயும், விலகினதாயும், மறைந்திருப்பதாயும், சென்றகாலத்திலோ, நிகழ் காலத்திலோ இனிவருங்காலத்திலோ உள்ளதாயுமிருக்கின்றவஸ் துவே கிடையாது. ஆனது பற்றி பிரும்மம் ஸர்வக்ஞமாகவுமா கின்றது.

இவ்விதமே **अपाणिपादो जवनो गृहीता पश्यत्यचक्षुः सशृणोत्यकर्णः । सवेत्ति वेद्यं नच तस्यास्तिवेत्ता तमाहुरग्र्यं पुरुषं महान्तं ॥** "பாணி, பாதம் இவ்விரண்டுமில்லாவிடினும் வேகமாகச் செல்லுகின்றதா யும், எதையும் எடுக்கின்றதாயும், கண்ணில்லாவிடினும் பார்க் கின்றதாயும், காதில்லாவிடினும் கேட்கின்றதாயும், (இருப்பது எதுவோ) அது அறியவேண்டியதை அறிந்து விடுகின்றது. இதை யறிகின்றவன் ஒருவனுமில்லை. இவனை முதன்மையானவும், மஹானுனவுமான புருஷனைச் சொல்லுகின்றனர்" என சுவே தாசுவதர சுருதியுபதேசித் திருக்கின்றது. அதுபோலவே **नहि विज्ञातुर्विज्ञातेर्विपरिलोपो विद्यते अविनाशित्वात्, नहि तद्द्वितीयमस्ति,** விக்ஞாதாவினுடைய விக்ஞாதிக்கு (ஸ்வரூபக்ஞானத்திற்கு) விநாசமானது கிடையா, அதைவிநாசஞ் செய்யக்கூடிய ஸாமக்ரீ யில்லாததே அதன் காரணமாகும். அதைக் காட்டிலும் இரண் டாவதான வஸ்து வில்லாததும் மற்றொரு காரணமுமாகும். என்று பிருஹதாரண்யக சுருதியு முபதேசித்திருக்கின்றது. விக் ஞாதிருஸ்வரூபத்தைவிட வேறாக இல்லாததாலும், காரணம் முத லிய நிமித்தங்களை யபேக்ஷிக்காதிருத்தலாலும் பிரும்மமானது க்ஞானஸ்வரூபமாயினும் அதற்கு நித்யமாயிருக்குந் தன்மையா னது சித்திக்கின்றது. ஆனது பற்றி அந்தக்ஞானமானது (**धातु**) தாதுவின் பொருளான கிரியாரூபமாக ஆகாது. ஆனது பற்றியே க்ஞானகர்த்தாவாகவும் (க்ஞான கிரியாசிரயமாகவும்) ஆகாது.

ஆனதுபற்றியுமே ज्ञान என்ற சப்தத்தால் வாச்சியமாகவும் அந்த பிரும்மமானது ஆவதில்லை. , ज्ञान சப்தவாச்யமாக இல்லாவிடினும், அந்தக்கரணபரிணாம ரூபமான விருத்திக்ஞான வாசகமான ஞானசப்தத்தால் அந்தபிரும்மமானது குறிக்கப்படுமே யொழிய நேரில் வாச்யமாக வாவதில்லை. ஏனெனில் ஒரு சப்தமானது நேரில் ஒருவஸ்துவை போதிக்கவேண்டுமானால் அந்த வஸ்துவினிடத்துள்ள ஜாதி, குணம், கிரியை முதலிய, தர்மங்களை முன்னிட்டேதான் போதிக்க க்கூடும். பிரும்மத்தினிடத்திலோ ஜாதி, குணம், கிரியை முதலிய தர்மங்கள் எதுவுமில்லை. ஆனதுபற்றி ज्ञानஎன்றசப்தத்தால் அதுநேரில் போதிக்கப்படமாட்டா. மேலும் பிரும்மமானது எவ்விதபேதமுமற்ற சுத்தசைதன்னிய வடிவமாயிருப்பதால், லோகசித்தமான सत्ताजाति ஸத்தா ஜாதி ஸ்வரூபவாசகமான ஸத்தியசப்தத்தால் எவ்வித बाध(பாத)த்திற்கும் தகுதியற்ற பிரும்மவஸ்துவானது குறிக்கப்படுகின்றதே யொழிய सत्यशब्द (ஸத்யசப்த) வாச்யமாகவும் ஆவதில்லை. இதுவரை கூறியமுறைப்படி ஸத்யம், க்ஞானம், அனந்தம், முதலிய பதங்களுள் ஸத்தியச்ப்தமானது பிரும்மத்தைக்குறிப்பிடுவதில் நேரும் சங்கையை, க்ஞான அனந்த சப்தங்கள் விலக்கிக்கொண்டும், க்ஞானசப்தமானது பிரும்மத்தைக் குறிப்பிடும் பொழுது நேரும் சங்கையை ஸத்யஅனந்தசப்தங்கள் விலக்கிக்கொண்டும், அனந்தசப்தமானது பிரும்மத்தைக் குறிப்பிடும் பொழுது நேரும் சங்கையை ஸத்யக்ஞான, சப்தங்கள் விலக்கிக்கொண்டும் ஸத்யாதி சப்தவாச்யமான பொருளினின்றும் பிரும்மத்தை விலக்கிக்காட்டிக் கொண்டும், பிரும்மத்தின் லக்ஷணத்தைக் கூறுகின்றவைகளாக அந்த ஸத்யாதிசப்தங்கள் ஆகின்றன என்றேற்பட்டது. ஆகவே "यतो वाचो निवर्तन्ते, अप्राप्य मनसा सह" "अनिरुक्तेऽनिलयने" மனதுடன் கூட வாக்குகள் (சப்தங்கள்) அடையமுடியாமல் எதனிடமிருந்து விலகுகின்றனவோ என்றும், சப்தவாச்யமாக இல்லாததும், தனக்கு மற்றொரு ஆதாரமற்றதுமான வஸ்துவில் நிலையைப்பெறுகின்றான் என்றும், இதே சுருதியிலுபதேசிக்கப்போவதைக்கொண்டும், பிரும்மமானது ஸத்தியாதிசப்தவாச்யமல்லவென்றும், நீலோத்பலம்போல வாக்யார்த்தமாக ஆகாதென்றும் ஏற்பட்டது.

**गुहायां= गूहति= संवृणोति इति=गुहा** அதாவது மறைக்கின்றது பற்றி "குஹா" எனப்படும் என்ற வ்யுத்பத்தியால் க்ஞானம், க்ஞேயம், க்ஞாதா ஆகிய இம்மூன்று பதார்த்தங்களும் இதிலடங்கியிருப்பதுபற்றி புத்தியானது "குஹா" எனப்படும். அல்லது, போகம் (ஸுக,துக்கானுபவங்கள்) அபவர்க்கம் (க்ஞானம்) ஆகிய இவ்விரண்டும் இதிலடங்கி யிருப்பதால் இந்தப் புத்தியானது குஹா எனப்படும் என்றபடி இந்தப் புத்தியிலிருக்கின்ற **परमे व्योमन्** அவ்வியாகிருதாகாசத்தில் **निहितं** இருக்கின்றபிரும்மத்தை **यः** எவன் **वेद** அறிகின்றானோ, அல்லது **गुहायां परमे व्योमन्** குஹையாகிற அவ்யாகிருதாகாசத்தில் என்றும் பொருள் கொள்ளலாம். இந்த அவ்வியாகிருதாகாசமானது ஸகலஜடபதார்த்தங்களுக்கும் காரணமாயிருப்பதாலும் ஸூக்ஷ்மதரமாக (தன்து காரியங்கள் யாவற்றிலும் பரவினதாக) இருப்பதாலும் இதனிடத்தில் எல்லா பதார்த்தங்களும் மூன்றுகாலங்களிலும் மறைந்தே கிடக்கின்றன. ஆனதுபற்றி இந்த அவ்யாகிருதாகாசத்தில் குஹா என்ற விசேஷணம் பொருத்த முள்ளதாகவே ஆகின்றது. ஆகவே அத்தகைய குஹா ரூபமாயிருக்கின்ற பரமவ்யோம (அவ்வியாகிருதாகாச)த்தில் இருக்கின்ற பிரும்மத்தை எவன் அறிவனோ என்னும் பொருள் கொள்ளலாம். ஆனால் இங்குள்ள **गुहायां परमेव्योमन्** என்றதற்கு வேறு விதமாகப்பொருள் கொள்ளுவதே நியாயமானதெனப் படுகின்றது. அதாவது: **गुहायां** புத்தியிலுள்ள **परमे** மேலான அதாவது ஸகுணப்பிரும்மோபாஸனங்கமாக ஆவதுபற்றி மிக்கச்சிறப்புபெற்ற **व्योमन्** பூதாகாசத்தில் இருக்கின்ற பிரும்மத்தை எவன் அறிகின்றானோ என்பதாம். **यो वैसबहिर्धापुरुषादाकाशो यो वैसोऽन्तः पुरुष आकाशो योऽयमन्तर्हृदय आकाशः** என்றசுருதியில் சரீரத்திற்கு வெளியிலுள்ள ஆகாசம் யாதுண்டோ சரீரத்திற்குள்ளிருக்கும் ஆகாசம் யாதுண்டோ அதுதான் ஹிருதயத்திற்குள்ளிருக்கும் ஆகாசம் என்றதால் காயத்ரீ வித்யாப்பிரகரணத்திலுள்ள காயத்திரீபதத்தால் லக்ஷிதமான பிரும்மத்தின் உபாஸனத்திற்கு ஸ்தானமாக ஹிருதயாகாசத்தையுபதேசித்ததிலிருந்து ஸகுணப்பிரும்மோபாஸனத்திற்கு அந்தஹிருதயாகாசமானது அங்கமென்றேற்படுகின்றது.

ஆகவே இதிலிருந்து அந்த ஹிருதயாகாசமான परमव्योम (பரம வ்யோம) எல்லாவற்றிற்கும்மேலான ஆகாசமாக ஆகிவிடுகின்றது என்று பெறப்பட்டது. ஆகவே அத்தகைய ஹார்த்தாகாசத்திலிருக்கின்ற குஹாசப்தவாச்சியமான புத்தியில் கலந்து பிரும்மமானது தெளிவாயறியப்படுகின்றது. ஸர்வகதமாயும், நிர்விசேஷமாயுமிருக்கும் பிரும்மத்திற்கு இதை விடத்தனியான தொருதேசகாலஸம்பந்தம் கூறமுடியாதன்றோ. ஆகவே இதுவரை கூறியபடி ஹிருதயாகாசத்திலுள்ள புத்தியில் பிரகாசிக்கின்ற பிரும்மஸ்வரூபத்தை எவன் तत्वमस्यादिमहा वाक्योपदेश மூலம் अहं ब्रह्मास्मि நான் பிரும்மமாயிருக்கின்றேன் என அறிந்து ஸாக்ஷாத்கரிக்கின்றானோ அவன் ஸர்வகாமங்களையும் (காம்யமான போகங்களையும்) அனுபவிக்கின்றான்.

சங்கை—நம்போன்று புத்திரன், ஸ்வர்க்கம் முதலியவற்றை ஒன்றன் பின்னொன்றாய் அனுபவிக்கின்றானா? எனின்.

உத்தரம்—सह=ஒரே ஸமயத்தில் காம்யபோகானுபவஜன்ய சுகங்கள்யாவையும் சூரியனுடைய பிரகாசம்போல நித்யமாயுள்ளதும் பிரும்மஸ்வரூபத்தைவிட வேறாக இல்லாததுமான ஒரே உபலப்தி (க்ஞான) யால் அனுபவிக்கின்றான். இந்த உபலப்தியைத் தான் सत्यं ज्ञानं என்றவிடத்திலுள்ள ज्ञानं என்றபதத்தால் லக்ஷணீயமாக முன்னர் சொல்லப்பட்டது. அதேபொளைத்தான் இங்கும் सह ब्रह्मणा=பிரும்மரூபமாக இருந்து கொண்டு ஒரே ஸமயத்தில் ஸகலசுகங்களையும் அனுபவிக்கின்றான் என்று சுருதி உபதேசிக்கின்றது. ஆகவே ब्रह्मभूतो विद्वान्=பிரும்மமாக ஆன வித்வானானவன் பிரும்மஸ்வரூபமாகவே ஸகலகாமங்களையும் அனுபவிக்கிறான் என்றேற்பட்டது. இவ்விதம் உபதேசித்ததிலிருந்து ஜலத்திற்காணப்படும் சூரியனுடைய பிரதிபிம்பம் போல உபாதியாகிற சித்தத்தால் வேறுபடுத்தப்பட்டு சித்தப்பிரதிபிம்பமாயிருக்கின்றவனும் ஆனதுபற்றியே ஸம்ஸாரியுமான ஜீவஸ்வரூபத்தால் தர்மாதி நிமித்தத்தாலுண்டாகக்கூடியதும் சக்ஷுஸ் முதலியகாரணங்களை யபேக்ஷித்துண்டாக்கக்கூடியதுமான காம்யபோகங்களை உலகில் ஜீவன் அனுபவிப்பதுபோல இந்த அனுபவத்தைச் சொல்லமுடியாது என்றேற்பட்டது. ஆகவே முற்கூறி

யபடி ஸர்வக்ஞமாயும், ஸர்வகதமாயும், பிரத்யகாத்ம ஸ்வரூபமாயும் இருக்கின்ற நித்யப்பிரும்ம ஸ்வரூபத்தால் சக்ஷுஸ் முதலிய கரணாபேக்ஷை யில்லாததாயும், தர்மாதிநிமித்தத்தை யபேக்ஷிக்காததாயும் இருக்கின்ற எல்லா சுகங்களையும் ஒரே ஸமயத்தில் அனுபவிக்கிறான் என்று பகுத்தறிந்து கொள்ளவேண்டும். **विपश्चिता** மேதாவியான, அதாவது: ஸர்வக்ஞமான ஸ்வரூபத்தால் என்று பொருள். ஸர்வக்ஞமாயிருக்கும் தன்மையாதுண்டோ, அது தான் "**विपश्चित्वं**" விபச்சித்தாயிருக்குந்தன்மை. ஆகவே ஸர்வக்ஞமான பிரும்மஸ்வரூபத்தால் அனுபவிக்கிறான்என்றேற்பட்டது. மந்திரத்திலுள்ள**इति**=என்றபதம் மந்திரத்தின் முடிவைச் சொல்லுகிறது. இந்த ஆனந்தவல்லியினுடைய அர்த்தம்யாவும் **ब्रह्मविदाप्नोतिपरं** என்ற பிராம்மணவாக்கியத்தால் சுருக்கமாகக் கூறப்பட்டது. அவ்விதம் சுருக்கமாகக் கூறப்பட்ட பொருளே **सत्यंज्ञानमनन्तं** என்ற மந்திரபாகத்தால் விரித்துக் கூறப்பட்டது. அவ்விதம் மந்திரபாகத்தால் சொல்லப்பட்டதையே திரும்பவும் விரிவுபடுத்திக்கூறி அர்த்த நிச்சயம் செய்வதற்காக **तस्माद्वा**= என்று தொடங்கிய மேலுள்ளபாகம் ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.

மந்திரத்தின் ஆதியில் **सत्यं ज्ञानमनन्तम्** என்று சொல்லப்பட்டிருக்கின்றது. அவ்விதம் கூறியிருப்பதில், அனந்தம் என்றதால், தேசம், காலம், வஸ்து ஆகிய இம்மூன்று விதபரிச் சேதமும் (குறைவும்) அற்றது பிரும்மம் என்று உபதேசித்ததாக ஏற்படும். அது எவ்வித மெனின் ? இல்லாததேசமானது இல்லாதிருப்பதால் ஆகாசத்திற்கு தேசபரிச்சேதம் (குறைவு) கிடையா. ஆயினும், ஆகாசமானது பிரும்மத்தினிடமிருந்து உண்டாவதுபற்றி பிரும்மகாரியமாக ஆவதால், காலத்தாலும், வஸ்துவாலும்பரிச்சேதமுள்ளதாக வேதானிருக்கின்றது. பிரும்மமானது வேறொன்றிற்கும் காரியமாக இல்லாதிருப்பதால் காலத்தாலோ, வஸ்துவினாலோ பரிச்சேதம் உள்ளதாக ஒருபொழுதும் ஆகாது. காரியமான (உண்டுபண்ணப்பட்டதான) வஸ்து எதுவோ அதுவே கால பரிச்சேதத்தையடையும். பிரும்மமோ காரியமு(உண்டுபண்ணப்பட்டது)மன்று. ஆகவே காலத்தாலும் இதற்குப்பரிச்சேதம் சொல்லமுடியாது. இதுபோலவே வஸ்துவினாலும் பிரும்மமத்

திற்குப் பரிச்சேதம் நேருது. ஏனெனில், ஒன்றைவிட வேருக மற்ெருரு வஸ்துவானது இருந்தால், ஒருவஸ்துவுக்குமற்ெருரு வஸ்து பரிச்சேதகம் என்று சொல்லக்கூடும். ஒருவஸ்துவைப் பற்றிய அறிவு எந்தசமயத்தில் ஏற்படுமோ அதேஸமயத்தில் அந்தவஸ்துவானது மற்றவஸ்துவினிடமிருந்து பரிச்சேதத்தை யடைந்ததாகஆகி விடுகின்றது. ஆகவே எந்தவஸ்துவினிடமிருந்து எந்தவஸ்து வைப்பற்றிய அறிவானது நிவிருத்தியையடைகின்றதோ அது அதற்கு பரிச்சேதகம் என்பது பொருந்தும். அசுவத் தன்மை, கோ(பசு) த்தன்மை இவ்விரண்டையும் எடுத்துக்கொள்வோம். அசுவத்தன்மையைப் பற்றியுண்டாகும் அறிவினின்றும் பசுத்தன்மையைப் பற்றியுண்டாகும் அறிவானது விலகின (வேறுபட்ட) தாக ஆகிவிடுகின்றது. ஆகவே அவ்விதபரிச்சேதமானது உண்மையில் வேருனவஸ்துக்களினிடையே காணக்கிடக்கின்றது. இம்மாதிரியான வஸ்து பேதம் பிரும்மத்திற்குச் சொல்லுவதற்கில்லை. ஆகவே அந்தப்பிரும்மமானது எல்லா வஸ்துவுக்கும் வேருக இல்லாததால் வஸ்து பரிச்சேதம் அற்றதாகவும் ஆகிவிட்டது. எவ்விதமெனின் கூறுவாம். காலம், ஆகாசம் முதலிய ஸகலபதார்த்தங்களுக்கும் பிரும்மமானது காரணமாயிருப்பதாலேயே அவ்விதவஸ்து பரிச்சேதமற்றிருத்தல் அதற்கு ஏற்படுகின்றது.

சங்கை — காரியமான காலாகாசாதிகளை விடகாரணத்தை வேருக ஒப்பவேண்டுவது அவசியமாகின்றமையின் . பிரும்மத்திற்கு காரியவஸ்துவால் பரிச்சேதம் ஏற்படக்கூடுமன்ருே ?

உத்தரம்—वाचारंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येवसत्यम्

"एवं सदेव सत्यं" காரியமானது வாக்கியவஹார விஷயமானபெயர் மட்டுமேயல்லாது அது ஸத்தியமானதன்று, காரணமான மிருத்திகை என்பதே தான் சத்தியமானது என்றும், இதுபோல் ஸத்பதபோத்யமான காரணவஸ்துவே ஸத்தியமானது என்றும் சாந்தோக்யஉபநிடதத்தில் உபதேசித்திருபபதினின்று காரியவஸ்துவானது அநிருதம் (உண்மையிலில்லாதது) என்றும்,காரணந்தான் ஸத்தியமென்றும், காரணத்தைவிடகாரிய

மென்பது தனியாய் ஒன்றில்லை என்றும், ஏற்படுவதால் ஆகாசாதி காரியவஸ்துவினின்றும் அதன் காரணமாகக்கூறப்படும் பிரும்மத்திற்கு எவ்விதவஸ்துபரிச்சேதமும் சொல்லுவதற்கிடமில்லை. ஆகாசமோ தேசபரிச்சேதமற்றதென்பது உலகப்பிரசித்தமானது. அவ்விம் தேசபரிச்சேதமற்ற ஆகாசத்திற்குப் பிரும்மம் காரணமாவதால் பிரும்மத்திற்குத் தேசபரிச்சேதம் கிடையாதென்பது உறுதிசெய்யப்படுகின்றது. எங்கும் நிறைவு பெறாத ஒருகாரணத்தினின்றும் எங்கும் நிறைவு பெற்ற காரியம் உண்டாவதாக லோகத்தில் எவராலும் காணப்படாத விஷயமன்றோ ? ஆனதுபற்றி பிரும்மத்திற்குக் கூறிய தேசபரிச்சேதமின்மையானது ஒப்புயர்வற்றதாக ஆகிவிட்டது. பிரும்மமானது ஒன்றின் காரியமாகஇல்லாமை பற்றி காலபரிச்சேதமும் இதற்குக் கிடையா. இதுபோலவே இதைவிடவேறான வஸ்துவொன்று இல்லாததாலேயே வஸ்து பரிசேதமும் இதற்கு க்கிடையா. ஆனதுபற்றியே ஒப்புயர்வற்ற ஸத்தியத்தன்மை யுமுள்ளதாக பிரும்மமாகி விடுகின்றது.

**(मन्त्रः) तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः...ष्ठा ।**

எந்த பிரும்மமானது ஆதியில் பிராம்மண வாக்கியத்தால் சூசிப்பிக்கப்பட்டதோ, எந்தப்பிரும்மமானது **सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** என்ற மந்திரவாக்கியத்தால் குறிப்பிடப்பட்டதோ அந்த இந்தபிரும்மமாகிற **आत्मनः** ஆத்மாவினிடமிருந்து, அதாவது ஆத்மஸ்வரூபபூதமான அந்த இந்தபிரும்மத்தினிடமிருந்து **आकाशः** ஆகாசமானது **संभूतः** உண்டாயிற்று. (**तत्सत्यं स आत्मा** அதுஸத்யம், அது ஆத்மா, என வேறுசுருதியில் தத்ஸத் என்ற சப்தங்களால் சொல்லப்படும் பிரும்மத்தையே**आत्मा**என ஆத்மசப்தத்தாலும் சொல்லியிருப்பதால்பிரும்மமானது ஆத்மசப்தவாச்சியமாகவும் ஆகின்றது. மேலும் அந்தபிரும்மமானது எல்லாவற்றிற்கும் ஆத்மா (ப்ரத்யகாத்மா) வாகவும் இருப்பதால் பிரும்மத்தை ஆத்மா வென்றதும் பொருத்தமுள்ளதே. ஆகவே இத்தகைய ஆத்மஸ்வரூபபூதமான பிரும்மத்தினிடமிருந்துண்டான ஆகாசமானதுசப்தத்தைக்குணமாகவுடையதாகவும்,மூர்த்தமான திரவியங்களுக்குஅவகாசத்தை

(இடைவெளியை) த்தரக்கூடியதாகவு மிருக்கின்றது. आकाशाद्वायु:=அந்த ஆகாசத்தினின்றும் வாயுவானது. (संभूत: உண்டாயிற்று) உண்டான இந்தவாயுவானது ஆகாசகுணமான சப்தம், தனதுகுணமான ஸ்பர்சம், ஆகிய இரண்டு குணங்களுள்ளதாகின்றது. वायोरग्नि: முந்தின, சப்தம், ஸ்பர்சம் ஆகிய இரண்டு குணங்களுடனும், தனது ரூபம் என்ற குணத்துடனும் சேர்ந்து மூன்று குணமுள்ள அக்னியானது வாயுவினிடமிருந்து (உண்டாயிற்று) अग्नेराप: முந்திய மூன்று குணங்களுடனும் தனது ரஸம் என்ற குணத்துடனும் சேர்ந்து நான்கு குணங்களுள்ள ஜலமானது அக்கினியினிடமிருந்து (உண்டாயிற்று.) अद्भ्य: पृथिवी முற்கூறிய நான்கு குணங்களுடனும் தனது கந்தம் என்ற குணத்துடனும் சேர்ந்து ஐந்து குணங்களுள்ள பூமியானது ஜலத்தினின்றும் (உண்டாயிற்று)

पृथिव्या ओषधय: பூமியினின்றும் ஓஷதிகளும், ओषधीभ्योऽन्नम् ஓஷதிகளிடமிருந்து அன்னமும், अन्नात्पुरुष: அன்னத்தினின்றும் ரேதோரூபபரிணமம் வாயிலாகதலை கை முதலிய வடிவமமைந்த சரீரமும், முறையே (உண்டாயின) स वा एष पुरुष: अन्नरसमय: முற்கூறிய அந்த இந்தபுருஷசப்தவாச்யமானசரீரமானது அன்னரஸத்தின்விகார (மாற்றுருவ) மானதே. பிதாவாகவான புருஷாகிருதியினால் பாவிக்கப்பட்டதாய்க் கொண்டு பிதாவினுடைய எல்லா அங்கங்களினின்றும் உண்டான ரேதஸ் (வீர்ய.) ஸானது சரீரத்திற்கு பீஜமாக ஆகிறது. அந்த ரேதஸ்ஸினின்றும் புருஷசப்தவாச்யமான எந்தசரீரமானது உண்டாகின்றதோ அந்தச்சரீரமும் பிதாவான புருஷனுடைய ஆகிருதிக் கொப்பான ஆகிருதியையுடையதாகவே ஆகிறது. உலகில் எல்லாஜாதிகளிலும் பிறக்கும் குழந்தைகளுக்கு ஜனகனுடைய ஆகிருதியிருப்பது நிச்சயமாகக் காணவும் படுகின்றது.

சங்கை—உலகில் பிறக்கும் எல்லாப்பிராணிகளின் சரீரமும் அன்ன ரஸமயமாகவும், பிரும்மத்தின் வம்சத்தில் சேர்ந்ததாகவுமே இருக்க மனிதசரீரத்தை மட்டும் கிரஹித்ததற்குக் காரணம் யாது? எனின்.

உத்தரம்— எல்லாவற்றிலும் மனிதசரீரமானது முக்கியமாயிருத்தலே அதன் காரணமாகும்.

சங்கை — மனிதசரீரம் முக்கியமாவதற்குரிய காரணம் யாதெனில்?

உத்தரம்—கர்மம், க்ஞானம் இவற்றில் இந்த மனிதசரீரத்திற்கே அதிகார மிருப்பதுதான் அதன் காரணமாகும். அதாவது விதி, விலக்குகளைப் பகுத்தறிந்து அதன்படி நடக்கும் திறமையும், சாஸ்திரங்களிற் சொல்லிய ஸ்வர்க்கம் முதல் மோக்ஷாந்தமான பலனின் ஆசைகொண்டு அதற்குத்தக்கபடி ஸாதனானுஷ்டானம் செய்தலும் இந்த மனிதசரீரத்திற்றான் நேருகின்றது. இவ்விதமே पुरुषे त्वेव आविस्तरामात्मा स हि प्रज्ञानेन संपन्नतमो विज्ञातं वदति विज्ञातं पश्यति वेदश्वस्तनं वेद लोकालोकौमर्त्येनामृतमीप्सति एवं संपन्नः अथेतरेषां पशूनामशनायापिपासे एवाभिविज्ञानम्, "ஆத்மாவானது மனிதசரீரத்திலேயே மிக்கப்பிரகாசமுள்ளதாக யிருக்கின்றது. அந்தமனிதனன்றே அதிகம் அறிவுள்ளவனாயிருந்து கொண்டு அறியப்பட்டதைச் சொல்லுகிறான். அறியப்பட்டதைப் பார்க்கிறான். நாளைவருவதை அறிகிறான். லோகமென்ற போக்கியத்தையும், அலோகமென்ற அதன்சாதனத்தையும் அறிகிறான். மர்த்தியமான (விநாசத்தை யடையக்கூடியதான) க்ஞான கர்மாதி ஸாதனங்களால் அமிருதமென்ற மோக்ஷத்தை யடைய விரும்புகிறான். என இவ்விதம் கூடினவனாகிறான். மனிதனல்லாத பசுக்களுக்கோ பசி, தாஹம், இவைகளைப் பற்றிய அறிவு மட்டுமே தானுண்டாகின்றது." என்ற சுருதி வாக்கியமுமிருக்கின்றது. அத்தகைய மனிதனே இங்கு கூறியவித்யையினால் ஸர்வாந்தரதமமான பிரும்மத்தை யடையட்டும் என சுருதி எண்ணுகிறது. வெளியிலுள்ள அனாத்மங்களான ஆகார விசேஷங்களில் ஆத்மபாவத்தை யடைந்த அந்த மனிதனுடைய புத்தியை வெளியிலுள்ள யாதானுமொரு ஆகாரவிசேஷத்தின் பிடிப்பில்லாமல் ஸர்வத்திற்கும் உள்ளில் பிரகாசிக்கும் பிரத்யகாத்ம விஷயமாக்கி முடிவில் எவ்விதப்பிடிப்புமற்றதாகச் செய்வதென்பது முடியாதகாரியமெனகருதிபிராணமயாதிகோசங்களில்

தலை முதலிய அவயவகல்பனைகளை அனுபவத்திலுள்ள ஸ்தூலசரீரத்திலிருப்பதற்கொப்பாகவே செய்து இளம்பிறை சந்திரனிடத்தில் புத்தியைச் செல்லும்படி செய்வதற்காக கிளையின் நுனியைக் காட்டுவது போல ஆத்மாவினிடத்தில் பிரவேசிக்கும்படி செய்ய வெண்ணங்கொண்ட சுருதியானது तस्येदमेवशिरः என்றது முதலியவாக்கியங்களால் அம்முறையை யுபதேசிக்கத் தொடங்குகிறது.

तस्य அன்னரஸமயனான புருஷனுக்கு इदमेव அனுபவப்பிரசித்தமான சிரஸ்ஸே शिरः தலையாகின்றது. பிராணமயாதி கோசங்களில் சிரஸ்ஸாக இல்லாதவைகளை சிரஸ்ஸாகக் கல்பித்து உபதேசிக்கப் போவதால் இந்த அன்னமயகோசத்திலும் அவ்விதபுத்தி உண்டாகக் கூடுமெனக் கருதி பிரசித்தமான சிரஸ்ஸே அன்னமயகோசத்திற்கு சிரஸ்ஸாக ஆகின்றதேயொழிய கற்பனை எதுவும் இங்கில்லை என்பதைக்காட்டவே इदमेव शिरः என்று கூறப்பட்டது. இவ்விதமே பக்ஷம் முதலியவைகளிலும் காண்க. अयम् கிழக்குமுகமாக நிற்கின்ற மனிதனுக்கு வலதுபக்கத்திலிருக்கும் கையானது दक्षिणः पक्षः=வலதுபக்கத்து இரக்கையாகும். अयम्=அவ்விதமே இடதுபக்கத்திலுள்ள கையானது उत्तरः पक्षः இடதுபக்கத்திலுள்ள இரக்கையாகும். अयम्=தேகத்தின் நடுபாகமானது आत्मा=நடுவிலுள்ள அங்கமாகும். मध्यं ह्येषामंगानामात्मा இந்த அங்கங்களுடைய நடுபாகமானது ஆத்மா எனப்படுமன்றோ? என்ற வேறுசுருதியும் சொல்லுகிறது. इदं=உந்திக்குக் கீழுள்ள அங்கம்யாதுண்டோ (तत्=அது) पुच्छं வால்போல் प्रतिष्ठा நிலைத்து நிற்றலுக்குக் காரணமாகின்றது. பசுபக்ஷிகளுக்குப் புச்சமானது (பின்னுள்ள இரக்கையானது) எவ்விதம் நிலைத்துநிற்றலுக்குக் காரணமாகுமோ அவ்விதமே இவ்விடத்திலும் காண்க. ஆகவே அன்னமயகோசத்திற்குச் சொல்லிய சிரஸ், பக்ஷம், புச்சம் முதலிய கல்பனைகளை யொட்டியே பின்னர் சொல்லப்படும் பிராணமய, மனோமய, விக்ஞானமய, ஆனந்தமயாதி கோசங்களுக்கும் சிரஸ் முதலிய கல்பனையானது சித்திக்கின்றது. முதலில் பிரதிமையின் ஆகாரம் அமைந்தமண்மயமான கருவில் காச்சி உருக்கிவிடப்பட்ட தாம்பிரமானது போலவே இங்கும் காண்க. तदप्येष-श्लोकोभवति பிராம்மணவாக்கியத்தால் சொல்லப்பட்ட அர்த்தத்

தில் இந்த அன்னமய கோசப்பிரகாசகமான மந்திரமும் இருக்கின்றது.

சங்கரபாஷ்யப்படி முதலாவது அனுவாகம் முற்றிற்று.

## வித்யாரண்யதீபிகை.

यस्य निश्वसितं वेदा यो वेदेभ्योऽखिलं जगत् ।
निर्ममे तमहं वन्दे विद्यातीर्थं महेश्वरम् ॥
साधनं ब्रह्मविद्यायास्सांहित्याभीरितं स्फुटम् ।
वारुण्युपनिषद्येतद्ब्रह्मतत्वं विविच्यते ॥

(க—ரை) வேதங்கள் எவரிடமிருந்து சுவாஸம் போல வெளிவந்தனவோ, ஸகலஜகத்தையும் எவர் வேதங்களினின்றும் சிருஷ்டித்தாரோ அந்த வித்யாதீர்த்தரென்ற மஹேசுவரரை நான் நமஸ்கரிக்கின்றேன், ஸம்ஹிதோபநிடதத்தில் பிரும்மவித்யைக்குச் சாதனமானது தெளிவாயுபதேசிக்கப் பட்டது. வாருணீ என்ற இந்தஉபனிடதபாகத்தில் பிரும்மத்தின் தத்துவம் (ஸ்வரூபம்) விளக்கப்படுகின்றது.

## (मन्त्रः) सहनाववतु...शान्तिः ॥

(ப—ரை) **नौसह**=சிஷ்யன், ஆசாரியன் ஆகிய இருவரையும் சேர்த்து **अवतु**=ரக்ஷிக்கட்டும். **नौसह**=இருவரையுமே **भुनक्तु**=காப்பாற்றட்டும். **वीर्यं**-வித்யாஸாமர்த்தியத்தை **सह** இருவரும்சேர்ந்தே **करवावहै**=ஸம்பாதிக்கக்கடவோமாக. **नौ**=குரு சிஷ்ய சம்பந்தமான **अधीतं**=அத்யயனம் செய்யப்பட்ட கிரந்த ஸமூஹமானது. **तेजस्वि**= தனது அர்த்தப்பிரகாசகமாக **अस्तु** ஆகட்டும். **माविद्विषावहै** நாங்களிருவரும்துவேஷிக்காமல் இருப்போமாக.

(தா—ம்) இந்த ஜன்மத்திலோ, அல்லது சென்றஜன்மங்களிலோ அனுஷ்டிக்கப்பட்டவைகளும், கர்ம காண்டங்களில் சொல்லப்பட்டவைகளுமான நித்தியநைமித்திக கர்மங்களினால் உண்டான ஆத்மதத்துவக்ஞானேச்சையையுடையவனும் ஸம்ஹிதோபனிடதத்தில் சொல்லியஉபாஸனங்களால் அந்தர்முகனுகிஏகாக்ர சித்தமுள்ளவனும், காம்யகர்மங்களாலுண்டாகும் லோகங்கள் ஸாரமற்றவைகளெனப் பரீக்ஷித்தறிந்து அவற்றினின்றும் வைரா

க்கியத்தையடைந்தவனும், கர்மத்தால் மோக்ஷம் கிடையாதென நிச்சயித்துக்கொண்டு பிரும்மதத்துவ க்ஞானத்திற்குவேண்டி குரூபஸதனம் செய்தவனும் எவனோ, அவனே சிஷ்யன் எனக் கொள்ளப்படுவன். இதுபோலவே சுரோத்திரியராயும், அதாவது: வேத சாஸ்திரங்களை அத்யயனஞ்செய்து அதன் பொருளையும் அறிந்து கொண்டு தான் அறிந்ததைப் பிறர்க்கு பதேசஞ்செய்யும் திறமையுள்ளவராயும், பிரும்ம நிஷ்டராக (துறவி) இருந்து வேறிடத்தில் புத்தியைச் செலுத்தாதவராயும் இருப்பவரே குருவாவர். ஆகவே இவ்வித லக்ஷணம் வாய்ந்த சிஷ்யன் குரு இவ்விருவர்களுள் குருவானவர் கிருதார்த்தர் (அடையவேண்டியவை யாவையும் அடைந்தவர்) ஆனது பற்றி பிரார்த்தனையால் சாதிக்கவேண்டுவது ஒன்றும் அவர்க்கு இல்லாவிட்டாலும், சிஷ்யன், தனக்கும் ஆசாரியருக்கும் க்ஷேமத்தைப் பிரார்த்திக்கிறான். குருவானவர் எவ்விதசோம்பலுமின்றி எவ்விதம் உபதேசிப்பாரோ, நான் குருவாலுபதேசிக்கப்பட்ட பொருளை மாறாது எவ்விதம் கிரஹிப்பேனோ அவ்விதம் அருள் புரியவேண்டும் என **सह नाववतु**=என்றதால் பிரும்மம் சிஷ்யனால் வேண்டப்படுகின்றது. மேலும் குருவினாலுபதேசிக்கப்பட்ட பொருளைக் கிரஹிப்பதினால் எனது அவித்யாநிவிருத்தி யுண்டாவதை நேரில்கண்ட எனது ஆசாரியன் எவ்விதம் சந்தோஷிப்பாரோ அவ்விதம் கார்க்கவேண்டுமென **सह नौ भुनक्तु** என்றதால் வேண்டப்படுகின்றது. மேலும் குரு நன்கு வியாக்கியானஞ் செய்யவில்லை எனவெண்ணி சிஷ்யனுக்கு சந்தோஷக்குறைவால் துவேஷமும், குரு சுச்ரூஷைப்போதுமானதாக இல்லை என வெண்ணி ஆசார்யனுக்கு துவேஷமும் உண்டாகாமலிருக்கவேண்டு மென **मा विद्विषावहै** என்றதால் வேண்டப்பட்டது.

முதலனுவாகம் முற்றிற்று.

## வித்யாரண்யரின்படி இரண்டாவது அனுவாகம்.

(அ—கை) சம்பவிக்கக்கூடுமென எதிர்பார்த்த துவேஷம் முதலியன விலகுவதற்கு வேண்டி ஜபிக்கவேண்டிய மந்திரத்தை முதலனுவாகத்தில் படித்து, இந்த இரண்டாவது அனுவாக

த்தின் ஆதியில் எல்லாஉபனிஷத்திற்கும் ஸாரபூதமான பொருள் சுருக்கமாயுபதேசிக்கப்படுகின்றது.

**(मन्त्र:) ब्रह्मविदाप्नोति परम् ॥**

**ब्रह्म=बृहि वृद्धौ** என்ற தாதுவினின்றும் ஏற்பட்ட **ब्रह्म** என்ற சப்தமானது விருத்தி (பெருக்கு) நிறைந்துள்ள வஸ்துவைச் சொல்லுகின்றது. அத்தகைய விருத்தியை (பெருக்கை) க்குறைத்துக் காட்டக்கூடிய பிரகரணமோ, உபபதமோ இங்கு இல்லாமைபற்றி ஒப்புயர்வற்ற (நிரதிசயமான) விருத்தியே இங்கு கூறப்பட்டதாக ஏற்படும். ஒப்புயர்வற்ற விருத்தியாதெனில்—நித்யமாயும், அவித்யாதி தோஷமற்றிருப்பது பற்றி சுத்தமாயும், க்ஞான வடிவமாயும் இருப்பதேயாகும். இவ்விதமே சங்கரபகவத் பூஜ்ய பாத பாஷ்யத்திலும் சொல்லப்பட்டிருக்கின்றது. அத்தகைய ஒப்புயர்வற்ற விருத்தியுள்ள தான பிரும்மத்தை **वेत्ति**=மனதால் ஸாக்ஷாத்கரிப்பவன் பிரும்மவித் எனப்படுவன். **मनसैवाऽनुद्रष्टव्यं नेह नानाऽस्ति किंचन** பிரும்மத்தை மனத்தாலே **अनु**குருவின் உபதேசத்திற்குப்பின்னர் **द्रष्टव्यं** காணல் வேண்டும் இதனிடத்து வேறொன்றினால் பார்க்கத்தக்க நாமரூபாதிகள் ஒன்றுமே கிடையா.

சங்கை—சக்ஷுராதிகளின் அபேக்ஷையில்லாவிடினும் சாஸ்திரப்பயனானதுபற்றி வேதவாக்கியாபேக்ஷை பிரும்மத்திற்கு இருக்கவேண்டுவது அவசியமாகும் அன்றோ? எனின்?

உத்தரம்—**मनसैवाऽनुद्रष्टव्यम्** என்ற விடத்தில் **अनु** என்று சுருதி சொல்லியிருக்கிறது. அதாவது: பிரும்மத்தை யுபதேசிக்கும் சாஸ்திரத்தை குருமூலம் சிரவணம் செய்தபின்னர் மனத்தால் அந்தப் பிரும்மத்தை ஸாக்ஷாத்கரிக்கவேண்டும் என அந்த **अनु** என்ற பதத்தினின்றுமேற்படுகின்றது. ஆகவே முதலில் சிரவணகாலத்தில் தத்வமஸி முதலிய வேதவாக்கியங்களின் அபேக்ஷையிருந்த போதிலும் பின்னர் அனுபவகாலத்தில் மனது ஒன்றினாலேதான் அந்தப் பிரும்மம் ஸாக்ஷாத்கரிக்கப்படுமேயின்றி இந்திரியாபேக்ஷைவேண்டுவதில்லை என்றே தீர்மானிக்கப்படுகின்றது. மேலும் **मनसैव** என்ற விடத்திலுள்ள **एव** (ஏவ) காரத்தால்

கண்முதலிய வெளியிலுள்ள இந்திரியாபேக்ஷையை விலக்கி **அனு** என்றதால் சாஸ்திரத்தின் அபேக்ஷையைமட்டும் சாஸ்திரமானது அங்கீகரித்திருக்கின்றது என்றும் ஏற்படுகின்றமையின் மேற்கூறியவாசங்கைக் கிடமில்லை.

சங்கை—அப்படியாயின் அதாவது: பிரும்மமானது சாஸ்திரத்தாலறியக்கூடியதாக ஆகுமாயின் சாஸ்திரத்தாலறியப்படும் தர்மாதர்மங்கள் எவ்விதம் நித்யபரோக்ஷங்களாகவே இருக்கின்றனவோ அவ்விதமே சாஸ்திரபோத்யமான பிரும்மமும் நித்திய பரோக்ஷமாகவே ஆகிவிடக்கூடுமன்றோ! எனின்?

உத்தரம்—அதனுண்மையை இங்குகூறுவாம். தர்மாதர்மத்தைத் திருஷ்டாந்தமாகக் கூறியது முற்றிலும் மாறானதாகவே ஆகும். ஏனெனில் **यत्साक्षादपरोक्षाद्ब्रह्म** என்ற வேதவாக்கியமானது பிரும்மத்தை அபரோக்ஷஸ்வபாவமுள்ளதாக உபதேசித்திருக்கிறது. தர்மாதர்மங்களோ எப்பொழுதுமே பரோக்ஷமானவைகள். ஆகவே தர்மாதர்மங்களைத் திருஷ்டாந்தமாகக்கூறினது முற்றிலும் மாறானதாகவேதான் ஏற்படுகின்றது. ஆனால் பிரும்மமானது ஸ்வயம் அபரோக்ஷமாயினும், "பரோக்ஷத்தன்மை யுடையதுபிரும்மம்" என்றபிரமம் இருக்கின்றதாக வேண்டுமானால்சொல்லலாம். நாமும் அதையங்கீகரிக்கிறோம். பிரும்ம விஷயமான பரோக்ஷத்வப்பிரமத்தைப் போக்கவேண்டியே சுருதியானது "ஜகத்காரணம் பிரும்மம்" என தடஸ்தலக்ஷணமுறையால் உபலக்ஷிதமானபிரும்மத்தைஸத்யம்,க்ஞானம்,அனந்தம்முதலிய அவாந்தர (இடையிலுள்ள) வாக்கியத்தாலுபதேசித்து "பரோக்ஷம் பிரும்மம்" என்ற பிரமத்தை (மயக்கத்தைப்) போக்கவேண்டி அந்தப்பிரும்மத்திற்கு மஹாவாக்கியத்தினால்பிரத்யகாத்மஸ்வரூபத்துடன் தாதாத்மியத்தை (இரண்டறக்கலந்திருத்தலை) போதிக்கின்றது. "**य एवं वेद अहं ब्रह्मास्मीति स इदं सर्वं भवति** எவனொருவன் நான் பிரும்மம் என அறிகின்றானோ (ஸாக்ஷாத்கரிக்கின்றானோ) அவன்ஸர்வாத்மப்பிரும்மமாக ஆகிவிடுகிறான்" எனபிருஹதாரண்யகசுருதி எவ்விதம் உபதேசிக்கின்றதோ அவ்விதமே இவ்விடத்திலும், ப்ரத்யகாத்மதாதாத்மியத்தையே உபதேசிக்கவெண்ணங்கொண்டு **यो वेद निहितं गुहायां** என்ற வாக்கியத்தால் பிரத்ய

காத்மாவினிடத்தில் பரோக்ஷத்வப்ரமமானது சங்கிக்கவும்முடியா தென்பதை திருடமாய் உபதேசிக்கின்றது. ஏனெனில் பாலன் முதல் கோபாலனீறாக உலகிலுள்ள எல்லாப்பிராணிகளும் "நான்" எனப்ரத்யகாத்மவை மானஸப்ரத்யக்ஷமாகத் தெளிவாய் வியவஹ ரிப்பதே அதன் காரணமாகும். மேலும், எந்த ப்ரத்யகாத்மா வின் ஸம்பந்தம் பெற்ற சக்ஷுராதிஇந்திரியங்களால் அறியப்படு கின்ற குடம் முதலிய ஜடபதார்த்தங்கள் அபரோக்ஷங்களெனச் சொல்லப்படுகின்றனவோ, அத்தகைய ப்ரத்யகாத்மாவானது சித்ரூபமாயும், ஸ்வப்பிரகாசமாயும், ஸர்வப்பிரகாசகமாயும் இருத் தலின் ப்ராந்தியா (மயக்கத்தா) லேனும் அதைப் "பரோக்ஷம்" என்று ஒருவன் எவ்விதம் சங்கிக்கக்கூடும். ஒருபொழுதும் கூடாது. ப்ரத்யகாத்மாவானது ஸ்வப்ரகாசம் என்றும், எல்லா வற்றையும் பிரகாசப்படுத்துகின்றதென்றும் तमेव भान्तमनुभाति सर्वम् तस्य भासा सर्वमिदं विभाति என்ற சுருதி தெளிவாகவே உபதேசித்திருக்கின்றது. ஆகவே எல்லாவற்றையும் பிரகாசப் படுத்துகின்றதும், சித்ரூபமானதும், வியவஹாரதசையிலும் "நான்" என பிரகாசிப்பதுமான ப்ரத்யகாத்மவஸ்துவானது உண்மையாகவோ, ப்ராந்தி (மயக்க) யாலோ பரோக்ஷமானது எனஎவரும் சங்கிக்கவும் இயலாததே.

சங்கை—தேஹாதிகளான பஞ்சகோசங்களை விட வேறான ஸாக்ஷியானவன் பரோக்ஷன் எனச்சொல்லக்கூடாதோ எனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில்— ஸாக்ஷிவஸ்துவானது அத்யந்தம் அபரோக்ஷமாயிருத்தலே அதன் காரணமாகும். மேலும், மறைக்கும் பொருளென ஒருவாறு ஊஹிக்கப்படுகின்ற ஜடங்களான தேஹாதிகளுடன் சேர்ந்திருக் கின்ற வஸ்துவை அத்யந்த அபரோக்ஷம் என்று ஒப்பும் பொழுது தேஹாதி ஸம்பந்தமடையாத ஸாக்ஷிவஸ்துவானது அபரோக்ஷம் என்று கொள்ளுவதில் யாது தடை? ஆகவே அபரோக்ஷமான ப்ரத்யகாத்மாவின் தாதாத்ம்ய மிருத்தலால் பிரும்மமானது சாஸ்திரத்தாலறியப்படுவதாயினும் அபரோக்ஷ மாகவே தானாகி மனத்தாலறியப்படுகின்றது.

சங்கை—यन्मनसा न मनुते येनाहुर्मनो मतं।
तदेव ब्रह्म त्वं विद्धि नेदं यदिदमुपासते॥

என்ற கேனோபநிஷத்தில் "எந்த ஸாக்ஷி சைதன்யத்தை எல்லாஜனமும் மனோவிஷயமாகச் செய்து அறியமுடியாததோ, எந்த ஸாக்ஷி சைதன்யத்தினால் அந்த மனது பிரகாசப்படுத்தப் பட்டதோ, என வேத ரஹஸ்யமறிந்தவர்கள் கூறுகின்றனரோ அந்த ஸாக்ஷி சைதன்னியமே பிரும்மம் என ஹே சிஷ்ய! நீ அறிந்து கொள்வாயாக. உபாஸகர்கள் தன்னைவிட வேறாயிருத்தலால் குடம் முதலியவைபோல திருச்யவடிவமாகத் தோற்றத்தை யடைகின்றதும் சாஸ்திரசித்தமானதும் ஜகத்காரணமானதுமான யாதொரு பிரும்மத்தை உபாஸிக்கின்றனரோ, அந்த இந்த உபாஸ்யவஸ்துவானது முக்கியப்பிரும்மமாக ஆவதில்லை. ஏனெனில்? தன்னைவிட வேறானதாயும், திருச்யமாயும், உபாதிவிசிஷ்டமாயும் இருக்கும் வஸ்துவிற்கு, முக்கியப்ரும்மத்வமானது ஒரு பொழுதும் ஸம்பவிக்காதன்றோ" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகவே மனத்திற்கு விஷயமாகி ஸாக்ஷாத்கரிக்கப்பட்டது எதுவோ, அது ஒருபொழுதும் பிரும்மமாக ஆகாதன்றோ எனின்?

உத்தரம்—यन्मनसा+सते। என்ற இந்த சுருதியில் பிரும்மமானது மனதிற்கு முற்றிலும் அவிஷயமானது, அதாவது: மனோவிஷயமாக ஆகாதது என்று சொல்லப்படவில்லை. அவ்விதமானால் तदेव ब्रह्म त्वं विद्धि அதையே நீ பிரும்மமாக அறிந்துகொள், என எவ்விதமுபதேசிக்கக்கூடும்.

சங்கை—அங்ஙனமாயின் ஸ்வப்ரகாசமான ஸாக்ஷியானது குடம் முதலியவற்றைப்போல மனோஜன்யமான ஸ்புரண (பிரகாச) த்தால் பிரகாசப்படுத்தப்படுகிறது என்று சொல்லுவது பொருத்தமுள்ளதாக ஆகாதன்றோ எனின்?

உத்தரம்—அங்ஙனமாயின் பலவ்யாப்யத்வம் வேண்டுமானால் பிரும்மத்திற்கு வரவேண்டுவதில்லை. விருத்திவ்யாப்யத்வமானது வரத்தான் வரும். அதாவது:—"ஸாக்ஷிசைதன்யமானது பிரும்மம்" என வெண்ணுகின்றதும், மஹாவாக்யத்தானது

உண்டானதுமான மனோவிருத்தியினால் பிரும்மமானது கிரஹிக்கப்படும் பொழுது அத்தகைய விருத்திரூபமான தத்வ வித்யையினால் ப்ரத்யகாத்மாவுக்கும் பிரும்மத்திற்கும் பேதகற்பனைக்குக் காரணமான அவித்யையானது நிவிருத்தியை யடைகின்றது. இந்த விருத்தியைப் பரோக்ஷக்ஞானம் என்று சொல்லிவிடமுடியாது. ஏனெனில் விஷயத்துடனேற்படும் ஸம்பந்தமே விருத்தியின் வடிவத்தை யுண்டாக்குகின்றது என்பதுபற்றியே என்க. எவ்விதமெனின்? கூறுவாம். சக்ஷுரிந்திரியத்தாலுண்டாகும் மனோவிருத்தியானது குடத்துடன் ஸம்பந்தத்தையடைவதால் குடாகாரமாக இருந்து கொண்டு எவ்விதம் "அபரோக்ஷக்ஞானம்" என ஜனங்களாற் சொல்லப்படுகின்றதோ, அவ்விதமே ஸாக்ஷியின் ஸம்பந்தத்தால் ஸாக்ஷியின் ஆகாரமமைந்த இந்த விருத்தியும் அபரோக்ஷக்ஞானமாக ஏன் ஆகாது.

சங்கை—விஷயஸம்பந்தத்தாலேயே விருத்தியானது விஷயாகாரமாக உண்டாகி விடுமாயின் மஹாவாக்கியத்தின் உதவி அவசியமில்லாமலாகிவிடுமன்றோ? எனின்:.

உத்தரம்—அதனுண்மை இங்கு கூறுவாம். ஜகத்காரணத்தன்மையினால் உபலக்ஷிதமான பிரும்மமானது "ப்ரத்யகாத்மரூபத்தை விடவேறானது" என்ற இத்தகைய் பேதப்ரமமானது மஹாவாக்கியத்தாற்றான் போக்கப்படுகின்றது. ஆகவே ப்ரத்யக்ப்ரும்மைக்ய ரூபமான விருத்தியானது பேதத்தை விலக்கிக் கொண்டு விஷயஸம்பந்தத்தாலேயே தானுண்டாகின்றது. ஆனதுபற்றி க்ஞானமானது வாக்யத்தாலுண்டானதாயினும் அபரோக்ஷமாகவே தானாகிவிடுகின்றது. இதிலிருந்து यन्मनसा न मनुते+सते என்ற சுருதியானது பிரும்மத்திற்குப் பலவியாப்யத்வத்தை நிஷேதிக்கவந்ததே யொழிய, விருத்தி வியாப்யத்வத்தை நிஷேதிக்க வரவில்லை யென்றேற்படுவதால் எவ்வித விரோதமும் ஏற்படுவதற்கில்லை. மேலும், பஹிர் முகனான எவனுக்கு மனோவிருத்தியானது உள்ளிலிருக்கின்ற ஸாக்ஷியுடன் ஸம்பந்தத்தை யடையவில்லையோ அவனுக்கு சப்தஸாமர்த்தியத்தாலேயே மட்டும் ப்ரத்யக் பிரும்மைக்யரூபமான விருத்தியானது உண்டாகின்றது. அத்தகைய இந்தக்ஞானமானது தர்மாதர்ம ஸ்வர்க்கநர

காதிகளிற் போல பரோக்ஷமாகவே ஆகின்றது. இவ்விடத்தில் ஸாக்ஷாத்காரமில்லாத விஷயத்தில் வாக்கியாபாரதம் நிமித்த மன்று. பின்னேயோ வெனில் பராங்முகத்வலக்ஷணமான புருஷ னுடைய அபராதமே நிமித்தமாக வாகின்றது. கிழக்கு நோக்கி நிற்கின்றவனுக்கு மேற்கிலிருக்கும் ரூபதர்சனமில்லாமை விஷயத் தில் கண்ணின் தோஷத்தை நிமித்தமாக எவ்விதம் கல்பிப்பதில் லேயோ அவ்விதமே இங்கும் காண்க. மேலும், பஹிர்முகனான அதே புருஷன் நிதித்யாஸனமென்கின்ற ப்ரும்மத்யானத்தினால் அந்தர்முகமானதும் ஸூக்ஷ்மவஸ்துநிரூபணஸமர்த்தமானதுமா ன ஏகாக்ர புத்திவிருத்தியை எப்பொழுது ஸம்பாதிக்கின்றானே அப்பொழுது இந்தப் புத்திவிருத்தியானது ப்ரத்யகாத்மாவுடன் ஸம்பந்தத்தை யடைந்து ததாகாரப்பட்டு மஹாவாக்கியானுக் கிரஹத்தினால் பேதப்ரமத்தை நிராகரணம் செய்வதாய்க் கொண்டு பிரும்மஸாக்ஷாத்காரம் என்று சொல்லப்படுகின்றது. மேலும் வாக்யசிரவணத்திற்கு முந்தியே ஸகுணப்ரும்மத்யானத் தினாலோ, சிரவணத்திற்குப்பின்னர் நிதித்யாஸனத்தாலோ, அந்தர்முகப்பட்டவனுக்கு அன்வயவ்யதிரேகங்களால் ஸாக்ஷிசை தன்யத்தைத் தேஹாதிகளை விடத்தனியாய்ப் பிரித்து அனுபவிக் கின்றவனும், सत्यं ज्ञानमनन्तं முதலிய அவாந்தரவாக்கியத்தால் பிரும்மத்வநிச்சயஞ் செய்கின்றவனுமான முக்கியாதிகாரிக்கு மஹாவாக்யத்தால் பேதப்ரமநிவிருத்தி வாயிலாக பிரும்மாத்ம ஸாக்ஷாத்காரம் உண்டாகிவிடுகின்றது. இது பரோக்ஷக்ஞான மன்று.

சங்கை—ப்ரத்யகாத்மாவுக்கும் ப்ரும்மத்திற்கும் அன்யோ ன்ய தாதாத்மியத்தை யங்கீகரிப்போமேயானால் அகண்டைகரஸ த்வம் என்பது ஸித்திக்காது. ஏனெனில் "நீலம், உத்பலம்" என்ற விடத்தில் தாதாத்மியம் இருந்தபோதிலும் நீலம் என்ற குணத்திற்கும், உத்பலம் என்ற திரவ்யத்திற்கும் பேத (வேற்று மை) மானது இருந்தே தீருகின்றது. இவ்விதமே இவ்விடத்தி லும், ஆத்மத்வ ப்ரும்மத்வ கிருதமான பேத (வேற்றுமை) மும் பிரஸக்தமாகுமன்றோ! எனின்?

உத்தரம்—நைல்யமென்ற குணத்திற்கும் உத்பலமென்ற திரவ்யத்திற்கும் ஒன்றைவிட்டு மற்றொன்று பிரிந்திருத்தல் என்ற வைஷம்யமிருக்கின்றது. அதாவது: நைல்யம் என்ற குணமானது மேகாதிகளிலிருந்து கொண்டு உத்பலத்தைவிட்டு விலகி நிற்கின்றது. இவ்விதமே உத்பலஜாதியும் வெளுத்தும், சிவந்துமிருக்கின்ற உத்பலத்திலிருந்து கொண்டு நைல்யகுணத்தைவிட்டு விலகி நிற்கின்றது. ஆகவே அவ்விடத்தில் அர்த்தபேதமிருப்பதுபற்றி அகண்டார்த்தத்வம் சொல்லவியலாது. இங்கோவெனில் ஆத்மப்ரும்மங்களுக்கு ஒன்றைவிட்டு மற்றொன்று விலகியிருத்தல் என்பது ஸம்பவிப்பதில்லையானதுபற்றி ஏகார்த்தத்வமிருப்பதிலிருந்து அகண்டத்துவம் ஏற்படுவதில் யாதும் தடையில்லை. இதையே விசுவரூபாசாரியரும்

**नात्मता ब्रह्मणोऽन्यत्र ब्रह्मता नात्मनोऽन्यतः।**
**तादात्म्यमनयोस्तस्मान्नीलोत्पलविलक्षणम्॥**

என்றதாற் றெளிவாயுபதேசித்து மிருக்கிறார்.

சங்கை—அங்ஙனமாயின் "ஆத்மா, பிரும்ம" என்ற பதங்கள் ஒரே பொருளுள்ளன வாதல்பற்றி இவ்விரண்டினுள் ஒரே பதத்தைச் சொன்னாலே போதுமானதாயிருக்க "ஆத்மா, பிரும்ம" என்ற இரண்டு பதங்களைச் சொல்லவேண்டிய அவசியமில்லையன்றோ! எனின்?

உத்தரம் — இவ்விரண்டு பதங்களாலும் போதிக்கப்படும் பொருளில் உண்மையில் எவ்வித பேதமும் இல்லைதானாயினும் அக்ஞானகல்பிதங்களான அப்பிரும்மத்வம், பாரோக்ஷ்யம் என்ற வியாவர்த்யங் (விலக்கத்தக்கவை) களில் பேதமிருப்பதால். இவ்விருபதங்களும் அவசியங்களாகின்றன, இவ்விதமே **आत्मापि सदिदं ब्रह्म मोहात्पारोक्ष्यदूषितम्। ब्रह्मापि संस्तथैवात्मा सद्वितीयतयेक्ष्यते॥** என்றதால் ஆசார்யபாதாளவர்களும் வேறிடத்திலுமுபதேசித்திருக்கின்றனர். அதாவது: ஒரே வஸ்து சாஸ்திர போத்யமாயிருக்கும் வாயிலாக பிரும்ம என்றும், மானஸ ப்ரத்யக்ஷத்வாகாரத்தால் ஆத்மா என்றும் சொல்லப்படுகின்றது. அவற்றுள் சாஸ்திரத்தாலறியக் கூடிய ஜகத்காரணத்வம், ஸர்வக்ஞத்வம்

முதலியன பரோக்ஷமாதலால் பிரும்மமும் பரோக்ஷமானதே என்ற ப்ரமமுண்டாகின்றது. அஹம் (நான்) என்ற தோற்ற வடிவமான மானஸப்ரத்யக்ஷத்தா லறியப்படும் தேஹாதிகள் பிரும்ம மில்லாமைபற்றி ஸாக்ஷியான சிதாத்மாவினிடத்திலும் கூட அப்பிரும்மத்வ (பிரும்மமன்று என்ற) ப்ரமமானது உண்டாகின்றது. ஆகவே அக்ஞான கல்பிதமான உபாதியுடன் கூடினவைகளான ப்ரும்மம், ஆத்மா இவைகள் வேறாயிருத்தலால் வேறான அவ்விருவஸ்துக்களையும் போதிக்கும் விஷயத்தில் பிரும்மம், ஆத்மா என்ற இவ்விருபதங்களும் உபயோகமுள்ளனவாகின்றனவாயினும் இவற்றால் போதிக்கப்படுவது அகண்டைகரஸமாயிருத்தல் பற்றி அபரோக்ஷப்ரத்யகாத்மரூபமான ப்ருமத்தினிடத்தில் तत्त्वमस्यादि மஹாவாக்யத்தால் அபரோக்ஷக்ஞானமுண்டாவதால் அத்தகைய அபரோக்ஷக்ஞானத்துடன் கூடின புருஷனே இங்குள்ள ब्रह्मवित् என்ற சப்தத்தால் சொல்லப்படுகின்றான். அத்தகைய புருஷனுக்கு பரப்ராப்திக்குறிய யோக்யதை யிருப்பது பற்றியே परमाप्नोति என்றதால் பரப்ராப்தி கூறப்படுகின்றது.

மேலும், மூலத்திலுள்ள परम् என்ற பதமோ பொதுவாய் வேறானது என்றதைக் குறிக்கும். "வேறான" என்ற பொருளோ இங்கு ஸம்பவிப்பதில்லை. வஸ்து அத்விதீயமாய் (ஒன்றாய்) இருத்தலே அதன் காரணமாகும். மேலும், नेह नानाऽस्ति किंच न என்ற சுருதிவாக்கியமானது பிரும்மத்தினிடத்து எவ்வித பேதத்தையும் நிஷேதிக்கிறது. மேலும், परम् என்ற பதத்திற்கு உத்க்ருஷ்டம் (மேலானது) என்று பொருள் கொண்டாலோ பிரும்மத்தைத்தவிர மற்றவையாவும் மாயாமயமானது பற்றி நிக்ருஷ்ட (தாழ்ந்தது) மாகின்றமையின் பிரும்மமே पर (பர) சப்தத்தால் சொல்லப்பட்டவாக வாகும். ஆகவே பிரும்மவித்தான புருஷன் பிரும்மத்தையே அடைந்தவனாகின்றான், என்று சொன்னதாகவாகின்றது. இவ்விதமே स यो ह वै तत्परमं ब्रह्म वेद ब्रह्मैव भवति என்றதால் முண்டகோபநிஷத்திலு முபதேசிக்கப்பட்டிருக்கின்றது.

சங்கை—கிராமத்தையடைகிறான் என்ற விடத்தில் கதியால் கிராமப்ராப்தி யேற்படுகின்றதென்பதை நாமனுபவத்திற் காண்கிறோம். ஆகவே ஸகுணப்பிரும்மோபாஸகன் ஸுஷும்நா நாடி வழியாகக் கிளம்பி அர்ச்சிராதிமார்க்கவழியாகச் சென்று பிரும்மலோகத்தை எவ்விதமடைகின்றானோ அவ்விதமேதான் இங்கும் பிரும்மப்ராப்தி சொல்லவேண்டும் எனின் ?

உத்தரம்—**न तस्य प्राणा उत्क्रामन्ति** என்ற சுருதியானது பிரும்மவித்திற்கு உத்க்ராந்தியை (சரீரத்தினின்றும் கிளம்புதலை) நிஷேதிக்கிறது. இவ்விதமே

**सर्वभूतात्मभूतस्य सम्यग्भूतानि पश्यतः ।**
**देवा मार्गे विमुह्यन्ति ह्यपदस्य पदैषिणः ॥**

என்ற ஸ்மிருதியும் கதியை(ஓரிடம்விட்டு வேறிடம் செல்லுதலை) மறுக்கின்றது. ஆகவே இத்தகைய பிரும்மவித்துக்கு பிரும்மப் பிராப்தியானது உபசாரமுறையால் சொல்லப்படுகின்றதே யல்லாமல் உண்மையான பிராப்தி இங்கில்லை என்றுமேற்படுகின்றது. மேலும் "**न तस्य प्राणा उत्क्रामन्ति, अत्रैव समवलीयन्ते**" என்ற சுருதியானது பிரும்மவித்தின் பிராணன்கள் பிரும்மத்தினிடத்திலேயே லயமடைகின்றன எனத்தெளிவாயுபதேசித்து மிருக்கின்றது. மேலும் "**ब्रह्मैव सन्ब्रह्माप्येति**" முற்கூறிய பிரும்ம க்ஞானத்திற்கு முன்னரும் பிரும்மமாகவே இருப்பினும் அக்ஞானத்தினால் ஜீவத்வ ப்ரமத்தையடைந்து திரும்பவும் க்ஞானத்திற்குப் பின்னர் அனுபவத்தினாலும் பிரும்மமாக எவ்வித மாகின்றானோ, அவ்விதமே, தானாகவே லயத்தையடைகிறான். அதாவது: தனது ஜீவத் தன்மைக்குரிய உபாதியானது நாசமடைகின்றது என்றேற்பட்டது. ஆகவே தனது கழுத்திலணிந்திருக்கும் ஆபரணத்தை அக்ஞானத்தினால் கெட்டுவிட்டதாக வெண்ணி வேறிடத்தில் தேடும்பொழுது வேறொருவன் "உனது ஆபரணம் உனது கழுத்திலேயேயிருக்கின்றது" என்று சொன்னவுடன் கையினால் ஆபரணத்தைத் தொட்டுப்பார்த்து "இப்பொழுதுதான் இது கிடைத்தது" என எண்ணுவது போல இங்குள்ளப் பிரும்மப் பிராப்தியும் உபசார முறையாற் சொல்லப்பட்டதாகக் கொள்ளுதல்தகும்.

**ब्रह्मविदाऽऽप्नोति परं** என்ற வாக்கியத்தால் ஞானமானது ஸாதனமென்றும், மோக்ஷமானது (அக்ஞான நிவிருத்யுபலக்ஷித ஆத்மப்ராப்தியானது) பலமென்றும் சூசிப்பிக்கப்பட்டது. இனி முன்னர் கூறியதை விரிவுபடுத்தவேண்டி ருக் உதாஹரிக்கப்படு கின்றது.

## (मन्त्रः) तदेषाऽभ्युक्ता । ......... विपश्चितेति ।

**तत्**=முன் சூசிப்பிக்கப் பெற்ற சூத்திரார்த்த விஷயத்தில் **एषा**=முன் சொன்ன அபிப்பிராயத்தை அறிந்துகொள்ளுவதற்கு வேண்டிப் பின்னர் படிக்கப்படும் ஒரு ருக்கானது **अभ्युक्ता**=விரிவாய் படிக்கப் பட்டிருக்கின்றது. முன்னர் கூறப்பட்ட பொருள் யாவும் இந்த ருக்கில் தெளிவாய் விளக்கப்பட்டிருக்கின்றதென்று கருத்து. **ब्रह्मवित्**=என்று சொல்லியிருப்பதில் பிரும்மம் எத்தகையது? என்று அறிய வெண்ணம் உண்டாகுமாதலால் **सत्यं** முதலிய நான்கு பதங்களால் பிரும்மஸ்வரூபம் உபதேசிக்கப்படுகின்றது. **नीलं महत्सुगन्ध्युत्पलं** (கருத்தும், பெரிதாயும் நறுமணமுள்ளதுமான உத்பலம்) என்ற விடத்தில் உத்பலம் விசேஷ்யமாயும், நீலம் முதலியன விசேஷணமாயும் ஏற்படுவது போலவே **सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** (ஸத்யம், க்ஞானம், அனந்தம், ப்ரும்ம) என்ற விடத்திலும் **ब्रह्म** (ப்ரும்மம்) விசேஷ்யமாயும், ஸத்யம் முதலியன விசேஷணமாயும் சொல்லப்பட்டதாக ஏற்படும். தன்னைவிட வேறான வஸ்துக்களினின்றும் விசேஷ்யத்தை விலக்கி யுபதேசிக்கின்றவைகளே விசேஷணங்கள் என்றும், விசேஷணங்களால் விலக்கிக் காட்டப்பட்டது எதுவோ அதுவே விசேஷ்யம், என்றும் சொல்லப்படும்.

சங்கை—உத்பலமானது சிவந்தும், சிறியதாயும், சுவல்ப மணமுள்ளதுமாய் வேறு இருப்பதால் அவற்றினின்றும் விலக்கிக் காட்டும் விஷயத்தில் நீலம் என்றும், மஹத் என்றும், ஸுகந்தி என்றும் விசேஷணங்கள் உபயோகமுள்ளவைகளாகின்றன. இவ்விடத்திலோ அநிருதம் பிரும்ம, ஜடம் பிரும்ம, பரிச்சின்னம் பிரும்ம என விபரீதமான (முற்கூறிய பிரும்மத்திற்கு மாறான) வேறு பிரும்மங்கள் கிடையா. ஆகவே இந்தச் சூரியன்

எவ்விதம் ஒன்றே, அவ்விதம் இந்த பிரும்மமும் ஒன்றே. ஆனதுபற்றி இங்கு விலக்கிக் காட்ட கூடியதாக வேறெதுவுமில்லை யாதலால் ஸத்யம், க்ஞானம், அனந்தம் முதலிய விசேஷணங்கள் பயனற்றவைகளாக ஆகுமன்றோ? எனின்?

உத்தரம்—விசேஷணமானது, லக்ஷண விசேஷணமென்றும், கேவல (ஸ்வரூப) விசேஷண மென்றும் இருவகைப்படும். தனது வகுப்பிற் சேர்ந்த வற்றினின்றும் விசேஷ்யத்தை எது விலக்கிக் காட்டுகின்றதோ, அது கேவல (ஸ்வரூப) விசேஷணங்களெனப்படும். தன்னைவிட வேறான எல்லா வஸ்துக்களினின்றும் விசேஷ்யத்தை விலக்கிக் காட்டக்கூடியது எதுவோ அது லக்ஷண விசேஷண மெனப்படும். ஆகவே அப்பிரும்மங்களான (பிரும்மங்களல்லாத) அந்ருத, ஜட, பரிச்சின்னங் களினின்றும் விசேஷ்யமான பிரும்மத்தை விலக்கிக் காட்டவேண்டி ஸத்யாதி பதங்களுபயோக முள்ளவைகளாகின்றன. "ஆகாசமானது அவகாசரூபம்" என ஆகாச லக்ஷணஞ் சொல்லுமிடத்து ஆகாச வகுப்பிற் சேர்ந்ததும் விலக்கத் தக்கதுமான வேறொரு ஆகாசமில்லாவிடினும் கூட விஜாதீயங்களான (வேறுவகுப்பிற் சேர்ந்தவைகளான) மூர்த்தத் திரவியங்கள் "அவகாசரூபம்" என்ற விசேஷணத்தால் எவ்விதம் விலக்கப் படுகின்றனவோ அவ்விதமே, அஸத்யமாயும், ஜடமாயும், பரிச்சின்னமாயுமுள்ள வஸ்துக்களினின்றும் விசேஷ்யமான பிரும்மத்தை விசேஷணங்களான ஸத்யாதி பதங்கள் விலக்கிக் கூறுகின்றன என்று கொள்ளுவதில் என்னதடை. ஆகவே ஸத்யாதி பதங்கள் விசேஷ்யமான பிரும்மத்தை விலக்கிக் காட்ட ஏற்பட்டன பற்றி பதார்த்தங்களாகி (பிரும்ம விசேஷணங்களாகி) ஒன்றையொன்று எதிர்பாராமல் விசேஷ்யமான பிரும்ம சப்தத்துடனேயே ஸம்பந்தத்தை (சேர்க்கையை) அடைகின்றன. அதாவது—ஸத்யம் பிரும்ம, க்ஞானம் பிரும்ம, அனந்தம் பிரும்ம என்பதாம்.

## ஸத்யாதி பதங்களின் பொருள்.

எந்த வஸ்து எந்த வுருவமுள்ளதாகநிச்சயிக்கப் பட்டு ஒருபொழுதும் அவ்வுருவத்தை விட்டு விலகாததாக யிருக்கின்ற

தோ அவ்வஸ்து ஸத்யம் என்று சொல்லப்படும். பாம்பிற்கு அதிஷ்டானமான பழுதையானது ஸத்யமெனப்படுவது எப்படியோ அப்படியே இங்கும் கொள்ளவேண்டும். எதற்கு நிச்சயிக்கப் பட்டஸ்வரூபத்தினின்றும் மாறுதலேற் படுகின்றதோ அது அந்ருதம் எனப்படும். அதாவது: பழுதையிற்றோன்றின் பாம்பு போலென்க. ஆகவே எல்லா ஜகத்திற்கும் அதிஷ்டானமான பிரும்மமானது மோக்ஷ நிலையிலும் மாறுதிருப்பதுபற்றி ஸத்யம் எனப்படும். ஞான பாத்யமாக (ஞானத்தால் நிவிருத்தியடையகூடியதாக) இருப்பதனுல் மோக்ஷ நிலையில் இல்லாமலிருப்பது பற்றி ஜகத்தானது அந்ருதம் எனப்படும். ஆனது பற்றியே मायामात्रमिदं द्वैतम् என்றதால் மாண்டூக்ய ச்ருதியானது ஜகத்தை மித்யை எனத் தெரிவிக்கின்றது. இதுபோலவே சாந்தோக்ய சுருதியும் वाचाऽऽरंभणं विकारो नामधेयं मृत्तिकेत्येव सत्यम् என்றதால் காரியமான குடம் முதலியவற்றிற்கு அந்ருதத்வத்தையும், ப்ருகிருதியான மிருத்திகைக்கு ஸத்தியத்வத்தையும் திருஷ்டாந்தமாகக் கூறியிருக்கின்றது. இதினின்றும் மிருத்திகாதிகளைப் போல ஸத்யமாயிருப்பது பற்றி பிரும்மமானது ஜடம் (அதாவது அசேதனம்) என்ற சங்கைநிகழும். அதை விலக்க வேண்டி ज्ञानम् என்று பிரும்மம் சொல்லப்பட்டது. வியாவஹாரிக ஸத்தியமானது அசித் ரூபமாயுள்ளது என்பது சுருதியின் கருத்து. இதினின்றும் பிரும்மமானது க்ஞான சப்தத்தின் பொருளா யிருப்பதுபற்றி கட க்ஞானம், பட க்ஞானம் முதலியது போல பரிச்சின்ன மானது என்ற சங்கை நிகழும். அதை விலக்கவேண்டி अनन्तम् அனந்தம் என்று பிரும்மம் சொல்லப்பட்டது. ज्ञायते=स्फोर्यते घटादिक मनेनेति व्युत्पत्या குடத்திற்கும் அதைப்பற்றிய ஓர் அறிவிற்கும் ஸம்பந்தத்தை யுண்டு பண்ணுகின்ற அந்தக்கரண விருத்தி விசேஷமானது க்ஞானம், என உலகில் வழங்கப் படுகின்றது. अन्नमयं हि सोम्य मनः என்ற சுருதியானது மனத்தை பௌதிகம் என்று கூறியிருப்பதிலிருந்து மனதின் விருத்தியான க்ஞானமும் பௌதிக மாகவே தானுகும். ஆகவே அந்த மானஸ விருத்தி விசேஷமான க்ஞானமும் பரிச்சின்ன மாகவே தானுகும். இவ்விடத்திலோ ज्ञप्तिः=ज्ञानं என்ற

வியுத்பத்தியால் பிரகாசம் மட்டும் க்ஞான சப்தத்தின் பொருளாகக் கொள்ளப் படுகின்றது. இது பௌதிகமாக இல்லாததுபற்றி அனந்தமாக (பரிச்சின்னமாக இல்லாததாக) ஆகின்றது. மேலும் अन्तः = परिच्छेदः அந்தசப்தத்திற்கு பரிச்சேதம் (குறைவு) என்று பொருள் ஏற்படுகின்றது. அந்த பரிச்சேத (குறைவு) மானது தேசகிருதம் (தேசத்தால்செய்யப்பட்டது) என்றும், காலகிருதம் (காலத்தாற் செய்யப்பட்டது) என்றும், வஸ்து கிருதம் (வஸ்துவாற் செய்யப்பட்டது) என்றும் மூன்று வகைப்படும். அவற்றுள். आकाशवत्सर्वगतश्च नित्यः "ஆகாசம் போன்று தானில்லாத விடமில்லாததாயும் ஆனது பற்றியே நித்திய மாயுமிருக்கின்றது பிரும்மம்" என்ற சுருதியால் எல்லா தேசத்திலும், எல்லா காலத்திலும் ஸம்பந்த முள்ள தெனத் தெரிவதினின்றும் தேச, கால பரிச்சேதங்கள் பிரும்மத்திற்குக் கிடையா எனத் தெளிவாகின்றது. இதுபோலவே ब्रह्मैवेदममृतं पुरस्ता द्ब्रह्मपश्चाद्ब्रह्म दक्षिणतश्चोत्तरेण । अधश्चोर्ध्वं प्रसृतं ब्रह्मैवेदं विश्वमिदं वरिष्ठम् ॥ என்ற சுருதியால் பிரும்மத்தைத் தவிர வேறு வஸ்து உண்மையிலில்லை என்று தெரிவதால் வஸ்து பரிச்சேதமும் பிரும்மத்திற் கில்லை யென்பது தெளிவாகின்றது. இதினின்றும் ஸத்யம், க்ஞானம், அனந்தம் என்ற சப்தங்களால் முறையே மித்யாத்வம், ஜாட்யம், பரிச்சேதம் இவைகளுள்ளதினின்றும் விலக்கப்பட்டது எதுவோ அதுவே பிரும்மம் எனவாக்யார்த்த மேற்படுகின்றது.

சங்கை—ஸத்யாதி பதங்கள், அஸத்யாதி விலக்கைச் செய்வதாலும் உத்பலாதி சப்தார்த்தம் போல பிரும்ம சப்தத்திற்குப் பொருள் உலகிற் பிரசித்தி யில்லாதிருப்பதாலும் "मृगतृष्णांऽभसि स्नातः खपुष्प कृतशेखरः । एष वन्ध्यासुतो याति शशशृङ्गधनुर्धरः ॥ இந்த மலடியின் புதல்வன் கானல் நீரில் மூழ்கியும் ஆகாய புஷ்பத்தைத் தலையிலணிந்தும், முயற்கோடாலாய வில்லைக் கையிற் றாங்கியும், செல்லுகின்றான்" என்ற விடத்திற்போல வாக்கியார்த்த மானது சூன்யமாக ஆகிவிடுமன்றோ எனின்? உத்தரம். அந்த சங்கை இங்கு வருவதற் கிடமில்லை. ஏனெனில் बृहि=वृद्धौ என்ற தாதுவினின்றும் ब्रह्म சப்தம் ஏற்படுகின்றது. बृहि=என்ற

தாதுவுக்கு वृद्धि என்று பொருள். அத்தகைய வ்ருத்தியைக் குறைத்துக் காட்டும், ப்ரகரணமோ, உபபதமோ இல்லாமைப ற்றி ஒப்புயர்வற்ற விருத்தியே அதன் பொருளாக யேற்படுகின்றது. ஆகவே ब्रह्म என்ற பதத்திற்கு ஒப்புயர்வற்ற வ்ருத்தியுள்ள வஸ்து என்று பொருள் கொள்ளப் படுகின்றது. மேலும் எது ஒப்புயர்வற்ற வ்ருத்தி (பெருக்கு) உள்ளதோ, அது நித்யமாயும். மாயா ஸம்பந்த மற்றதாயும், ஆனந்த வடிவமாகவுமே தானிருக்கின்றது. ஆகவே இதுவரை கூறியபடி பிரும்ம சப்தத்தின் பொருள் பிரசித்த மாயிருப்பதால் मृगतृष्णांभसि +धनुर्धरः என்ற சுலோகத்தால் திருஷ்டாந்தங் கூறி பிரும்ம சப்தார்த்தம் பிரசித்த மாயில்லாததால் அதைச் சூன்யம் என்று சொன்ன ஆசங்கைக் கிடமில்லாமலாகி விட்டது. மேலும் இந்த பிரும்ம சப்தார்த்தத்தின் பிரஸித்தியானது பெரியோர்களால் வேறு விதமாயும் காண்பிக்கப் பட்டிருக்கிறது. அதாவது: सर्वस्यात्मत्वाच्च ब्रह्मास्तित्व प्रसिद्धिः । सर्वोह्यात्माऽस्तित्वं प्रत्येति " "ஸர்வத்திற்கும் பிரும்மம் ஆத்மாவாயிருப்பதால் பிரும்மாஸ்தித்வ மானது உலகிற் பிரசித்தமாகவே தானிருக்கிறது. எவனும் ஆத்மா இருப்பதாகவே தானெண்ணுகிறான்" என்பதாம். மேலும் பிரும்மம் ஆத்மாவாயிருப்பதால் அஸ்தித்வம் (நிலைத்துநிற்கும் தன்மை) பிரசித்தமாகவாகிறது. अयमात्मा ब्रह्म இந்த ஆத்மாப் பிரும்ம, என்ற சுருதியானது பிரும்மத்தையே ஆத்மா வென வுபதேசித்திருக்கிறது. ஆகவே சூன்யார்த்தத்துவம் இல்லாமைபற்றி ஸத்யாதி பதங்களுக்கு, விசேஷணத் தன்மையும், லக்ஷணத்துவமும்சொன்னது பொருத்தமான தாகவே ஏற்படுகின்றது. இவ்விதமில்லாவிடில் எதை விசேஷ்யமாகக் கூறமுடியும், எதைத்தான் லக்ஷ்யமாகக் கூறமுடியும். ஒருபொழுதும் முடியாது. ஆனாலுண்மையில் கவனித்தால் சிவந்த உத்பலம் போல இரண்டாவது பிரும்மமானது இல்லாமற் போனபோதிலும், அவித்யா தசையில் அந்ருத, ஜட, பரிச்சின்னங்களான *உபாதிகளுடன் கூடியிருப்

---

* उपाधि (உபாதி) என்ற பதம் இனி அடிக்கடி வருமாதலால் அதன் பொருளை இங்கு கூறியபடி கொள்ளல் வேண்டும். அதா

பது பற்றி அநிருதத்வம் முதலிய தர்மமுள்ள ஸஜாதீயங்களான வேறு மூன்று பிரும்மங்க ளிருப்பதாலும் உபாதி ஸம்பந்தமற்ற சுத்தப்பிரும்மத்தை அவற்றினின்றும் விலக்கிக் காட்டவேண்டி ஸத்யாதி பதங்கள் விசேஷணமாகக் கொடுக்கப்பட்டதென்று கொள்ளவும். ஸத்யாதி பதங்களை லக்ஷணங்களாகக் கொண்டு பொருள்கொள்ளும் பக்ஷத்தில் ஸத்யாதி லக்ஷணங்களால் விஜாதீயமான (வேறுவகுப்பிற்சேர்ந்த) உபாதிகளினின்றும் சுத்தப் பிரும்மம் பிரித்து உபதேசிக்ககப் பட்டது என்று கொள்ளவும். ஆனால் "ஸத்யாதி பதங்கள் கேவல விசேஷணங்கள்" என்று பொருள் கூறுமிடத்து ஸத்யம், ஞானம், அனந்தம் என்ற இந்த மூன்று விசேஷணங்களும் ஒன்றுக்கொன்று நியாமகங்களாயிருக்கும் முறையில் ஒன்றுடன் ஒன்று சேர்ந்துகொண்டு பிரும்மஸ்வருபத்தைப் போதிக்கின்றன என்று கொள்ளல் வேண்டும். அதை விளக்குவாம். **बाध राहित्य वाची सत्यशब्द: त्रिविधं सत्य माचष्टे** அதாவது: எவ்வித பாதமும் (நாசமும்) அற்றிருத்தலைச் சொல்லும் ஸத்ய சப்தமானது **प्रातिभासिकं, व्यावहारिकं, पारमार्थिकं** (ப்ராதிபாஸிகம் வியாவஹாரிகம், பாரமார்த்திகம்,) என்ற மூன்றுவிதமான ஸத்யத்தைச் சொல்லுகின்றது. அவற்றுள், சுக்தியிற்றோன்றும் வெள்ளிமுதலியவைகளுக்கு அதன் தோற்ற முள்ளவரை எவ்வித மாறுதலு மில்லாமைபற்றி ப்ராதிபாஸிக ஸத்யத்வம் சொல்லப்படுகின்றது. பிருதிவீ முதலிய பூதங்களுக்கும், சரீரம் முதலிய பௌதிக பதார்த்தங்களுக்கும் தத்துவக் ஞான முண்டாகும்வரை லோக வியவ ஹாரத்தில் நாச மில்லாமைபற்றி வியாவஹாரிக ஸத்யத்வம் சொல்லப்படுகின்றது. வேதாந்தத்தாலுண்டுபண்ணப்பட்ட விக்ஞானத்திற்குப் பிறகும் கூட பாதம் (நாசம்) இல்லாமைபற்றி பிரும்மத்திற்கு பாரமார்த்திக ஸத்யத்வம் சொல்லப்படுகின்றது. அம்மூன்றுவித ஸத்யத்வத்திலும் பொதுவாய்ப் பிரவிருத்தித்த ஸத்ய சப்தமானது ஞான,

---

வது उप+आधि:= उपाधि: उप=स्वसमीप गते वस्तुनि स्वधर्ममाधत्त इत्युपाधि: அதாவது எது தன்னிடத்துள்ள தர்மத்தை வேறிடத்திலிருப்பதாகக் காட்டுகின்றதோ அது உபாதி என்றேற்பட்டது. என்பதாம்,

அனந்த சப்தங்களால் நியமனஞ் செய்யப்பட்டதாய்க் கொண்டு பிரும்மத்தினிடத்திலேயே முடிவு பெறுகின்றது. அதாவது. வியாவஹாரிக ப்ராதிபாஸிக பதார்த்தங்களுக்கு சித்ரூப மாயிருக்குந்தன்மையோ பரிச்சேத மற்றிருக்குந்தன்மையோ ஸம்பவிக்காது, இவ்விதமே. க்ஞான சப்தமும் சித்வஸ்து வினிடத்தும், புத்திவிருத்தி ரூபமான ஞானத்தினிடத்தும் பிரவித்திக்கலாமாயினும் ஸத்யம் அனந்தம் என்ற இந்த இரண்டு சப்தங்களால் நியமனஞ் செய்யப்பட்டதாய்க் கொண்டு பிரும்மத்தினிடத்தில் மட்டுமே பிரவிருத்திக்கின்றது. ஏனெனில் புத்தி விருத்திரூபக் ஞானமானது பிரும்மம்போல பாதம் (நாசம்) அற்றதாகவோ மூன்றுவித பரிச்சேதமற்றதாகவோ இருப்பதில்லை என்பதாம். இவ்விதமே அனந்தம் என்றசப்தமும் தேசபரிச்சேதம் (குறைவு) அற்ற ஆகாசத்தினிடத்தும் எவ்வித பரிச்சேதமுமில்லாத பிரும்மத்தினிடத்தும் பிரவிருத்திப்பதாய்க் கொண்டு ஸத்யம், க்ஞானம் என்றசப்தங்களால் நியமனஞ் செய்யப்பட்டதாய்க்கொண்டு பிரும்மத்தினிடத்திலேயே பிரவிருத்திக்கின்றது. ஏனெனில் ஆகாசத்திற்கு பாரமார்த்திக ஸத்யத்தன்மையோ, ஸ்புரணத் தன்மையோ ஸம்பவிக்காதன்றோ என்பதாம். ஆகவே ஸத்யம், க்ஞானம், அனந்தம் என்ற இம்மூன்று பதங்களும் ஒன்றையொன்று மேற்கூறிய முறைப்படி நியமனஞ் செய்துகொண்டு கூடஸ்தமாயும், சித்ரூபமாயும், அத்விதீயமாயுமிருக்கின்ற பிரும்மத்தைச் சொல்லுகின்றவைகளாக ஆகின்றன. இவ்விதமே

"कौटस्थ्यमेव सत्यत्वं स्फुरणं ज्ञानमुच्यते ।
आनन्त्यमेकता चैवं बोध्यते ब्रह्म तैस्त्रिभिः ॥

கூடஸ்த மாயிருக்குந்தன்மையே ஸத்யத்வமாகும். ஸ்புரணமே ஞானமெனப்படும். ஏகத்வமே ஆனந்த்யமாகும். இம்முறைப்படி அம்மூன்று பதங்களாலும் பிரும்மமானது உபதேசிக்கப் படுகின்றது. என்றதால் பூர்வாசார்யர்களு முபதேசித்திருக்கின்றனர். அவற்றுள் अनन्त (அனந்த) சப்தமானது இதரவ்யாவிருத்தி (மற்றதை விலக்கல்) வாயிலாக பிரும்மத்திற்கு விசேஷணமாகவும், सत्य ज्ञान (ஸத்ய க்ஞான) சப்தங்கள் தனது பொருளான கூடஸ்தத்வம், ஸ்புரணம் இரண்டையும் போதிக்கின்ற

வைகளாய்க்கொண்டு அதற்கு நேர்விருத்தங்களான மித்யாத்வம், ஜாட்யம் இவற்றைத் தனதுபொருளால் விலக்கும் வாயிலாக பிரும்ம விசேஷணங்களாகவும் ஆகின்றன என்று கொள்ள வேண்டும். இவ்விதமே தைத்திரீயோபநிஷத் வார்த்திகத்திலு முபதேசிக்கப் பட்டிருக்கிறது. அதுபின்வருமாறு—

तत्राऽनन्तो ऽन्तवद्वस्तुव्यावृत्यैव विशेषणम् ।
स्वार्थाऽर्पण प्रणाड्याच परिशिष्टौ विशेषणम् ॥
शब्दात्प्रतीयते तावत्संगति र्धर्मधर्मिणोः ।
मानान्तरादपोहस्तु नशाब्दस्तेन सस्स्मृतः ॥

ஸத்யம், க்ஞானம், அனந்தம் இம்மூன்றனுள் அனந்தம் என்ற பதமானது அந்தமுள்ள வஸ்துவினின்றும் பிரும்மத்தை விலக்கும்வாயிலாக விசேஷணமாகின்றது. மீதமுள்ள ஸத்ய க்ஞான சப்தங்கள் தனது பொருளையே கூறும்முறையால் பிரும் மத்திற்கு விசேஷணங்களாகின்றன. ஆனால் தர்மம், தர்மி இவை களுடைய ஸம்பந்தமானது சப்தமுறையை யொட்டித் தோன்று கின்றதாயினும் அர்த்தாபத்திப் பிரமாணத்தால் அந்தஸம்பந் தமானது விலக்கப்பட்டதாக ஆகின்றது. இதைக்கொண்டு அந் தவஸ்துவானது சாப்தமாக (சப்தப்ரமாணத்திற்கு ஸாக்ஷாத்வி ஷயமாக) ஆகிவிடாது என்பதாம். இங்கு கூறிய மானாந்தரமெ ன்ற அர்த்தாபத்திப்பிரமாணமாவது—ஸத்யத்தன்மை, ஞானத் தன்மையும், மித்யாத்தன்மை, ஜடத்தன்மையும் ஓரேவிடத்தில் சேர்ந்திருத்தலென்பது மேற்கூறிய முறையைத் தவிர்த்து வேறு முறையால் ஸம்பவிக்க முடியாதிருத்தலேயாம் என்பதாம். ஆனால் தர்ம தர்மி ஸம்பந்தமானது உண்மையானதில்லை தானு யினும் சுத்தப் பிரும்ம க்ஞானமுண்டாவதில் உபகாரத்தைச் செய்வதாக ஆகக் கூடுமென்பதிற் தடையில்லை. எவ்விதமெனின் கூறுவாம். ஜலத்திற்றோன்றும் சந்திரப் பிரதிபிம்ப மானது உண்மையில் மித்யைதானுயினும் அதனுல் ஆகாசத்திலிருக்கும் ஸத்யமான சந்திர பிம்பக்ஞானமுண்டாவது போலும், ஸ்வப்ன த்திற்காணும் அழகிய ஸ்திரீ தர்சனமானது உண்மையில் மித் யைதானுயினும் அதனுல் இனிவரும் ஸத்யமான,நன்மை சூசிப் பிக்கப் படுவதுபோலும் என்க. ஆகவே ஸத்யாதி மூன்று

விசேஷணங்களால் முற்கூறிய முறைப்படி பிரும்மக்ஞான முண்டாவதுபற்றி இதுவே பிரும்மத்தின் லக்ஷணமாக வாகிவிட்டது.

(அ—கை) பிரும்மவிதாப்னோதி பரம் என்ற சூத்திரத்திற்கு வியாக்யான ரூபமான ருக்கில் முதல் பாதத்தால் பிரும்ம சப்தார்த்தத்திற்கு வியாக்கியானஞ் செய்து, மீதமுள்ள **योवेद निहितं गुहायां परमे व्योमन्** என்ற மூன்று பாதங்களால், பிரும்ம வேதனம் (க்ஞானம்) அதன் பரப்ராப்தி இரண்டும் வியாக்கியானம் செய்யப் படுகின்றது.

**(मन्त्रः) यो वेद निहितं गुहायां परमे व्योमन् ॥ सोऽश्नुते ॥**

(ப—ரை) **यः**=எந்தப்புருஷன் **वेद**=அறிகின்றானோ **सः**=அவன் **अश्नुते**=வியாப்தியை யடைகின்றான் (விரிந்தவனாகின்றான்) எதை அறிகின்றான் என்றால் **गुहायां परमे व्योमन्निहितं** பரம வியோமமாகிற குஹையில் பிரகாசிக்கின்றதை அறிகின்றானோ அவன்.

## குஹா சப்தார்த்த விசாரம்.

அன்னமய கோசம் முதல் ஆனந்தமயகோசம் முடிய வுள்ள ஐந்து கோசங்களின் ஸமுதாயமானது குஹா எனப்படும்.

**देहादभ्यन्तरः प्राणः प्राणादभ्यन्तरं मनः ।**
**ततः कर्ता ततो भोक्ता गुहा सेयं परंपरा ॥**

தேஹத்திற் குள்ளிருப்பது பிராணன். பிராணனைவிட உள்ளிருப்பது மனது. அதற்கு முள்ளிருப்பது விக்ஞானமயமாகிற கர்த்தா. அதற்கும் உள்ளிருப்பது ஆனந்தமயமாகிற போக்தா. ஆகவே இந்த அன்னமயாதி பரம்பரையே குஹையெனப்படும், என வேறிடத்திலும் சொல்லப்பட் டிருக்கிறது. இந்த பஞ்ச கோசத்திற்கும் உபாதான காரணமான யாதொரு அவ்வியாகிருதாகாச முண்டோ அதுவே இங்குள்ள **परमे व्योमन्** என்றதாற் சொல்லப்படுகின்றது. ஆகவே அவ்வியாகிருதாகாசத்தில் **निहितं** இருக்கின்ற பிரும்மத்தை எவனொருவன் அறிகின்றானோ என்று பொருள்.

சங்கை—எவ்வித விநாசமுமற்றதும், ஆனதுபற்றியே அக்ஷர சப்தத்தாற் சொல்லப்படுவதும், எல்லாவற்றிற்கும் அதிஷ்டான

மாயுள்ளதுமான பிரும்மத்தினிடத்தி லன்றோ அவ்வியாகிருத பஞ்சபூதாதிகளானஸர்வஜகத்தும் அத்யாரோபிதமாய்க்கொண்டு இருப்பதாகச் சொல்லப்படுகின்றது. அவ்விதமிருக்க இங்கு அதற்கு நேர்விரோதமாக அவ்யாகிருதாகாசத்தில் பிரும்மமிருப்பதாகச் சொன்னது எவ்விதம் பொருந்தும் எனின்?

உத்தரம்—பிரும்மக்ஞானத்தில் விருப்பமுள்ளவனுடைய அறிவை முன்னிட்டு இவ்விதம் கூறப்பட்டதெனக் கொள்ளல் வேண்டும். அதாவது— இவனது அறிவானது வெளியிலுள்ள ரூப ரஸாதி விஷயங்களை விட்டு விலகி அன்னமயாதி க்ரமமாய் அவ்வியாகிருதாகாசம்வரைபிரவேசித்து நிஷ்ப்ரபஞ்சமான பிரும்மதத்துவத்தைப்பிரவேசிக்கவேண்டியிருப்பதாலேயே இவ்விதம் கூறப்பட்டதென்பதாம். ஆகவே இதுவரை சொன்னதிலிருந்து அன்னமயாதி ஆனந்தமயாந்தமான பஞ்சகோச ஸமுதாயமான குஹையிலும், இவற்றிற்குக் காரணமான அவ்வியாகிருதாகாசத்திலுமிருக்கும் பிரும்மத்தை எவன் அறிகின்றானோ என்று பொருள் கூறப்பட்டது. அல்லது **गुहायां परमे व्योमन्** என்பதற்கு வேறு விதமாயும் பொருள்கொள்ளலாகும். அதாவது— ஸர்வஜகத்தையும் தன்னுள்ளடக்கி வைத்துக்கொண்டிருப்பது பற்றி குஹாசப்தத்தாற் சொல்லப்படும் பரமவ்யோமத்தில் அதாவது— அவ்யாகிருதாகாசத்தில் என்பதாம்.

அல்லது வேறுவிதமாயும் பொருள் கொள்ளலாம். அதாவது—ஹிருதய புண்டரீகத்தின் நடுவில் தனது கட்டைவிரலின் அளவிற் கொத்தபடியிருக்கும் யாதொரு ஆகாசமுண்டோ அந்த ஆகாசமே இங்குள்ள **परमे व्योमन्** என்றதாற் சொல்லப்படும். ஹிருதயாகாசத்தை ப்ரமவ்யோம (மேலான ஆகாசம்) என்று சொன்னது எங்ஙனமெனின்? கூறுவாம். ஜாக்கிரத்வியவஹாரஹேதுவானதும்,ஸ்வப்பின வியவஹாரஹேதுவானதும், தேஹத்தின் நடுவிலிருக்கின்றதுமான ஆகாசத்தையும், எல்லாவற்றிற்கும் வெளியிலுள்ளதுமான ஆகாசத்தையும் அபேக்ஷித்து எவ்விததுக்கங்களும் அற்ற ஸுஷுப்தி ஸமாதிகளுக்கு ஸ்தானமாக ஹிருதயாகாசமிருப்பதால் அந்த ஹிருதயாகாசத்தை எல்லாவற்றிற்கும் மேலான ஆகாசம் என்று சொல்லுவதில் யாதும்

தடையில்லை, என்பதாம். ஆகவே அத்தகைய ஆகாசத்திலிருக்கும் யாதொரு புத்தியுண்டோ அதுவே குஹா எனப்படும். அந்த புத்தியாகிற குஹையில் க்ஞாத்ரு, க்ஞேய, க்ஞான ரூபமான த்ரிபுடீ வியவஹாரமும், ப்ராந்தியாலும், விவேகத்தாலும் ஸம்பாதிக்கப்பட்ட போக, மோக்ஷங்களும் அடங்கியிருப்பதால் அத்தகைய புத்தியினால் அறியத்தக்கபடி அங்கு பிரும்மம் பிரகாசிக்கின்றது. அங்கன்றோ ப்ரத்யக்ப்பிரும்மமிருக்கின்றது. அத்தகைய புத்தியில் பிரகாசிக்கும் பிரும்மம் ப்ரத்யகாத்மஸ்வரூபமாயினும், காமம், அவித்யை முதலியவற்றால் மறைக்கப்பட்டிருப்பது பற்றி பஹிர்முகர் (வெளிநோக்குள்ளவர்) களால் நன்கு அறியப்படுவதில்லை. அந்தர் முகர் (உள்நோக்குள்ளவர்) களால் முற்கூறிய ஆவரணம் நீங்கி நன்கு அறியப்படுகின்றது.

சங்கை—பிரும்மமும், ப்ரத்யகாத்மாவும் ஒன்றாயிருப்பதால் வேத்யம் (அறியத்தக்கது) வேதிதா (அறிகின்றவன்) வேதனம் (அறிவு) ஆகிய இவைகளில்லாமலாகிவிடுகின்றது. அவ்விதமிருக்கும் பொழுது "பிரும்மத்தை அறிதல்" என்பது ஸம்பவிக்காதன்றோ எனின்?

உத்தரம்—வேதனம், (அறிதல்) ஸர்வகாமாவாப்தி, முக்தி முதலிய வியவஹாரங்கள் பந்ததசையில் உபசாரமுறையால் கூறப்படுகின்றதே யொழிய உண்மையில் வேதனம் (அறிதல்) ஸம்பவிப்பதில்லைதான். இவ்விதமே வார்த்திகத்திலும்.

ज्ञात्रभेदात्तु तद्ब्रह्म ह्यनीप्सिततमं परम् ।
ज्ञातुरन्यस्य चाभावाद्यो वेदेत्युच्यते कथम् ॥
सत्यादिलक्ष्याऽज्ञानोत्थाऽसत्याद्यर्थनिषेधधीः ।
एवञ्चाऽऽप्तमवाप्नोति केवलाऽज्ञानहानतः ॥
तद्धज्ञातं विजानाति विमुक्तश्च विमुच्यते ।
निवर्तते निवृत्तंच त्रिवेः शपथयाम्यहम् ॥

என்றதால் தெளிவாயுபதேசிக்கப் பட்டிருக்கிறது. க்ஞாதா, க்ஞானம், க்ஞேயம் என்ற பேதமில்லாவிடினும்கூட दशमस्त्वमसि "பத்தாவதாக நீ இருக்கின்றாய்" என்றவாக்கியத்தால் தனது பத்தாவதாயிருத்தலை எவ்விதமறிகின்றானோ அவ்விதமே தனது

பிரும்மத்வத்தையும் அறிந்துகொள்ளகூடும் என்பதில் யாதும் தடையில்லை. தான்பிரும்மம் என அறிந்துகொள்ளாவிடில் பிரும்மக்ஞானமாத்திரத்தினுல் தனதுஜீவத்வப்ரமமானது ஒருபொழுதும் விலகாது. ஆனதுபற்றி குஹையில் பிரகாசிக்கும் ப்ரத்யக்தத்துவத்தை பிரும்மமாகவே அறியவேண்டும் என்றேற்பட்டது. இதுவரை சூத்திரத்திற்சொல்லிய வேதனம் இன்னதெனச் சொல்லப்பட்டது. இனி सोऽश्नुत इत्यादिना பரப்ராப்தி சொல்லப்படுகின்றது.

**(मन्त्रः) सोऽश्नुते सर्वान्कामान्सह । ब्रह्मणा विपश्चितेति ।**

**सः**=அந்தபிரும்மவித்தானவன் **सर्वान् कामान्** எல்லாப்ராணிகளிடத்திலுமுள்ள போகங்களை **सह**= ஒரே ஸமயத்தில் **अश्नुते**= அடைகிறுன். ஆத்மக்ஞானமில்லாதவன் தனதுகர்மபலன்களான பற்பலசரீரங்களை முறையே அடைந்து கண் முதலிய கரணங்களின் உதவியைக்கொண்டு மனம் முதலிய உபாதியாலேற்பட்டதும் ஜலம்முதலியவற்றில் பிரதிபலித்த சூரியாதிப் பிரதிபிம்பம் போன்றதுமானஜீவஸ்வரூபத்தால் அந்தந்த போகத்தை யனுபவிக்கிறுன். ஞானியோவெனில் ஸர்வக்ஞப் பிரும்மஸ்வரூப்மாகவாகி ஸர்வபோகங்களையும் ஒரேஸமயத்தில் அனுபவிக்கிறுன் என்று கருத்து.

சங்கை—**द्वा सुपर्णा सयुजा सखाया समानं वृक्षं परिषस्वजाते, तयोरन्य: पिप्पलं स्वाद्वत्त्यनश्नन्न्योऽभिचाकशीति ॥** என்றமந்திரத்தில் சரீரத்தில் இரண்டுசேதனனிருப்பதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அவற்றுள் ஸோபாதிகனும், பிரதிபிம்பரூபனும், போக்தாவுமான ஜீவனுல் போகானுபவஞ் செய்யப்படுகின்றது. அபோக்தாவும், ஸாக்ஷியும், உபாதிஸம்பந்தமற்றிருத்தல்பற்றி ஸர்வகதமுமான பிரும்மசைதன்யத்தினுல் எல்லாபோர்க்ய ஸமூஹமும்பிரகாசப்படுத்தப்படுகின்றது. இதுபிரும்மக்ஞானமில்லாதவனுக்கும், பிரும்மக்ஞானமுள்ளவனுக்கும் பொதுவாகவுள்ளது. இவ்விதமிருக்க பிரும்மக்ஞானிக்குமட்டும் இதைப்பயனுக என்னவிசேஷத்தைக்கொண்டு சொல்லப்பட்டது எனின்?

உத்தரம்—பிரும்மக்ஞானியோவெனில் என்னுடைய உண்மை ஸ்வரூபமான பிரும்மமே ஸர்வபோகத்தையும் பிரகாசப்

படுத்துகின்றது என்றறிந்து ஸந்தோஷிக்கிறான். மூடனுக்கோ இவ்விதமெண்ணமுண்டாவதில்லை யென்பதே இங்குள்ளவிசேஷமாகும்.

சங்கை—பிரும்மசைதன்னியத்தினால் எல்லா சரீரத்திலுமுள்ள சுகம் பிரகாசப்படுத்தப் படுவதுபோல எல்லா சரீரத்திலுமுள்ள துக்கங்களும் பிரகாசப்படுத்தப்படக்கூடும். ஆனதுபற்றி ஸர்வ சரீரத்திலுமுள்ள துக்கவுணர்ச்சியும் இவனுக்கிருப்பதால் கிலேசமும் வரகூடுமன்றோ எனின்?

உத்தரம்—ஸாக்ஷியான பிரும்மத்திற்கு துக்கத்தின் ஸம்பந்தம் ஒருபொழுதும் ஏற்படுவதற்கிடமில்லை. இவ்விதமே கடோபனிஷத்தில்

सूर्यो यथा सर्वलोकस्य चक्षु र्नलिप्यते चाक्षुषैर्बाह्यदोषैः।
एकस्तथा सर्वभूतान्तरात्मा न लिप्यते लोकदुःखेन बाह्यः॥

என்றதால் ஸாக்ஷியான பிரும்மசைதன்னியத்திற்கு துக்கஸம்பந்தமில்லை யெனத் தெளிவா யுபதேசிக்கப்பட் டிருக்கிறது. ஆகவே முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை.

சங்கை—அப்படியாயின் துக்க ஸம்பந்தம் பிரும்மத்திற்கில்லாதிருப்பதுபோல சுகஸம்பந்தமும் பிரும்மத்திற்கு இல்லாமலாகிவிடுமன்றோ எனின்?

உத்தரம்—சுகத்தின் ஸம்பந்தம் பிரும்மத்திற்கில்லை யென்பதை நாமும் அங்கீகரிக்கிறோம். ஏனெனில் சுகமானது பிரும்மத்தின் ஸ்வரூபமாயிருத்தலே அதன் காரணமாகும். அதாவது: துக்கமானது பிரும்மஸ்வரூபத்தைவிட வேறாக யிருப்பதால் அதன் ஸம்பந்தம் பிரும்மத்திற்கில்லை யென்கிறோம். சுகமோ பிரும்மத்தின் ஸ்வரூபமாயுள்ளது. ஆகவே சுகஸ்வரூப பிரும்மாநுபவமுள்ளவனுக்கு துக்கம்போல சுகமும் பிரும்மத்தைவிட வேறாக யிருந்தாலல்லவோ நீ சொல்லிய ஆசங்கைக் கிடமுண்டு. அவ்விதமில்லாததால் முற்கூறிய வாசங்கைக்கே இடமில்லாமலாகிவிட்டது. "आनन्दो ब्रह्मेति व्यजानात्" "विज्ञानमानन्दं ब्रह्म" என்ற சுருதிவாக்கியங்களும் பிரும்மத்தை ஸுகஸ்வரூபம் என்றே உபதேசிக்கின்றன.

ஆனால் ஆனந்தமானது பிரும்மத்தின் ஸ்வரூபமாக யிருந்த போதிலும் அந்தக்கரண விருத்தியால் பரிச்சேதம் செய்யப்பட்டதாய்க்கொண்டு "விஷயானந்தம்" என்று சொல்லப்படுகின்றது. அதாவது: தனக்கு அபீஷ்டமான விஷயங்களில் பிரவிருத்திக்கின்ற புருஷனானவன் கோரிய விஷயம் கிடையாமைபற்றி கிலேசத்தை யடைந்தவனாய்க்கொண்டு, ஏதோ ஒரு ஸமயம் புண்ணிய வசத்தால் விஷயலாபமுண்டானதும் விஷயத்திலுள்ள ஆசையானது விலகி மனது அந்தர்முகப்பட்டு ஸாத்விகமான ஓர் வித விருத்தியை அடைகின்றது. அந்த ஸாத்விகமான விருத்தியானது உள்ளில் பரிபூர்ணமாய் பிரகாசிக்கின்ற பிரும்மஸ்வரூபானந்தத்தைக் குறைத்துக் காட்டுகின்றது. ஸாத்விக விருத்தியால் குறைவுபடுத்திக் காட்டப்படும் பிரும்மானந்தத்தையே விஷயானந்த மென்கிறோம். இவ்வித அபிப்பிராயத்துடனேயே பிருஹதாரண்ணியகஉபநிடதத்தில் "एषोऽस्य परम आनन्दः। एतस्यैवानन्दस्यान्यानि भूतानि मात्रामुपजीवन्ति. இதுதான் பிரும்மத்தின் மேலான ஆனந்தம், இந்தப் பரமானந்தத்தின் லேசத்தை மற்றைய பூதங்கள் அநுபவிக்கின்றன" என்றதாற் றெளிவா யுபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே பிரும்மதேவன் முதல் ஸ்தம்பம் என்ற சிறுபூச்சி ஈறாகவுள்ள பிராணிகளிடத்திலுள்ளவைகளும் ஸாத்விகமான விருத்திகளால் பரிச்சின்னங்களும் (பிரித்தனுபவிக்கப்பட்டவைகளு) மான பிரும்மானந்தத்தின் லேசரூபங்களான யாதொரு விஷயானந்தங்களுண்டோ அந்த விஷயானந்தங்களே இவ்விடத்திலுள்ள सर्वान्कामान् என்ற பதத்தாலுபதேசிக்கப்படுகின்றன. काम्यन्त इति कामाः=विषयाः சுகங்கள் பிராணிகளால் விரும்பப்படுகின்றனவே இன்றி துக்கங்கள் விரும்பப் படுவதில்லை. ஸாத்விகமான அந்தக்கரண விருத்திகளால் பரிச்சேதத்தையடைந்த அந்த ஆனந்தங்களில் ஸாத்விக விருத்தியாலேற்படும் பரிச்சேதமானது வித்யையினால் பாதிக்கப்பட்டதும் அத்தகைய பரிச்சேதகமான விருத்தியற்றதும், ஆனந்தைகரஸமானதுமான வஸ்துவை பிரும்மஸ்வரூபமாக வறிந்தனுபவிக்கும் பிரும்மவித்தானவன் செய்யவேண்டுவதைச் செய்துமுடித்தவனாகவும், அடையவேண்டுவதை அடைந்தவனாகவும் ஆகி எப்பொழுதுமே ஸந்

தோஷஸ்வரூபத்தில் நிலை பெறுகின்றான். இவனுடைய ஸந்தோஷமானது மூடனின் ஸந்தோஷத்திற்கு முற்றிலும் மாறுபட்டதாகவே யாகிறது. ஆகவே ब्रह्मविदाप्नोति परम् என்ற சூத்திரத்திற்கு வியாக்யான ரூபமான सत्यं ज्ञानमनन्तं என்று தொடங்கி विपश्चितेति என்றது வரையுள்ள ருக்கில், பிரும்மஸ்வரூபம், அதன் வேதனம் (அறிதல்) அதன் ப்ராப்தி இவைகள் எத்தகையது என்ற ஆசங்கையை விலக்கவேண்டி விரிக்கப்பட்டது. சுருதியிலுள்ள इति என்ற பதம் ருக்கின் முடிவைக் குறிக்கின்றது.

மந்திரம், பிராம்மணம் என்ற பேதத்தால் வேதமானது இரண்டு விதமாகவுள்ளது. அவற்றுள் இந்த பிரும்மவல்லியானது பிராம்மண ரூபமானது. பிராம்மணமானது 8 விதமான பிரிவையுடையது. அதாவது: (1) இதிஹாஸம், (2) புராணம், (3) வித்யா, (4) உபநிஷத், (5) ச்லோகம், (6) ஸூத்திரங்கள், (7) அநுவியாக்யானங்கள், (8) வியாக்யானங்கள், என்பதாம்.

அவற்றுள் भृगुर्वै वारुणिः என்று தொடங்கிப் படிக்கப்படுவது (1)வதான இதிஹாஸமாகும். यतो वा इमानि भूतानि जायन्ते என்பன (2)வதான புராணமாகும். य एवमेता महासंहिता व्याख्याता वेद என்பனவற்றால் சொல்லப்படும் உபாஸனங்கள் (3)வதான வித்யைகளாகும். एषा वेदोपनिषत् என்பனவற்றால் சொல்லப்படும் ரஹஸ்யார்த்தோபதேசங்கள் (4) வதான உபனிஷத்துக்களாகும். तदप्येष श्लोको भवति என்பனவற்றால் ஆங்காங்கு படிக்கப்படுவதே (5)வதான சுலோகங்களாகும். ब्रह्मवित् என்பனவற்றாலுபதேசிக்கப்படுவதே (6)வதான சூத்திரமாகும் सत्यं ज्ञानम् என்று தொடங்கி படிக்கப்படுவதே (7)வதான அநுவியாக்யானமாகும். முறையே சூத்திரத்திலுள்ள பதங்களுக்கு இதில் வியாக்கியானம் கூறப்பட்டிருத்தலால் அநுவியாக்யானம் என்ற பெயர் இதற்கு மிக்கப் பொருத்தமாகவே ஆகிறது. அநுவியாக்கியானத்திலும் சில பதங்களுக்கு ஸந்தேஹம் உண்டாகும் பொழுது அதை விலக்கிக்காட்டும் பாகமே (8)வதான வியாக்யானமெனப்படும்.

ஆகவே இதுவரை கூறியபடி பிராம்மண பாகத்தின் 8 வித பிரிவுகளுள் (7)வதான அனுவியாக்யான பாகமான **सत्यं ज्ञानमनन्तम्** என்ற விடத்திலுள்ள அனந்த பதத்தின் பொருளை விளக்க வேண்டி **तस्माद्वा+पुरुष:** என்றதுவரையுள்ள வியாக்கியானபாகம் ஆரம்பம் செய்யப்படுகின்றது.

**(मन्त्रः) तस्माद्वा एतस्मादात्मनः.........पुरुषः ॥**

(ப—ரை) **तस्मात्**=(தொடக்கத்தில் பிரும்ம சப்தத்தாலும், **परम्**=என்ற சப்தத்தாலும், சொல்லப்பட்ட வஸ்துயாதுண்டோ) அந்த **एतस्मात्**=(ஸமீபத்தில் சூத்திர வியாக்யானரூபமான ருக்கில் ஸத்யாதி சப்தத்தாலும்; நிஹித சப்தத்தாலும் சொல்லப்பட்ட வஸ்து யாதுண்டோ) இந்த **वै**=வஸ்துவினிடமிருந்தே என்று பொருள். அல்லது **तस्मात्**=சாஸ்திரத்தால் மட்டும் அறியப்படும் பிரும்மத்வாகார முள்ளதும், **वै**=ஸர்வ வேதாந்தப் பிரஸித்தமானதும், **एतस्मात्**=அபரோக்ஷானுபவத்தால் அறியப்படும் ப்ரத்யகாத்மாகார மானதுமான என்று பொருள். இதுவரை கூறிய இரண்டு விதமான பொருள் வடிவமான **आत्मन:**=ஆத்மாவினிடமிருந்து என்று பொருள். ஆகவே ஒரே பொருளுள்ள **तस्मादेतस्मात्**=என்ற பதங்களைக் கூறியதிலிருந்து ப்ரத்யக் வஸ்துவும், பிரும்மமும் ஒன்றெனஏற்பட்டது. இதையே முந்தினருக்கில் **ब्रह्मणा विपश्चिता**=என்றதால் ஒரே விபக்தியில் ஒரே பொருளைத்து உதாஹரிக்கப்பட்டது. ஆகவே ஸர்வப் பிராணிகளுக்கும் ப்ரத்யகாத்மாவாகவான யாதொரு பிரும்ம முண்டோ அந்தப் பிரும்மத்தினிடமிருந்து உண்டாகின்ற ஆகாசாதி பதார்த்தங்களைக் குறித்து பிரும்மத்திற்குஏற்படும் பிரகிருதித்வமானது **पंचमी**=விபக்தியால் (ஐந்தாம் வேற்றுமையால்) சொல்லப்படுகின்றது. அதாவது: **जनिकर्तु: प्रकृति:**=என்ற பாணினி ஸூத்திரத்தால் உத்பத்தி என்ற கிரியாசிரயமான வஸ்துவானது ஜநிகர்த்தாவென்றும், அது எதனிடமிருந்துண்டாகின்றதோ அது பிரகிருதி யென்றும் அது உபாதானம் **उपादानम्**=என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்த விடத்தில் **आकाश: संभूत:**=என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகாச முண்டாயிற்று என்பது அதன் பொருள். ஆகவே உத்பத்திக் கிரியையானது ஆகாசத்திலிருப்

பதுபற்றி ஆகாசமானது ஜநிகர்த்தாவாக வாகிறது. ஜநிகர்த்தர் வான அந்த ஆகாசத்திற்கு ப்ரகிருதி: உபாதான காரணமாக பிரும்மமாகின்றது என்பதைக் காட்டவே இங்கு **पञ्चमी**=விபக்தி யானது (ஐந்தாம் வேற்றுமையானது) **तस्मादेतस्मादात्मन:**=என்ற விடத்தில் பிரயோகம் செய்யப்பட்டிருக்கிறது. மேலும், **प्रकर्षेण क्रियते उत्पाद्यते कार्यमनयेति व्युत्पत्या प्र**=மிகவும் (நெருங்கின முறை யில்) **कृति:**= கார்யமானது இதனுற் செய்யப்படுகிறது என்ற வ்யுத்பத்தியால் மண் முதலியன ப்ரகிருதியாகின்றது. அதுவே உபாதானம் என்ற பொருளுள்ளதாக வாகின்றது என்றேற்படு கிறது. ஆனுல் நிமித்த காரணமான குயவன் முதலியோராலும் குடம் உண்டுபண்ணப் படுகின்றதாயினும், உண்டாகும் குடத் தில் குயவனுக்கு நெருங்கின ஸம்பந்த மிருப்பதில்லை. இதிலிருந்து எது தன்னுற் உண்டுபண்ணப்பட்டகாரியத்தில் தானும் ஊடுரு விக்கலந்து பிரகாசிக்கின்றதோ அது உபதான்காரணம் என்றும் ப்ரகிருதி என்றும் சொல்லப்படும்.

சங்கை—ப்ரகிருதித்துவமானது மாயைக்கே யொழிய பிரு ம்மத்திற்கில்லை. இவ்விதமே "**मायान्तु प्रकृतिं विद्यान्मायिनंतु महेश्वरम् ।** மாயையைப் பிரகிருதியாகவும், மஹேசுவரனை மாயி(மாயை யை யுடையவன்)யாகவும் அறியவேண்டும்." என்றதால் சுவேதா சுவதரோபநிடதத்திற் சொல்லப் பட்டிருக்கிறது இவ்விதமிருக் கப் பிரும்மத்தைப் பிரகிருதியாகச் சொன்னது எவ்விதம் எனின்?

உத்தரம்—மாயையானது பிரும்மத்தின் சக்தியாயிருப்பது பற்றி அதற்குத் தனிமையில் காரணத்வம் ஸம்பவிப்பதற்கில்லை. இவ்விதமே

**न तस्य कार्यं करणं च विद्यते न तत्समश्चाऽभ्यधिकश्च दृश्यते ।**
**पराऽस्य शक्तिर्विविधैव श्रूयते स्वाभाविकी ज्ञानबलक्रिया च ॥**

என்றதால் அதே சுவேதாசுவதரோபநிடதத்திற் சொல்லப் பட்டிருக்கிறது. ஆகவே சக்தியானது தனது ஆசிரயமின்றித் தனித்திருப்பதில்லை. ஆனதுபற்றி சக்திரூபமான மாயைக்குச் சொல்லிய ப்ரகிருதித்வமானது சக்திமத்தான (சக்திக்கு ஆதார மான) பிரும்மத்திற்குச் சொல்லப்பட்டதாகவே தானுகும். இதி

னின்றும் மஹேச்வரனென்றும், மாயீ என்றும் சுவேதாசுவதரோபநிடதத்திற் சொல்லப்பட்டப்ரகிருதிரூபமான யாதொரு பரமாத்மாவுண்டோ அந்தப் பரமாத்மாவே இவ்விடத்திலுள்ள ஐந்தாம் வேற்றுமையுடன் கூடின आत्मनः—என்றபதத்தாற் சொல்லப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும். ஆகவே மாயியான(மாயா விசிஷ்டனான)பரமாத்மாவினிடமிருந்து ஆகாசமானது உண்டாயிற்று என்றேற்பட்டது. அதாவது: பரமாத்மாவே ஆகாசவாய்வாதி ரூபமாகத் தோற்றத்தை யடைந்தது என்றேற்பட்டது. இவ்விதமே லோகத்திலும் உபாதானகாரணமாகச் சொல்லப்படும் யாதொரு மிருத்ரூபமுண்டோ, அதுவே தன்னைவிட வேறான குடத்தை வாரம்பிக்கின்றதையும், க்ஷீரஸ்வரூபமான உபாதான காரணமானது தானாகவே தயிராகப் பரிணமிப்பதையும், ரஜ்ஜுரூபமான உபாதானகாரணமானது அக்ஞானத்துடன் கூடினதாய்க் கொண்டு ஸர்ப்பாகாரமாக விவர்த்திப்பதையும் (தோற்றுவதையும்) நாம் அனுபவத்திற் காண்கின்றோம். இவ்விஷயத்தில் நையாயிகர் முதலியோர் மிருத்தானது குடத்தைவாரம்பம் செய்வதுபோலவே பிருதிவீ முதலிய ஸகலஜகத்தும் பரமாணுக்களால் ஆரம்பிக்கப் படுகின்றது என்கின்றனர். ஸாங்கியர்களோ வெனில்— க்ஷீரமானது தயிராக பரிணமிப்பதுபோலவே ஸத்வ ரஜஸ் தமோகுணாத்மகமான பிரதானமே மஹத் அஹங்காரம் முதலிய ஜகதாகாரமாக பரிணாமத்தை யடைகின்றது என்கின்றனர். வேதாந்திகளோ வெனில்—ரஜ்ஜுவானது ஸர்ப்பமாகத் தோன்றுவது போலவே ஸர்வஜகத் கல்பனைக்கும் அதிஷ்டான பூதமானதும், அகண்டைகாஸமுமான பிரும்மமே ஸ்வகீய மாயா வசத்தால் ஆகாசாதிஜகதாகாரமாய் விவர்த்திக்கின்றது (தோற்றத்தை யடைகின்றது)என்கின்றனர். இவ்விதம் சொல்லிய மூன்று மதங்களுள், நையாயிகர் சொல்லும் ஆரம்பவாதமும், ஸாங்கியர் சொல்லும் பரிணாமவாதமும் சாரீரகமீமாம்ஸையில் மறுக்கப்பட்டிருக்கின்றது.

சங்கை—அங்ஙனமாயின் மஹருஷிகளாற் செய்யப்பட்ட அவ்விருவாதங்களின் கதிதான் என்னை எனின் ?

உத்தரம்—மந்தபுத்திகளை அனுக்கிரஹிக்கவேண்டி அவாந்தர (இடையிலுள்ள) ஸிருஷ்டியையே அவ்விரு தர்சனக்காரர்களும் கூறுகின்றனர் என்று கொள்ள வேண்டும்.

அதை விளக்குவாம்—எந்த மனிதன் லோகாயதமதத்தைப் பின்பற்றினவனும் தேஹத்தையே ஆத்மாவென வெண்ணி ஸ்வர்க்க நரகாதிகளை யடைகின்றவனும், தேஹத்திற்குப் புறம்பாயுள்ளவனுமான ஆத்மாவை அறிந்து கொள்ளாமலும், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களை அனுஷ்டிக்காமலும், உபாஸ்யனை ஈசுவரனை அறிந்து கொள்ளாமல் பிரும்மலோகப் பிராப்திக்குக் காரணமான ஈசுவரோபாஸனத்தில் பிரவிருத்திக்காமலும் இருக்கின்றானோ அத்தகைய புருஷனுக்கு ஜீவன், ஈசுவரன் இவர்களைப்பற்றிய பகுத்தறிவை உண்டுபண்ண வேண்டிப் பிரவிருத்தித்த கௌதமாதி மஹருஷிகள் பரமாணுக் களினின்றும் பிருதிவியாதிகளின் உத்பத்தியை உபதேசித்திருக்கின்றனர். ஆகாசம், காலம், திக்கு இவைகளும், பரமாணுக்களும் உபனிஷத்திற் சொல்லப்பட்ட மூலகாரணமான பிரும்மத்தினிடமிருந்து உண்டானவைகளாக எப்பொழுது நிலைக்கப் படுகின்றனவோ, அப்பொழுது அந்த பரமாணு முதலியவற்றினிடமிருந்து கௌதமாதிகள் சொல்லியபடி பின்னுள்ள ஸிருஷ்டி உண்டாகட்டும். இவ்விதம் சொல்லுவதால் வேதாந்திகளின் சித்தாந்தத்திற்கு என்ன குறை? இவ்விதம் கூறுவதனால் மாயாவிசிஷ்டப் பிரும்மத்தினிடமிருந்து ஜகத்துண்டாவதாகச் சொல்லும் வாதத்திற்கு என்ன குறைவரும். ஒருகுறையும் வருவதற்கிடமில்லை. ஏனெனில்—நான்முகன் முதல் ஸ்தம்பம் என்ற சிறு பூச்சி ஈறாகவுள்ள எல்லாப் பிராணிகளுக்கும் விசித்திர ஸம்ஸாரப் பிரமத்தை உண்டு பண்ணுகின்ற மாயையினாலேயே திருச்யமான கௌதமாதி மதப் பிரமமானது உண்டுபண்ணப் படுவதே அதன் காரணமாகும்.

சங்கை—இதுவரை கூறிய யுக்தியைக் கொண்டே வேதாந்திகளாற் சொல்லப்பட்ட ஸிருஷ்டியும் பொய்தான் எனச் சொல்லக் கூடாதோ வெனின்?

உத்தரம்—இவ்விதம் ஸிருஷ்டியானது பொய்யாகவாகும் என்பதில் வேதாந்திகளுக்குக் கவலையில்லை. ஏனெனில்—ஸமஸ்த

ஸிருஷ்டியும் பிராந்தியையே மூலமாயுடையது என்பதைப் போதிக்கவேண்டியே வேதாந்தங்கள் பிரவிருத்தித் திருக்கின்றனவென்பதே அதன் காரணமாகும். மேலும், லோகாயத மதாவலம்பியான மந்தாதிகாரிக்கு தேஹத்தைவிட வேறானவனும், ஸ்வர்க்காதிப் பிராப்தி யோக்யனுமான கர்த்தாவான ஆத்மாவைப் போதிப்பதில் கௌதம மஹருஷியானவர் எவ்விதம் அக்கரை கொண்டிருக்கின்றாரோ, அவ்விதமே மத்யமாதிகாரிக்கு உபனிஷத்திற் சொல்லிய பிரும்மக்ஞான யோக்யதையுண்டாவதற்கு வேண்டி கர்த்திருத்வ மில்லாதவனும், ஸாக்ஷியும், அஸங்கனுமான சிதாத்மாவை யுபதேசிப்பதில் அக்கரை கொண்டவராய் கபிலமஹருஷியானவர் ஸாங்க்ய சாஸ்திரத்தைச் செய்தருளினார் என்றும் எண்ண வேண்டிவருகின்றது. மேலும், அந்த ஸாங்க்ய சித்தாந்தத்தில் பரமாணுக்களுக்கு முந்தியுள்ளதும், சித் அசித் இவற்றைப் பிரித்தறிவதி லுபயோகப்படக் கூடியதுமான இடையிலுள்ள ஸிருஷ்டியானது கொஞ்சம் சொல்லப் பட்டிருக்கின்றது. ஆனால் அகண்டைக ரஸமான பிரும்மத்தில் மாயையினால் சித்துக்கும், ஜடத்திற்கும் உள்ள பேதமும், சிதாத்மாக்களின் பரஸ்பர பேதமும், ஸத்வாதிகளும், ஆகிய இவைகள் கற்பிக்கப் பட்டிருக்கின்றன. இவ்விதம் சுத்தப்பிரும்மத்தில் மாயாகல்பிதமான முன் சொல்லிய பதார்த்தங்களை வைத்துக் கொண்டு அதற்குப் பிறகுள்ள ஸிருஷ்டியே ஸாங்க்யர்களாற் சொல்லப்பட்டதாக ஏற்படுகின்றது. இவ்விதமே சைவாகமங்களில் உபாஸ்யனான ஈசுவரனைப் பிரித்துக் காண்பிக்கவேண்டி ஸாங்க்யர்களாற் சொல்லப்பட்ட 25 தத்துவங்களைக்காட்டிலும் முன்னுள்ளதாக 11 தத்துவங்கள் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன. உபநிஷத்தோவெனில் திருஷ்டாந்தம் காண்பிக்கவேண்டி ஆகாசத்தை ஆதியாகவுடைய சிலபதார்த்தங்களின் ஸிருஷ்டியை உதாஹரித்திருக்கின்றது. ஏனெனில் எல்லாபதார்த்த ஸிருஷ்டியையும் சொல்லுவதென்பது முடியாதென்பதும், அவ்விதம் கூறுவது அனுபயுக்தமென்பதுமே சுருதியின் கருத்து என்பதாம். மேலும், எவ்விதம் சொன்னால் சுத்தப்பிரும்மாவபோதம்(க்ஞானம்)உண்டாகுமோ, அவ்விதபிரும்மபோதமுண்டாவதற்கு வேண்டிய வழியை மட்டு

மே சுருதி காட்டியிருக்கின்றது. இதைக்கொண்டே உத்தமாதி காரிக்கு பிரும்மபோதமேற்பட்டு விடலாம் என்றே சுருதியின் கருத்தெனக் கொள்ளவேண்டும். இதையே கௌடபாத காரிகையிலும்

मृल्लोहविष्फुलिंगाद्यैः सृष्टिर्या चोदिताऽन्यथा ।
उपायः सोऽवताराय नास्ति भेदः कथंचन ॥

மண், லோகம், நெருப்புப்பொறி முதலியவற்றால் யாதொரு ஸிருஷ்டியானது வெவ்வேறு விதமாகச் சொல்லப்பட்டிருக்கிறதோ அது பிரும்மத்தி னிடத்தில் புத்திப்பிரவேசத்திற்காகவே யாதலால் எவ்விதத்தாலும் ஸிருஷ்டியில் வேற்றுமை கிடையா, என்பதால் சொல்லப்பட்டு மிருக்கிறது. மேலும், "ஸிருஷ்டியை உபாஸிக்கவேண்டும்" "ஸிருஷ்டியை யறிந்தவன் சிரேயஸ்ஸை யடைகிறான்" என்று ஒருசாஸ்திரத்திலு முபதேசிக்கப் படாததால், இங்கு கூறிய ஸிருஷ்டியைக் ஞேயமென்றோ, உபாஸ்யமென்றோ, சொல்லுவதற்கில்லை. ஆன்துபற்றியே சுரேசுவர வார்த்திகத்தில்

यया यया भवेत्पुंसो व्युत्पत्तिः प्रत्यगात्मनि ।
सा सैव प्रक्रियेहस्यात्साध्वी साचाऽनवस्थिता ॥

என்றதால் பரஸ்பரவிருத்தமாகச் சொல்லப்படும் எல்லாஸிருஷ்டியும் ஸாத்வீ என அங்கீகரிக்கப் பட்டிருக்கிறது. உலகில் பலர்பலவிதமான ஸ்வப்பினம் காண்பதில், ஒருவர் காணும் ஸ்வப்பினந் தான் ஒப்பத்தக்கது, மற்றவர் காணும் ஸ்வப்பினம் ஒப்பத்தக்கதில்லை என்று எவரால் சொல்லமுடியும், ஒருவராலும் முடியாது, என்பதே வார்த்திகாசாரியரின் கருத்து. உபாதான காரணமான மாயாவிசிஷ்ட பிரும்மத்தினிடமிருந்து யாதொரு ஆகாசமானது உண்டாயிற்றோ, காரியமான அந்தஆகாசத்தில் பிரும்மாம்சமும், மாயாம்சமும் தொடர்ந்தே இருக்கின்றன. அதாவது:— सत्यं ज्ञानमनन्तं=என்றதால் எந்த பிரும்மமானதுஸத்யஸ்வரூபமாக சொல்லப்பட்டதோ, அதுஸதாத்மகம் (सदात्मकं) இவ்விதமே सदेव सोम्य=என்றுதொடங்கி तत्सत्यं=என்றதால் சாந்தோக்யசுருதியுமுபதேசிக்கிறது. ஆகவே आकाशोऽस्ति=ஆகாசமு

ருக்கின்றது. என்ற தோற்றமேற்படுவதால் பிரும்ம தர்மமாக ஒப்பிய ஸத்வமானது ஆகாசத்தில் தொடர்ந்திருப்பது நன்கு புலப்படுகின்றது. இவ்விதமே ஆச்சரியரூபமாயிருத்தலே மாயாத்வம் எனப்படும். இந்திரஜாலம் செய்கின்றவனால் வீடு, மலைமுதலியவை விழுங்கப்பட்டதாகக்காண்பிக்கப்படும் பொழுது அதை வெறும் மாயை என்றே உலகத்தார் வியவஹரிப்பதை நாம்காண்கின்றோம். ஆகவே மாயை யென்பதை ஆச்சரிய ரூபமாயிருத்தலெனச் சொல்லுவதில் யாதும் தடையில்லை. (மேலும்)எவ்வித இடைவெளியுமில்லாத கண்ணாடியிற்றோன்றும் விசாலமான ஆகாசப்பிரதிபிம்பமானது எவ்விதம் ஆச்சரிய ரூபமானதோ அவ்விதமே, எவ்வித அவயவங்களுமற்றதும், ஸத்ய, க்ஞானானந்தைகரஸமுமான பிரும்மத்தினிடத்தில் எவ்விதத்திலுமிருப்பதற்கு முடியாத ஆகாசத்தின் தோற்றமானது ஆச்சரியரூபமான தாகவே தானாகும். இந்திரஜாலம் செய்பவனைத்தவிர்த்து மற்றவனாற்செய்வதற்கியலாத வீடு, மலைமுதலிய வற்றின் விழுங்குதலை மற்றவர்கள் ஆச்சரியரூபமென்றே எவ்விதம் சொல்லுகின்றனரோ, இவ்விதமே ஈசுவரனால் ஸிருஷ்டிக்கப்பட்ட ஆகாசாதி பதார்த்தங்கள் வேறான்தகைய ஜீவனாலும் ஸிருஷ்டிக்க முடியாமைபற்றி ஆச்சரியரூபங்களென்றேதான் சொல்லபபடுகின்றன.

ஆகவே ஆகாசாதிகளிலுள்ள அத்தகைய ஆச்சரிய ரூபத்வமானது மாயையின் அம்சமேயாகும். வஸ்துக்களுக்கு அவகாசத்தை (இடைவெளியை) த்தருவதற்கு யோக்கியமான யாதொரு ஸ்வரூபமுண்டோ இது ஆகாசத்தின் சொந்த பாகமாகவாகும். இவ்விதம் சொன்னதிலிருந்து **अस्त्याश्चर्यरूपमवकाशप्रदम्=**, ஆச்சரியரூபமாயும், இடைவெளியைத் தருகின்றதாயும் இருக்கின்றது,, என்ற அனுபவத்தால் ஆகாசமானது பிரும்மாம்சமான ஸத்வத்துடனும், மாயாம்சமான ஆச்சரியரூபத்துடனும் தொடர்ந்தே பிரகாசிக்கின்றதாக நன்கு ஏற்பட்டது. மேலும், அந்த ஆகாசமானது **शब्दगुणकः=** சப்தத்தைக் குணமாகவுடையது. மலையின் குகைமுதலியவற்றில் யாதொரு **प्रतिध्वनिः=**எதிரொலியானது ஏற்படுகின்றதோ அது ஆகாசத்தை விட்டுப் பிரியாதிருத்தலால் ஆகாசகுணமென்றே சொல்லப் படுகின்றது. ஆகவே

இதுவரை சொல்லியபடி சப்தத்தை மட்டும் குணமாக வுடைய தும் இடைவெளியைத் தருவதுமான ஆகாசத்தினுடைய ஸிருஷ் டியில் மாயாவிசிஷ்டப் பிரும்மத்திற்கு காமம், ஸங்கல்பம் இவை கள் மட்டுமே உண்டாகின்றன. அவற்றுள் "ஆகாசத்தைச் சிருஷ்டிக்கப் போகின்றேன்" என்ற இச்சையாதுண்டோ அது வே காமம் எனப்படும். முற்சொல்லிய படிக்குள்ள "ஆகாசமா னது உண்டாகட்டும்" என்ற பாவனையாதுண்டோ அதுவே ஸங்கல்பம் எனப்படும். ஆனால் பிரும்மத்திற்கு காம, ஸங்கற்பத் திற்குரிய மனது இல்லாமைபற்றி மனோவிருத்தி ரூபமான பாவனை சொல்வதற்கிடமில்லை யன்றோ? எனலாம், ஆயினும் அசிந்த்ய சக்திவடிவமான மாயையே காமம், ஸங்கல்பம், ஆகிய இரண்டு வித விருத்திவடிவமாக பரிணமிக்கின்றதெனக் கொள்ளவேண் டும். இவ்விதமே "अपाणिपादो जवनो गृहीता पश्यत्यचक्षुः सशृणो- त्यकर्णः=கையில்லாவிடினும், எதையும் எடுக்கின்றது, காலில்லா விடினும், வேகமாகச்செல்லுகின்றது கண்ணில்லாவிடினும் பார்க் கின்றது, காதில்லாவிடினும் கேட்க்கின்றது" என்றதால் வேறு சுருதியும் இந்திரியமில்லாவிடினும் அசிந்த்ய சக்தியின் வலுவால் பிரும்மத்திற்கு ஸர்வ வியவஹாரத்தையும் சொல்லுகின்றது. ஆகவே மனதில்லாவிடினும் மாயையின் வலுவால் பிரும்மத் திற்கு காமஸங்கல்பங்கள் ஸம்பவிப்பதில் யாதும் தடையில்லை யென்றேற்பட்டது. இதற்கு முந்தின ஸிருஷ்டியில் அனுஷ்டிக் கப்பட்ட ஸர்வப்பிராணிகளின் பயந்தராத கர்மங்கள் பிரளயகா லத்தில் மாயாவிசிஷ்டமான பிரும்மத்தினிடத்தில் இருந்துகொ ண்டு மெள்ளமெள்ள பக்குவங்களாக வாகின்றன. இவ்விதம் எல்லாப்பிராணி கர்மங்களும் பக்குவங்களாகவானதும் அவ ற்றிற்குப் பலானுபவத்தைத் தரவேண்டி மாயாவிசிஷ்டபிரும்ம மானது ஜகத்தை ஸிருஷ்டிக்கத் தொடங்குகின்றது. ஆகவே பிராணிகர்ம பரிபாகத்தை யொட்டி ஆண்டவனுக்கு ஸிருஷ்டிக்க வேண்டுமென்ற இச்சாரூபமான காமமும், ஸிருஷ்டிக்கப்பட வேண்டிய பதார்த்தஸிருஷ்டி விஷயமான ஸங்கல்பமும் உண்டா கின்றதென்றும் ஏற்பட்டது. ஆகவே அவரது இச்சை, ஸங்கல் பம் இவற்றை யனுஸரித்தே ஸிருஷ்டிக்க வேண்டிய பதார்த்தங்

களும் அவ்விதமே உண்டாகின்றன. இவ்விதமே சாந்தோக்கிய சுருதியிலும் பரமாத்மபிரகாணத்தில் " सत्यकाम:, सत्यसंकल्प:= என்றதால் பிரும்மத்திற்கு ஸத்யமான காமமும், ஸத்தியமான ஸங்கல்பமும் சொல்லப் பட்டிருக்கிறது. இவ்விதம் கூறியதி லிருந்து மேன்மேலுள்ள பதார்த்தங்களை எந்தெந்த விதமாக அது ஸங்கல்பிக்கின்றதோ அந்தந்தவிதமாகவே அந்தந்தபதார்த் தங்கள் யாவுமுண்டாகின்றன வென்றேற்பட்டது. இவ்விதமே முதலில் ஸிருஷ்டிக்கப்பட்ட ஆகாசத்துடன் உபஹிதமான (ஸம்பந்தத்தை யடைந்த) மாயாவிசிஷ்ட பிரும்மத்தினிடமிருந்து वायु: संभूत:=வாயுவானது உண்டாயிற்று. மாயை, பிரும்மம், ஆகிய இவ்விரண்டும் ஸர்வத்திற்கும் ஸாதாரண (பொதுவான) காரணமாயிருத்தல்பற்றி அவ்விரண்டிற்கும் உபாதியாயுள்ள ஆகாசத்திற்கு வாயுவைக்குறித்துள்ள அஸாதாரண (தனித்தேற் பட்ட) மான ஸம்பந்தத்தைக்காட்டவே आकाशाद्वायु:=ஆகாசத் தினின்றும் வாயுவானது உண்டாயிற்று என்று உபதேசிக்கப் பட்டது. அந்த வாயுவினுடைய குணமானது அனுஷ்ணசீதரூப மாகும். வஹனம் (சுமத்தல்) வாயுவின் தொழில் (கிருத்யம்) ஆகும்.

காரணதர்மங்களும் அந்தவாயுவில் தொடர்ந்து காணக்கிடக் கின்றன. अस्ति वायु:=வாயுவானது இருக்கின்றது என்றதாற் சொல்லப்படும் ஸத்வமானது பிரும்ம தர்மமாகும். வேறு வஸ் துக்களிடத்தில் காணமுடியாதபடி ஆச்சரியரூபமான யாதொரு சுவபாவம் வாயுவில் காணப்படுகின்றதோ அது மாயையின் தர்ம மாகும். சமுத்திரக் கரை முதலிய விடங்களில் வீசுகின்ற வாயு வினுடைய கோஷம் (ஒலி) யாதுண்டோ, அது ஆகாச தர்மமா கும். இவ்விதமே वायोरग्नि:=முதலிய விடங்களிலும் இசைந்தாற் போல் பொருள் கொள்ளவேண்டும். பாஸ்வரரூபமானது அக் னியின் குணமாகும். ஜ்வலி, அக்னியின் தொழிலாகும். அங் கும் அக்னியில் காணப்படும் ஸத்வம் பிரும்ம தர்மமாகும். வேறு வஸ்துக்களுக்கு நேர்மாறாகவிருத்தல் பற்றி, ஆச்சரியமாத் வம் யாதுண்டோ, அது மாயா தர்மமாகும். ஜ்வலிக்கின்ற அக்னியில், புக்புக் என்ற யாதொரு சப்தமுண்டோ, அது ஆகா

சதர்மமாகும். உஷ்ணஸ்பர்சமானது யாதுண்டோ, அது வாயுவின் தர்மமாகும். அவற்றுள் சப்தம், ஸ்பர்சம், இவைகளில் ஆகாசவாயுக்களில் இருக்கும் சப்தாதிகளுக்கு மாறுதலான தோற்றம் யாதுண்டோ, அதுவும், ஆச்சரிய ஹேதுவாயிருத்தல் பற்றி, மாயையாலேயே ஏற்பட்டதாகும். முற்கூறிய अग्नेराप:=அக்னியினின்றும் ஜலமுண்டாயிற்று. மதுரரஸமானது ஜலத்தின் விசேஷகுணமாகும். காரணதர்மங்களும் ஜலத்தில் தொடர்ந்து பிரகாசிக்கின்றன. आप: सन्ति=ஜலங்களிருக்கின்றன என்ற தோற்றத்தில் ஸத்வம் பிரும்ம தர்மமாகும். அந்த ஜலங்கள் மற்றவைகளுக்கு இல்லாத திரவத்துவத்தினால் ஆச்சரிய ரூபங்களேயாகும். இது மாயாதர்மமாகும். கற்கள் நிறைந்த நதியில் ஓடும்பொழுது "புல் புல்" என யாதொரு சப்தமுண்டாகின்றதோ அது ஆகாசதர்மமாகும். ஸ்பர்சம் சீதளம், ரூபமோ வெளுப்பு, அத்தகைய ஜலத்தினின்றும் अद्भ्य: पृथिवी=பூமியானது உண்டாயிற்று. மணம் அதன் விசேஷகுணமாகும். अस्ति पृथिवी=பூமியானது இருக்கின்றது என்ற விடத்திற்றோன்றும் ஸத்வம், பிரும்மதர்மமாகும். அது மற்றவைகளிடத்திலில்லாத காடின்யத்தினால் ஆச்சரியரூபமாகவே தானிருக்கிறது. இந்த ஆச்சரியமானது மாயாதர்மமாகும். அந்தப் பூமியில் மூர்த்தமான வேறுவஸ்துவின் ஸம்யோக மேற்படுங்கால் "கடகட" வென யாதொரு சப்தமுண்டாகின்றதோ அது ஆகாச தர்மமாகும். ஸ்பர்சமோ கடினமானது, ரூபமோ—நீலம், பீதம் முதலிய அனேக விதமானது. மதுரம் முதலியன, அதன் ரஸமாகும். இவ்விதம் ஆகாசம் முதல், பிருதிவீ ஈறாகவுள்ள, ஐந்து பூதங்களின் ஸிருஷ்டியானது சொல்லப்பட்டது. ஓஷதி, அன்னம், புருஷன் இவைகள் பௌதிகங்களாகும். பஞ்சபூத ஸிருஷ்டி சொன்னதிலிருந்தே பௌதிகங்களான இவைகளின் ஸிருஷ்டியும் சொல்லப்பட்டதாகவே கொள்ளக் கூடுமாயினும், மலை, நதீ, ஸமுத்திரம் முதலிய எல்லாவிதமான பௌதிக பதார்த்தங்களின் ஸிருஷ்டியும், இவ்விதமே தானேற்பட்ட தென்பதைக் காட்ட வேண்டி உபலக்ஷண முறையில் ஓஷதி, அன்ன, புருஷ ஸிருஷ்டி களுப தேசிக்கப்பட்டன வென்று கொள்ள வேண்டும். ஸ்திரீ

புருஷர்களாகிற மிதுனங்களினின்று முண்டான பசுமுதலியவற்றின் தேஹங்கள்யாவும் அன்னமயங்களாகவே தானுகுமாயினும், க்ஞான கர்மங்களில் அதிகாரமிருத்தல் காரணமாய், அவற்றுள் மனுஷ்யதேஹத்திற்கு முதன்மையை கூறவெண்ணங்கொண்டு மனுஷிய தேஹஸிருஷ்டியானது இங்கு சொல்லப்பட்டிருக்கிறது என்று கொள்ளவேண்டும்.

இதுவரை கூறியபடி மாயாதிஷ்டானமாயிருப்பதுபற்றி மாயியான ஈசுவரனே ஜகத்தின் ஸிருஷ்டா வென்பது "**अस्मान्मायी सृजते विश्वमेतत्तस्मिंश्चान्यो मायया सन्निरुद्धः** என்றதால் சுவேதாசுவதர உபனிடதத்திலும் தெளிவாய் கூறப்பட்டிருக்கிறது. மேலும், இதுவரை கூறியதிலிருந்து காரணத்திற்கு விலக்காய் காரியமானது இல்லாமைபற்றி ஸர்வகாரணமாகவான பிரும்மத்திற்கு தேசகால ஸர்வவஸ்துவாத்மகத்துவ மேற்படுவதிலிருந்து அனந்தத்துவமானது நிலைநாட்டப்பட்டதாக வாகிவிடுகின்றது. அந்த பிரும்மத்திற்கு **सत्यं ज्ञानमनन्तं**=என்றதாற் பிரதிக்ஞாதமான அனந்தத்வத்தை ஸமர்த்தனம் செய்து **यो वेद निहितं गुहायां**=என்றதாற் சொல்லப்பட்ட குஹா நிஹிதத்துவத்தை ஸமர்த்திப்பதற்கு வேண்டி அன்ன மயாதி ஆனந்த மயாந்தமான ஐந்து கோசங்களினின்றும் பிரும்ம தத்துவத்தை பிரித்து உபதேசிக்க வேண்டி முதலில் அன்னமய கோசத்தை சுருதி காண்பிக்கிறது

**(मन्त्रः) स वा एष पुरुषोऽन्नरसमयः ॥**

எந்தப்புருஷன் (அதாவது: தலை, கை முதலியனவமைந்த ஆகிருதிவிசேஷமானது என்றுபொருள்.) ஸிருஷ்டியின் ஆதியில் ஆகாசாதிக் கிரமமாய் உண்டானுனே **सः एव**=அவனே **एषः**= இந்த நமது தேஹமாக அனுபவிக்கப்படுகின்றது. ஆனால் இந்தத் தேஹமானது ஸிருஷ்டியின் ஆதியில் உண்டானதில்லையாயினும், ஆகாசாதி பரம்பரையாகக் கிடைத்த அன்ன காரியமாக இருப்பதன்மூலம் ஸிருஷ்டியிலுண்டான சரீரத்தின் வகுப்பிற் சேர்ந்திருப்பதால் " அதுவேதான் இது " என்று சொல்லப்பட்டது. அந்தக் கருத்தை வெளியிட வேண்டியே **अन्नरसमयः**=என்ற சப்தம் உபயோகிக்கப்பட்டது மதுரம், (தித்திப்பு) புளிப்பு, உப்பு,

கசப்பு, உறைப்பு, கஷாயம் ஆகிய இவை ஆறும் அன்னத்தின் ரஸமாகும். அத்தகைய அன்னத்தின் விகாரம் எதுவோ அது அன்னரஸமயம் எனப்படும். மேலும், மாதாபிதிருக்களால் புக்தமான அன்னரஸமானது அவர்களின் சரீரத்தில், தோல், ரக்தம், மாம்ஸம், மேதஸ், எலும்பு, மஜ்ஜை, சுக்லம் என்றவெழுதாது ரூபமாக முறையே மாருதலை யடைந்து கர்ப்பாசயத்தில் பிரவேசித்து திரும்பவும் தேஹரூபமாய் விகாரத்தையடைகின்றது. இவ்விதமே கர்ப்போபநிஷத்திலும் षड्विधो रसो, रसाच्छोणितं, शोणितान्मांसं, मांसान्मेदो, मेदसो मज्जा, मज्जाया: शुक्रं, शुक्रशोणितसंयोगादावर्तते गर्भ: । என்றதால் தெளிவாயுபதேசிக்கப் பட்டிருக்கிறது. அன்னரஸமயமான இந்த ஸ்தூலதேஹத்தால் அதற்குள்ளிருக்கும் சூக்ஷ்மதேஹமும் சொல்லப்பட்டதாய்க் கொள்ளவேண்டும். ஏனெனில், அந்த சூக்ஷ்மசரீரமும் அபஞ்சீகிருத பூதகாரியமாயிருத்தலும், உட்கொள்ளப்பட்ட அன்னாதிகளாலேயே போஷிக்கப்படுவதா யிருத்தலுமே அதன் காரணமாகும். சூக்ஷ்மசரீரமும் பூதகாரியந்தான் என்பதை ஆசாரிய பாதாளவர்களும் अपञ्चीकृतपञ्चमहाभूतानि तत्कार्यं च सप्तदशकं लिंगं भौतिकम् என்றதாலுபதேசித்திருக்கின்றனர். சூக்ஷ்ம சரீரமானது அன்னாதிகளால் போஷிக்கப்படுகின்றதென்பது अन्नमयं हि सोम्य मन: आपो मय: प्राण: तेजोमयी वाक् என்றதால் சாந்தோக்கியத்திலு முபதேசிக்கப் பட்டிருக்கிறது. மேலும், உபவாஸத்தால் சக்திக்குறைவை அடைந்த மனிதர்களின் மனதிற்கு பாரணை செய்தபிறகு திருப்தியுண்டாவதை நாமனுபவத்திற்காண் கின்றோம். இவ்விதமே வழிநடந்து களைத்தவனுடைய பிராணனானது ஜலம்குடித்தபிறகு திருப்தியடைவதை லோகத்திற் காண்கின்றோம். இவ்விதமே காயகர்கள் நெய், தைலம் முதலிய தைஜஸ திரவிய ஸேவையால் கண்டசுத்தியைச் செய்துகொண்டு வாக்கைப் போஷித்துக்கொள்ளுவதும் அனுபவத்திற் கண்டவிஷயமே யாகும். ஆகவே இம்மாதிரியான மனம், ப்ராணன், வாகாதி ரூபமான லிங்க(சூக்ஷ்ம) தேஹத்துடன் கூடிய அன்னகாரியமான யாதொரு ஸ்தூலதேஹமானது நம்மாற் காணப்படுகின்றதோ இதுவே ஆத்யாத்மிகம் எனப்படும், இதைக் கொண்டு விராட்புருஷ தேஹமானதும்

ஆகின்றதவிசுரூபமானது மான பிரும்மாண்டரூபமானது என்றறிந்தறியத் தக்கது. இத்தகைய அன்னமய கோசமானது கிளையின் நுனி சந்திரனைக் காண்பிப்பதுபோல பிரும்மதத்துவத்தைப் போதிப்பதற்கு வேண்டி இங்கு சொல்லப்பட்டிருக்கிறது. இந்த அன்னமயகோசத்திற்கு ஐந்து அவயவங்களை உபாஸனைக்கு வேண்டி சுருதியானது

(मन्त्रः) तस्येदमेव शिरः..............प्रतिष्ठा ॥

என்றதாலுபதேசிக்கிறது. तस्य=உபாஸிக்கத்தகுந்த அன்னமயத்திற்கு इदमेव=கழுத்திற்கு மேல் பிரசித்தமாகக் காணப்படும் தலையே शिरः=தலையாகின்றது. இவ்விஷயத்தில் கற்பித்துக்கூறவேண்டுவது எதுவுமில்லை. अयम्=வலதுபக்கத்துக்கையே दक्षिणः पक्षः=வலதுபக்கத்து இறக்கையாகும். अयम्=இடதுபக்கத்துக் கையே उत्तरः पक्षः=இடதுபக்கத்து இறக்கையாகும். ஆகவே இவ்விரண்டு கைகளையுமே இறக்கைகளாக த்தியானிக்க வேண்டும் என்றேற்பட்டது. अयम्=கழுத்துக்குக்கீழும் உந்திக்கு மேலும், காணப்படும் சரீரபாகமானது आत्मा=ஜீவனிருப்பதற்கு யோக்கியமான தேசமாகிய மத்யதேஹமாகிறது इदम्=உந்திக்குக் கீழாகவுள்ள அங்கமானது पुच्छम्=பக்ஷிவடிவமான அன்னமய ஆத்மாவுக்கு புச்ச (வால்) மாகவும் प्रतिष्ठा=சரீரத்திற்கு ஆதாரமாகவும் ஆகிறது. மனுஷ்ய சரீரத்திலுள்ள நாபி (உந்தி) க்குக் கீழுள்ளபாகமானது நாபிக்கு மேலுள்ள பாகத்திற்கு ஆதாரமாக ஆகின்றதென்பது மிக்கப் பிரசித்தமாகையால் இவ்விதம் கூறப்பட்டது. உபாஸிப்பதற்கு வேண்டியே புச்சமானது ஆதாரமாகச் சொல்லப்பட்டதெனக் கொள்ளல் வேண்டும். ஆகவே அன்னமயகோசத்திற்கு உபாஸிக்கத் தகுந்த ஆகாரமானது இன்னதென இதுவரை கூறியதினின்றும் ஏற்பட்டது.

இனி இந்த அன்னமயகோசத்திற்கும் பிராம்மணவாக்கியத்தினற் சொல்லப்பட்ட அதன் உபாஸனத்திற்குமுள்ள ஒற்றுமையைக் காட்டி முன்சொன்னதைத் திருடப்படுத்த வேண்டி ஒரு மந்திரமானது சொல்லப்படுகின்றது.

(मन्त्रः) तदप्येष श्लोको भवति ॥

(ப—ரை) तत्= பிராம்மணவாகியத்திற் சொல்லப்பட்ட அன்னமய கோசவிஷயத்தில் एष:=ஒற்றுமைவாய்ந்த இந்த श्लोक:=மந்திரமானது भवति=இருக்கின்றது. (எ—று)

வித்யாரண்ய தீபிகைபிரகாரம் இரண்டாவதனுவாகார்த்தம் முற்றிற்று.

சங்கரபாஷ்யப்படி இரண்டாவது அனுவாகம்.

(मन्त्र:)अन्नाद्वै प्रजा: प्रजायन्ते। या: काश्च पृथिवीꣳश्रिता:। अथो अन्नेनैव जीवन्ति। अथैनदपियन्त्यन्तत:। अन्नꣳहि भूतानां ज्येष्ठम्। तस्मात्सर्वौषधमुच्यते। सर्वं वै तेऽन्नमाप्नुवन्ति। येऽन्नं ब्रह्मोपासते। अन्नꣳहिभूतानां ज्येष्ठम्। तस्मात्सर्वौषधमुच्यते। अन्नाद्भूतानि जायन्ते। जातान्यन्नेन वर्धन्ते। अद्यतेऽत्ति च भूतानि। तस्मादन्नं तदुच्यत इति। तस्माद्वा एतस्मादन्नरसमयात्। अन्योऽन्तर आत्मा प्राणमय:। तेनैष पूर्ण: स वा एष पुरुष विध एव। तस्य पुरुषविधताम्। अन्वयं पुरुषविध:। तस्य प्राण एव शिर:। व्यानो दक्षिण: पक्ष:। अपान उत्तर: पक्ष:। आकाश आत्मा। पृथिवी पुच्छं प्रतिष्ठा। तदप्येष श्लोको भवति ॥ १ ॥

(ப—ரை) अन्नाद्वै=ரஸாதி வஸ்துவாகப் பரிணமித்தை (மாறுதலை) அடைந்த அன்னத்தினின்றுமே, पृथिवीम्=பூமியை श्रिता:= ஆசிரயித்தவைகளான या: काश्च प्रजा:=யாதானும் சிலப்பிராணிகளுண்டோ (ता: सर्वा:) प्रजा:=அந்த எல்லாப்பிராணிகளும் प्रजायन्ते=உண்டாகின்றன. अथो=மேலும்अन्नेनैव=அன்னத்தினாலேயே जीवन्ति=ஜீவிக்கின்றன. அதாவது, பிராணதாரணம் செய்கின்றன. விருத்தியை யடைகின்றன, என்று பொருள். अथ=மேலும், एनत्=இந்த அன்னத்தைக்குறித்தே, அதாவது: இந்த அன்னத்தினிடத்திலேயே என்று பொருள். अन्तत:=முடிவில் अपियन्ति = லயமடைகின்றன. அதாவது: பிராணதாரண ரூபமான விருத்தியின் முடிவில் அன்னத்திலேயே பிராணிகள் லயமடைகின்றன என்று பொருள். भूतानां=பிராணிகளுக்கு अन्नꣳ

हि=அன்னமன்றோ ज्येष्ठम्=முதலிலுண்டானது. அன்னமயாதிக ளான வேறு பிராணிகளுக்கு அன்னமானது காரணமாகின்றது. ஆனதுபற்றியே எல்லாப் பிரஜைகளும் அன்னத்தினின்று முண்டானவைகளாகவும், அன்னத்தினாலேயே பிராணதாரணஞ் செய்கின்றவைகளாகவும், அன்னத்திலேயே லயமடைகின்ற (ஒடுங்குகின்ற) வைகளாகவும் ஆகின்றன. तस्मात् = ஆனதுபற்றியே सर्वौषधम्=எல்லாப்பிராணிகளுடையவும்வயிற்றிலுள்ள- பசியாகிற வியாதியை நிவிருத்தி செய்வதாக அன்னமானது उच्यते=சொல்லப்படுகின்றது. இனி அன்னத்தைப் பிரும்மமாக உபாஸிப்பவனுக்கு வரும் பலன் சொல்லப்படுகின்றது. ये=எவர்கள் अन्नम्= அன்னத்தை ब्रह्म=பிரும்மமாக उपासते=உபாஸிக்கின்றனரோ ते= அவர்கள் सर्वं अन्नम्=எல்லா அன்னத்தையுமே, आप्नुवन्ति=அடைகின்றனர். "அன்னத்தினின்றுண்டானவனுகவும், அன்னத்தினால் விருத்தியை யடைகின்றவனுகவும், முடிவில் அன்னத்தில் லயமடைகின்றவனுகவும் நான் இருப்பதால் நான் அன்னப்பிரும்மமாகவே இருக்கிறேன்" என்று அன்னப் பிரும்மோபாஸனம் செய்ய வேண்டுமென்று ஏற்பட்டது. அன்னப் பிரும்மோபாஸனத்தால் ஸர்வ அன்னப்ராப்தி ரூபமான பலன் எவ்விதமுண்டாகும் என்பது இதனாலுபதேசிக்கப் படுகின்றது. अन्नम्=அன்னமானது हि=யாது காரணத்தால் भूतानाम्=பிராணிகளுக்கு ज्येष्ठम्= முதலிலுண்டாயிற்றோ तस्मात्=அக்காரணம்பற்றி सर्वौषधम्=எல்லாப் பிராணிகளின் பசியையும் தணிப்பதாக, उच्यते=சொல்லப்படுகிறது. ஆனது பற்றியே அன்னப் பிரும்மோபாஸகர்களுக்கு ஸர்வான்னப்பிராப்தி ரூபமான பலன் சொன்னது பொருத்தமானதாகவே ஆகிவிட்டது. சொன்னதை முடிக்கவேண்டி अन्नाद्भूतानि जायन्ते, जातान्यन्नेन वर्द्धन्ते=எனத்திரும்பவும் சொல்லப்பட்டிருக்கிறது. இனி அன்னசப்த நிர்வசனம் (பிரித்துப் பொருள் கூறல்) செய்யப்படுகின்றது. अद्यते=பூதங்களால் சாப்பிடப்படுவதாகவும், भूतानि=பிராணிகளை, अत्ति च=சாப்பிடுவதாகவும் (यस्मात्=யாதுகாரணத்தா லிருக்கின்றதோ) तस्मात्=அக்காரணம்பற்றி तत्=அது अन्नम्=அன்னமாக उच्यते=சொல்லப்படுகிறது. इति=இவ்விதம் முதலாவதான அன்னமயகோசம் முடிவுபெறுகின்றது.

அன்னமய கோசந் தொடங்கி ஆனந்தமயாந்தமான ஆத்மாக்களைக் காட்டிலும் மிக்க உள்ளிருக்கின்ற பிரும்மத்தை வித்யையினுல் அவித்யாகிருதமான பஞ்சகோசத்தையும் நீக்கி பிரத்யகாத்மாவாகக் காட்டவெண்ணங்கொண்டு சாஸ்திரமானது அனேகம் உமியாகிற தோல்நிறைந்த கோதுமை தான்யத்திலுள்ள தோல்(உமி)கள் ஒவ்வொன்றையும் நீக்கி எல்லாவற்றிற்கும் உள்ளிருக்கும் அதன் அரிசியைக்காட்டுவதுபோல உபதேசிக்கத் தொடங்குகிறது. तस्मात् एतस्मात्=அந்த இந்த முற்கூறிய अन्नरसमयात्=அன்ன ரஸமயனுன ஆத்மாவைக் காட்டிலும் अन्यः=வேறனதாயும், अन्तरः=இதற்கு முள்ளிருக்கின்றதும், आत्मा=முற்கூறிய அன்னமய பிண்டம் போலவே ஆத்மாவாகச் சொல்லப்படுவதுமாயுள்ளது प्राणमयः=பிராணமயன் என்ற கோசமாகும். அதாவது: பிராணன் என்றால் வாயு என்று பொருள், मयः=அதிகமான தென்றுபொருள். ஆகவே பிராணமய கோசமானது வாயுவையே அதிகமாகவுடையது என்றேற்பட்டது. तेन=அந்தப்பிராணமயனுன ஆத்மாவினுல் एषः=இந்த அன்னமய ஆத்மாவானது पूर्णः=காற்றினுல் துருத்திபோல நிறைந்திருக்கின்றது. स वा एषः=அந்தப் பிராணமயனுன ஆத்மாவும் पुरुषविध एव=புருஷாகாரனுகவே தானிருக்கிறுன். तस्य=அன்னமயாத்மாவினுடைய पुरुषविधतामनु= புருஷவடிவத்தை யொட்டியே अयम्=இந்தப் பிராணமயனும் पुरुषविधः=புருஷவடிவமுள்ளவனுகின்றுன். ஒருமண் மூசையில் காய்ச்சிவிடப்பட்ட தாம்பிரமானது மூசையிலுள்ள மண்ணில் அமைந்துள்ள வடிவத்தை யொட்டிய வடிவமுள்ளதாகவே எவ்விதமாகுமோ, அவ்விதமே, இங்கும் அன்னமயகோசத்தின்புருஷாகாரத்வத்தையொட்டியேபிராணமயகோசத்தின்புருஷாகாரத்வமுண்டாவதாகக்கொள்ளவேண்டும். என்றுகருத்து. இவ்விதமே மேன்மேலுள்ள ஒவ்வொரு கோசமும் அததற்கு முன்முன்னுள்ள ஆத்மாவின் புருஷாகாரத்தை யொட்டியே தானும் புருஷாகாரமுள்ளதாக ஆகும் என்று சொன்னதாக மேலுள்ள விடங்களிலும் கண்டு கொள்ளவேண்டும். பிராணமயனுடைய புருஷாகாரத்தன்மையானது எவ்விதமென்பது இனி உபதேசிக்கப் படுகின்றது. तस्य वायुविकार

ஞன அந்தப் பிராணமயனுக்கு प्राणव=மூக்கினின்றும் வெளி வரும் வாயுவே शिर:=தலையாகவாகிறது. இந்தப் பிராணமயாதி கோசங்களில் சிரஸ்,பக்ஷ புச்சாதி கற்பனைகளை உபாஸனத்திற்கு வேண்டி சாஸ்திரம் ஒருவாறு கல்பித்திருப்பதாகக் கொள்ளல் வேண்டும். व्यान:=சரீரம் முழுதும் நிறைந்து நிற்கும் வாயுவின் விருத்தியானது दक्षिण: पक्ष:=வலது பக்கத்து இரக்கையாக வா கின்றது. अपान:=உள்ளில் நிறைந்துள்ள அசுத்தங்களை வெளிக் கொண்டுதள்ளும் பிராண விருத்தியானது उत्तर: पक्ष:= இடது ப்க்கத்து இரக்கையாகும். आकाश:=உதராகாசத்திலிருப்பதுபற்றி ஆகாசசப்தத்தாற்சொல்லப்படுவதும் உட்கொண்ட அன்னபானு திகளை ரக்தமாக்குவதுமான வாயுவின் விருத்தியானஸமானவிருத் தியானது आत्मा=ஆத்மாபோலவே எல்லாவித பிராணவிருத்திக ளுக்கும்தான் ஆதாரமாக இருந்து கொண்டு பிராணமயகோசத் திற்கு நடுவுடலாக ஆகின்றது. पृथिवी=பிருதிவிக்கு அபிமானி தேவதையானது पुच्छम्=புச்சம்போல प्रतिष्ठा=நிலைத்து நிற்றலுக் குக் காரணமாகின்றது. இல்லையேல் உதானவிருத்தியால் சரீரம் உயரக்கிளம்பிவோ, கனமாயிருப்பதால் பூமியில் விழுந்து விட வோ கூடும் என்று கொள்ளவேண்டும். तत्=பிராணமயாத்மகோச விஷயத்தில் एष: श्लोक:=பின்வரும் மந்திரமும் भवति=இருக்கி றது. (எ-று)

## வித்தியாரண்யதீபிகை.

## (मन्त्र:) अन्नाद्वै प्रजा: प्रजायन्ते। +तस्मादन्नं तदुच्यत इति॥

(ப-ரை) या: काश्च प्रजा:=ஜராயுஜாண்டஜாதி தேஹரூபங் களான யாதொரு பிராணிகள் पृथिवीं श्रिता:=பூமியை யாசிரயித் துக் காணப்படுகின்றனவோ (ता: सर्वा:= அவைகள் யாவும்) अन्नाद्वै=அன்னத்தினின்றுமே प्रजायन्ते=உண்டாகின்றன. अन्नेनैव जीवन्ति= அன்னத்தினாலேயே பிராணதாரணஞ் செய்கின்றன. अथ=ஜீவனத்திற்குப், பிறகு, अन्तत:=ஆயுளின் முடிவில் एनत्= இந்த அன்னத்தை, अपि यन्ति=அனுஸரித்து லயத்தையடைகின் றன. மான்முதலியவற்றை புலிமுதலியன தின்பதால் மான்முத லிய அன்னமயதேஹத்திற்கு புலிமுதலிய அன்னமயதேஹத்தில்

அதாவது: அன்னத்தில் லயமேற்படுவதாகக் கொள்ளவேண்டும். **हि**=யாதுகாரணத்தால் **अन्नम्**=அன்னமானது **भूतानाम्**=பிராணிகளுக்கு **ज्येष्ठम्**=காரணமாகின்றதோ **तस्मात्**=அந்தக் காரணத்தினால் **सर्वौषधम्**=எல்லாப்பிராணிகளுக்கும் பசியாகிற ரோகத்தை நிவிருத்திசெய்வதாக **उच्यते**=சொல்லப்படுகிறது. பசியாகிறரோகமானது நிவிருத்தியடைந்ததும் ஜீவனரூபமான ஸ்திதியேற்படுவதற்குக் காரணமேற்படுகிறது. ஆகவே ஸ்திதிஹேதுத்வம் சித்திக்கவேண்டி பசியை நிவிருத்திசெய்வதாகச் சொன்னது பொருத்தமுள்ளதாகவே ஆகிறது. ஆகவே உத்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்குக் காரண மாகும் முறைசொன்னதாக ஏற்படுவதினின்றும் அன்னமயகோசம் விரித்துக் கூறப்பட்டதாக ஏற்பட்டுவிட்டது.

இனி **सर्वं वै तेऽन्नमाप्नुवन्ति** என்று தொடங்கி அன்னோபாஸனமும் அதன் பலனு முபதேசிக்கப் படுகின்றது. **ये**=எந்தப் புருஷர்கள் **अन्नं ब्रह्मोपासते**=அன்னத்தை பிரும்மமாக உபாஸிக்கின்றனரோ, அதாவது:—அன்னமாகிற பிரதீகத்தில் (அவயவத்தில்) பிரும்மதிருஷ்டியைச் செய்கின்றனரோ, (பிரும்மமாகத்தியானிக்கப்பட்டதினின்றும் ஓர் வகை ஸம்ஸ்காரத்தை யடைந்த அன்னமானது தேஹாகாரமாக பரிணமத்தை யடைந்ததாய் சிரஸ் முதல் புச்சம் முடியவுள்ள அவயவங்களுடன் கூடியதாக இருக்கின்றதென தியானிக்கின்றனரோ) **ते**=அவ்விதம் தியானஞ் செய்கின்றவர்கள் **सर्वं वै अन्नम्**=பக்ஷ்ய, போஜ்ய, லேஹ்ய, சோஷ்ய ரூபமான அன்னத்தை **आप्नुवन्ति**=அடைகின்றனர். அல்லது ஆகாசாதி பரம்பரையாக பிரும்மத்தினிட மிருந்துண்டான எந்த அன்னமானது ஆத்யாத்மிக மானுஷதேஹ ரூபமாகவும், ஆதிதைவிக விராட்ரூபமாகவும், இருந்து வருகின்றதோ, அத்தகைய அன்னோபாதியுடன் கூடின பிரும்மத்தை உபாஸிக்கின்ற புருஷர்கள் ஸர்வாத்மகமான விராட்ரூபத்தை அடைந்து பிரும்மாதிஸ்தம்பாந்தமான எல்லாப்பிராணிகளுக்கும் எந்தெந்த அன்னமானது உசிதமாகவாகுமோ அந்தந்த அன்னம் யாவையும் அடைகின்றனர் என்றும் கருத்துக் கொள்ளலாம். இந்த விடத்தில் **अन्नं हि भूतानां ज्येष्ठम्**=என் இரண்டு தடவை படிக்கப்படுகிற

து. அவற்றுள் முதன் முதலில் புபுத்ஸுவின் அறிவிற்கு சாதனமான கோசத்தைப் பிரதிபாதனஞ் செய்யவேண்டி அன்னமானது பிராணிகளுக்குக் காரணமாக வாகின்றது என்று உபதேசிக்கப் பட்டது. இரண்டாவதாகக் கூறிய இந்த விடத்தில் உபாஸ்யமான அன்னமயவஸ்துவைப் புகழவேண்டியே திரும்பவும் சொல்லப்பட்டது. அன்னமானது நமது தேஹம் முதல், விராட் தேஹம்வரையுள்ள பிராணி தேஹங்களுக்கு யாதுகாரணத்தால் அதிசயமான காரணமாக வாகின்றதோ, அக்காரணம்பற்றி ஸமஸ்தமான ஸம்ஸார வியாதியையும் நிவிருத்தி செய்வதாகவும் ஆகின்றது. இங்குகூறிய அன்னமய பிரும்மோபாஸனமானது விராட் பிராப்தி வாயிலாக கிரமமுக்திக்கு ஹேதுவாக ஆகின்றதன்றோ! இதனின்றும் அன்னமானது எல்லாப்பிராணி தேஹங்களுக்கும் உத்பத்தி, அபிவிருத்தி, இவற்றிற்கு ஹேதுவாக வாவதிலிருந்து அன்னோபாஸனம் அவசியமானது என்றேற்பட்டது.

இனி அன்ன=சப்தார்த்தத்தைக் கவனித்தாலுமே அதற்குஸர்வதேஹ காரணமாயிருக்கும் தன்மை யேற்படுவதிலிருந்து அது பிரசஸ்த (மேன்மையுள்ளது) மென்றும், ஆனதுபற்றியே அதன் உபாஸனம் அவசியமென்றும் ஏற்படும் என்பதைக்காட்டவேண்டி **அத்யதே+இதி**=என்ற பாகம் தொடங்கப்படுகின்றது. **அத்யதே இத்யன்னம்**= எல்லாப் பிராணிகளாலும் ஜீவனத்திற்குவேண்டி உட்கொள்ளப்படுவதுபற்றி அன்னமென்று சொல்லப்படுகின்றது. **அத்தி ச பூதானி**=எல்லாப்பிராணிகளேயும் பக்ஷிப்பது பற்றியும் அன்னமென்று சொல்லப்படும். உலகில் அன்னரஸத்தின் வைஷம்யங் காரணமாயுண்டான ரோகாதிகளால் எல்லா தேஹங்களும் மரணமடைகின்றன வென்பது பிரஸித்தமானதன்றோ! இங்கு **இதி**=என்ற சப்தமானது உதாஹரிக்கப்பட்ட அன்னமய கோசத்தின் முடிவையும், மந்திரத்தின் முடிவையும் குறிக்கும். மேலும், எந்தமனிதன் குஹாநிஹிதமான பிரும்மதத்துவத்தை அறிய விரும்புவானோ, அவனைக்குறித்து பிரும்மபோத(க்ஞான)த்திற்கு துவாரபூதமான அன்னமயகோசமானது சொல்லப்பட்டது. அதாவது: புத்திர, மித்ர,களத்திர,கிருஹ,க்ஷேத்திராதிகளான பாஹ்ய (சரீரத்திற்கு வெளியிலுள்ள)மான விஷயாஸக்தியைத்தடுத்து தேஹமாத்திரத்

தில் அந்த ஆஸக்தியை நிற்கும்படி செய்கின்றதுபற்றி அன்னமய கோசமானது பிரும்மக்ஞானத்திற்கு துவாரபூதமாக ஆகின்ற தென்பதில் யாதும் தடையில்லை. இதே அபிப்பிராயமானது स य एवंवित्। अस्माल्लोकात्प्रेत्य। एतमन्नमयमात्मानमुपसंक्रामति। என்றதால் தெளிவுபடுத்தப் படப்போகின்றது. எவனொருவன் வெளியிலுள்ள விஷயங்களிலுண்டான ஆஸக்தி (வாஸனை) யின் தார்ட்யத்தினால் ஒருதடவை உபதேசித்த மாத்திரத்தினாலேயே அன்னமயாத்மா வினிடத்தில் நிலைபெறுகின்றானில்லையோ, அவனுக்கு அன்னமயாத்மாவினிடத்தில் நிலையேற்பட வேண்டியே அன்னமயோபாஸனம் சொல்லப்பட்டது. இந்த உபாஸகன் இடைவிடாமல் அன்னமயாத்மாவை உபாஸிப்பவனாய் வெளியிலுள்ள விஷயங்களினின்றும் விலகி அன்னமயத்தில் நிலைபெற்றவனாக ஆகின்றான். இவ்வித முபாஸிப்பவருள் எவனாவதொரு அற்பாயுளுள்ள உபாஸகன் மேலுள்ள பிராணமயாதி விவேகத்தை யடையாமல் பிரும்ம தத்துவ போதத்தின் ஸம்பூர்த்தியை யடையாதவனாய் அன்னமயோபாஸனஞ் செய்யும் பொழுதே மரணத்தை யடைவனோ, அப்பொழுது அவனுக்கு முன் சொன்னபடி ஸர்வான்னப்பிராப்தி உண்டாகின்றது. இதே அபிப்பிராயத்தை மனதிற்கொண்டே

प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते॥

என்றதால் கீதாசாரியனு முபதேசித்திருக்கிறார். ஆகவே விஷயத்திலுள்ள பற்றுதலை விலக்கவேண்டி அன்னமயகோசத்தை யுபதேசித்து, இடையில் அன்னமய கோசோபாஸனமும், உபாஸனத்தின் பலனும் உபதேசிக்கப்பட்டது. இனி, விஷயங்களினின்றும் விலகினவனுக்கு அன்னமய கோசத்தையும் விட ஆந்தர பிரவேசம் ஏற்படவேண்டி பிராணமயகோசம் உபதேசிக்கப் படுகின்றது.

**(मन्त्रः) तस्माद्वा एतस्मादन्नरसमयात्........पूर्णः॥**

(பதார்) (यः) யாதொருவனான அந்தப் பரமாத்ம வஸ்துவானது ஆகாசாதிக்கிரமமாக அன்னமயனாயிருக்குமவை யடைந்திருப்

பதாக முன்னர் பிராம்மணவாக்கியத்தா லுபதேசிக்கப்பட்டதோ, तस्मात्=பிராம்மணவாக்கியத்தாற் சொல்லப்பட்டதாகவே யிருக்கிற एतस्मात्="நான்மனுஷ்யன்" என அநுபவிக்கப்படுகின்ற அன்னமயாத்மாவைக் காட்டிலும் अन्यः=வேறாயும், अन्तरः= அன்ன மயனுக்கு முள்ளிருக்கின்றவனாயும் प्राणमयः आत्मा=பிராணமயனான ஆத்மாவானவன் இருக்கிறான். तेन=அந்தப் பிராணமயனால், एषः=இந்த அன்னமயனானவன் पूर्णः=நிறைவு பெற்றிருக்கிறான். தேஹத்திற்குள், கால் முதல் தலைவரை, பிராணமயன் நிறைந்து நிற்கின்றான் என்று பொருள். லிங்கசரீரத்தில் ஞானசக்தி யென்றும் கிரியாசக்தி என்றும் இரு சக்திகளிருக்கின்றன. அவ்விரு சக்திகளுள் கிரியாசக்தியின் காரியமாக பிராணன் என்றதொரு பதார்த்தமிருக்கின்றது. அந்தப் பிராணனுடைய விகாரமான ஐந்து விருத்திகளின் ஸமுதாய (கூட்டமே) பிராணமயன் எனப்படும். ப்ராண, அபான, வியான, உதான, ஸமானன் என்ற பெயருள்ளபிராணனின் வியாபாரங்களே விருத்திகள் எனப்படும். அந்த ஐந்து விருத்திகளும் ஹிருதயம் முதலிய விடங்களில் நடைபெறுகின்றன. அவையாவன—ஹிருதயத்தில் பிராணவிருத்தியும், குதத்தில் அபான விருத்தியும், நாபியில் ஸமானவிருத்தியும், கண்டதேசத்தில் உதானவிருத்தியும், சரீரம் முழுதிலும் வியானவிருத்தியுமாக நிகழ்கின்றன. ஆகவே அந்த இந்த விருத்திஸமூஹ ரூபமான பிராணமயனை ஆத்மாவினிடத்தில் ஆரோபணஞ் செய்திருப்பதால் "நான் பிராணனுள்ளவனாகின்றேன்" என உச்வாஸ, நிச்வாஸ கர்த்தாவாக இருக்கும் தன்மையை யொட்டியும், "நான்" என்றதோற்றத்தில்விஷயமாவதை யொட்டியும் ஆத்மாவாகவே நாம் எண்ணுகிறோம். இங்கு ஒன்றை முக்கியமாய் கவனிக்க வேண்டும். அதாவது—வெளியிலுள்ள புத்திராதிகளைக் காட்டிலும் உள்ளிருக்கின்ற அன்னமய தேஹமானது ஆத்மாவாக வுபதேசிக்கப்பட்ட பொழுது வெளியிலுள்ள புத்திராதி தேஹத்திலிருந்து வந்த ஆத்மத்வபுத்தியானது எவ்விதம் விலகி விடுகின்றதோ, அவ்விதமே அன்னமய தேஹத்திற்குள்ளிருக்கும் பிராணமயனை ஆத்மாவாக உபதேசித் திருப்பதிலிருந்து அன்னமய தேஹத்திற்றோன்றின முக்கி

யாத்மத்வமும் விலகிவிட்டதாகவே தானாகும்என்பதாம். ஆனால், புத்திராதிகளுக்கும், அன்னமய தேஹத்திற்கும் முக்கியாத்மத்வ மில்லாமையானது ஸமானமாகவே யிருந்த போதிலும் இடையி லுள்ள சிலவேற்றுமையால், புத்திராதிகள் கௌணாத்மா வென்றும், அன்னமயதேஹம் மித்யாத்மா வென்றும் சொல்லப்படுகின்றது. இவ்விதமே, சங்கரபகவத்பாதாசாரியாளவர்களும் **गौण, मिथ्याऽऽत्मनोस्सत्वे पुत्रदेहादिबाधनात्** ॥ என்றதாற் சொல்லியிருக்கின்றனர். (எ—று)

(அ—கை) வெகு ஜன்மப் பழக்கத்தாலுண்டான தேஹாத்ம வாஸனாபலத்தால் பிராணமயாத்மோபதேசஞ் செய்தமாத்திரத்தினால் தேஹத்திலுண்டான ஆத்மபுத்தியை விடுவதற்கு முடியாதவனைக்குறித்து உபாஸனாந்தரத்தை விதிக்கவேண்டி உபாஸ்யஸ்வரூபத்தை சுருதி உபதேசிக்கின்றது—

**(मन्त्रः) स वा एष पुरुषविध एव। तस्य पुरुषविधताम्। अन्वयं पुरुषविधः। तस्य प्राण एव शिरः। व्यानो दक्षिणः पक्षः। अपान उत्तरः पक्षः। आकाश आत्मा। पृथिवी पुच्छं प्रतिष्ठा।**

(ப—ரை) **स वा एषः**=அன்னமய தேஹத்திற்குள்ளிருப்பதாகச் சொல்லப்பட்டவனும், 'ஜீவித்திருக்கிறேன்' என அனுபவிக்கப் படுகின்றவனுமான பிராணமயன் **पुरुषविध एव**=புருஷாகாரமுள்ளவனே. இந்தப் பிராணமயனுக்கு உண்மையில் தலைமுதலிய அவயவங்களில்லை தானாயினும் தலைமுதலிய அவயவங்களை சாஸ்திரம் சொல்லியபடி கற்பித்து உபாஸிக்கவேண்டும் என்றுகருத்து. இவ்விதம் கற்பிப்பது முடியாத காரியம் என்றும் எண்ணுவதற் கில்லை- ஏனெனில்—**तस्य पुरुष विधताम् अन्वयं पुरुषविधः**=முன் சொல்லப்பட்ட அன்னமயனுடைய புருஷாகாரத்வத்தை அனுஸரித்து அன்னமயமான தேஹத்தில் பூர்ணனாயிருக்கின்ற இந்தப் பிராணமயனும் புருஷாகாரமுள்ளவனாகிறான் என்பது பற்றியே என்க. மூசையில் உருக்கி விடப்பட்ட தாம்பிரமானது மண்ணிலமைந்துள்ள ஆகாரமுள்ளதாக ஆவதை அனுபவத்திற் காண்

பதால், இங்கும் அன்னமயதேஹத்தில் கலந்து நிற்கின்ற பிராண மயனுக்கும், அன்னமயனுக்குச் சொல்லிய தலைமுதலிய அவயவ கற்பனை செய்வது சுலபஸாத்தியமானதாகவே ஆகக்கூடும். तस्य=அந்தப் பிராணமயனுக்கு प्राण एव=ஹிருதயத்திற்குமேல் முகநாஸிகை இவ்விடங்களில் ஸஞ்சரிக்கும் பிராணன் என்றவாயு வின் விருத்தி விசேஷமே, शिरः=தலையாகிறது. அதாவது:—பிரா ணனைத் தலையாகச் சிந்திக்கவேண்டும் என்றேற்பட்டது. व्यानः= எல்லாநாடிகளிலும் ஸஞ்சரிக்கின்ற வாயுவின் விருத்திவிசேஷமா னது दक्षिणः पक्षः=வலது பக்கத்து இரக்கை யாகின்றது. अपान उत्तरः पक्षः=ஹிருதயத்திற்குக் கீழாகச் செல்லுகின்ற விருத்திவி சேஷமானது இடதுபக்கத்து இரக்கையாகின்றது. आकाश आत्मा= வயிற்றிற்குள் நாபிக்கு ஸமீபத்திலிருக்கும் தேசமானது ஆகாச சப்தத்தால் சொல்லப்படுகிறது. ஆயினும், அந்த ஆகாசத்திலிருக் கும் ஸமானன் என்ற வாயுவின் விருத்திவிசேஷமானது இங்கு ஆகாசசப்தத்தாற் சொல்லப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும். அந்த ஸமானன் என்ற விருத்தியானது பிராணமயகோசத்திற்கு ஆத்மாவாக நடுவுடலாக ஆகின்றது. पृथिवी=மீதமுள்ள உதான விருத்தியானது पुच्छं प्रतिष्ठा=ஆதாரநிலையாகின்றது. அதாவது— உதானவாயுவானது பிராணுதிவாயுக்கள் தேஹத்தில் நிலைத்து நிற்றலுக்குக் காரணமாகின்றது என்பதாம். இந்த உதானவாயு வானதுதேஹத்தினின்றும்கிளம்பாதவரையில்பிராணுதிகள்தே ஹத்திலிருப்பதை அனுபவத்திற் காண்பதால் உதானவாயுவா னது பிராணுதிகள் நிலைத்து நிற்றலுக்குக்காரணமாகின்றதென்று சொன்னது பொருத்தமானதாகவே தானிருக்கின்றது. (எ—று)

## (मन्त्रः) तदप्येष श्लोको भवति ॥

(ப—ரை) तदपि=இதுவரை சொல்லிய பிராணமயாத்மகோச விஷயத்திலும், एषः श्लोकः=பின் வரும் மந்திரமானது भवति=இருக் கின்றது. (எ—று)

வித்யாரண்ய தீபிகையிற் சொல்லிய பிராணமய கோசார்த்தம் முற்றிற்று.

## (விசி-ம்) ஆனந்தவல்லீ இரண்டாவது அத்தியாயம்.

### (मन्त्रः) सह नाववतु । .........शान्तिः ॥

(ப-ரை) **नौ**=குரு, சிஷ்யன் இருவர்களையும், (**अधीतो मन्त्रः**= அத்யயனஞ் செய்யப் பட்ட மந்திரமானது) **सह अवतु**=சேர்ந்தே ரக்ஷிக்கட்டும். இருவருள் ஒருவர்க்கும் தோஷம் வரவேண்டா மென்று பொருள். திரும்பவும் **सह नौ भुनक्तु**=என்றதால் பிரா ர்த்திக்கப்படுகின்றது **नौ**=குருசிஷ்யர்களை **सह भुनक्तु**= சேர்ந்து காப்பாற்றட்டும். **सह वीर्यं करवावहै—वीर्यम्**=அத்யயனஞ்செய்யப் பட்ட மந்திரங்களால் அதுதற்குரிய பலனை ஸம்பாதனம் செய்தல் என்ற வீரியத்தை **सह करवावहै**=சேர்ந்தே ஸம்பாதிப்போமாக. **नौ**= இருவருடையவும், **अधीतम्**= அத்யயனமானது **तेजस्व्यस्तु**= வீரியவத்தரமாக ஆகட்டும். **मा विद्विषावहै**=ஒருவருக்கொருவர் அனுரக்த(பிரீதியுள்ளவ)ர்களாக ஆவோமாக. **शान्तिः,शान्तिः, शान्तिः**=வேறு தோஷங்களுக்கும் நிவிருத்தியானது (**अस्तु**=உண்டா கட்டும்)

(அ-கை) பரம தத்வஹித புருஷார்த்தப்ரதிபாதனஞ் செய் கின்ற ஆனந்தமய வல்லியானது ஆரம்பிக்கப் படுகின்றது.

### (मन्त्रः) ब्रह्मविदाप्नोतिपरम्—तदप्येष श्लोको भवति ॥

(ப-ரை) **ब्रह्मविदाप्नोति परम्—ब्रह्मवित्**=ஒப்புயர்வற்ற பிரும் மத்வத்திற்கு ஆசிரயமான வஸ்துவை உபாஸிப்பவன் **परम्**=எல் லாவற்றிர்க்கும் உத்கிருஷ்டமா(மேலா)னதை **आप्नोति**=அடைகி றான். **आवृत्तिरसकृदुपदेशात्**=என்ற அதிகாணத்திற் சொல்லிய நியாயத்தை யொட்டி **वेदन, उपासनादि**=வேதன, உபாஸனாதி சப் தங்களுக்கு ஒரேவிதமான பொருளே கொள்ளப்படுவதால் **ब्रह्म-वित्**=என்ற விடத்திலுள்ள **वित्**=என்ற பதத்திற்கு உபாஸனம் செய்கின்றவன் என்றேதான் பொருள் கொள்ள வேண்டும். மேலும், (1) **तत्क्रतुन्यायेन**=தத்க்ரது நியாயத்தினால் எது பிராப்ய

---

(1) यथाक्रतुरस्मिंल्लोके पुरुषो भवति तथेतः प्रेत्य भवति என்பது தத்க்ருது நியாயமாகும். புருஷன் இந்த லோகத்தில் எவ்வித ஸங்கல்பம் (நிவா

மோ அதுவே உபாயமாக ஆவதாலும், "பிரும்ம விதாப்னோதி பரம்" என்ற வாக்கியத்தால் பரப்பிரும்மமே பிராப்யமாகச் சொல்லப்பட்டிருப்பதாலும், பிரும்மமே உபாஸ்யமாகின்றது என்றும் கொள்ளவேண்டும். இந்த விடத்தில், பிரும்மம், அதன் வேதனம் (உபாஸனம்) ப்ராப்தி, ப்ராப்யம் ஆகிய நான்கு விஷயங்கள் சொல்லப்பட்டன. இவற்றுள், அந்த பிரும்மம் என்பது யாது, அதன் வேதனம் (உபாஸனம்) எத்தகையது, பிராப்தி யென்பது எத்தகையது, பிராப்ய மென்பது எப்பேற்பட்டது என்றதை விளக்கவேண்டி மந்திரம் தொடங்குகின்றது.

## (मन्त्रः) तदेषाऽभ्युक्ता सत्यं ज्ञानमनन्तं ब्रह्म ।

(ப-ரை) **ब्रह्म अभि**=பரப்பிரும்மத்தை விஷயமாகக்கொண்ட **एषा**=இந்த ருக்கானது **उक्ता**=அத்யயனஞ் செய்பவர்களாற் சொல்லப்பட்டது. பிராம்மணவாக்கியத்தாற் சொல்லப்பட்ட பொருளானது இந்தமந்திரத்தால் விசதமாக்க (தெளிவுபடுத்த)ப்படுகின்றது. இவ்விதமே **मान्त्रवर्णिकमेव च गीयते**=என்றசூத்திரத்திலுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. மேலும், **सत्यं ज्ञानमनन्तंब्रह्म**=என்றதால் **जन्माद्यस्य यतः**=என்ற சூத்திரத்தில் **यतो वा इमानि भूतानि जायन्ते**=என்றது முதலிய காரணவாக்கியத்தால் நிச்சிதமான ஜகத் ஜன்மாதி காரணமாகவான பிரும்மத்தினுடைய ஸகலேதர வியாவிருத்தமான ஸ்வரூபமானது சொல்லப்படுகிறது. அவற்றுள் ஸத்யம் (**सत्यं**)=என்ற பதமானது நிருபாதிக ஸத்தாயோகமுள்ள பிரும்மத்தைச் சொல்லுகின்றது. அதனால் விகாராஸ்பதமான அசேதனமும், அதுடன் சேர்ந்த சேதனனும் விலக்கப்படுகின்றது. அசேதனம், அதுடன் சேர்ந்த சேதனம் ஆகிய இவ்விரண்டிற்கும் வேறுபெயரை யடைவதற்குறிய அவஸ்தாந்தர யோகமிருப்பது காரணமாய் நிருபாதிக ஸத்தாயோகம் சோல்லுவதற்கில்லை. க்ஞான (**ज्ञानम्**)என்ற பதமானது நித்தியமாயும்,அஸங்குசிதமாயும் இருக்கிறயாதொரு ஞானமுண்டோ அதன் ஏகாகாரத்தைச் சொல்லுகின்றது. இதனின்றும் ஒரு ஸமயம் ஸங்குசிதக்

---

னம்) செய்கின்றானோ இச்சரீரம் விட்டு நீங்கியதும் அவ்விதம் ஆகியே விடுகிறான் என்பது அந்த நியாயத்தின் பொருளாகும்.

ஞானமுள்ளவர்களாக இருத்தல் பற்றி முக்த ஜீவர்கள் விலக்கப் படுகின்றனர். அனந்த (अनन्त)=என்ற பதமானது தேச, கால, வஸ்து, பரிச்சேதமற்ற ஸ்வரூபத்தைச் சொல்லுகின்றது. பிரும் மமானது ஸகுண (सगुण)=மாகையால் ஸ்வரூபத்தாலும், குணங் களாலும் ஆனந்த்யம் (आनन्त्यम्)=ஸித்திக்கின்றது. இதினின் றும் முன்னர் சொல்லப்பட்ட सत्यं, ज्ञानम्=(ஸத்யம், க்ஞானம்) என்ற இரண்டு பதங்களாலும் விலக்கப்பட்ட இருகோடியாலும் விலக்கப் பட்டவர்களாயும், ஸாதிசய(உயர்வு தாழ்வுடன் கூடின) ஸ்வரூபம், குணம் இவற்றுடன் கூடினவர்களாயு, மிருக்கின்ற நித்ய ஜீவர்கள் விலக்கப் படுகின்றனர். ஏனெனில்—விசேஷணங் கள் விலக்கிக்காட்டுந்தன்மையுடையன வாயிருத்தலே அதன் காணமாகும்.

சங்கை—ज्ञानम्=என்ற பதத்திற்கு ज्ञायते अनेनेति ज्ञानम्= என்ற வியுத்பத்தியால் விஷயாவகாஹியான க்ஞானமே பொரு ளாகவாகும். இதினின்றும் ஞானபதம் ஒன்றில் பிரவிருத்திப்ப தற்கு விஷயாவகாஹி ஞானத்வமானது நிமித்தமாக ஆகும். அப்பொழுது ஞானமானது பிரும்மஸ்வரூபமாக ஆவதற்கில்லை. ஆகவே ஞானகுணகம் (ஞானத்தைக் குணமாகவுடையது) பிரும்மம் என்ற அர்த்த மேற்படும். ज्ञायत इति ज्ञानम्=என்ற வியுத்பத்தியால் பிரும்மஸ்வரூபத்திற்கு ஞானத்துவம் மட்டும் சித்திக்கும். அப்பொழுது ஸ்வப்ரகாசதாரூபக்ஞானத்வமானது க்ஞான சப்தப் பிரவிருத்தி நிமித்தமாக வாகும்.* இதனால் ஞானகுணகத்வம், சித்திப்பதில்லை. அதோ சித்தாந்திக் கிஷ்ட டமாக இல்லாதது. ஏனெனில் तद्गुणसारत्वात्तु तद्व्यपदेशः प्राज्ञवत् என்ற (2 அ, 3 பா, 29 சூ) சூத்திர பாஷ்யத்தில் "यथा सत्यं ज्ञानमिति ब्रह्मणो ज्ञानगुणसारत्वात् ज्ञानमिति व्यपदेशः ஸத்யம், க்ஞானம், என்றவிடத்தில் பிரும்மமானது ஞான குண ஸாரமா யிருப்பதுபற்றி ஞான சப்தத்தாற் சொல்லப் படுகின்றதோ" என்றதால் பாஷ்யக்காரர் ஞானத்தைக் குணமாக ஒப்பியிருப்ப

---

* घटः கட:—என்றபதம் குடம் என்ற ஒருபொருளில் பிரவிருத்திக் கும் பொழுது घटत्वम्—கடத்வமானது ப்ரவிருத்தி நிமித்தம் என்று சொல்லப்படுகின்றது. இவ்விதமே மேற்கூறிய விடத்திலுங் காண்க.

த்திற்கு முரண்படுவதே அதன் காரணமாகும் என்பதாம். எனின்?

உத்தரம் — அதனுண்மை இங்கு சொல்லப்படும். அதாவது:—ஸ்வப்ரகாசத்வமே தான் ஞானசப்த ப்ரவிருத்தி நிமித்தமாகக் கொள்ளப்படல் வேண்டும். கடத்வம் என்ற ப்ரவிருத்தி நிமித்தத்திற்கு ஆசிரயமாக குடமானது ஆவதுபோல் பிரும்மமானது ஸ்வரூபத்தாலும், குணத்தாலும் எவ்வித சங்கோசமும் (குறைவும்) இல்லாதிருப்பதுபற்றி ஞானத்வம் என்ற தர்மத்திற்கு ஆசிரயமாகவாகி விடலாம். "பிரும்ம சப்தத்தாற் தோற்றப்படும் பிருஹத்வமானது அஸங்குசிதமாக ஸ்வரூபத்தாலும், குணத்தாலும் எவ்விதம் தோற்றுகின்றதோ அவ்விதமே இங்கும் கொள்ள வேண்டும்." என வியாஸாசார்யர்கள் சொல்லியு மிருக்கின்றனர் என ஒருவாறு உத்தரம் கூறலாமாயினும், இவ்விஷயமான உண்மை பின்வருமாறு—ज्ञानम् என்ற பதமானது अच् आद्यच् प्रत्ययम् வைத்து ஏற்பட்டிருக்கிறது. இதை விளக்குவாம். ज्ञा என்ற தாதுவின்மேல் भावार्थ (தாத்வர்த்த)த்தில் ल्युट् என்ற ப்ரத்யயம் வைத்து ज्ञान சப்தம் ஏற்படுகின்றது. இதனால் ज्ञानम् என்ற பதத்திற்கு அறிவுமட்டும் பொருளாக ஏற்படும். இத்தகைய பொருளுள்ள ज्ञान பதத்தின்மேல் अर्श आदिभ्योऽच् என்ற வியாகரண சூத்திரப்படி अच् என்ற பிரத்யத்தையும் ஏற்படுத்துவோமானல் "ஞானமுள்ளது" என்ற பொருளேற்பட்டுவிடும். இதினின்றும் ஞானகுணகம் (ஞானத்தைக் குணமாக வுடையது) பிரும்மம் என்ற் பொருளேற்பட்டு விடும். மேலும், प्रज्ञानघन एवाऽऽनन्दमयः" "नित्यं विज्ञानम्" என்ற சுருதியைக்கொண்டு "பிரும்மம் க்ஞானஸ்வரூபமானது" என்றும் ஏற்பட்டு விடும். ஆகவே பிரும்மமானது ஞானகுணகமாகவும், ஞானஸ்வரூபமாகவும் உள்ளது, என்றேற்பட்டது. மேலும், "இது, இங்கேயே உள்ளது, வேறிடத்திலில்லை" என எந்த வஸ்துவானது எண்ணப்படுமோ, அந்த வஸ்து, தேசபரிச்சேத முள்ளதெனப்படும். பிரும்மத்தை அவ்விதம் சொல்ல வியலாததாலால் இது தேசபரிச்சேதமற்றதாகவே ஆகின்றது. "இது, இப்பொழுதுள்ளது, வேறு ஸமயத்திலுள்ளதன்று" என எந்த வஸ்துவானது எண்ணப்படுமோ அந்த வஸ்துவானது, காலபரிச்சேத முள்ளதெனப்

படும். பிரும்மமானது எல்லா காலத்திலு மிருப்பதால் கால பரிச்சேதமற்றதாக வாகின்றது. "இது இதாக ஆகாது" என எந்த வஸ்துவானது எண்ணப்படுகின்றதோ அந்த வஸ்து, வஸ்து பரிச்சேத முள்ளதெனப்படும். பிரும்மத்திற்கு ஸர்வவஸ்து ஸாமா னாதிகரண்யார்ஹத்வ மிருப்பதால் (அதாவது: பிரும்மமானது எல்லாவஸ்துவுடனும் சேர்ந்தே வஸிப்பதற்குரிய யோக்யதை யுள்ளதாயிருப்பதால்) வஸ்து பரிச்சேத மற்றதாகவுமாகின்றது. அல்லதுவஸ்து=ஸ்வபாவத்தால்ஏற்படும்பரிச்சேதமானது (குறை வானது) யாதுண்டோ, அதை வஸ்து பரிச்சேதமெனலாம். அதாவது:—துல்யமான கால முள்ளதாயினும், துல்யமான பரி மாண முள்ளதாயினும் அபராஞ்சித் தங்கத்தைவிட, ஸாமான்ய மான தங்கமானது குறைவுள்ளதாகவே ஆகின்றது. ஆனதுபற்றி அபராஞ்சித் தங்கத்திற்கும், ஸாமான்யமான தங்கத்திற்கும் வஸ்து பரிச்சேதமானது (ஸ்வபாவத்தில் பரிச்சேதமானது=தாழ்மையா னது) ஏற்படுகின்றது.

ஸமாப்யதிக ராஹித்யத்திற்குக் காரணமான (அதாவது: ஒப்புயர்வற்றிருத்தலுக்குக் காரணமான) குணங்களாலேற்பட்ட நிரதிசயப்ரகர்ஷம் (மேலற்ற மேன்மை) யாதுண்டோ அதுவே பிரும்மத்தின் வஸ்து பரிச்சேதமின்மை எனப்படும் என்று வியா ஸாசாரியர் அவர்களால் வியாக்கியானஞ்செய்யப்பட்டிருக்கிறது. மேலும், "नान्तं गुणानां गच्छन्ति* तेनाऽनन्तोऽयमीरितः॥ யாது கா ரணத்தால் குணங்களின் முடிவை யடைவதில்லையோ அக்கார ணத்தால் இந்தப் பரமாத்மா "அநந்தன்" என்று சொல்லப்பட் டார்." என்ற ஸ்மிருதிவசனத்தை யொட்டி குணாநந்த்யமா னது (குணக்குறைவற் றிருத்தலானது) "அநந்த" என்ற சப்தத் தின் பொருளாகவாகும். இந்த அநந்த சப்தமானது ரூடி என்ற சப்தமுறையை யொட்டி தேவதா விசேஷமான நாராயணனைச் சொல்லுகின்றது.

சங்கை—ரூடி என்ற சப்த முறையை யொட்டி நாராயண னைச் சொல்லும் अनन्त பதமானது अनन्तः என பும்லிங்கமாதலா

* यान्ति என்று பாடமிருக்க வேண்டுமெனப் படுகிறது.

லும், இவ்விடத்தில் **अनन्तम्** என நபும்ஸகலிங்கமாகப் படிக்கப் பட்டிருப்பதாலும் இங்குள்ள அநந்த பதம் நாராயணனை எவ்வி தம் சொல்லும் எனின்?

உத்தரம் — இங்குள்ள அநந்தபதத்தைப் பும்லிங்கமாகச் சொல்லுவது எங்களுக்கு மிகவும் இஷ்டமானதே. ஏனெனில்? **अनन्तम्** என்ற பதமானது **द्वितीयान्तम्** அதாவது: இரண்டாம் வேற்றுமையுள்ளது என்று கொள்ளப்படுவதே அதன் காரண மாகும். இரண்டாம் வேற்றுமை யுள்ளதாக இந்த **अनन्तपद**த் தை யொப்பாதபக்ஷத்தில் **यो वेद निहितं गुहायाम्** என்ற விடத் தில் **तम्** என த்விதீயாந்தமான சப்தத்தை அத்யாஹாரஞ்செய்து (சேர்த்து) பொருள் கூறவேண்டி வரும். புதிதாய் வேறொரு பதத்தைச் சேர்க்காமலே கோரிய பொருள் கிடைக்கக்கூடியதாக இருக்கும் பொழுது, அதை விடுத்து புதிதாய் வேறொரு பதத் தைச் சேர்த்துப்பொருள் கூறுவது அன்னியாயமாக ஆவதே அதன் காரணமாகும். ஒருஸமயம் **अनन्त** (அநந்த) பதயௌகி கார்த்தமான (விரித்துப் பொருள் கொள்ளுதலா லேற்படுகின்ற) த்ரிவித பரிச்சேத ரஹிதன் என்ற பொருள் நாராயணனைத் தவிற வேறிடத்தில் ஸம்பவிக்காததாலால் **श्रीपत्यादि** ஸ்ரீபத்யாதி சப்தங்களிற்போல அநந்தபதத்தில் ரூடி கற்பனை செய்யவேண்டு வதில்லை என்று சொல்லலாம். அவ்விதம் சொல்லப் படுமானா லும், அதனால் எங்களுக்கு எவ்விதக் கெடுதலும் வந்துவிடாது. ஏனெனில்? இங்கு **सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** என்றதால் பிரும்ம சப் தார்த்தமும், ஹிருதய குஹாநிஹிதத்வப்ரகாரக ஞானப்ரதிபா தகமான **यो वेद निहितं गुहायाम्** என்றதால் **चित्** (சித்) என்ற சப்தத்தின் பொருளும், **परमे व्योमन् सोऽश्नुते** என்றதால் **आप्नोति** என்ற சப்தத்தின் அர்த்தமும் விரிக்கப்பட்டதெனக் கொள்ளப் படுவதே அதன் காரணமாகும்.

**परमे व्योमन्**—அப்ராக்ருதாகாசமெனச் சொல்லப்படும் பரம பதத்தில் என்று பொருள். **सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता**— (ஸர்வான் காமான் ஸஹ ப்ருஹ்மணா விபஶ்சிதா) என்றதால் ப்ரா ப்யமானது சொல்லப்பட்டது. மேலும், **काम्यन्त इति कामाः**— என்ற வியுத்பத்தியால் பகவத் கல்யாணகுணங்கள் சொல்லப்படு

கின்றன. ஏனெனில்—எல்லாவிதமான விஷயங்களிலும் வைரா க்யத்தை யடைந்த முக்த ஜீவனுக்கு பகவத் கல்யாணகுணங்க ளைத் தவிர்த்து வேறு காம்யமானது ஸம்பவிப்பதற்கில்லையாதலா லும், **अथ य इह आत्मानमनुविद्य व्रजन्त्येतांश्च सत्यान्कामान्**—என்பது முதலிய விடங்களில் காம (**काम**)—சப்தத்திற்கு பகவத்கல்யாண குணங்களிலே பிரயோகமேற்பட்டிருப்பதாலுமே என்க. மேலும், **विपश्चिता=विविधं पश्यन्ती चित् यस्य**—என்ற பஹுவ்ரீஹிஸமாஸத் தால் விபஸ்சித் என்ற பதத்திற்கு நிருபாதிக மாயும், அனன்யா தீனமாயும், அஸங்குசிதமாயு மிருக்கிற ஸர்வவிஷயகக்ஞானத்தை யுடையவர் என்ற பொருள் ஏற்படுகின்றது. இதுதான் சரியான விபஸ்சித்வமுமாகும். இந்த விபஸ்சித்வரூப குணமானது நித்ய முக்தஜீவாதிகளை விலக்கிக் காட்டுகின்றது. பிரும்மத்தை விட அவரது குணங்களுக்கே பலனைக் கொடுக்கும் ஸமயத்தில் பிரா தான்யம் சொல்லவேண்டும் என்பதை **ब्रह्मणा सह**—என்ற விடத்தி லுள்ள **सह**—என்றபதம் போதிக்கின்றது. ஆனால் **सह युक्तेऽप्रधाने**— என்ற பாணிநிசூத்திரபடி போக்யமாயிருக்கும் விஷயத்தில் பகவத்குணங்களைக் காட்டிலும் பிரும்மத்திற்கு அப்பிராதான் யம் (முக்யமற்றிருத்தல்) ஸம்பவிக்கும் ஆதலால் இவ்விதம் பொ ருள் கொள்ளுவது தோஷயுக்தமாக ஆகும் எனலாம். ஆயினும் "**श्रियं त्वत्तोप्युच्चैर्वयमिह भणामश्शृणुतराम्।** லக்ஷ்மீதேவியாரை இவ் விஷயத்தில் தேவரீரை விடமேலானவளாக நாங்கள் சொல்லு கின்றோம் என்பதை தேவரீர்திருச்செவி சாய்த்தருளுவீராக" என்று சொல்லுவது போலவே, இங்கும் பரமாத்மாவைக் காட் டிலும் கூட அவரது கல்யாண குணங்களுக்குறிய போக்யதாதி சயத்தைப் பிரதிபாதனஞ் செய்தலானது பரமாத்மாவின் அதிச யத்திலேயே உண்மையில் முடிவு பெறுவதால் இம்மாதிரியான பகவத் அப்பிராதான்யமானது குணமாகுமே யொழிய தோஷ மாக ஒருபொழுது மாகாது. ஆனது பற்றியே பகவத்பாஷ்ய காரர் அவர்களும் **पुत्रेण सह ओदनं भुंक्ते** புத்திரனுடன் கூட அன் னத்தைச்சாப்பிடுகிறான் என்ற விடத்தில் புத்திரனுக்கு அன்ன போஜனத்தில் அப்பிராதான்யம் வருவதுபோல இங்கும் **ब्रह्मणा सह** என்றவிடத்தில் பிரும்மத்திற்கு அப்பிராதான்னியம் பிரஸக்

தமாகும் எனக்கருதி அதைவிடுத்து **पयसा ओदनं भुंक्ते** என்றவிடத்தில் போக்யமான பாலின் ஸாஹித்யம் மட்டும் ஏற்படுவதுபோலவே இவ்விடத்திலும் போக்ய ஸாஹித்யமே சொன்னதாகக் கொள்ளவேண்டும். இவ்விதம் கொள்ளுமிடத்தில் பிரும்மத்திற்குத் தோன்றும் அப்பிராதான்ய மானது தோஷமாக ஒருபொழுதும் ஆகாது என்று கருதியே போக்ய ஸாஹித்யபக்ஷத்தையே அங்கீகாரஞ்செய்தனர்.

சங்கை—**तेषामृग्यत्रार्थवशेन पादव्यवस्था** என்றதால் ஜைமினி மஹருஷியானவர் அர்த்தத்தையொட்டிப்பாதவியவஸ்தையுடன் கூடியிருத்தலே ருக்கின் லக்ஷணமாகும், என்று சொல்லியிருப்பதால் வேறு பாதத்திலுள்ள **सह** என்றபதத்திற்கு வேறுபாதத்திலுள்ள **ब्रह्मणा** என்ற பதத்துடன் அன்வயம் சொல்லவியலாது. ஆகவே **ब्रह्मणा** என்பது **सहयोगे तृती** யையன்று, பின்னேயோவெனில் **इत्थं भूतलक्षणे तृती** யையாகும். இதினின்றும் **सह** என்ற பதத்திற்கு **युगपत्** (ஒரேஸமயத்தில்) எனப்பொருளென்றும், எல்லா காமங்களையும் ஒரே ஸமயத்தில் பிரும்மபூதனானவன் அனுபவிக்கிறான் ' என்றுமேற்பட்டது. இவ்விதமே தான் ஸ்காந்தம் பிரும்மகீதையிலும்.

**सोऽश्नुते सकलान् कामानक्रमेण सुरर्षभाः ।**
**विदितब्रह्मरूपेण जीवन्मुक्तो न संशयः ॥**

என்றதால் மேற்கூறிய பொருள் விளக்கப்பட்டிருக்கிறது. எனின்?

உத்தரம்—**तेषामृग्यत्राऽर्थवशेन पादव्यवस्था** என்ற சூத்திரத்தை உபலக்ஷணமாகக் கொண்டு, அதற்கு வியாக்கியானஞ்செய்தவர்கள் அர்த்தத்தைக் கொண்டும், விருத்தத்தைக் கொண்டும் பாதவியவஸ்தை செய்யவேண்டுமென உரைஎழுதியிருக்கின்றனர். அபியுக்தர் (பெரியோர்)களின் மந்திரப்ரஸித்திவிஷயத்வம் மந்திரத்வம் என்பதுபோல ருக்பதப்ரஸித்திவிஷயத்துவமும் ருக்த்துவம் எனப்படும். ஆனதுபற்றி வேறுபாதத்திலிருப்பினும் **सह** என்ற பதமானது வேறுபாதத்திலிருக்கும் **ब्रह्मणा** என்ற பதத்துடன் அன்வயத்தை யடைவதில் யாதும் ஆக்ஷேபமில்லை.

மேலும், ब्रह्मणा என்ற விடத்திலுள்ள திரிதீயாவிபக்தியை इत्थं भूतलक्षणे तृतीयैயாக ஒப்பினும்கூட பிரும்மபூதன் என்ற பொருள் ஸம்பவிக்காது. श्वेतच्छत्रेण राजा "வெண்குடையினால் அரசன்" என்றவிடத்தில் முற்கூறியபடி அபேதம் ஸம்பவிப்பதில்லை, மேலும், பூர்வபக்ஷி சொல்லிய ரூதஸம்ஹிதா வசனமானது யாவராலும் ஒப்பப்பட்ட பெரியோரால் உதாஹரிக்கப் படவுமில்லை, ஆதலால் பகவத் பாஷ்யகாரர் சொல்லியபடியேதான் பொருள் கொள்ளவேண்டும் என்றேற்பட்டது. மந்திரத்திலுள்ள इति என்றபதமானது மந்திரத்தின் முடிவைக் காட்டுகிறது.

सत्यं ज्ञानमनन्तम् என்று சொல்லப் பட்ட வஸ்து பரிச்சேதமற்றிருத்தல் ரூபமான ஆநந்த்யத்தை ஸர்வோபாதானமாயிருத்தல் மூலமாகவும்,ஸர்வாதாந்தரமாயிருத்தல் மூலமாகவும் விரித்து சுருதி உபதேசிக்கின்றது. तस्मात् முன்னுள்ள ब्रह्म विदाप्नोति परम् என்ற பிராம்மணவாக்கியத் தாலுபதேசிக்கப் பட்டதும், एतस्मात् அடுத்தாற் போல் सत्यं ज्ञानम् என்ற மந்திரத்தாற் சொல்லப்பட்டதும், ஆகவே மந்திரப்பிராம்மணங்களாற் சொல்லப்பட்டதான आत्मनः பரமாத்மாவினிடமிருந்து आकाशः ஆகாசமானது संभूतः உண்டாயிற்று. ஆகாசத்தினின்றும் வாயுவும் வாயுவினின்றும் அக்னியும், அக்னியினின்றும் ஜலமும், ஜலத்தினின்றும் பூமியும், பூமியினின்றும் ஒஷதியும், ஒஷதியினின்றும் அன்னமும், அன்னத்தினின்றும் புருஷ (சரீர) னும் உண்டாயிற்று. இவ்விடத்தில் "तत्तेज ऐक्षत" "ता आप ऐक्षन्त" என்றது முதலியவிடங்களில் தேஜஸ், ஜலம் முதலிய விடங்களில் சேதன தர்மமான ஈக்ஷணாதிகளைச் சொல்லி யிருப்பதைக் கொண்டு தெஜஸ் முதலிய சப்தங்கள் அவற்றைச் சரீரமாகவுடைய பரமாத்மவாசகங்கள் என்று கொள்ளவேண்டும் என் तेजोऽतस्तथाह्याह என்ற அதிகரணத்திற் சொல்லப் பட்டிருக்கிறது. पुरुषः என்றால் சரீரம் என்று பொருள். இந்ததேஹமானது அன்னரஸத்தின் பரிணமமாகும். अन्नमशितं त्रेधा विधीयते । तस्ययः स्थविष्ठो धातुः तत्पुरीषं भवति । मध्यमस्तन्मांसम् । என்ற சுருதிவாக்கியப்படி ஜாடராக்னியினால் பாகம் செய்யப்படும் அன்னரஸத்தின் பாகத் தாலுண்டுபண்ணப்பட்ட மாம்ஸாதிகளடங்கி யிருத்தலே அதன்

காரணமாகும். तस्य தேஹரூபபுருஷனுக்கு इदमेव கண்கூடாகக் காணப்படும் தலேயே शिर: தலையாகும். இரண்டுகைகளும் இரக் கைகளாகும். கழுத்துக்குக் கீழும் நாபி (உந்தி) க்கு மேலும் காணப்படும் நடுவிலுள்ள இந்த தேஹபாகமானதுமற்ற அங்கங்க ளுக்கு ஆத்மாவாகவாகும். அதாவது: मध्यं ह्येषामंगानामात्मा என்று சுருதியிருப்பதால் நடுப்பாகம் தாரகமாகின்றமைபற்றி பிரதான மாகவாகின்றது. इदम् உந்திக்குக் கீழ்காணப்படுகின்ற இரண்டு காலும் வால்போன்று ஆதாரமாகவாவதால் புச்சமாக வாகின் றது. இங்கு புருஷசப்தத்தாற் சொல்லப்படும் மனிதனுடைய ங்க முதலியவைகளே பக்ஷம் முதலியனவாகச் சொன்னது ஞான சவுகரியத்திற்கு வேண்டியே, என்று கொள்ள வேண்டும். तद-प्येषश्लोको भवति பிராம்மணத்தாற் சொல்லபட்ட அர்த்தத்தில் மந்திரரூபமான இந்த சுலோகமுமிருக்கின்றது. என்று பொருள்.

முதலாவது அநுவாகம் முற்றிற்று.

## இரண்டாவது அநுவாகம்.

## (मन्त्र:) अन्नाद्वै प्रजा:........तदप्येष श्लोको भवति ॥

(ப—ரை) பூமியிலுள்ள எல்லாப்பிரஜைகளும் அன்னத்தி னின்றே உண்டாகின்றன. அன்னத்தினலேயே ஜீவிக்கின்றன. அந்த (முடிவு) காலத்தில் அன்னத்திலேயே லயத்தையு மடைகின் றன. ஆனதுபற்றி अन्नम्-அன்னமானது ஸர்வபிராணிகளுக்கு முப காரமாக இருப்பதால் ஜ்யேஷ்டமாக (சிறந்ததாக) ஆகின்றது. ஆ னதுபற்றியேபசிமுதலியவியாதியைப்போக்குவதாக இருப்பதால் ஸர்வௌஷதமாகவு மாகிறது. ஓஷதியின் பரிணமமாக அன்ன மிருப்பதைக் காரணமாகக்கொண்டு அன்னத்தை ஔஷதம் என சுருதி சொல்லுகிறதாகக் கொள்ளவும். அன்னத்தில் பிரும்மதி ருஷ்டி செய்கின்றவர்கள் வேண்டிய அளவு அன்னத்தை யடைந்து விடுகின்றனர். அன்னத்தில் பிரும்மதிருஷ்டிசெய்வதற்குக் கார ணமான பிரும்மஸாம்யமானது சொல்லப்படுகிறது अन्नंहि भूतानां ज्येष्ठम् तस्मात्सर्वौषधमुच्यते । என்ற வாக்கியத்தால் பிரும்மமும்ஸர் வரோக நிவர்த்தகமாயிருப்பது பற்றி ஸர்வத்திற்கும் மருந்தாக வும் அது ஆகிறது என்று கருத்து. अन्नाद्वर्धन्ते । ஜனனம்,

விருத்தி இவ்விரண்டிற்கும் நிமித்தமாயிருக்கும் தன்மையானது அன்னம், பிரும்மம் இவ்விரண்டிற்கும் ஸமமாகவே இருக்கின்றது என்று பொருள். अद्यतेऽत्ति च+च्यत इति ஜீவனதசையில் ஸ்வயம் சாப்பிடப்படுகிறது. நாசதசையில் தான் கிடையாததாலோ, விபரீதமான பரிணாமத்தை அடைந்தோ அன்னமானது ஸம்ஹாரஞ் செய்கின்றதாக வாகின்றது. अन्नं मृत्युं तमुजीवातुमाहुः என்ற சுருதியும் இவ்விதமே சொல்லி யிருக்கிறது. இதுவரை கூறியதிலிருந்து ஆகாசம் முதல் அன்னரஸமயமான ஸ்தூலசரீரம் வரையுள்ள வஸ்துவானது மந்திரட் பிராம்மணத்தாற் சொல்லப்பட்ட பிரும்மத்தையே உபாதானகாரணமாக வுடையது என்றும், आत्मन आकाशः என்று கூறியிருப்பதிலிருந்து மேற்கூறிய வஸ்துக்கள் பரமாத்மாவையே அந்தர்யாமியாக உடையன வென்றும் ஏற்பட்டது.

இவ்விதம் ஆகாசம் முதல் அன்னமய சப்தத்தாற் சொல்லப்பட்ட ஸ்தூலசரீரம் வரையுள்ள வற்றிற்கு பிரும்மந்தான் ஆத்மாவாகவும், உபாதானமாகவும் ஆகின்றது. என உபதேசித்த பிறகு அந்த ஆத்மா யார்? என்ற சங்கை உதயமாகவே ஆனந்தமயந்தான் அந்த ஆத்மா என்பதைக் காட்டவேண்டி ஸ்தூல நக்ஷத்திரத்தைக் காட்டிப் பின்னர் சூக்ஷ்மமான அருந்ததீ நக்ஷத்திரத்தை உள்ளபடி காட்டுவதுபோல ஸ்தூல தேஹாந்தர்வர்த்தியான பிராணமயனை ஆத்மாவாகக் காண்பிக்கின்றது. மிக்க நுட்பமான அருந்ததீ நக்ஷத்திரத்தைக் காண்பிக்கப் பிரவிருத்தித்த மனிதன் முதலெடுப்பிலேயே சூக்ஷ்மமான அருந்ததீயைக் காண்பிக்க முடியாதெனக்கருதி அதனருகிலிருக்கும் ஸ்தூலமான நக்ஷத்திரத்தைக் காட்டி இதுதான் அருந்ததீ என்று உபதேசிக்கிறான். சுரோதாவுக்கு அந்த ஸ்தூல நக்ஷத்திரத்தில் அருந்ததீத்வ புத்தியானது நிலைத்த பிறகு அதனருகிலிருக்கும் உண்மையில் அருந்ததீயான சூக்ஷ்ம நக்ஷத்திரத்தை இதுதான் அருந்ததீ எனக்காண்பிக்கிறான். இதுவே "ஸ்தூலாருந்ததீ நியாயம்" எனப்படும். तस्माद्वा+प्राणमयः। தேஹாந்தர்வர்த்தியாயும், தேஹத்தைவிட வேறானவனாயும் இருக்கிற யாதொரு பிராணமயனுண்டோ அவனே आत्मन आकाशस्संभूतः என்று தொடங்கி ஸர்வோபா

தான காரணமாகவும், அதன் அந்தர்யாமியாகவும் சொல்லப்பட்ட ஆத்மாவாக வாகிறுன் என்று பொருள். பகவத் பாஷ்யக்காரர் அவர்களும், अन्वयादितिचेत्स्यादवधारणात् என்ற சூத்திரத்தில் அன்னமயத்திற் குள்ளிருக்கும் பிராணமயனிடத்தில் முதலில் பரமாத்ம புத்தியானது இரங்கி, அதற்குப் பிறகு பிராணமயனுக்கு உள்ளிருக்கும் மனோ மயனிடத்திலும், அதற்கும் பிறகு விக்ஞான மயனிடத்திலும், அதற்கும் பிறகு ஆனந்தமயனிடத்திலும் முறையே இரங்குகின்றது என உபதேசித்திருக்கின்றனர். இங்கு பஞ்ச விருத்தியுள்ள ப்ராணனுக்கு பிராணன விருத்தியே அதிகமாயிருப்பதால் ப்ராணமயன் என்று சொன்னது பொருந்துகிறது. तेनैष पूर्णः=அந்தப் பிராணமய ஆத்மாவினால் இந்த அன்னமய ஆத்மாவானவன் நிரம்பினவனுகிறுன். தேஹம் முழுதிலும் பிராணன் நிறைந்திருப்பதாலேயே இவ்விதம் சொல்லப்பட்டது. स वा एष पुरुषविध एव=பிராண மயனும் புருஷாகிருதி யுள்ளவனுகவே தானுகிறுன். तस्य पुरुषविधतामन्वयं पुरुषविधः। அன்னமயனுக்கமைந்துள்ள புருஷவிதத்துவத்தை யனுஸரித்தே இந்தப் பிராணமயனும் புருஷவிதனுகிறுன். ஆகவே அதுபோலவே சிரஸ், பக்ஷம், புச்சம், இவைகளுடன் கூடியிருத்தலால் ஐந்து விதமுள்ளவனுக ஆகிறுன் என்று பொருள். आकाश आत्मा=यथाकाशस्थितो नित्यं वायुस्सर्वत्रगो महान् । என்று ஸ்மிருதியி லுபதேசித்திருக்கிறபடி வாயுவிகார பூதமான பிராணுபானுதிகளுக்கு தாரகமாக ஆவதால் ஆகாசமானது வாயுவுக்கு ஆத்மாவாக ஆகின்றது. पृथिवी पुच्छम् பூமியில் ஆகாசமானது நிலைபெற்றிருப்பதால் பிருதிவீயானது புச்சமாக வாகின்றது.

விசிஷ்டாத்வைத சித்தாந்தப்படி இரண்டாவது அநுவாகம் முற்றிற்று.

## (அத்—ம்) சங்கரபாஷ்யப்படி 3வது அநுவாகம்.

**(मन्त्रः) प्राणं देवा अनु प्राणन्ति। मनुष्याः पशवश्च ये। प्राणो हि भूतानामायुः। तस्मात्सर्वायुषमुच्यते। सर्वमेव त आयुर्यन्ति। येप्राणं ब्रह्मोपासते। प्राणो हि भूतानामायुः।**

**तस्मात्सर्वायुषमुच्यत इति। तस्यैष एव शारीर आत्मा। यः पूर्वस्य। तस्माद्वा एतस्मात्प्राणमयात्। अन्योन्तर आत्मा मनोमयः। तेनैष पूर्णः। स वा एष पुरुषविध एव। तस्य पुरुषविधताम्। अन्वयं पुरुषविधः। तस्य यजुरेव शिरः। ऋग्दक्षिणः पक्षः। सामोत्तरः पक्षः। आदेश आत्मा। अथर्वाङ्गिरसः पुच्छं प्रतिष्ठा। तदप्येष श्लोको भवति॥**

(ப-ரை) **देवाः**=அக்னி முதலிய தேவர்கள் **प्राणं अनु**=பிராணன சக்தியுள்ள வாய்வாத்மாவை அனுஸரித்து அதாவது: வாய்வாத்ம பூதர்களாக இருந்து கொண்டு **प्राणन्ति**=ப்ராணன கர்மாவைச் செய்கின்றனர் (அதாவது: ஜீவிக்கின்றனர்) அக்னியாதி தேவர்கள் ஸூத்திராத்மாவான ஹிரண்ய கர்ப்ப ரூபமாக இருந்து கொண்டு பிராணதாரணஞ் செய்கின்றனர் என்று கருத்து. அல்லது ஹிரண்ய கர்ப்போபாஸ்தியினால் ஹிரண்ய கர்ப்பராகவான தேவர்கள் தத்ரூபமாக பிராணதாரணஞ் செய்கின்றனர் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது நம்போன்றவர்கள் போலவே அக்னியாதி தேவர்களும் ஹிரண்ய கர்ப்பாத்மபாவத்தை யடைந்தவர்களாய் கிரியாசக்தியுள்ள பிராணனை உபாதியாகக் கொண்டு பிராணதாரணஞ் செய்கின்றனர் என்றும் பொருள் கொள்ளலாம். அல்லது **देवाः**=ஆத்யாத்மிகங்களான இந்திரியங்கள் **प्राणमनु**=முக்கியப்பிராணனை அனுசரித்து **प्राणन्ति**=தமது வேலையைச் செய்கின்றன என்றும் பொருள் கொள்ளலாம். **मनुष्याः**=மனிதர்களும், **पशवश्च**=பசுக்களும், **ये**=எவர்களுண்டோ, (**ते**=அவர்களும்) பிராணன கர்மாவினாலேயே சேஷ்டையுள்ளவர்களாகக் காணப்படுகின்றனர். இந்திரிய சேஷ்டை பிராணாதீனமாயிருப்பது போலவே, சரீரசேஷ்டையும் பிராணாதீனமாக ஏற்படுகின்றது என்பது கருத்து. ஆகவே பரிச்சின்னனான அன்னமயாத்மாவினால் மட்டும் பிராணிகள் ஆத்மாவான்களாகின்றனர் என்பதில்லை. பின்னேயோ வெனில் அந்த அன்னமயாத்மாவிற் குள்ளிருக்கின்றதும், எல்லாவற்றிற்கும் பொதுவாகவுள்ளதும், ஸர்வபிண்ட வியாபியாகவுமிருக்கின்ற பிராணமயனாலுமே மனுஷ்யாதிகள் ஆத்

மவான்களாக வாகின்றனர். இவ்விதமே ஆகாசாதி பூதங்களா லுண்டானவைகளும், அவித்யாகிருதங்களும், தனக்கு முன் முன் னுள்ள வற்றில் நிறைவு பெற்றவைகளும், மேன்மேல் சூக்ஷ்மங்க ளுமான அன்னமயந்தொடங்கி ஆநந்தமயாந்தமான ஆத்மாக்க ளால் எல்லாப் பிராணிகளும் ஆத்மவான்களாக வாகின்றனர் என்று கொள்ளவும். அனேகதோனு (உமியு)ள்ள கோதுமையா னது எவ்விதமோ, அவ்விதமே இவ்விடத்திலும், எல்லாப் பிரா ணிகளும் ஸ்வாபாவிகனும் (அதாவது: அகற்பிதனும்) ஆகாசாதி களுக்குக் காரணமானவனும், நித்யனும், எவ்வித விகாரமுமற்றவ னும், ஸர்வகதனும், ஸத்ய க்ஞானனந்த ஸ்வரூப முள்ளவனுமா ன ஸர்வாத்மாவினாலும் ஆத்மாவுள்ளவர்க ளாகின்றனர். ஏனெ னில்? அவனன்றோ உண்மையில் எல்லாவற்றிற்கும் ஆத்மா, என்ப தும் இதனின்றும் சொல்லப்பட்டதாக ஏற்படுகிறது. ஆனல் விக் ஞான மயனுக்கு ஆந்தரமாக ஆநந்த மயன் இருக்கின்றான் எனச் சொல்லியிருப்பது போல ஆநந்தமயனுக்கு ஆந்தரமாக பிரும்மம் இருக்கின்றது எனத்தனி சப்தத்தாற் சொல்லப்படவில்லை தானு யினும் ஆனந்தமயனுக்குப்பிரதிஷ்டையாக (ஆதாரமாக) பிரும்மத் தைச்சொல்லியிருக்கும்ஸாமர்த்தியத்தால்பிரும்மமானது ஆநந்த மயனுக்கும் ஆத்மாவென்பது தெளிவாகின்றது. ஆகவே புச்ச வாக்கிய நிர்திஷ்டமான் பிரும்மத்திற்கு முக்கியாத்மத்வமும் இதனலுபதேசிக்கப் பட்டதாகவே தானுகும். ஆனது பற்றி ஆநந்தமயன் முக்கியாத்மாவாக ஆவதில்லை என்றும் கொள்ளல் அவசியமானது. **प्राणो हि भूतानामायुः** = யாது காரணத்தால் **प्राणः**=பிராணன் **भूतानाम्**=பிராணிகளுக்கு **आयुः** = ஜீவனமோ, **तस्मात्**=அக்காரணத்தால் **सर्वायुषम्**=எல்லா வற்றிற்கும் ஆயுஸ் ஸாக **उच्यते**=சொல்லப் படுகின்றது. "**यावद्ध्यस्मिञ्शरीरे प्राणो भवति तावदेवायुः**:=எதுவரை இந்த சரீரத்தில் பிராணனிருக்கின்ற தோ அதுவரைதான் ஆயுஸ்" என்ற சுருதியும், பிராணன் விலகி னதும் மரண முண்டாகின்றதென்ற பிரஸித்தியும் மேற்சொன்ன தை உறுதி செய்கின்றது. பிராணனே ஸர்வாயுஸ்ஸாகச் சொல் லுவது உலகத்திலும் பிரசித்தமாகவே தானிருக்கின்றது. ஆக வே வெளியிலுள்ளதும், அந்தந்த ஜீவனுக்கு மட்டும் தனித்

தனி யேற்பட்டதுமான அன்னமயாத்மாவி னின்றும் விலகி அதற்குள்ளில் எல்லாவற்றிற்கும் பொதுவான प्राणम्=பிராண மயாத்மாவை ब्रह्म=பிரும்மமாக ये=எவர்கள் "ஜீவன ஹேதுவா யிருப்பதுபற்றி நான் எல்லாப் பிராணிகட்கும் ஆத்மாவாகவும், ஆயுஸ்ஸாகவுமுள்ள பிராணனாக இருக்கிறேன்" என उपासते= உபாஸிக்கின்றனரோ, ते=அவர்கள் सर्वमेव आयुः=எல்லா ஆயுஸ் ஸையும் यन्ति=இவ்வுலகிலடைகின்றனர். ப்ராப்தமான ஆயுளுக்கு முன்னர் அபமிருத்யுவால் மரிப்பதில்லை யென்று பொருள். ஆனால் இங்குள்ள सर्वायुः=என்ற பதத்திற்கு शतायुः पुरुषः= என்ற சுருதிப் பிரஸித்தியைக்கொண்டு நூறு வருஷங்கள் ஆயு ளையடைகிறான் எனப்பொருள் கொள்ளுவது பொருத்தமான தெனப் படுகின்றது. हि=யாது காரணத்தால் प्राणः=பிராணன் भूतानाम्=பிராணிகளுக்கு आयुः=ஆயுஸ்ஸாகின்றானோ तस्मात्=அக் காரணம்பற்றி सर्वायुषमिति=எல்லா ஆயுஸ்ஸையு மடைகிறான் என்று उच्यते=சொல்லப்படுகிறது. எவன் எம்மாதிரியான குணத் துடன் கூடின பிரும்மத்தை உபாஸிக்கின்றானோ அவன் அதன் குணத்தை அடைந்து விடுகிறான் என்ற வித்யாபலனின் காரணம் கூறவேண்டி प्राणो हि भूतानामायुः=என்ற பாகம் திரும்பவும் படிக்கப்பட்டது. तस्य पूर्वस्य=அந்த முன்சொன்ன அன்னமய னுக்கு एष एव=இவனே शारीर आत्मा=அன்னமய சரீரத்திலுள்ள ஆத்மாவாகிறான். அவன் யார் எனின்? यः=யாதொரு பிராண மயனுண்டோ இவன்தான் அவன் என்று கருத்து.

तस्माद्वा एतस्मात्प्राणमयात्=முன் சொல்லிய பிராணமயனைக் காட்டிலும் अन्योऽन्तर आत्मा मनोमयः வேறாகவும், பிராணமயாத் மாவுக்குள்ளிருக்கின்றவனாகவும்மனோமயாத்மாவானவன் ஆகின் றான். ஸங்கல்ப விகல்பாத்மகமான யாதொரு அந்தக்கரணமுண் டோ அது मनः (மன:) என்றதால் சொல்லப்படும். तन्मयः (தன்ம யன்) மனோமயன் எனப்படுவான். அன்னமயன் என்ற விடத்தில் எவ்விதமோ அவ்விதமே தான் இங்கும் கொள்ளவேண்டும். அந்தமனோமய ஆத்மாவானவன், பிராணமயனுக்கு உள்ளிருக் கின்ற ஆத்மாவாகிறான். तेन=அந்த மனோமய ஆத்மாவினால் एषः= இந்தப் பிராணமய ஆத்மாவனவன் पूर्णः=நிறைவுபெறுகிறான்.

तस्य=அந்த பிராணமயாத்மாவினுடைய पुरुषविधतामनु= புருஷா காரவமைப்பை யனுஸரித்தே अयम्=இந்த மனோமயன் पुरुषविध:=புருஷாகாரவமைப்பை யடைகிறான். तस्य=அந்தமனோமயாத்மாவுக்கு यजुरेव=யஜுஸ்ஸே शिर:=சிரஸ்ஸாகவாகின்றது. வேதமானது, யஜுஸ் என்றும், ருக் என்றும், ஸாம என்றும், அதர்வா என்றும், நான்கு விதமாக வாகின்றது. அவற்றுள் எந்த வேதபாகத்தில் மந்திரங்களின் அக்ஷரங்களும், பாதத்தின் முடிவும், ஓர்வரை யறைக்குட்படாதிருக்கின்றனவோ அந்த வேதபாகம் யஜுஸ் எனப்படும். எந்த வேதபாகத்தில் மந்திரங்களின் அக்ஷரங்களும்,பாதத்தின் முடிவும் ஓர்வரையறைக்குட்பட்டிருக்கின்றனவோ அது ருக்எனப்படும்.

ஆகவே மனோமயாத்மாவுக்கு, ஓர் வரையறைக்குட்படாத அக்ஷரங்களையும், பாதத்தின் முடிவையுமுடைய யஜுஸ் என்ற மந்திரமானது சிரஸ்ஸாக வாகின்றது என்றேற்பட்டது. சரீராவயவங்களுள் தலையானது பிரதானமாக வாவதுபோல, வேதங்களுள் யஜுஸ் ஸானது பிரதானமாக வாவதால் இது தலையாகச் சொல்லப்பட்டிருக்கிறது. எக்காரணம் பற்றி வேதங்களுள் யஜுஸ்ஸானது பிரதானமாக வாகின்றது, எனின்? கூறுவாம். யாகாதிகளில் सन्निपत्योपकारकமாக (அதாவது யாகாதிகளின் ஸ்வரூபத்திற்குபகாரியான அங்கமாக) இந்த யஜுஸ்ஸிருப்பதே அதன் காரணமாகும். அதை விளக்குவாம். இந்த யஜுர்வேதமானது வேதத்தின் முக்கிய நோக்கமாக வானதும் "द्रव्यदेवते यागस्य स्वरूपम्=திரவ்யம், தேவதை இரண்டுமே யாகத்தின் ஸ்வரூபமாகவாகும்" என்றபடி தேவதையை ஸ்வரூபமாக வுடையதுமான யாகத்தில் அதன் ஸ்வரூபமாகவான தேவதையைக் குறித்து स्वाहा என்பதைச் சொல்லி நேரில் ஹவிர்த்தானஞ் செய்வதிலுபயோகப்படுவதாலும், மற்றெல்லாவற்றைக் காட்டிலும் பிரதானமாக வாகின்றது. शस्त्रात्मिका ऋक्, स्तोत्रात्मकं साम, என்றபடி சஸ்த்ரரூபமாகவும், ஸ்தோத்திரரூபமாகவும் இருக்கின்ற, ருக், ஸாம ங்கங்கள் आरादुपकारकமாக (அதாவது: பரம்பரையாயுபகாரகமாக) இருப்பதால் அப்பிரதானங்களாக வாகின்றன என்று கொள்ளவும்.

சங்கை—தேவதையை யுத்தேசித்து திரவ்யத்யாகரூபமான யாகத்தின் ஸ்வரூபோத்பத்தியானது மந்திரமில்லாமலே ஸம்பவிக்கலாம், ஆனல் அதனல் அபூர்வமென்பது உண்டாக வேண்டுமானல் மட்டும் மந்திரமில்லாமல் அபூர்வம் உண்டாவதில்லை. ஆகவே ருக்கும், ஸாமங்களும் எப்படியோ, அப்படியே யஜுஸ்ஸும் அதிருஷ்டார்த்தத்வத்தில் (அதிருஷ்டத்தை யுண்டுபண்ணுவதில்)உபயோகப்படுவதால்இதையும் ருக்,ஸாமங்களைப் போல அப்பிரதானமாகத்தான் சொல்ல வேண்டிவருவதுடன் "वेदानां सामवेदोस्मि வேதங்களுள் ஸாமவேதமாக நானிருக்கிறேன்" என்ற கீதாசாரியனுடைய உபதேசத்தின்றும் ஸாமவேதத்திற்கே பிராதான்யம் சொல்லவேண்டுவதும் அவசியமாகி விடுகின்றமையின் யஜுஸ்ஸைப் பிரதானமாகச் சொன்னது எவ்விதம் பொருந்தும் எனின் ?

உத்தரம்—वाचनिकी वा शिर आदिकल्पना सर्वत्र ॥ "சிரஸ்ஸாகயஜுஸ்ஸைக் கல்பிக்கவேண்டும்". என்று இதேஉபநிஷத்தில் यजुरेव शिरः என்ற வசனமிருப்பதைக் கொண்டும், ருக்கை தக்ஷிணபக்ஷமாகவும், ஸாமத்தை உத்தரபக்ஷமாகவும், அதர்வாங்கிரஸ்ஸை புச்சமாகவும் வசனம் கூறியிருப்பதைக்கொண்டும், அவ்விதமே கற்பனை செய்து உபாஸிக்வேண்டுமே யொழிய வேறு விதமாக கற்பித்து உபாஸனைசெய்தல் தகாதென்றும் கொள்ளவும்.

சங்கை—யஜுஸ்ஸானது கேவலம் சப்தராசி விசேஷமென்பது பிரஸித்தம். சப்தராசிவிசேஷமோ மனோமயகோசத்திற்கு அவயவமானதன்று. முன்பின்னுள்ள கோசங்களிலோ அதனதன் அவயவங்களையே தலைமுதலிய அவயவங்களாகக் கல்பனை செய்யப்பட்டிருக்கிறது. இவ்வித மிருக்க யஜுஸ்ஸைச் சிரஸ்ஸாகவும், மற்றதை மற்ற அவயவமாகவும் கலபித்தது எவ்விதம் பொருந்தும்.

உத்தரம்—"யஜுராதிகளை மனோமயனுக்குத் தலைமுதலிய அவயவங்களாகக் கல்பித்தே உபாஸிக்க வேண்டும்" என்ற சாஸ்திரவிதியை யனுஸரித்து, மனோவிருத்தி விசேஷங்களே வேதங்களென்றும், மனோவிருத்தி விசேஷங்களான அந்த வேதங்கள்

மனோமயாத்மாவுக்கு தலைமுதலிய அவயவங்களாகின்றன வென்றும், பிரமாண பூதமான சுருதி சொல்லியிருப்பதைக் கொண்டு நாம் நிச்சயம் செய்வதால் மேற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. அதை விளக்குவாம்—தாலுமுதலிய ஸ்தானங்களில் வாயுவின் அபிகாத ரூபமான அநுகூலப் பிரயத்தினத்தினால் உண்டுபண்ணப்பட்ட நாதம்(த்வனி) அதனால்பிரகாசப்படுத்தப்படும் உதாத்தாதிஸ்வர யுக்தங்களான வர்ணங்கள், இவைகள் மூலமுண்டாகின்ற பதங்கள், வாக்கியங்கள் ஆகியவற்றை விஷயமாகவுடையதும், அந்த வர்ண,பத, வாக்கியங்களில் முன்சொன்னபடி அநியதாக்ஷர பாதாவஸானத்வ ஸங்கல்பரூபமானதும், "இதுயஜுர்வேதம்"என பாவிக்கப்பட்டதும், சுரோத்திரமாகிற கரணத்தை துவாரமாகவுடையதும், யஜுஸ் என்ற ஸங்கேதத்துடன் கூடியதுமான மனோவிருத்தி யாதுண்டோ, அதுவே யஜுஸ் என்று சொல்லப்படுகின்றது. ருக்கும், ஸாமமும், அதர்வவேதமும் இவ்விதமே தானாகும். இவ்வித மனோவிருத்தி ரூபமாக வேதமாகும்பொழுது மனோவிருத்தியின் ஆவிருத்தியே வேதாவிருத்தியாக ஆவதால் "மந்திரஜபமானது மானஸம்" என்று சொன்னதும் பொருத்தமுள்ளதாகவே யாகின்றது. இவ்விதம் வேதங்களை மானஸக்ரியாரூபங்களாக ஒப்பாவிடில் ஆவிருத்திக்கு விஷயமாக வேதங்களாகாமலிருப்பதன் மூலம் குடம் முதலியவற்றைப் போல மந்திராவிருத்தி செய்ய முடியாமலாகி விடுவதினின்றும், "மந்திரஜபமானது மானஸம்" என்று சொன்னதும் பொருந்தாததாக ஆகிவிடும். மந்திராவிருத்தியோ வெகுவாக கர்மங்களில் விதிக்கப்பட்டு மிருக்கின்றது. ஆகவே இதுவரை சொன்னதிலிருந்து மந்திரங்கள் மனோவிருத்தி ரூபமாகவாவதாலும் அவற்றுள் ஒன்றான யஜுஸ்ஸும் மனோவிருத்தியாகவாகி, மனோமயாத்மாவினுடைய அவயவமாகி விடுவதாலும், யஜுஸ் முதலியவற்றை மனோமயாத்மாவினுடைய தலைமுதலிய அவயவமாகச்சொன்னது முன்பின்னுள்ள கோசங்களிற் போலவே மிக்கப் பொருத்தமானதாகவே தானாகிவிடுகிறது என்றேற்பட்டது.

சங்கை—வேதாக்ஷரங்களை மனோவிருத்திரூபமாகக் கொண்டு மனோவிருத்தியின் ஆவிருத்தியே வேதாக்ஷரங்களின் ஆவிருத்தி

யாகும் என ஏன் இவ்வளவு தூரம் கிலேசப்படவேண்டும். வெளியிலுள்ள மந்திர விஷயஸ்மிருதி (நினைவு) யின் ஆவிருத்தியையே மந்திராவிருத்தியாகச் சுருவாய்ப் பொருள்கொள்ளக் கூடாதோ வெனின் ?

உத்தரம்—அவ்விதம் கொள்ளுவதற்கில்லை. ஏனெனில் இவ்விதங் கொண்டால் அது ஸ்மிருதியின் ஆவிருத்தியாக ஆகுமேயொழிய முக்கியமான மந்திராவிருத்தியாக ஒருபொழுதும் ஆகாது. **त्रिः प्रथमामन्वाऽऽह त्रिरुत्तमाम्**=என்றதால் நேரில் ருக்கிற்கே ஆவிருத்தியானது சுருதியி லுபதேசிக்கப் பட்டிருக்கிறது. இவ்விதமிருக்க ருக்கானது ஆவிருத்திக்கு விஷயமாகாமல், ருக்விஷயமான ஸ்மிருதியின் ஆவிருத்தியே செய்யப்படும் பொழுது **त्रिः प्रथमामन्वाह** என்றதால் விதிக்கப்பட்ட முக்கியமான ருகாவிருத்தியானது விடப்பட்டதாக ஆகிவிடும் என்பதே அதன் காரணமாகும்.

ஆனல் மந்திரங்களை மனோவிருத்தி ரூபமாகக் கொள்ளும் பக்ஷத்தில் மனோவிருத்தியானது க்ஷணிகமாகையால் வேதங்களும் க்ஷணிகங்களாகி அனித்யங்களாகவேதான் ஆகிவிடும். "**अत एव च नित्यत्वम्**" என்ற ஸூத்திரமும் **वाचा विरूप नित्यया** என்ற சுருதியும் வேதங்களை நித்யங்களென்றே உபதேசிக்கின்றன. ஆகவே இந்த பக்ஷத்தில் வேத நித்யத்வத்தை எப்படி ஸாதிக்கமுடியும் எனலாம். அதனுண்மை பின்வருமாறு—மனோவிருத்தி விசேஷானுரக்தமான சைதன்னியமே வேதங்களென்கிறோம். எந்த மனோவிருத்தியினல் வெளியிலுள்ள வேதமானது விஷயமாக்க (கிரஹிக்க)ப் படுகின்றதோ அத்தகைய மனோவிருத்யனுகத சைதன்னியத்தாலுமே அந்த வேதம் விஷயமாக்க (கிரஹிக்க)ப் படலாம். ஆனதுபற்றி பிரஸித்த வேத விஷயகமான சைதன்யமே முக்கிய வேதமாகச் சொல்லப்படுகிறது. ஆகவே சைதன்னியத்திற்கும், அதன் உபாதி பூதமான மனோவிருத்திக்கும் கல்பிதமான தாதாத்ம்ய (இணைபிரியாத) ஸம்பந்தமிருப்பதால் வேதங்களின் ஸிருஷ்டிப் பிரளயாதிகளைச் சாஸ்திரம் ஆங்காங்கு சொல்லியிருப்பதும், முன்னர் சொன்ன ஆவிருத்யாதிகளுமான யாவும் மனோவிருத்தி தாதாத்ம்யத்தை யடைந்த சைதன்னியத்திற்கே

வருவதுபற்றி வேதாநித்யத்வ சங்கைக் கிடமில்லாமலாகி விடு கின்றமையின் வேதநித்யத்வம் யுக்தியுக்தமாகவும் ஆகிவிடுகின்றது என்று மேற்பட்டது. இவ்விடத்தில் பொதுவாய் எல்லா வேதங்களும் விருத்தி தாதாத்ம்யாபன்ன சைதன்யரூபமாக இருந்த போதிலும், உபாதி பூதமான விருத்தியின் பேதத்தை யனுஸரித்து யஜுஸ் என்றும், ருக் என்றும், ஸாம என்றும், அதர்வா என்றும் வேதங்களில் பேதவியவஹார மேற்படுவதாகவும் ஊஹித்தறிய வேண்டும். இவ்விதம் சைதன்னிய ரூபமாக வேதத்தை யொப்பாமல், மனோவிருத்தி மாத்திரமாகவோ, சப்த மாத்திரமாகவோ வேதத்தை ஒப்பினால் ரூபாதிகளைப் போல வேதங்களும் விஷயங்களாக வாவதிலிருந்து ஜடவஸ்துவாகி அநித்யங்களாகவும் ஆகிவிடும். अतोऽन्यदार्तम् என்ற சுருதியோ சைதன்னியத்தைவிட மற்றெல்லா வஸ்துவிற்கும் அனித்யத்வத்தை ஸ்தாபித்து மிருக்கிறது. ஆகவே வெதங்களை சைதன்யமாக ஒப்பாததிலிருந்து அநித்யங்கள் என்றேற்படும்படி பொருள் சொல்லுவது யுக்தமாக ஆகாது. மேலும், "सर्वे वेदा यत्रैकं भवन्ति स मानसीन आत्मा जनानाम् என நித்யாத்மாவுடன் ஏகத்வத்தைச் சொல்லுகின்றதான சுருதியானது ருகாதிகளை நித்யமாக ஒப்புவதனால் ஸமஞ்ஜஸமாகவும் ஆகின்றது. மேலும், "ऋचोऽक्षरे परमे व्योमन्यस्मिन्देवा अधिविश्वे निषेदुः। परमे=ஸர்வகாரணமாக வானதும், व्योमन् விபுத்வாதிகளால் ஆகாசத்திற் கொப்பானதும், अक्षरे=நாசமற்றதுமானयस्मिन्=எந்த பிரும்மத்தினிடத்தில் विश्वेदेवाः=பிரும்மாதி தேவர்கள் யாவரும் अधिनिषेदुः இருக்கின்றனரோ, அதாவது—ஸர்வ ஸம்ஸாராஸ்பிருஷ்டமான பிரும்மத்தினிடத்தில் ஸ்வரூபமாக இருக்கின்றனரோ என்று பொருள். (तथैव அவ்விதமே) ऋचो=வேதங்களும் ஸ்வரூபங்களாக இருக்கின்றன" என்ற மந்திரமும் வேதங்கள் சைதன்னிய ரூபமென்பதைத் தெளிவாயுபதேசித்து மிருக்கின்றது. आदेशः=பிராம்மண பாகமானது आत्मा=நடுவுடலாகிறது. "இதை இவ்விதம் செய்ய வேண்டும்" என கர்த்தவ்ய விசேஷங்களை உபதேசிப்பதுபற்றி பிராம்மணபாகமானது ஆதேச சப்தத்தால் சொல்லப்பட்டது. अथर्वाङ्गिरसः पुच्छं प्रतिष्ठा=அதர்வா என்ற மஹருஷியாலும், அங்

கிரஸ் என்ற மஹாருஷியாலும் தபோபலத்தால் கண்டுபிடிக்கப் பட்ட மந்திரங்களும், பிராம்மண பாகங்களும், **पुच्छं**=புச்சம் போல **प्रतिष्ठा**=நிலைத்தலுக்குக் காரணங்களாகின்றன. மேற்கூறிய பாகங்கள் தோஷ நிவர்த்தகமான சாந்தி கர்மாவென்ன, சரீரபுஷ்டியை யுண்டாக்கும் பௌஷ்டிக கர்மாவென்ன இவைகளாகிற பிரதிஷ்டா ஹேதுவான கர்மங்களையே பிரதானமாகக் கொண்டிருப்பதால் இவை புச்சமாகவும், பிரதிஷ்டையாகவும் சொல்லப்பட்டன. **तदप्येष श्लोको भवति**=மனோமயாத்ம பிரகாசகமாகப் பின்வரும் மந்திரமும் இருக்கிறது.

சங்கர பாஷ்யப்படி 3வது அனுவாகம் முற்றிற்று.

## வித்யாரண்ய தீபிகை.

**(मन्त्र:) प्राणं देवा............तदप्येष श्लोको भवति ॥**

(ப—ரை) **देवाः**=ஸாத்விகர்களான அக்னீந்திராதி தேவர்களும் **मनुष्याः**=ராஜஸர்களான பிராம்மண க்ஷத்திரியாதிகளான மனிதர்களும், **पशवश्च**=தாமஸங்களான கோ, அச்வம் முதலிய பசுக்களும் (**ये**=எவைகளுண்டோ **ते सर्वेऽपि**=அவர்கள் யாவரும்) **प्राणम्**=தனது தேஹமத்யவர்த்தியான பிராணவாயுவை **अनु**=அநுஸரித்து **प्राणन्ति**=சேஷ்டிக்கின்றனர். எந்தப் பிராணன் தேவமனுஷிய பசுவாதிதேஹங்களுக்கு சேஷ்டையை உண்டு பண்ணுகின்றதோ அந்த **प्राणो हि**=பிராணன் அன்றோ **भूतानाम्**=ஸர்வ பிராணிகளுக்கும் **आयुः**=ஆயுர் ஹேதுவாகின்றது. **तस्मात्सर्वायुषमुच्यते**=ஆனது பற்றி ஸர்வாயுஷமெனப் பெயரை யடைகின்றது. மேலும், **ये**=பிராணமய கோசக்ஞான மாத்திரத்தினால் அன்னமயத்திலுள்ள ஆத்மவாஸனையை விடுவதற்கு அசக்தர்களாகின்ற எந்தப் புருஷர்கள், அன்னமயாத்ம வாஸனாநிவிருத்திக்கு வேண்டி **प्राणं ब्रह्मोपासते**=பிராணோபாதிகனை பிரும்மத்தை யுபாஸிக்கின்றனரோ **ते**=அவர்கள் ஆத்யாத்மிக பிராணோபாதிக பிரும்மோபாஸனத்தால் இந்த ஜன்மத்திலுள்ள அபமிருத்யு பரிஹாரத்தை யடைந்தவர்களாய் **सर्वमेव आयुः**=எல்லா ஆயுஸ்ஸையும் **यन्ति**=அடைகின்றனர். ஆதிதைவிக ஹிரண்யகர்ப்போபாஸனத்தாலேயே ஜன்மாந்தரத்தில் ஸ்வயமே

ஹிரண்யகர்ப்ப ரூபர்களாக இருந்து கொண்டு ஸர்வாயுஸ்ஸையு மடைகின்றனர் என்றும் கருத்துக்கொள்ள வேண்டும். பிராண மயகோசத்தைப் பிரசம்ஸை (புகழ்) செய்யவேண்டி **प्राणोहि भूतानामायु:** எனமுன்னர் சொல்லப்பட்ட வாக்கியத்தையே பிராணோ பாஸ்தியைப் புகழவேண்டி சுருதியானது **प्राणो हि भूतानामायुस्तस्मात्सर्वायुषमुच्यते** என்றதால் திரும்பவும் படிக்கின்றது. இனி பிராணமயோப தேசத்தினுடைய தாத்பரியம் காண்பிக்கப் படு கின்றது **य:**=இப்பொழுது சொல்லப்பட்டயாதொரு பிராணமயனு ண்டோ(**स**)**एष एव तस्य पूर्वस्य**=அந்த இந்தப் பிராணமயனே அந்த முன்னருள்ள அன்னமயாத்மாவினுடைய **शारीर आत्मा**=சரீரத்தி லுள்ள ஆத்மாவாகிறான். எப்பொழுது பிராணமயனிடத்தில் ஆத் மத்வமானது திருடமானவாஸனையுடன் கூடினதாகவாகின்றதோ அப்பொழுது அன்னமயனிடத்திலிருந்த ஆத்மத்வ பிரமமானது விலகி விடுகின்றது. மேலும், ஒருசரீரத்தில் இரண்டு ஆத்மா இருக்க முடியாதானது பற்றி அன்னமயன் சரீரம் என்றும் பிராணமயன் அதன் ஆத்மா வென்றதுமான நிச்சயமானது உண்டாகிவிடுகின்றது என்று பொருள்.

இனி அன்னமய கோசத்தினின்றும் விலகின அதிகாரிக்கு பிராணமயத்திற்கும் உள்ளில் பிரவேசம் ஏற்படவேண்டி மனோ மய கோசமுபதேசிக்கப்படுகின்றது.

**(मन्त्र:) तस्माद्वा एतस्मात्प्राणमयात् । अन्योऽन्तर आत्मा मनोमय: । तेनैष पूर्ण: ॥**

அந்த இந்த பிராணமயனைக்காட்டிலும் வேறாயும், அதற்கும் உள்ளிருக்கின்றதுமான ஆத்மா மனோமயனாகிறான். இங்குபின்னர் எழுதப்படுவதையும் முக்கியமாகக் கவனித்துக்கொள்ள வேண்டு ம். அதாவது—ஜகத்திற்குபாதான காரணமானதும், முக்குணவடி வமானதுமான மாயையானது பிரும்மத்தை யாசிரயித்திருக்கின் றது. அந்த மாயையினிடமுள்ள தமோகுணபாகமானது அன்ன மயகோச காரண மாகின்றமையின் அந்த அன்னமய கோசத்தில் தமோகுணகாரியமான ஜாட்யமே அதிகமாகக் காணக்கிடக் கின்றதேயொழிய கிரியாசக்தியோ, ஞானசக்தியோ அங்கு

காணப்படுவதில்லை. மேலும் அந்த மாயையினிடமுள்ள ரஜோகுணபாகமானது பிராணமய கோசத்திற்குக் காரணமாகவாவதால் பிராணமய கோசத்தில் கிரியாசக்தியானது அதிகம் காணக்கிடக்கின்றது. அதுபோலவே. மாயையினிடமுள்ள ஸத்வகுண பாகமானது மனோமய, விக்ஞானமய, ஆனந்தமய மாகிற மூன்று கோசங்களுக்கும் காரணமாகின்றமைபற்றி அம்மூன்று கோசங்ளிலும் ஞானசக்தியானது அதிகம் காணக்கிடக்கின்றது. அதுடன் தமோகுணத்துடன் கலந்த ஸத்வகுணமானது மனோமயகாரணமாகின்றது. ஆனது பற்றியே மனோமயத்தில் தாமஸபாகத்தின் தர்மங்களான ராகத்வேஷாதிகள் காணக்கிடக்கின்றன. இவ்விதமே ரஜோகுணத்துடன் கலந்த ஸத்வகுணமானது விக்ஞானமய கோசத்திற்குக் காரணமாக வாகின்றது. ஆனதுபற்றியே விக்ஞானமயனிடத்தில் வைதிகமான யாகாதிகளுடையவும், கிருஷியினுடையவும், லௌகிகமான காரியங்களுடையவும் கர்த்திருத்வமானது காணப்படுகின்றது. இதுபோலவே மாயையினிடமுள்ள சுத்த ஸத்வகுணமானது ஆனந்தமய காரணமாகவாகின்றது. ஆனதுபற்றியே ஆனந்தமயனிடத்தில் பிரியம், மோதம், பிரமோதம், ஆனந்தம் முதலிய சப்தங்களாற் சொல்லப்படுகின்ற சுகாதிகள் காணக்கிடக்கின்றன. க்ஞானசக்தி யென்பது தனது ஸ்வரூபத்தால் ஒன்று தானாயினும், அதனிடையேயுள்ள வேற்றுமையினால் கரணசக்தி என்றும், கர்த்ருசக்தி என்றும், போக்திருசக்தி என்றும் மூன்றுவிதமான பிரிவை அது அடைகின்றது. அவற்றுள், கரணசக்தியி னின்றும் மனதுண்டாயிற்று, அதன் விகாரமான காம, ஸங்கல்பாதி விருத்தி ஸமூஹமானது மனோமயன் எனப்படும். காமம், ஸங்கல்பம், விசிகித்ஸா, சிரத்தை, அசிரத்தை, தைரியம், அதைரியம், லஜ்ஜை, புத்தி, பயம், திருஷ்ணை, ஸ்னேஹம், ராகம், லோபம் முதலியன மனோவிருத்திகளாகும் என்பதாம்.

ஆகவே அந்த இந்த மனோமயன் பிராணமயனுக்கும் உள்ளிலுள்ளவன். ஆனது பற்றியேதான் மிக்கச் சமீபத்திருப்பது காரணமாய் ஸர்வாந்தரமான ஆத்மசைதன்யமானது மனதில்பிரகாசத்தை யடைகின்றது. அத்தகைய சைதன்யாபி வியக்தியைக்

கொண்டுதான் மனோமயனுக்கு ஆத்மத்வ மேற்படுகின்றது. அந்த ஆப்யந்தரனை மனோமயாத்மாவினால் வெளியிலுள்ள பிராணமயன் பூர்ணனாக (நிறைவுபெற்றவனாக) ஆகிறான். மேலும், கிரியா சக்தியானது கால் முதல் தலைவரை எவ்விதம் நிறைந்து நிற்கின்றதோ, க்ஞான சக்தியும் அவ்விதமே தான் நிறைந்து நிற்கின்றது. இங்கு அந்தக் கரணமான மனதை மட்டும் சொல்லியிருந்த போதிலும், வாக், பாணி, பாத, பாயு, உபஸ்தம் என்ற கர்மேந்திரியங்களும், த்வக், சக்ஷுஸ், சுரோத்ரம், ஜிஹ்வா, க்ராணம், என்ற ஞானேந்திரியங்களும் சொல்லப்பட்டன வாகவே கொண்டு இந்த கர்மேந்திரிய, ஞானேந்திரியங்களும் மனோமயகோசத்திலேயே சேர்ந்தன வென்றும் கண்டு கொள்ள வேண்டும். ஆனால் இதுவரை கூறப்பட்ட பதினொறு இந்திரியங்களுள் மனது முக்கியமாதலாலும், வாகாதி இந்திரியங்கள் மனதை முன்னிட்டே தத்தமது தொழிலைச் செய்வதாலும், விவக்ஷா, திதிருக்ஷா, சுஸ்ரூஷா, ரூபமானதும், ப்ராக்ஞாசப்தத்தாற் சொல்லப்படுவதுமான மனோவிருத்தியைக் கொண்டே வியவஹாரத்தைச் செய்வதாலுமே மனது பிரதானமாகின்றமையின், பிரதானமான மனதின் பெயரைக் கொண்டே மனோமயன் என இந்த கோசமானது சொல்லப்படுகின்றது என்றும் கொள்ள வேண்டும்.

இவ்விதம் ஸர்வேந்திரிய ஸமஷ்டிரூபமான மனோமய கோசத்தில் ஸ்வாத்மத்வத்தை உபதேசித்து, அதையே மனதில் திருடமாக்கவேண்டி மனோமயோபாஸனத்தை விதிக்கவெண்ணங் கொண்ட சுருதியானது உபாஸ்யஸ்வரூபத்தை உபதேசிக்கத் தொடங்கு கின்றது.

(मन्त्र:) स वा एष पुरुषविध एव.........प्रतिष्ठा ॥

எந்த மனோமயன் பிராணமயனுக்கும் உள்ளிலிருக்கின்ற ஆத்மா வாக உபதேசிக்கப்பட்டானோ **स एष एव**=அந்த இவனே அதாவது: "நான் ஸங்கல்பிக்கிறேன்" என அனுபவிக்கப்படும் இவனே **पुरुषविध एव**=புருஷாகார முள்ளவனாகவே ஆகிறான். அதாவது: உபாஸனைக்கு வேண்டி ஐந்து அவயவத்துடன் கூடின

புருஷாகாரனாக ஆகிறான் என்று கருத்து. உருக்கி மூசையில் வார்க்கப்பட்ட தாம்பிரம் போலவே பிராணமயாத்மாவினுடைய புருஷாகாரத்தை யனுஸரித்து இவனும் புருஷாகார முள்ளவனாகிறான். இங்கு இவனது தலையாகச் சொல்லப்பட்ட யஜுஸ்ஸும், வலதுபக்கத்து இரக்கையாகச் சொல்லப்பட்ட ருக்கும், இடதுபக்கத்து இரக்கையாகச் சொல்லப்பட்ட ஸாமமும் வேதத்திற் சேர்ந்துள்ள மந்திரங்களாகும். आदेशः = பிராம்மண பாகமானது आत्मा = நடுவுடலாகும். अथर्वाङ्गिरसः = அதர்வா என்றும் அங்கிரஸ் என்றும் சொல்லப்படும் மஹருஷியால் தபோமஹிமையால் கண்டு பிடிக்கப்பட்ட நான்காவது வேதத்திலமைந்துள்ள மந்திரங்கள் புச்சமாகவும் பிரதிஷ்டை யாகவும் ஆகும். இம்மந்திரங்கள் இம்மையிலுள்ள இஷ்டப் பிராப்திக்கும், அனிஷ்ட பரிஹாரத்திற்கும் ஸாதனங்க ளாகின்றமையின் பிரதிஷ்டை எனப்பட்டன.

இங்கு மனோமயனுடைய தலைமுதலியனவாகச்சொல்லப்பட்ட யஜுஸ்ஸாதிகள் சப்தரூபங்களாக இருப்பதுபற்றி மனோரூபங்களாக ஆகாவாயினும் அவ்விஷயமான ஆலோசனை செய்யும் மனோவிருத்தி விசேஷங்கள் யஜுஸ் முதலியசப்தங்களாற் சொல்லப்பட்டன வென்றுகொள்ள வேண்டும்.

முன்கோசங்களிற் போலவே மனோமயகோசவிஷயத்திலும் அதை விளக்கும் மந்திர மிருக்கின்றது.

வித்யாரண்யதீபிகை முற்றிற்று.

## விசிஷ்டாத்வைதம்.

**(मन्त्रः) प्राणं देवा अनुप्राणन्ति...तदप्येष श्लोको भवति ॥**

(ப—ரை) தேவர், மனிதர், பசு, இவைகள் பிராணனை அநுஸரித்தே ஜீவிக்கின்றன. हि=யாதுகாரணத்தால் प्राणः=பிராணன் भूतानाम्=பிராணிகளுக்கு आयुः=ஆயுஸ்ஸாகவாகின்றதோ, तस्मात्= அக்காரணத்தால் सर्वायुषम्=எல்லாவற்றிற்கும் ஆயுஸ்ஸாக उच्यते=சொல்லப்பட்டது. "यावद्ध्यस्मिन् शरीरे प्राणो वसति तावदायुः" எதுவரை இந்த சரீரத்தில் பிராணன் வஸிக்கின்றதோ அதுவரை

தான் ஆயுஸ்" என்ற வேறு சுருதியில் பிராணனுக்கு உச்வாஸ நிஶ்வாஸ ரூபமான ஸர்வபூதங்களின் ஆயுர் ஹேதுத்வமானது சொல்லப்பட்டிருப்பதைக் கொண்டு இங்கும் இவ்விதமுபதேசித்திருப்பதாகக் கொள்ளவும். **ये प्राणं ब्रह्मोपासते**= எவர்கள் பிராணனிடத்தில் பிரும்மபுத்தியைச் செய்கின்றனரோ **ते**=அவர்கள் **सर्वमेवाऽऽयु:**=எல்லா ஆயுஸ்ஸையும் **यन्ति**=அடைகின்றனர். இவ்விதம் பிராணமயனிடத்தில் ஆகாசம் முதல் அன்னமயாந்தமானவற்றிர்க்கு ஆத்மத்வபுத்தியை உண்டாக்கி அந்த புத்தியை விலக்கவேண்டி **तस्यैष एव शारीर आत्मा य: पूर्वस्य**=என்றதால் சுருதி ஆரம்பம் செய்கிறது. **पूर्वस्य**=முன்னுள்ள அன்னமயனுக்கு **य:**= எவன் ஆத்மாவோ **एष एव**=இவனே **तस्य**=அந்தப் பிராணமயனுக்கும் **शारीर आत्मा**=சரீர ப்ரதிஸம்பந்தியான ஆத்மா வாகின்றான். இதனால் இங்குள்ள ஆத்ம சப்தத்திற்கு ஸ்வரூபார்த்தத்துவப் பிராந்தியானது நீக்கப்பட்டதாக வாகின்றது. ஆகவே அன்னமய, பிராணமயங்கள் இரண்டும் ஒரேவிதமான ஸ்வரூபமுடையவைகளாக யாகுமேயொழிய அன்னமயனுக்குப் பிராணமயன் ஆத்மாவாக ஒருபொழுதும் ஆகமாட்டான் என்றும் ஏற்பட்டது. அங்ஙனமாயின் அன்னமயப் பிராணமயன்களுக்கு யார் ஆத்மா எனின்? அதை **तस्माद्वा एतस्मात्प्राणमयात्** என்றதால் சுருதி உபதேசிக்கத் தொடங்குகின்றது. இங்கு **मनोमय:** என்றவிடத்தில் **प्राचुर्यार्थे मयट्** எனக் கொள்ளவேண்டும். ஏனெனில், மனது, புத்தி, அஹங்காரம், சித்தம், என்ற அந்தக்காரணவிருத்திகளில் மனோவிருத்தியே அதிகமாயிருத்தலே அதன் காரணமாகும். **तेनैष पूर्ण:**=என்ற பாகத்திற்கு முன்போலவே பொருள் கண்டுகொள்ளவும். **तस्य यजुरेव शिर:**–**तस्य**=அந்த அந்தக்கரணத்திற்கு **यजुरेव**=யஜுர்வேதவிஷயமான க்ஞானத்தை யுண்டு பண்ணுகின்ற மனோவியாபாரம் யாதுண்டோ அதுவே **शिर:**= தலையாகின்றதெனப் பொருள் கொள்ளவேண்டும். ஏனெனில் முக்கியார்த்தமான யஜுர்வேதத்திற்கு மனஸ்ஸம்பந்த மின்மையால் மனஸ் சிரஸ்த்வரூபணமானது ஸம்பவிக்காததாக ஆகக்கூடும் என்பதே அதன் காரணமாகும். இவ்விதமே மேலுள்ளவிடங்களிலும் காண்க. **आदेश आत्मा** "இதைச் செய்" "இதைச் செய்யாதே" என விதிவிலக்கு ரூபமான ரஹஸ்யானுசாஸனம் யா

துண்டோ அதுவே **आदेश:** எனப்படும். இந்த விடத்தில் அந்த அநுசாஸனத்தாலுண்டான ஞானத்திற்குஹேதுவாக ஆன அந்தக்கரண விருத்தியாதுண்டோ அதுவே ஆதேச சப்தத்தாற் சொல்லப்பட்டது. **अथर्वांगिरस: पुच्छं प्रतिष्ठा ।** அதர்வர் அங்கிரஸ் இவர்களால் காணப்பட்ட மந்திரங்கள் பிரதிஷ்டைக்கு ஹேது பூதமான புச்சமாக வாகின்றன. இவ்விடத்திலும் அதர்வாங்கிரஸ் சப்தமானது அவற்றாலுண்டான ஞானத்திற்கு ஹேதுவாகவான மனோ வியாபாரமானது யாதுண்டோ அதையே போதிக்கின்றதெனக் கொள்ளல் வேண்டும். (எ—று)

விசிஷ்டாத்வைதமதப்படி 3-வது அநுவாகம் முற்றிற்று.

---

சங்கரபகவத்பாதபாஷ்யப்படி 4வது அநுவாகம்.

**(मन्त्र:) यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह । आनन्दं ब्रह्मणो विद्वान् । नबिभेति कदाचनेति । तस्यैष एव शारीर आत्मा । य: पूर्वस्य । तस्माद्वा एतस्मान्मनोमयात् । अन्योन्तर आत्मा विज्ञानमय:। तेनैष पूर्ण:। सवा एषपुरुषविध एव । तस्य पुरुषविधताम् । अन्वयं पुरुषविध: । तस्य श्रद्धैव शिर: । ऋतं दक्षिण: पक्ष: । सत्यमुत्तर: पक्ष: । योग आत्मा । मह: पुच्छं प्रतिष्ठा । तदप्येष श्लोको भवति ॥ १ ॥**

(ப—ரை) **यत:**=ஏகரஸமான ஆனந்தத்தினின்றும், **मनसा सह**=மனத்துடன் கூட **वाच:**=சப்தங்கள் (**तम्**=அந்த வஸ்துவை) **अप्राप्य**= அடையாமல் **निवर्तन्ते**=திரும்புகின்றனவோ (**तम्**=அந்த) **ब्रह्मण:**= பிரும்மத்தின் ஸ்வரூபபூதமான **आनन्दम्**= ஆனந்தத்தை **विद्वान्**= மனோமயனுக்கு சிரஸ்பக்ஷாதிரூபமாகக்கல்பித்து உபாஸிக்கின்றவன் **कदाचन**= ஒருபொழுதும் **न बिभेति**=பயத்தையடைவதில்லை. அல்லது **मनोमयाऽऽत्मप्रकाशक: श्लोक: कथ्यते** மனோமயாத்மப்ரகாசகமான சுலோகம் படிக்கப்படுகின்றது என மூன்றுவது அநுவாகத்தின் முடிவில் பாஷ்யத்திற் சொல்லப்பட்டிருப்பதால் **यतोवाचो......नेति** என்ற இந்தமந்திரமானது மனோமயாத்மப்ரகாசகமாகவே ஆகின்றதென்று பொருள்கொள்ளுவதும்

பொருந்தும். அதாவது:—**यत:**=ஸகுணப்பிரும்மமாக உபாஸிக்கப்படுகின்ற யாதொரு மனோமயனிடமிருந்து **वाच:**=வாக்குகள் **मनसासह**= மனோவிருத்தியுடன் கூட (**तम्**= அந்த மனோமயனை) **अप्राप्य**=அடையாமல் **निवर्तन्ते**=திரும்புகின்றனவோ (**तस्य**=அந்த) **ब्रह्मण:**= மனோமயப்பிரும்மத்தினுடைய (**स्वरूपं**= ஸ்வரூபத்தை) **विद्वान्**=உபாஸிக்கின்றவன் (**क्रमेण**=முறையே) **आनन्दम्**=ஆனந்தத்தை (**प्राप्य**=அடைந்து) **कदाचन**=ஒருபொழுதும் **न बिभेति**=பயத்தைத் அடைவதில்லை என்பதாம்.

ஆனல் இந்த இரண்டாவது பொருள் கூறியவிடத்தில் பின் வருமாறு அதைப்பகுத்தறியவேண்டும். அதாவது: — கூறுவாம். இங்குள்ள மனோமயகோசத்தில் ஸகுணப்பிரும்மதிருஷ்டி செய்யப்படுவதால் அந்த மனோமயகோசமே மனோவாக்குகளுக்கு எட்டாததாக விருகின்றது. அதைவிளக்குவாம்—பொதுவாய் மனதானது ஸாக்ஷிபாஸ்யமானதுபற்றி எப்பொழுதும் அறியப்பட்டதாகவே யிருப்பதால் அறியப்படாததாயும், அறிந்தபின்னர் வேறொன்றால் பாதிக்கப்படாததாயு மிருக்கின்றவஸ்துவைப் போதிக்கும் விஷயத்தில், பிராமாண்ணியத்தை யடைந்த சப்தமானது இம்மனோவிஷயத்தில் பயன்படுவதில்லை யானதுபற்றி இந்தமனது வாக்குக்கு (சப்தத்திற்கு) விஷயமாகாததாக வாகிவிடுகின்றது. அத்துடன் மனதானது தன்னைவிட மற்றொன்றைக் கிரஹிக்குமே யொழிய தன்னைத்தான் கிரஹிக்காதாகையால் மனதிற்கும் விஷயமாகாததாக ஆகிவிடுகின்றது. ஆகவே இந்த மனோமயகோசமானது சப்தம்,மனது இவற்றிற்கு விஷயமாகாததாக வாகிவிடுகின்றதென மந்திரத்திற் கூறப்பட்டிருக்கிறது. ஆகவே இத்தகையமனோமய பிரும்மத்தினுடைய ஸ்வரூபத்தை யறிந்து அதில் ஸகுணப்பிரும்மதிருஷ்டி செய்பவன் முறையே நிர்விசேஷபிரும்மானந்தத்தை யடைந்து எதனின்றும் பயத்தை யடையாதவனுகிறுன். அதாவது:— பயத்தைத்தரும் த்விதீய (இரண்டாவது) பதார்த்தமற்றவனாக வாகிறுன். **तस्य पूर्वस्य**= முன்னருபதேசித்தபிராணமயனுக்கு **य:**=யாதொரு மனோமயனுண்டோ **एष एव**=இவனே **शारीर:**=பிராணமய சரீரத்திலுள்ள **आत्मा**=ஆத்மாவாகிறுன். **तस्माद्वा एतस्मान्मनोमयात्**=அந்த இந்த

மனோமயனைக்காட்டிலும் **अन्यः**=வேறாயும் **अन्तरः**=மனோமயனுக்கும் உள்ளிருக்கின்றவனாயும் **आत्मा**=மனோமயனுக்கு ஆத்மாவாயும் **विज्ञानमयः**=விக்ஞானமயனாகிறான். **तेन**=அந்த விக்ஞானமயாத்மாவினால் **एषः**=இந்த மனோமயாத்மா **पूर्णः**=நிறைவுபெறுகிறான். **सवा एषः**=அந்த இந்த விக்ஞானமயனானவன் **पुरुषविध एव**=புருஷவிதனாகவே ஆகிறான். **तस्य**=மனோமயனுடைய **पुरुषविधतामनु**=புருஷாகாரத்தை யொட்டி **अयं**=இந்த விக்ஞானமயன். **पुरुषविधः**=புருஷாகாரமுள்ளவனாகிறான். **तस्य**=அந்த விக்ஞானமயனுக்கு **श्रद्धैव**=சிரத்தையே **शिरः**=தலையாகவும், **ऋतम्**=ருதமானது **दक्षिणः पक्षः**=வலது பக்கத்து இரக்கையாகவும், **सत्यम्**=ஸத்தியமானது **उत्तरः पक्षः**=இடதுபக்கத்து இரக்கையாகவும் **योगः**=ஸமாதியானது **आत्मा**=நடுவுடலாகவும், **महः**=மஹத்தத்துவமானது **प्रतिष्ठा**=நிலைத்து நிற்றலுக்குக் காரணமான **पुच्छम्**=வாலாகவும் (**भवति** ஆகிறது) **तदप्येष श्लोको भवति**=விக்ஞானமயாத்மவிஷயத்தில் பின்வரும் மந்திரமும் இருக்கிறது. (எ—று)

(தா—ம்) விக்ஞானமயன் மனோமயனுக்கும் உள்ளிருக்கிறான். மனோமயனை வேதஸ்வரூபி எனமுன்னர் சொல்லப்பட்டது. வேதார்த்த விஷயமான நிச்சயாத்மக புத்தியே விக்ஞானம் எனப்படும். நிச்சயமென்பதோ அந்தக்கரணத்தின் தர்மமாகும். ஆகவே ப்ரமாண ஸ்வரூபங்களான நிச்சய விக்ஞானங்களால் உண்டு பண்ணப்பட்டவன் எவனோ அவனே விக்ஞானமயனாகிறான் என்றேற்பட்டது.

சங்கை—மனோமய கோசத்திற்கும், விக்ஞானமய கோசத்திற்கும் உள்ள வேற்றுமை யாது எனின்?

உத்தரம்—கூறுவாம். பொதுவாய் அந்தக்கரணத்தில் ஸம்சயாத்மகவிருத்தி யென்றும், நிச்சயாத்மக விருத்தியென்றும், இரண்டுவித விருத்தி (மாறுதல்) கள் உண்டாகின்றன. அவற்றுள் ஸம்சயாத்மக விருத்தியுடன் கூடிய அந்தக்கரணத்தை மனஸ் என்றும், அத்தகைய விருத்திப் பிரதானனை மனோமயன் என்றும் கொள்ளுவதுடன், நிச்சயாத்மக விருத்தியுடன் கூடிய அந்தக்கரணத்தை விக்ஞான மென்றும், அத்தகைய விருத்திப்

பிரதானனை விக்ஞான மயனென்றும் கொள்ளவேண்டும். ஆகவே அந்தக்கரணத்திலுள்ள அவஸ்தாபேதத்தை யொட்டியே மனோ மயன், விக்ஞானமயன் என வேற்றுமை யேற்படுவதாய் கண்டறியவும். மேலும் மனோமயன் வேதஸ்வரூபன் என்று உபதேசிக்கப்பட்டது. வேதார்த்த விஷயமான நிச்சயாத்மக புத்தியானது விக்ஞானமாகும். அந்த விக்ஞானமோ நிச்சயரூபமாகின்றதுபற்றி அந்தக்கரணத்தின் தர்மமாகின்றது. பிரமாண ரூபங்களான நிஶ்சய விக்ஞானங்களால் உண்டாக்கப்பட்டவனும், நிஶ்சய விக்ஞானமயனுமான ஆத்மா விக்ஞானமயனாகிறான். பிரமாண விக்ஞான பூர்வகமாகவன்றோ யக்ஞாதிகள் செய்யப்படுகின்றன.

**विज्ञानं यज्ञं तनुते** என்று தொடங்கிப் படிக்கப்படும் மந்திரமானது விக்ஞானமயனை யக்ஞாதி ஹேதுவாக சொல்லப்போகிறது. வேதார்த்த நிஶ்சய விக்ஞானமுள்ள அவனுக்கு செய்ய வேண்டிய காரியங்களில் முதலிலுண்டாகின்ற சிரத்தை யாதுண்டோ அந்தசிரத்தையானது, செய்யவேண்டியவை யாவற்றுள்ளும் முதன்மை பெற்றிருப்பதுபற்றி தலைபோலவாகின்றது. ருதம், ஸத்யம் என்பதன் பொருள் முன்னரே சொல்லப்பட்டிருக்கின்றது. இவற்றுள் ருதமானது வலதுபக்கத்து இரக்கையாகவும், ஸத்தியமானது இடதுபக்கத்து இரக்கையாகவும், * ஸமாதியானது நடுவுடலாகவும் ஆகின்றது. தேகத்தின் நடுவுடல் எவனுக்கு வலுவுள்ளதாயிருக்கின்றதோ அவனுடைய தலைமுதலிய அங்கங்கள் ஸர்வகாரியக்ஷமங்களாகவாகின்றனபோலவே ஸமாதிசித்தியுள்ளவனுக்கு சிரத்தை முதலியவைகள் பிரும்மப்பிரதிபத்தி (ஞான) ரூபகாரியக்ஷமங்களாகவாகின்றன என்பது நிச்சயம். ஆனதுபற்றியே ஸமாதியென்றயோகமானது விக்ஞானமயனுக்கு ஆத்மாவாக(நடுவுடலாகச்)சொல்லப்பட்டது **महद्यक्षं प्रथमजं वेद** என வேறு சுருதி சொல்லியிருப்பதை யொட்டி இங்குள்ள **महः** என்பது மஹத்தத்துவமாகும். அந்த மஹத் தத்துவமானது நிலைத்து நிற்றலுக்குக் காரணமாக ஆவதுபற்றி புச்சமாக இங்கு

* ஸமாதியின் லக்ஷணத்தையும், அதை யடையவேண்டிய முறையையும் நமது பாதஞ்ஜலயோக சூத்திர மொழிபெயர்ப்பிற் காண்க.

சொல்லப்பட்டது. காரணவஸ்துவானது காரியங்களுக்குப் பிரதிஷ்டையாகவாகின்றதென்பது அனுபவப் பிரசித்தமானது. மரம் செடி கொடிகளுக்குக் காரணமான பூமியானது அவற்றிற்கு பிரதிஷ்டையாக ஆவதைப் பார்க்கின்றோம். எல்லாவிதமான புத்தி விக்ஞானங்களுக்கும் மஹத்தத்துவம் காரணமாவதுபற்றி அந்த விக்ஞானமயனுக்கு பிரதிஷ்டையாக வாகின்றது என்று சொன்னது பொருத்தமுள்ளதாகவே ஆகிவிடுகின்றது. அன்னமயாதி கோசங்களின் பிரகாசகங்களான சுலோகங்கள் சொல்லப்பட்டது போலவே விக்ஞானமய கோசப்பிரகாசகமான சுலோகமும் பின்னர் படிக்கப்படுகின்றது. (எ—று)

நான்காவது அனுவாகம் முற்றிற்று.

---

## சங்கரபாஷ்யப்படி ஐந்தாவது அனுவாகம்.

**(मन्त्रः) विज्ञानं यज्ञं तनुते । कर्माणि तनुतेऽपि च । विज्ञानं देवाःसर्वे । ब्रह्म ज्येष्ठमुपासते । विज्ञानं ब्रह्म चेद्वेद । तस्माच्चेन्न प्रमाद्यति । शरीरे पाप्मनो हित्वा । सर्वान्कामान्समश्नुत इति। तस्यैष एव शारीर आत्मा । यः पूर्वस्य । तस्माद्वा एतस्माद्विज्ञानमयात् । अन्योऽन्तर आत्माऽऽनन्दमयः । तेनैष पूर्णः । स वा एष पुरुषविध एव । तस्य पुरुषविधताम् । अन्वयं पुरुषविधः । तस्य प्रियमेव शिरः । मोदो दक्षिणः पक्षः । प्रमोद उत्तरः पक्षः । आनन्द आत्मा । ब्रह्मपुच्छं प्रतिष्ठा । तदप्येष श्लोको भवति ॥ १ ॥**

(ப—ரை) **विज्ञानम्**=விக்ஞானமானது **यज्ञम्**=யாகத்தை **तनुते**=செய்கின்றது. **कर्माण्यपि च**=கர்மாக்களையும் **तनुते**=செய்கின்றது **सर्वे देवाः**=எல்லாதேவர்களும் **विज्ञानम्**= விக்ஞானத்தை **ज्येष्ठं**= முதலிலுண்டான **ब्रह्म**=பிரும்மமாக **उपासते**=உபாஸி(க்கிறார்)க்கின்றனர். **विज्ञानं**=விக்ஞானத்தை **ब्रह्म**=பிரும்மமாக **वेद चेत्**=உபாஸிப்பவனுகவாகி **तस्मात्**=அந்த விக்ஞானப்ரும்மோபாஸனத்தினின்றும் **न प्रमद्यति चेत्**=தவறை யடையாதிருப்பானேயானால் **पाप्म-**

न:=பாபங்களை शरीरे=சரீரத்தில் हित्वा=விட்டு. सर्वान्=எல்லாவித மான कामान्=சுகங்களையும். समश्नुते=அடைகிறான். इति=விக்ஞா னமயகோசோபாஸனபலன் இவ்விதமாகவாகின்றது.

तस्य पूर्वस्य=முன்னர் சொல்லப்பட்ட அந்த மனோமயனுக்கு य:=யாதொரு விக்ஞானமயனுண்டோ एषएव இவனே शारीर: மனோமயசரீரத்திற்குள்ளிருக்கும் आत्मा= ஆத்மாவாக (भवति= ஆகிறான்) तस्मात्=அந்த एतस्मात्=இந்த विज्ञानमयात् वै=விக்ஞான மயாத்மாவைக் காட்டிலுமே अन्य:=வேறாகவும் अन्तर:=உள்ளி லிருப்பதுமான आत्मा=ஆத்மா आनन्दमय:=ஆனந்தமயனாகிறான். तेन=அந்த ஆனந்தமயனால் एष:=இந்தவிக்ஞானமயன் पूर्ण:=நிறை வுபெறுகிறான். सवाएष:=அந்த இந்த விக்ஞானமயன் पुरुषविध एव=புருஷவிதனாகவே ஆகிறான். तस्य=அந்த விக்ஞானமயனு டைய पुरुषविधताम् अनु=புருஷவிதனாயிருத்தலை யனுசரித்து अय- म्=இந்த ஆனந்தமயன் पुरुषविध:=புருஷவிதமுள்ளவனாகிறான் तस्य=அந்த ஆனந்தமயனுக்கு प्रियमेव=பிரியமே शिर:=தலையாக வும், मोद:=மோதமானது दक्षिण: पक्ष:=வலதுபக்கத்து இரக்கை யாகவும், प्रमोद:=பிரமோதமானது उत्तर: पक्ष: இடதுபக்கத்து இரக்கையாகவும், आनन्द:=ஆனந்தமானது आत्मा=நடுவுடலாகவும் ब्रह्म=நிர்க்குணப்பிரும்மமானது पुच्छं प्रतिष्ठा=நிலைத்து நிற்றலுக் குக் காரணமான வாலாகவும் (भवति=ஆகிறது) तदपि=இதுவரை சொல்லிய ஆனந்தமயகோசவிஷயத்தில் एष: பின்வரும் श्लोक:= மந்திரமானது भवति இருக்கின்றது.

(தா—ம்) வேதார்த்த விஷயமான நிச்சயக்ஞானமே விக்ஞா னம் என முன்னர் சொல்லப்பட்டிருந்தபோதிலும், "य एवं विद्वा न्यजते=வேதார்த்த நிச்சயக்ஞான முள்ளவன் இவ்விதம் யாகஞ் செய்கின்றானோ" என்றதால் வேறு சுருதியில் வேதார்த்த நிச்சய க்ஞான முள்ளவனுக்கே யாககர்த்தாவாயிருக்குந்தன்மை உபதே சிக்கப்பட்டிருப்பதால் இவ்விடத்திலும் அந்த சுருதியை யொட்டி विज्ञानं என்றதற்கு விக்ஞானமுள்ளவன் எனப்பொருள் கொள்ள வேண்டும். ஆகவே, விக்ஞானமுள்ளவனே யாகஞ்செய்ய அதி காரம் பெறுவதால் விக்ஞானம் யக்ஞம்செய்வதாக உபசாரமுறை யாற் சொல்லப்பட்டதென் றேற்பட்டது. யக்ஞம் என்றதால்

வைதிககர்மம் சொல்லப்பட்டிருப்பதால் **कर्माणि तनुते** என்றதால் லௌகிகமான கர்மாக்களைச் செய்கிறான் எனப்பொருள் கொள்ளல் வேண்டும். யாதுகாரணம்பற்றி லௌகிக வைதிக கர்மங்கள் யாவும் விக்ஞானத்தாலேயே செய்யப்படுகின்றனவோ அக்காரணம் பற்றி விக்ஞானமயனான ஆத்மா பிரும்மம் என்று கூறியது பொருத்த முள்ளதாகவே தானாகின்றது. மேலும், இந்திராதி தேவர்கள் யாவரும் விக்ஞானமயனை தமக்கு முன்னருண்டாயிருப்பது பற்றி ஜ்யேஷ்ட பிரும்மமாகவே உபாஸிக்கின்றனர். அதாவது: அந்த விக்ஞானமய பிரும்மத்தினிடத்தில் அபிமானத்தை யடைந்து (அதாவது: "அந்த விக்ஞானமயப் பிரும்மந்தான் நான்" என தன்னையும் விக்ஞானமய பிரும்மத்தையும் ஒன்றாகவே எண்ணி) உபாஸிக்கின்றனர். இந்திராதி தேவர்கள் இத்தகைய *அஹங்கிரஹோபாஸனத்தாலேயே இந்திராதி பதவிகளையடைந்

* பொதுவாய் உபாஸனம் (1) அஹங்க்ரஹோபாஸனம் என்றும் (2) ப்ரதீகோபாஸனம் என்றும், (3) கர்மாங்காவபத்த உபாஸனம் என்றும் மூன்றுவகைப்படும். அவற்றுள் சாஸ்திரங்களிற் சொல்லிய குணங்களுடன் கூடின ஸகுணப்பிரும்மமும் உபாஸகனானதானும் ஒன்றே என பிரும்மத்தினிடத்து திருடமான அபிமானத்தை யடைந்து செய்யப்படும் உபாஸனம் 1வதான அஹங்கிரஹோபாஸனமாகும், உபாஸ்யமான ஸாளக்ராவசிலையும், உபாஸகனான ஜீவனும் உண்மையில் வேறாகவேயிருந்தபோதிலும் सालग्रावशिला विष्णु: என்ற சாஸ்திரவசனத்தை ஆதாரமாகக்கொண்டு ஸாளக்ராவசிலையை விஷ்ணுவாகத் தியானிப்பது 2வதான ப்ரதீகோபாஸனமாகும். யாகஞ்செய்யும் பொழுது தேவதையை ஸாமவேதத்தால் ஸ்துதிசெய்யுங்கால் அந்த ஸாமவேதத்தை (1) प्रस्तावम्, (2) उद्गीथम्, (3) प्रतिहारम्, (4) उपद्रवम्, (5) निधनम्, என ஐந்து வித பக்தி (முறை)யாகவமைத்து கானஞ்செய்யவேண்டுமென விதிக்கப்பட்டிருக்கிறது. அவற்றுள் இரண்டாவதான उद्गीथ பக்தியைக்கானஞ் செய்யும் பொழுது ஒவ்வொரு பதங்களிலும் ஆரம்பத்திலும், முடிவிலும் ओम् என்ற ஓங்காரத்தைச் சேர்த்துக்கொண்டே கானஞ்செய்ய வேண்டும் என்ற விதியிருக்கிறது. இத்தகைய உத்கீதபக்தியிலுள்ள ओम् என்ற ஓங்காரத்தை பிரும்மமாகத் தியானிக்கவேண்டும் என சாஸ்திரம் உபதேசித்திருப்பதால் யாககர்மாவுக்கு அங்கமான உத்கீத பக்தியிலுள்ள ஓங்காரத்தில் செய்யப்படும் பிரும்மோபாஸனம் மூன்றாவதான கர்மாங்காவபத்த உபஸானமாகும்.

திருப்பதால் இத்தகைய பதவிக்கு முன்னர் உபாஸித்தனர் என்பதை இத்தகைய பதவிக்கு வந்தபிறகு உபாஸித்தனர் என்று உபதேசித்திருப்பதாய்க் கொள்ளல் வேண்டும்.

அல்லது ज्येष्ठम्=சூத்ராத்மாவான பிரும்மத்தையே காரணமாகக்கொண்டு ஸர்வப்பிராணிகளின் சேஷ்டையேற்படுவதால் ஸர்வப்பிராணி சேஷ்டைக்குக் காரணமாயிருப்பதுபற்றி விக்ஞானமயப் பிரும்மம் ஜியேஷ்டமாக வாகிறது என்றும் பொருள் கொள்ளலாம். ஆகவே இந்திராதிகள் மஹத் பிரும்மோபாஸனத்தை முந்தின அவஸ்தையிற் செய்ததாலேயே ஞானம், ஐசுவர்யம் இவற்றுடன் கூடினவர்களாக காணப்படுகின்றனர். ஆகவே அந்த விக்ஞானமயத்தைப் பிரும்மமாக அஹங்கிரஹ உபாஸன முறையை யொட்டி ஒருவன் உபாஸிப்பானேயானால் அவ்விதம் உபாஸிக்கும்பொழுது எவ்விதத்தவறையும் அடையாதிருந்தானே யானால் அதாவது—இவன் வெளியிலுள்ள அனாத்ம பதார்த்தங்களை ஆத்மாவாகப் பாவித்து (எண்ணி) வந்திருப்பது பற்றி விக்ஞானமய பிரும்மத்தினிடத்தில் ஆத்மபாவனை செய்யும் விஷயத்தில் தவறு உண்டாகக்கூடும். அத்தகைய தவறை நீக்கிக்கொண்டு அதாவது: அன்னமயாதிகளில் ஆத்மபுத்தியை நீக்கி கேவலமான விக்ஞானமய பிரும்மத்தினிடத்தில் ஆத்மபாவனையைச் செய்து கொண்டு இருந்தானேயானால் என்பதாம். சரீரத்தில் பாபங்களை விட்டு விக்ஞானமய பிரும்மஸ்வரூபத்தையடைந்தவனாய் விக்ஞானமய பிரும்ம வடிவமாகவாகி ஸகலகாமங்களையுமடைகிறான். அதாவது: சரீராபிமானத்தை நிமித்தமாகக் கொண்டே ஸர்வபாபங்களும் சம்பவிக்கின்றன வென்பது பிரசித்தம். ஆகவே குடையில்லாவிடில் நிழலில்லாது போவதுபோல விக்ஞானமய பிரும்பாபிமானத்தால் ஸர்வ பாபநிமித்தமான சரீராபிமானம் விலகிவிடவே சரீராபிமான மூலமேற்பட்ட பாபங்களுக்கு நாசமானது உண்டாகிவிடுகின்றது என்பதாம். ஆகவே சரீராபிமான நிமித்தமாக சரீரப்பிரபவங்களான ஸர்வபாபங்களையும் சரீரத்திலேயே (அதாவது: ஜீவதசையிலேயே) விடுத்து இவ்விடத்திலேயே ஸாக்ஷாத்காரத்தால் விக்ஞானமய பிரும்மரூபத்தையடைந்தவனாய் இருந்து இந்த தேஹபாதத்திற்குப் பிறகு விக்

ஞானமய பிரும்மாத்மபாவத்துடனேயே இருந்து பிரும்மலோகத்திலுள்ள ஸர்வபோக்யங்களையும் நன்கு அனுபவிக்கிறான் என்று பொருள். முன்னருபதேசிக்கப்பட்ட மனோமயனுக்கு அந்த மனோமய சரீரத்திலுள்ள ஆத்மாவாக இந்த விக்ஞானமயன் ஆகிவிடுகிறான்.

## ஆனந்தமய கோசோபதேசம்.

அந்த இந்த விக்ஞானமய ஆத்மாவைக் காட்டிலும் வேறாயும், விக்ஞானமயனுக்கும் உள்ளிருப்பவனாயும், இருக்கிற ஆத்மா ஆனந்தமயனாகிறான். அந்த ஆனந்தமயாத்மாவினால் இந்த விக்ஞானமயாத்மா நிறைவு பெறுகிறான். அந்த விக்ஞானமயனும் புருஷவிதமாகவே இருப்பதுபற்றி அந்த விக்ஞானமயனுக்குள்ளிருக்கின்ற இந்த ஆனந்தமயனும் அவனை யொட்டி புருஷவிதனாகவே தானாகிறான். அந்த ஆனந்தமயனுக்கு பிரியமானது (வஸ்து தரிசனத்தாலுண்டான ஆனந்தமானது) தலையாகிறது. மோதமானது (வஸ்துவைக்குக் கிட்டியதாலுண்டான ஆனந்தமானது) வலது இரக்கையாகிறது. பிரமோதமானது (வஸ்துவின் அனுபவத்தாலுண்டான ஆனந்தமானது) இடது இரக்கையாகிறது. ஆனந்தமானது (எல்லாவற்றிலும் பொதுவாயுள்ள ஆனந்தமானது) நடுவுடலாகிறது. பிரும்மமானது (உண்மையறிவானந்த வடிவமான நிற்குண பிரும்மமானது) நிலைத்தலுக்குக்காரணமான புச்சமாக (ஆதாரமாக) ஆகின்றது. இங்கு புச்சமாகக் கூறிய * பிரும்மத்தை விளக்கிக்காட்டும் மந்திரமும் இருக்கிறது.

---

* இதுவரை ஒவ்வொரு கோசத்தின் முடிவிலும் படிக்கப்பட்ட तदप्येषश्लोको भवति என்றதற்கு அந்தந்த கோசவிஷயமாகவே பொருள் கொள்ளப்பட்டபோதிலும் இங்குள்ள तदपि என்றதற்கு புச்சப்பிரும்ம விஷயமாகவேதான் பொருள்கொள்ளவேண்டும். ஏனெனில்-கூறுவாம் இங்கு பின்னர் असन्नेव सभवति असद्ब्रह्मेति वेदचेत्=என்றதால் ஆனந்தமயனைவிடுத்து நேரில் புச்சமாகச் சொல்லப்பட்ட பிரும்மத்தையே அடிக்கடி சுருதிசொல்லுவதே அதன் காரணமாவதுடன், கீழுள்ள அன்னமயாதி கோசங்களின் முடிவில் तदप्येष என்று கூறி பின்னருள்ள மந்திரங்களில் அந்தந்த கோசங்களையே சுருதி சொல்லியிருப்பதால் तदपि என்றதற்குக் கோசவிஷயமாகவே பொருள் கொள்ள வேண்டுவதும் அவசியமாகிவிட்டது.

ஆகவே இங்குள்ள ஆனந்தமயன் ஸம்ஸாரியான ஜீவனென்றும், புச்சமாகச் சொல்லப்பட்ட பிரும்ம வஸ்துவே பரமாத்மாவென்றும் இதினின்றும் பெறப்பட்டது.

ஆனந்தமய கோசத்தைப்பற்றிய விசாரம்.

இந்தப்பிரகரணத்திற்சொல்லிய ஆனந்தமயன் பரமாத்மாவேயொழிய ஸம்ஸாரியான ஜீவனல்ல என சிலர் எண்ணுகின்றனர். அவ்விதஞ்சொல்லுவது தவறு என்பதை சங்கரபகவத்பாத பாஷ்யகாரர் அவர்கள் விரிவாய் விளக்கி இருக்கின்றனர். அதை இனி எழுதுகிறோம். அதாவது:—ஆனந்தமயன் கார்யாத்மாவான ஜீவனே ஆவன். ஏனெனில் ஜீவப்பிரகரணத்தில் படித்திருப்பதும், விகாரார்த்தமுள்ள **मयट्** (மயட்) என்ற சப்தம் பிரயோகித்திருப்பதுமே அதன் காரணமாகும். அதைவிளக்குவாம்—அன்னமயன் முதலிய பௌதிககார்யாத்மாக்களைப் பற்றியே அடிமுதல் சொல்லப்படுகிறது: அம்முறையில் படிக்கப்பட்ட இந்த ஆனந்தமயனும் கார்யாத்மாவாகவே தான் ஆகவேண்டும். மேலும் **अन्नमयः** (அன்னமய:) என்றவிடத்தில் மய: என்பது விகாரார்த்தத்திலேயே எவ்விதமுபயோகிக்கப் பட்டிருக்கின்றதோ அதுபோலவே **आनन्दमयः** (ஆனந்தமய:) என்றவிடத்திலும் மய: என்பது விகாரார்த்தத்திலுபயோகிக்கப்பட்டதாகத்தான் பொருள்கொள்ளுவது உசிதமானது. ஆகவே ஆனந்தமயன் கார்யத்மா (ஜீவன்) என்றே அறியத்தக்கதாகிறது. மேலும் **आनन्दमयमात्मानमुपसंक्रामति** ஆனந்தமயாத்மபாவத்தை விடுகிறான் என சுருதி சொல்லப்போகின்றது. அனாத்மாக்களான கார்யாத்மாக்களின் ஸங்கிரமணமே அனுபவத்திற் காணக்கிடக்கின்றது. **अन्नमयमात्मानमुपसंक्रामति** (அன்னமயமாத்மானமுபஸங்க்ராமதி) அன்னமய ஆத்மாவை உபஸங்கிரமணஞ்செய்கிறான். (அதாவது:—அன்னமய ஆத்மாவினிடத்தி லேற்பட்டுள்ள ஆத்மபுத்தியை விடுகிறான். இவ்விதமே இனிவருமிடங்களிலும் உபஸங்க்ரமண சப்தத்திற்குப் பொருள்கொள்க.) என்பது போல ஆனந்தமயனையும் உபஸங்கிரமணஞ் செய்கிறான் என உபஸங்கிரமணத்திற்கு கர்மமாக ஆனந்தமயன் சொல்லப்பட்டிருக்கிறான். தன்னையே தான் விடுகிறான் என்று சொல்லவும் முடியாது. ஏனெனில் ஸங்க்ரமணஞ்

செய்கின்றவனை இந்த ஞானியைக்காட்டிலும் வேறாகவே அன்னமயாதிகளை சாஸ்திரமானது உபதேசித்து வேறுபிரகரணத்தில் இந்த ஆனந்தமயனையும் உபஸங்க்ரமணஞ்செய்கிறான் என்று படித்திருப்பதும்,ஒரே ஆத்மாவானவன் தானேவிடுகிறவனாகவும், விடப்படுகிறவனாகவும், ஒரேஸமயத்தில் ஆகமுடியாதிருத்தலும்,ஸங்க்ரமணஞ்செய்கின்றவனுடைய ஆத்மாவாக பிரும்மமிருப்பதுமே அதன்காரணமாகும். மேலும்,ஸத்யம்,க்ஞானம்,அனந்தம் என்று தொடங்கி உபதேசிக்கப்பட்ட நிர்விசேஷப்பிரும்மத்தினிடத்தில் **तस्य प्रियमेव शिर:** என்று தொடங்கிபடிக்கப்பட்ட சிரஸ் முதலிய அவயவ கற்பனையானது ஒருபொழுதும் ஸம்பவிக்காது. ஏனெனில் பிரும்மமானது ஸத்யக்ஞான ஆனந்தஸ்வரூபமாயும், ஆகாசாதிகளுக்குக் காரணமாயும், காரியமான பிரபஞ்ச வகுப்பிற் சேராததாயும் இருப்பதே அதன் காரணமாகும்.

மேலும் "**अदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयने**" பிரும்மமானது திருஸ்யத்தைவிட வேறானது, அதாவது: திருக்ஸ்வரூபமானது என்றும், ஸ்தூல சூக்ஷ்மகாரணாதி சரீரமுள்ளவற்றைவிட வேறானது என்றும், **अस्थूलमनणु** என்றும், **नेतिनेत्यात्मा** ஸவாஸனமான மூர்த்தாமூர்த்த ஸம்பந்தமற்று ஆத்மஸ்வரூபமாயுள்ளதென்றும், இதே சுருதியிலும், வேறு சுருதியிலும், பிரும்மத்தினிடத்தில் எவ்வித விசேஷ (பேத) மும் இல்லையென விலக்கப்பட்டிருக்கிறது. மேலும், ஆனந்தமயனைப் பிரும்மமென்று சொல்லுவோமானால் **असन्नेव स भवति असद्ब्रह्मेति वेदचेत्** பிரும்மத்தை அஸத் அதாவது: ஸத்விலக்ஷணம் அநிருதம் என அறிவானாயின் அஸத்தாகவே ஆகிவிடுகிறான் என்றதால் **तदप्येष श्लोको भवति** என்று தொடங்கி படிக்கப்படும் மந்திரோதாஹரணமும் பொருந்தாததாகவாகிவிடும். ஏனெனின்—கூறுவாம். பிரியம்,மோதம், ப்ரமோதம், ஆனந்தம் இவைகளாகிற தலைமுதலிய அவயவங்களுடன் கூடின ஆனந்தமய ஆத்மாவாகிற பிரும்மமானது பிரத்யக்ஷமாக அநுபவிக்கப் படும்பொழுது அதை அஸத் (இல்லை) என்று எண்ணுகிறவன் அஸத்தாகிறான் என்று மந்திரம் கூறுவது எவ்விதம் பொருந்தும் என்பதாம். மேலும், **ब्रह्मपुच्छं प्रतिष्ठा** என்றதால் ஆனந்தமயனுக்கு பிரும்மத்தை பிரதிஷ்டை

(ஆதாரம்) என்று கூறுவதும் பொருந்தாது. ஆனந்தமயனே பிரும்மமாகும்பொழுது அதற்கு வேறு ஆதாரம் எதற்காக. ஆகவே ஆனந்தமயன் காரியவகுப்பிற் சேர்ந்த ஜீவனுவனே யொழிய பரமாத்மாவாக ஒருபொழுதுமாகமாட்டான். மேலும், உபாஸ்தி, நிஷ்காமகர்மா இவற்றின் பலனே ஆனந்தம் எனப்படும். அத்தகைய் ஆனந்த விகாரமுள்ளவன் இங்குள்ள ஆனந்தமய பதத்தாற் சொல்லப்படுகிருன். அவன் விக்ஞானமயனுக்கும் உள்ளிருக்கிருன், யாகாதி கர்த்தாவான விக்ஞானமயனுக்கும் அந்தரன் என சுருதியி லுபதேசிக்கப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். உபாஸனம், கர்மம் இவற்றின் பலன் அவற்றின் போக்தாவுக்காக ஏற்பட்டிருப்பதுபற்றி உபாஸன கர்மகர்த்தரவான விக்ஞானமயனுக்கு உள்ளிலிருக்கிறது ஆனந்தமயன் என்றுசொன்னது மிக்கப் பொருத்தமாகிறது. ஆனந்தமயனுன ஆத்மாவும் முன்னருள்ள அன்னமயாதிகளைக் காட்டிலும், மிக்க மிக்க உள்ளிலிருக்கிருன். உபாஸனமும், கர்மங்களும் பிரியாதி பலனை யுத்தேசித்தே ஏற்பட்டன. ஆகவே பலரூபங்களான பிரிய, மோத, பிரமோத, ஆனந்தங்கள் ஆத்ம விசேஷணங்களாக இருப்பதுபற்றி விக்ஞானமயனைக்காட்டிலும் இந்த ஆனந்தமயன் அந்தரனுக வர்கிருன் என்பது வெகுபொருத்தமாக வாகிவிட்டது. அத்துடன் பிரியம் மோதம், பிரமோதம், ஆனந்தம் இவற்றின் வாஸனையுடன் கூடின ஆனந்தமயனுன ஆத்மாவோ விக்ஞானமயனை யாசிரயித்த ஸ்வப்பினத்தில் அனுபவிக்கப்படுகிருன். ஆகவே ஆனந்தமயன் ஜீவனே யொழிய பிரும்மமல்ல. அந்த ஆனந்த மயனுக்கு இஷ்டபுத்திராதி தர்சனஜன்யமான பிரியமானது பிரதானமா யிருப்பதுபற்றி தலைபோலாகின்றது. பிரியமான வஸ்துவைக்குக் கிட்டியதாலுண்டான ஹர்ஷம் மோதம் எனப்படும். கைக்குக் கிட்டியதை அனுபவித்த லாலுண்டாகும் ஹர்ஷம் ப்ரமோதம் எனப்படும். பிரியாதிகளான சுக அவயவங்களில் பொதுவாயுள்ள ஹர்ஷமானது ஆனந்தமாகும். ஏனெனில் முற்கூறிய பிரியாதிகளில் தொடர்ந்து நிற்றலே அதன் காரணமாகும்.

அதாவது:—பொதுவாய் ஆனந்தமென்பது பரப்பிரும்மமே யாகும். ஆயினும் சுபமான கர்மத்தால் கிடைக்கப் பெற்றதும், புத்ரமித்திராதிகளாகிற விஷயவிசேஷத்தை உபாதி(நிமித்த)யாக உடையதுமான அந்தக்கரணவிருத்தி விசேஷமானது தமோ குணத்தால் மறைக்கப்படாதிருக்கும் பொழுது தெளிவடையவே அதில் அந்தப்பிரும்மரூப ஆனந்தமானது அபிவியக்தியை (பிர காசத்தை) அடைகின்றது. அத்தகைய அந்தக்கரணவிருத்தி விசேஷத்தில் பிராசிக்கின்ற பிரும்மரூப ஆனந்தமே விஷயசுகம் என உலகில் பிரசித்தமாயிருக்கிறது. அத்தகைய விருத்திவிசே ஷத்தை யுண்டாக்கும் கர்மமானது நிலைத்ததாக இல்லாமைபற்றி விஷயசுகமும் க்ஷணிகமாகின்றது. அத்தகைய அந்தக்கரணமா னது தமோகுணத்தைப் போக்கும் தபஸ்ஸினாலும், உபாஸனத்தி னாலும், பிரும்மசரியத்தாலும், குருசாஸ்திர விசுவாஸம் என்ற சிரத்தையினாலும் எவ்வளவுக்கெவ்வளவு எப்பொழுது நிர்மலத் தன்மையை(தெளிவை) அடைகின்றதோ அப்பொழுது அவ்வள வுக்கவ்வளவு விஷயங்களைவிட்டுவிலகினதும்,தெளிவடைந்ததுமா ன அந்த அந்தக்கரணத்தில் ஆனந்த விசேஷமானது மேன்மேலு மோங்கி விரிவடைகின்றது. சுருதியும் रसो वै सः रसंꣳह्येवायं लब्ध्वानन्दी भवति। एषह्येवानन्दयाति। என்றதாற்றெளிவாயுபதேசிக்கப் போகின்றது. एतस्यैवानन्दस्याऽन्यानि भूतानि मात्रामुपजीवन्ति(இந்த ஆனந்தத்தினுடையலேசத்தையேவேறுபோவிருக்கின்ற பிராணி கள் அனுபவிக்கின்றன என வேறு சுருதியும் உபதேசிக்கின்றது. இவ்விதமே காமக்குறைவின் உத்கர்ஷத்தை முன்னிட்டு ஆனந் தத்தின் மேன்மேலும் நூறுநூறு மடங்கு உத்கர்ஷம் சொல் லப்படப் போகின்றது. இவ்விதமெல்லாமிருப்பதை முன்னிட்டு ஸத்யக்ஞானனந்த ஸ்வரூபம் என எந்தப் பிரும்மமானது தொ டக்கத்திற் சொல்லப்பட்டதோ, எதனுடைய க்ஞானத்திற்கு வேண்டி அன்னமயாதி ஐந்து கோசங்கள் உபதேசிக்கப்பட்டன வோ, எது அந்தக் கோசங்களுக்கும் உள்ளிருக்கின்றதோ,எத னால் அந்த கோசங்கள்யாவும் ஆத்மாவுள்ளதாக வாகின்றனவோ, அத்தகைய பரமார்த்தப்பிரும்பமானது உத்கிருஷ்யமாண ஆனந் தமுள்ள ஆனந்தமய ஆத்மாவுக்கும் ஆந்தரமாயுள்ளது என்பதை

யுபதேசிக்க வேண்டியே புச்சம் என்றும், பிரதிஷ்டை என்றும் உபதேசிக்கப்பட்டது. அத்தகைய பிரும்மமே அவித்யாகல்பித மான எல்லா த்வைதத்திற்கும் முடிவாகவும், அத்வைதமாகவும், பிரும்மமாகவும், ஆனந்தமயனுக்கு ப்ரதிஷ்டையாகவும் ஆகிறது. த்வைதங்கள் யாவும் அத்வைதத்தை அவஸானமாயுடைய்து பற்றி அவித்யா கல்பிதமான த்வைத் பதார்த்தத்திற்கு அவஸான மாகவும் பிரதிஷ்டையாகவும் புச்சமாகவும் இருக்கின்றது என் பது பொருத்தமானதே. அந்தப் புச்ச பிரும்ம விஷயத்தில் பின்வரும் மந்திரமு மிருக்கின்றது. (எ—று)

இதுவரை கூறியவிஷயமாக வனமாலையிற் சொல்லியிருப்ப தாவது:—

சங்கை—முந்தின பரியாயங்களிலுள்ள சுலோகங்கள் அவய வியான கோசவிஷயமாகவே ஏற்பட்டிருப்பதால் இந்த ஆனந்த மய கோசத்திலுள்ள तदप्येष श्लोको भवति என்றதற்கும் அவ்யவி யான ஆனந்தமயவிஷயமாகவே பொருள் செய்யவேண்டுவது நியாயமாயிருக்க அதைவிடுத்து கோசாவயவமான புச்சபிரும்ம விஷயமாகப்பொருள் செய்தது எவ்விதம் பொருந்தும் எனின் ?

உத்தரம்—அதனுண்மை இங்கு கூறுவாம். அதாவது:— முந்தின மனோமயகோசத்திலுள்ள यतो वाचो निवर्तन्ते என்ற சுலோகத்தால் அவயவியான கோசம் செல்லப்படாது மனோமய அவயவமாக ஆன யஜுராதிகள் சொல்லப்பட்டிருப்பதால் ஒவ் வொரு விடத்திலுள்ள சுலோகத்தால் அவயவியான கோசமே தான் சொல்லப்படுகிறது என்றநியமமில்லை. மேலும் ஆனந்தமய கோசத்திலுள்ள पुच्छम् (புச்சம்)என்ற பதமானது லக்ஷணையால் பிரியாதிவிசிஷ்ட ஆனந்தமயனுக்கு ஆதாரமான பொருளை மட் டும் குறிப்பிடுவதால் இங்குள்ள ब्रह्म பதத்தால் அவயவத்வப்ர தீதி (தோற்றம்) யானது ஏற்படுவதற்கிடமில்லை. ஆகவே முற் சொன்ன ஆசங்கைக் கிடமில்லை.

சங்கை—லக்ஷணையால் ப்ரும்மத்தினிடத்தில் புச்ச புத்தி யை யுண்டு [illegible] னும் पुच्छम् என்றபதமானது லக்ஷணையால் ஆதாரம் எ[illegible] போதிக்கின்றது என்பது எங் ஙனம் எனி[illegible]

உத்தரம்—கூறுவாம், இந்த ஆனந்தமய பர்யாயத்தில், முந்தின பரியாயங்களிற் போல உபாஸனு விதியோ அதன்பலனோ சொல்லப் படாமைபற்றி ஆனந்தமய கோசமானது உபாஸ்யமாக ஆவதில்லை. ஆனல் பிரியத்தை சிரஸ்ஸாகவும், மோதத்தை தக்ஷிணபக்ஷமாகவும், ப்ரமோதத்தை உத்தரபக்ஷமாகவும், ஆனந்தத்தை ஆத்மாவாகவும், கற்பித்ததானது ஆனந்தமயன் ஜீவனே என்ற அறிவை யுண்டுபண்ணுவதொன்றை மட்டுமே பிரயோஜனமாயுடையது என்பதைக் காட்டவேண்டியே யாகும். ஆகவே புச்சவாக்கியத்தில் குறிக்கப்பட்ட பிரும்மமே இங்கு பிரதானமாக ஆகிறது. **असन्नेव स भवति** என்ற சுலோகம் பிரும்மத்தைக் குறிப்பதில் எவ்வித அநுபபத்தியும் (யுக்திக்குப் பொருந்தாமையும்) இல்லாததுடன் ஆனந்தமயனைக் குறிப்பதானல் வெகு அநுபபத்தி யுள்ளதாகவே ஆகும் என்பதைப் பின்னர் விளக்கப் போவதாலும் எவ்விதத்திலும் முற்சொன்ன ஆசங்கைக் கிடமில்லாமலாகிவிட்டது. (எ—று)

5வது அநுவாகம் முற்றிற்று.

---

## வித்யாரண்ய தீபிகை.

**(मन्त्रः) यतो वाचो निवर्तन्ते.........तदप्येषश्लोकोभवति॥**

(ப—ரை) **वाचः**= வாசகங்களான சப்தங்கள் **मनसा सह**= ஞாபகமான மனத்துடன் கூட **अप्राप्य** ஸ்வரூபமாகவான ஆனந்தத்தை அடையாமல் **यतः**=யாதொரு பிரும்மாநந்தத்தினின்றும் **निवर्तन्ते**=விலகுகின்றனவோ **आनन्दम्**=அந்தப்பிரும்மானந்தத்தை **विद्वान्**=மனோமய உபாதி விசிஷ்டமாக உபாஸிப்பவன் **कदाचन**= ஒருபொழுதும் **न बिभेति**=பயத்தை யடைவதில்லை (பிரும்மத்தினிடத்தில் ஜாதி, குணம் முதலியன கிடையாதானதுபற்றி ஜாதி குணுதிகளை முன்னிட்டுப் பிரவிருத்திக்கும் சப்தங்கள் பிரும்மத்தினிடத்தில் பிரவிருத்திப்பதில்லை என்று கருத்து). மேலும், முன்னர் அன்னமயோபாதி விசிஷ்டனுகவும், பிராணமயோபாதி விசிஷ்டனுகவுமுள்ள பிரும்மத்தினுடைய உபாஸனம் சொல்லப்பட்டிருப்பது போலவே இங்கும் மனோமயாதி விசிஷ்டமான்

பிரும்மோபாஸனம் விதித்திருப்பதாகக் கொள்ளல் அவசியமாகின்றது. இல்லையேல் யஜுராதிகளைத் தலை முதலியனவாகக் கற்பித்தது எவ்விதப்பயனும் மற்றதாகவே ஆகிவிடும். மேலும், இங்குள்ள **विद्वान्** என்ற பதத்தாற் சொல்லப்படும் வேதனம் உபாஸனமே ஆகும். அத்தகைய உபாஸனத்தால் இஹபரங்களில் பயமுண்டாவதில்லை. இடைவிடாது உபாஸிப்பவனுக்கு ராகத்வேஷாதிகளுண்டாவதற் கிடமில்லாமைபற்றி ஐஹிகமான பீதியுண்டாவதற்கிடமில்லை. கிரமமுக்தியேற்படுவதால் மறுமையில் பயமுண்டாவதில்லை. இவ்விதக் கருத்துக்கொண்டே **कदाचन** எனச்சுருதி சொல்லியிருக்கிறது. இவ்வித முபாஸிப்பவனுக்கு பிராணமயன் சரீரமென்றும், அதற்கு ஸ்வாமியான மனோமயன் ஆத்மா வென்றும் திருட நிச்சய முண்டாகின்றது என்பது **तस्यैष एव शारीर आत्मा। यः पूर्वस्य** என்றதா லுபதேசிக்கப்பட்டது என்று பொருள் கொள்ளவேண்டும்.

பிறகு பிராணமயாத்மா வினிடமிருந்து நிவிருத்தியை அடைந்தவனுக்கு மனோமய கோசத்தையும் விட உள்ளில் பிரவேசமேற்படவேண்டி விக்ஞானமய கோசத்தைச் சுருதி யுபதேசிக்கின்றது.

**(मन्त्रः) तस्माद्वा.........पूर्णः ॥**

(ப—ரை) **तस्मादेतस्मान्मनोमयात्** = காமஸங்கல்பாதி விருத்தி ஸமூஹரூபனான யாதொரு மனோமயன் பிரத்யகாத்மோபாதியாயிருப்பதுபற்றி ஆத்மாவாகச் சொல்லப்பட்டானோ அந்த இந்த மனோமயனைக் காட்டிலும் அதாவது:—நான் காமனையுள்ளவனாகிறேன், ஸங்கல்பிக்கிறேன் என்றனுபவிக்கப்படுகின்ற மனோமயனைக் காட்டிலும் **अन्योन्तर आत्मा विज्ञानमयः**=வேறாயும், அவனுக்குமுள்ளி லிருக்கின்றவனாயும் விக்ஞானமயாத்மா வாகிறான். **तेन**= உள்ளி லிருக்கின்ற அந்த விக்ஞானமய ஆத்மாவினால் **एषः**=அவனுக்கு வெளியிலிருக்கின்ற மனோமயன் **पूर्णः**=நிறைவு பெற்றவனாகிறான்.

(தா—ம்)ஸத்வகுண காரியமான ஞானசக்தியில் தமோகுண மிச்ரமான பாகமானது ராகத்வேஷாதிகளான தாமஸதர்மத்து

டன் கூடின மனஸ்ஸாக ஆவது போலவே ரஜோகுணமிச்ரமான ப்ாகமானது ராஜஸமான கர்த்திருத்வ தர்மத்துடன் கூடியதாய்க் கொண்டு விக்ஞானமாக ஆகிறது. அதாவது:—மனத்திலுண்டான விருத்திகளுக்குள் "நான் கர்த்தா" எனவுண்டாகும் விருத்திக்ஞானமானது கர்த்திருத்வ தர்மத்துடன் கூடின எந்தவஸ்துவைக் கிரஹிக்கின்றதோ அந்த வஸ்துவானது விக்ஞானம் என்றும், அந்த விக்ஞானத்தின் விகாரம் விக்ஞானமயன் என்றும் சொன்னதாய் கொள்ளவேண்டும். ஏனெனில் ரஜோகுண மிச்ரமான ஸத்வகுணத்தின் காரியமான விக்ஞானமானது "நான்" என்ற தோற்றத்தில் விஷயமான அபிமந்தாவாக விகாரத்தையடைவதே அதன் காரணமாகும். அத்தகைய அபிமந்தாவை எல்லா ஜனங்களும் நான் என்ற அறிவிற்கு விஷயமாக்கிக் கிரஹிக்கின்றனர். மேலும், இதம் ப்ரத்யயமென்றும், அஹம் ப்ரத்யயமென்றும் மனோவிருத்தியானது இரண்டுவிதமாக வாகின்றது. அவற்றுள் இதம்ப்ரத்யயமானது வெளியிலுள்ளதும், பிரமாதாவை (அறிகின்றவனை) விட வேறானதுமான ப்ரமேயத்தை(குடம் முதலியவற்றை) விஷயீகரிக்கின்றது. அஹம் ப்ரத்யயமோ வெனில் உள்ளிலேயே இருந்துகொண்டு ப்ரமாதாவையே (அறிகின்றவனையே) விஷயீகரிக்கின்றது. நான் என்ற ப்ரத்யயத்திற்கு விஷயமான யாதொரு அபிமந்தா வுண்டோ அவனே இங்குள்ள விக்ஞானமயன் எனப்படுவன். (எ—று)

(அ—கை) விக்ஞானமயனிடத்தில் ஸ்வாத்மத்வ 'புத்தி திருடப்படுவதற்கு வேண்டி உபாஸனத்தை விதிக்க வெண்ணங்கொண்ட சுருதியானது உபாஸ்யஸ்வரூபத்தை நிரூபணஞ் செய்கின்றது—

**(मन्त्रः) सवा एष..........महः पुच्छं प्रतिष्ठा ॥**

(ப—ரை) இதுவரை சொல்லிய முறைப்படி சுருதிகளிலும், லோகவியவஹாரத்திலும் நையாயிகாதி மதங்களிலும் கர்த்தாவாகப் பிரசித்தன் எவனோ **सवा एषः** அதே அஹம் கர்த்தா என அனுபவிக்கப்படும் விக்ஞானமயன் சிரஸ் பக்ஷபுச்சாதிகல்பனை செய்து உபாஸிக்கப்பட்ட மனோமயனை யனுஸரித்து மண்மூசையில் உருக்கி விடப்பட்ட தாம்பிரப் பிரதிமைபோல சிரஸ்பக்ஷபுச்

சாதி கற்பனையால், புருஷாகாரனாகவே ஆகிறான். **तस्य**=அந்த விக்ஞானமயனுக்கு **श्रद्धैव**=குருவினாலும் சாஸ்திரத்தாலு முபதேசிகப்பட்ட தத்துவத்திலும், அதையறிவதிலும், அறிவிற்குரிய உபாயத்திலும் மேலான விஸ்வாஸம் யாதுண்டோ அதுவே சிரத்தை எனப்படும். அத்தகைய சிரத்தையே **शिर:**=தலையாகவும், **ऋतम्, सत्यम्**=இவ்விரண்டுபதங்களாலும் அவ்வித கர்த்திருத்வாபிமான ரூபமான இரண்டுவித விருத்திகள் சொல்லப்பட்டனவென்று கொள்ளவேண்டும். ஆகவே **ऋतम्** வலதுபக்கத்து இரக்கையாகவும், **सत्यम्**=இடதுபக்கத்து இரக்கையாகவும், **योग:**=ஸம்ப்ரக்ஞாத ஸமாதி, அஸம்ப்ரக்ஞாத ஸமாதி என்ற இவ்விரு ஸமாதியும், **आत्मा**=நடுவுடலாகவும், **मह:**=ஹிரண்யகர்ப்பனெனப் பெயரிய மஹத்தத்துவமானது **पुच्छं प्रतिष्ठा**=புச்சம் போன்று நிலைத்து நிற்றலுக்கு காரணமாகவு மாகின்றது. (எ—று)

**तदप्येषश्लोकोभवति**=அந்த விக்ஞானமயன் விஷயத்தில் பின்வரும் மந்திரமுமிருக்கின்றது.

## (मन्त्र:) विज्ञानं...........कामान्त्समश्नुत इति ॥

(ப—ரை) கர்த்திருத்வ சக்தியுடன் கூடின **विज्ञानम्**=விஞ்ஞானமானது **यज्ञम्**=ஜ்யோதிஷ்டோமாதியாகங்களைச் செய்கின்றது. இந்த விக்ஞானமயன் செய்யும் யாகாத்யனுஷ்டானமே ப்ராந்தியால் விக்ஞானமயஸாக்ஷியான சிதாத்மாவினிடத்திற் கற்பிக்கப்படுகின்றது. **कर्माणि**=கிருஷி, வியாபாரம் முதலியகர்மங்களையும் **तनुते**=செய்கிறது. **विज्ञानम्**=அத்தகைய லௌகிக வைதிகஸர்வக்கிரியாகர்த்ருரூபமான ஆத்யாத்மிக விக்ஞானத்தை **सर्वे देवा:**=இந்திராதி ஸகலதேவர்களும் **ज्येष्ठं ब्रह्म**=மஹத்தத்துவரூபமான ஹிரண்யகர்ப்பனெனப் பெயரிய பிரும்மமாக **उपासते**=உபாஸிக்கின்றனர். ஆனதுபற்றி யாதானுமொரு மனிதன் **विज्ञानं ब्रह्म**=விக்ஞானோபாதிகனான பிரும்மத்தை **वेद चेत्**= உபாஸிப்பானேயானால் **तस्मात् न प्रमाद्यतिचेत्**=விக்ஞானோபாதிக பிரும்மத்தினிடமிருந்து தவறையடையாதிருந்தானேயானால் அதாவது:—நான் மனுஷ்யன், கர்த்தா, போக்தா, சுகீ, துக்கீ, என்பது முதலிய பிராகிருத ஜனவியவஹாரரூபமான தவறைச் செய்யாதவனாக

இருப்பானே யானால், அப்பொழுது शरीरे=வர்த்தமான சரீரத்தி லேயே இருந்துகொண்டு पाप्मनः இனிவரும் ஜன்மமாகிற துக்க ஹேதுக்களான பாபங்கள் யாவையும், हित्वा=பரித்யாகஞ்செய்து விட்டு सर्वान् कामान्=ஸங்கல்பமாத்திரத்தால் ஸம்பாதிக்கப்பட்ட ஸகலபோகங்களையும், समश्नुते=அனுபவிக்கிறான்.

(मन्त्रः) तस्यै.........यः पूर्वस्य ॥

(க—ரை) இதற்கு முன் போலவே பொருள் கொள்ளவும். லோகத்தில் காரணமான கோடறி முதலியவற்றிற்கு எவ்விதம் ஆத்மத்வம் கிடையாதோ அவ்விதமே காரணமான மனோமயனுக் கும் ஆத்மத்வமில்லாமைபற்றி மனோமயனைச் சரீரவகுப்பிற் தான்சேர்க்க வேண்டியதாக ஏற்படுகின்றது. (எ—று)

(அ—கை) விக்ஞானமயகோசத்திலும் ஆத்மபுத்தியை விலக் குவதற்குவேண்டி ஆனந்தமயனைச் சுருதியுபதேசிக்கத்தொடங் குகிறது—

(मन्त्रः) तस्माद्वा.........तेनैष पूर्णः ॥

(ப—ரை) அந்த இந்தவிக்ஞானமயனைக்காட்டிலும் வேறாயும், விக்ஞானமயனைக்காட்டிலும் உள்ளிலிருக்கின்றவனாயும் விக்ஞான மயனுக்கு ஆத்மாவாயும் ஆனந்தமயன் ஆகிறான். तेन=அந்த ஆனந்தமயனால் एषः=இந்தவிக்ஞானமயன் पूर्णः=நிறைவுபெறுகி றான். அதாவது:—பிராணமயனால் சரீரம்முழுவதும் நிறைவு பெறும்பொழுது எல்லாசரீரத்திலும் பிராணகாரியமானசலனம் அனுபவிக்கப்படுவதுபோலும்,மனோமயனால் நிறைவுபெறும் பொ ழுது, பிராணனுடன்கூடினதேஹம் முழுவதிலும் மனதின்காரிய மான சேதனத்வ லக்ஷணமானஞானசக்தியானது காணப்படு வது போலும், விக்ஞானமயனால் நிறைவு பெற்றதும் மனது, பிராணன் இவ்விரண்டுடன்கூடியதுமான தேஹம்முழுவதிலும் 'நான்கர்த்தா' எனகர்த்திருத்வமானது எவ்விதமனுபவிக்கப்படு கின்றதோ இவ்விதமே ஆனந்தமயனால் நிறைவுபெற்றதும், விக் ஞான, மன:பிராணவிசிஷ்டமுமான தேஹத்தில் கைகால்முதலி யவைகளில் சுகவிசேஷங்கள் அனுபவிக்கப்படுகின்றன. அந்த இதுவே ஆனந்தமயனால் நிறைவுபெற்றிருத்தல் எனப்படும்.

ஆனல் சுகமானதுபோல துக்கமும் அநுபவிக்கப்படுவதாகவே எண்ணப்படக்கூடும். ஆயினும், துக்கவடிவமான விருத்திக்குக் காரணமான மனோமயனல் தேஹம் நிறைவு பெற்றிருத்தலே அதன்காரணமாகின்றதெனக் கொள்ளப்படுவதால் மேற்கூறிய சங்கைக் கிடமில்லை. துக்கமானது மனோமயனுடைய தர்மமென்றும் சுகமானது ஆனந்தமயனுடைய தர்மமென்றும் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருக்கின்றது.

(அ—கை) இந்தஆனந்தத்தின் விகாரமானதும், ப்ரிய மோதாதிரூபமானதுமான ஆனந்தமயனிடத்தில் ஸ்வாத்மத்வ புத்தியானது திருடப்படுவதற்கு வேண்டி உபாஸிக்கவேண்டியஸ்வரூபத்தை சுருதியுபதேசிக்கின்றது—

**(मन्त्रः) स वा एष पुरुषविधएव.........पुच्छं प्रतिष्ठा ॥**

(ப—ரை) விக்ஞானமயனுக்கு முள்ளிருப்பதாக யாதொரு ஆனந்தமயன் சொல்லப்பட்டதோ **स वा एषः**=அந்த இந்த ஆனந்தமயன் **पुरुषविध एव**=புருஷாகாரமுள்ளவனே யாகிறன். **तस्य पुरुषविधतामनु अयं पुरुषविधः**=நான் சுகியென்றும், போக்தா என்றும் அநுபவிக்கப்படும் இந்த ஆனந்தமயன் விக்ஞானமயனுக்குரிய சிரஸ் பக்ஷாதிரூப புருஷாகாரத்தை யனுஸரித்து புருஷாகாரமுள்ளவனகவே ஆகிறன். ஸாத்விகமான விருத்திகளில் பிரதிபிம்பத்தையடைந்த ஆனந்தங்கள் பிரியம்,மோதம், ப்ரமோதம் என்று சொல்லப்படும். அவற்றுள் இஷ்டமான வஸ்துக்களின் தரிசனத்தாலுண்டாகும் ஆனந்தம் ப்ரியம் என்றும், அவற்றின் லாபத்தாலுண்டாகும் ஆனந்தம், மோதம் என்றும், அவ்வஸ்துவின் உபகாரத்தால் (அநுபவத்தால்) உண்டாகும் ஆனந்தம் ப்ரமோதம் என்றும் சொல்லப்படும். முற்கூறிய விருத்திக்கு உபாதானகாரணமான அக்ஞானத்தில் பிரதிபிம்பித்த ஆத்மா ஆனந்தம் என்றும் சொல்லப்படும். அல்லது விருத்திப்பிரதிபிம்பங்களுக்குப் பிரதியோகியான ஜீவாத்ம ஸ்வரூப பூதமானதும் அவச்சின்னமானதும், பிம்பஸ்தானத்திலுள்ளதும் எதுண்டோ அதுவே ஆனந்தம் என்றும் சொல்லப்படும். அநவச்சின்னமான முக்கிய ஆனந்தம் யாதுண்டோ அதுவே பிரும்மம். அந்த

பிரும்மமே பிரியமோதாதிகளான மற்றவைகளுக்கு பிரதிஷ்டை யாக (ஆதாரமாக) ஆகின்றது.

(அ—கை) இதுவரை சொல்லிய முறையினின்றும் கிடைத்த பிரும்மதத்துவ ஸாக்ஷாத்காரமே உபாஸ்தியின் பலனாகும் என வெண்ணி சுருதியானது வேறு பலனை யுபதேசியாது கேவலம் **ब्रह्म पुच्छं प्रतिष्ठा** என ஸர்வஜகதாதாரபூதமான பிரும்ம தத்துவோ பதேசத்தில் முடிவுபெற்றதாய்க்கொண்டு இந்த ஆனந்தமய கோசத்தில் பிரதானமாகவான பிரும்மத்தைப் பிரதிபாதனஞ் செய் யும் மந்திரத்தைச் சொல்லுகிறது—

**(मन्त्रः) तदप्येष.........भवति ॥**

வித்யாரண்யதீபிகை முற்றிற்று.

---

## விசிஷ்டாத்வைதம் 4வது அநுவாகம்.

**(मन्त्रः) यतो वाचो निवर्तन्ते......तदप्येष श्लोको भवति ॥**

(ப—ரை)**यतः**=யாதொருபிரும்மாநந்தத்தினிடமிருந்து **वाचः**= வாக்குகள் **मनसासह**=மனதுடன்கூட **अप्राप्य**=இயத்தாலக்ஷணமான (இவ்வளவென அளவிடக் கூடியதான) பாரத்தை (எல்லையை) அடையாது **निवर्तन्ते**=நிவிருத்திக்கின்றனவோ [**तादृशं ब्रह्मानन्दं** அத்தகைய பிரும்மானந்தத்தை]"**दृश्यतेत्वग्र्यया बुद्ध्या**" "**मनसा तु विशुद्धेन**" "சிறந்த புத்தியால் பார்க்கப்படுகிறார்" "விசுத்தமான மனதினால்" என்று சொல்லும்முறைப்படி சுத்தமான மனதினாலறிந்து ஒருபொழுதும் பயத்தை யடைவதில்லை என்று பொருள். இங்குபிரும்மானந்தம் சுத்தமானமனதிற்கு கோசரமானது என்று சொல்லுகிறபடியால் 'இந்த மந்திரமானது மனோமயவிஷயமாக வாகின்றது என்று பொருள். இதினின்றும் அன்னமய, பிராண மய,மனோமயங்களுக்கு ஆத்மா ஒருவன் என்று சொன்னதாகவாகின்றது. அந்தஆத்மா யாரெனில் அதை **तस्माद्वा** என்றபாகம் உபதேசிக்கின்றது. இங்கு விக்ஞானமயன் ஜீவனைவனேயொழிய புத்திமட்டுமன்று. **मयट्** என்றப்ரத்யயமிருப்பதால் புத்தியைவிட வேறுபட்டதென்பது தெளிவாகின்றது. இங்குள்ள **श्रद्धा, ऋत**

सत्य शब्दाः சிரத்தை, ருத, ஸத்ய சப்தங்கள் ஞானவிசேஷத்தைச் சொல்லுகின்றன. "ब्रह्मणे त्वा महस ओमित्यात्मानं युंजीत" என்றதாலுபதேசிக்கப்பட்ட ஞானவிசேஷமானது யோக என்ற சப்தத்தாற் சொல்லப்படுகின்றது. யோகவிரோதியை விலக்குவதிலுள்ள ஸாமர்த்தியமே மஹ: புச்சம் என்றதின் பொருள். இந்தசிரத்தை முதலியவைகள் ஆத்மகுணங்கள் எனப்பிரசித்தமானதுபற்றி அந்தந்தகுணங்களுடன் கூடின ஆத்மஸ்வரூபமானது சிரஸ் பக்ஷ புச்சாதியாகப் பிரதிபாதிக்கப்படுகின்றது என்று கண்டுகொள்ளவேண்டும். ஆனதுபற்றியே "தன்னைவிட வேறாக இல்லாதவைகளான ஸ்வாவயவங்களினால் சிரஸ், பக்ஷ, புச்சாதி ரூபண பரமாகையால் இந்தப்ரகரணம்" என்றபாஷ்யத்திற்கு விரோதம் வருவதற்கில்லை. (எ—று)

நான்காவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஐந்தாவது அனுவாகம்.

### (मन्त्रः) विज्ञानं यज्ञं तनुते.........तदप्येष श्लोको भवति॥

(ப—ரை) विज्ञानं=விக்ஞானமயசப்தத்தாற் சொல்லப்படும் ஜீவன் यज्ञं=யாகத்தை तनुते=செய்கிறான். कर्माणिपिच வேறுமெள கிகக்ர்மங்களையும் तनुते செய்கிறான். सर्वे देवाः எல்லாதேவர்களும் विज्ञानम्=ஜீவஸ்வரூபத்தையே ब्रह्म ज्येष्ठम्=ப்ரதானசப்தத்தாற் சொல்லப்படுவதும் அசேதனமுமான பிரும்மத்தைக்காட்டிலும் சிறந்த(மேலான)தாக उपासते=ப்ரஜாபதிவித்யையிற் சொல்லிய முறைப்படி உபாஸிக்கின்றனர். எவனுவதொருவன் ஜீவரூபமான பிரும்மத்தைஉபாஸித்து तस्माच्च அந்தஜீவனிடமிருந்து அந்திம ப்ரத்யயபர்யந்தம் नप्रमाद्यतिचेत्=தவறையடையாமலிருந்தானேயானல் शरीरे पाप्मनो हित्वा=சரீரத்தில் பாபங்களை விடுத்து அதாவது:—வர்த்தமான சரீரத்திலேயே விநஷ்டமான, ஆனதுபற்றியே ஒட்டாததாயுமிருக்கின்ற பூர்வோத்தரபாபங்களையுடையவனாய்க்கொண்டு सर्वान्कामान्समश्नुते=எல்லாக்காமங்களையும் அனுபவிக்கிறான். இஷ்டவஸ்து தர்சனத்தாலுண்டான சுகம் பிரியம் எனப்படும். அதன்லாபத்தாலுண்டான சுகம் மோதம் எனப்

படும். அதனுபயோகத்தாலுண்டான சுகம் ப்ரமோதம் எனப்படும். சுகாதிசயமானது ஆனந்தம் எனப்படும்.

சங்கை—நடுவுடலாகச் சொல்லப்பட்ட ஆனந்தத்திற்கும் புச்சமாகச்சொல்லப்பட்ட பிரும்மத்திற்கும் பேதம் இல்லாமை பற்றி அதையே ஆத்மா(நடுவுடல்)வாகவும், புச்சமாகவும் கற்பித்துக்கூறினது எவ்விதம் பொருந்தும் எனின் ?

உத்தரம்—ஒரேபிரும்மத்திற்கு பிரும்மத்வவிஷேஷத்தால் புச்சத்வமும், ஆனந்த த்வவிஷேஷத்தால் ஆத்மசப்தத்தாற் சொல்லப்பட்ட மத்யகாயத்வமும் சம்பவிக்கலாமாகையால் முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை.

சங்கை—ஆனந்தரூப ப்ரும்மஸ்வரூபத்திற்கு ஆனந்தப்ரசுரத்வரூபமான ஆனந்தமயத்வமானது எவ்விதம் ஸம்பவிக்கும். ஆனந்தமானது ஆனந்தப்ரசுரமாகவாகாதன்றோ? எனின்.

உத்தரம்—ஆனந்த ரூபமாயுள்ள பிரும்மத்திற்கே பிரிய, மோத, ப்ரமோத சப்தவாச்யமான சிரஸ், பக்ஷ, புச்சத்வாதிரூபிதமான தர்மபூத ஆனந்தப்ரசுரத்வம் வரலாமாதலால் ஆனந்தமயத்வம் பிரும்மத்திற்குச் சொல்லுவதில் யாதும் விரோதமில்லை. மேலும், முன்னருள்ள அன்னமய பிராணமய, மனோமய, விக்ஞானமய மாகிற நான்கு பரியாயங்களில் பிரும்மத்திற்கு அவயவத்வம் சொல்லப்படாமல் இங்குமட்டும் நிரூபணஞ் செய்தானது **ब्रह्मविदाप्नोति परम्** என்று தொடங்கி சொல்லப்பட்ட பிரும்மோபதேசமானது இந்த ஆனந்தமய பரியாயத்தில் முடிக்கப்படுகின்றது என்பதைக் காட்டுகின்றது என்றும் கண்டுகொள்ள வேண்டும். ஆனதுபற்றி அனந்தமயனே தொடக்கத்திற் கூறப்பட்ட பிரும்மமாகும்.

குறிப்பு—**विज्ञानम्**=என்ற விடத்தில் **कृत्यल्युटो बहुलम्** என்ற வியாகரண சூத்திரப்படி ஜாநாதி என்ற அர்த்தத்தில் **ल्युट्** என்ற ப்ரத்யம் ஆசிரயிக்கப்படுகிறது. அல்லது **नन्दिग्रहि पचादि** என்ற சூத்திரப்படி **ल्यु:** என்ற ப்ரத்யயமாவது ஆசிரயிக்கப்படுகிறது. இவ்விதம் கொள்ளாமல் கேவல விக்ஞானம்மட்டும் சொல்லப்பட்டதெனக்கொண்டால் **यज्ञं तनुते कर्माणि तनुते** என்றதால் சொல்லப்பட்ட வைதிக லௌகிக கர்மகர்த்திருத்வம் ஸம்பவிக்காமலாகிவிடும்.

மேலும் அந்தர்யாமிப் பிராம்மணத்தில் आत्मनि तिष्ठन् என்ற மாத்யந்தின பாடத்திலுள்ள ஆத்மசப்தஸ்தானத்தில் காண்வபாடத்தில் विज्ञाने तिष्ठन् என விக்ஞான சப்தபாடமிருப்பதால் விக்ஞான சப்தம் ஜீவாத்மபரமேயாகும் என்று மேற்படுகிறது. (எ—று)

விசிஷ்டாத்வைதப்படி 5வது அநுவாகம் முற்றிற்று.

---

சங்கரபாஷ்யப்படி ஆறுவது அநுவாகம்.

(मन्त्रः) असन्नेव स भवति। असद्ब्रह्मेति वेद चेत्। अस्ति ब्रह्मेति चेद्वेद। सन्तमेनं ततो विदुरिति। तस्यैष एव शारीर आत्मा। यः पूर्वस्य। अथातोऽनुप्रश्नाः। उताऽविद्वानमुं लोकं प्रेत्य। कश्चन गच्छती ३। आहो विद्वानमुं लोकं प्रेत्य। कश्चित्समश्नुता ३उ। सोऽकामयत। बहुस्यां प्रजायेयेति। सतपोऽतप्यत। सतपस्तप्त्वा। इदꣳसर्वमसृजत। यदिदं किञ्च। तत्सृष्ट्वा। तदेवानुप्राविशत्। तदनुप्रविश्य। सच्च त्यच्चाऽभवत्। निरुक्तं चा निरुक्तं च। निलयनं चाऽनिलयनं च। विज्ञानञ्चाऽविज्ञानं च। सत्यं चा नृतं च सत्यमभवत्। यदिदं किञ्च। तत्सत्यमित्याचक्षते। तदप्येष श्लोको भवति॥ १॥

(ப—ரை) ब्रह्म=பிரும்மமானது असत्=இல்லாதது इति=என்று (यः யாதாவதொருவன்) वेदचेत्=எண்ணுவானாயின் सः=அவ்விதம் எண்ணுகின்றவன் असन्नेव அஸத்ஸமனாகவே, மலடியின் பிள்ளைக்கொப்பானவனாகவே भवति=ஆகின்றான். மலடியின் புத்திரன் புருஷார்த்தஸம்பந்தமற்றவனாவதுபோலவே இவனுமாகின்றான் என்றுகருத்து. ब्रह्म=பிரும்மமானது अस्ति=இருக்கின்றது इति= என்று वेदचेत्=அறிவானேயானால் ततः=அக்காரணம்பற்றி एनं= இவனைसन्तं=பிரும்மஸ்வரூபத்தால் பரமார்த்தஸதாத்மாபன்னனாக विदुः=பிரும்மவித்துக்கள் எண்ணுகின்றனர். அல்லது எவன் ब्रह्मनास्ति=பிரும்மமானது இல்லை என்று எண்ணுகின்றானோ सः= அவன் असन्नेव=அஸாதுவாகவே நாஸ்திகனுக்வேभवति=ஆகிறான்.

ब्रह्म=பிரும்மமானது अस्ति=இருக்கின்றது इति=என்று वेद चेत्=எண்ணுவானாயில் ततः=அக்காரணம்பற்றி एनं இவ்விதம்எண்ணுபவனை ஸந்தம் ஸாதுமார்க்கத்திலிருக்கின்றவனாக विदुः பெரியார் எண்ணுகின்றனர். यः=யாதொரு ஆனந்தமயனுண்டோ एष एव=இவனே तस्य पूर्वस्य=முன்னர்கூறப்பட்ட விக்ஞானமயனுடைய शारीर आत्मा=சரீரத்திலுள்ள ஆத்மாவாகிறான்.अत:=ஆனதுபற்றி अथ=இவ்விதம் ஆசாரியனுபதேசித்தபின்னர் சுரோதாவான சிஷ்யனுடைய अनुप्रश्नाः=ஆசார்யோபதேசத்தையொட்டிய பிரச்னம் ஏற்படுகின்றது. अविद्वानुत=அவித்வானும், कश्चन=எவனேனும் अमुंलोकम्=இந்த சைதன்யைகரஸமானபரமாத்மாவை प्रेत्य=சரீரபரித்யாகத்திற்குப் பின்னர் गच्छति?=அடைகின்றானா? அல்லது அடைவதில்லையா?आहो=அல்லது विद्वान् कश्चित्பிரும்மவித்தான எவனும் प्रेत्य=சரீரபரித்யாகத்திற்குபின்னர் अमुं लोकं=இந்தசைதன்யைகரஸமான பரமாத்மாவை समश्नुते=அடைகின்றானா? அல்லது அடைவதில்லையா? இவ்விதம் ஏற்பட்ட சிஷ்யனுடையப்ரச்னங்களுக்குப் பதில்சொல்லவேண்டி மேலுள்ள சுருதிபாகம் தொடங்குகின்றது. सः=ஆகாசாதிகளையுண்டுபண்ணின அந்த ஆத்மா बहु=வெகுவாக स्याम्=ஆகக்கடவேன், प्रजायेय=மிக்கத்தெளிவான தோற்றத்தையடைவேனாக. इति=என்று अकामयत=இச்சித்தது सः=அந்தப்பரமாத்மா तपः ஆலோசனையை अतप्यत=செய்தது सः=அந்தபரமாத்மா तपः=ஸிருஷ்டிக்கப்படும் ஜகத்விரசனவிஷயமான ஆலோசனையைतप्त्वा=செய்து यदिदं किञ्च=இந்த எதெது உண்டோ इदं सर्वं=இவை யாவையும் असृजत=ஸிருஷ்டித்தது. तत् सृष्ट्वा=அவையாவையும் ஸிருஷ்டித்து तदेव=தன்னால்சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தையே अनुप्राविशत्=அனுஸரித்துத் தானும்பிரவேசித்தது. அவ்விதம் तदनुप्रविश्य=அதைப்பிரவேசித்தபின்னர் निरुक्तं=இதுஎனக்குறிப்பாய்க் காட்டக்கூடியதும்,अनिरुक्तं=அவ்விதம் குறிப்பாய்க் காட்டமுடியாததும், निलयनं=எதற்கும் ஆசிரயமானதும், अनिलयनम्=அதற்குநேர்மாறானதும் ஆன सच्च=மூர்த்தவஸ்துவாயும்(பிருதிவீ, அப், தேஜஸ்மூர்த்தமெனப்படும்)त्यच्च=அமூர்த்தவஸ்துவாயும் (ஆகாசவாயுக்கள் அமூர்த்தங்களெனப்படும்) अभवत्=ஆயிற்று. மேலும் सत्यम्=முக்காலத்திலும்அழிவில்

லாத பரமாத்ம வஸ்துவானது **विज्ञानं च**=சேதனமாயும் **अविज्ञानं च**=அசேதனமாயும் **सत्यं च**=வியாவஹாரிக ஸத்யமாயும் **अनृतं च** வியாவஹாரிக அந்ருதமாயும், **यदिदं किं च** உலகிலுள்ள எல்லா வஸ்துவாகவுமே **अभवत्**=ஆயிற்று. **तत्**=அக்காரணம் பற்றியே **सत्यमिति** ஸத்யமென்று **आचक्षते**=சொல்லப்படுகின்றது. **तदप्येष श्लोको भवति**=இதுவரை சொல்லிய அர்த்தத்தில் பின்வரும் மந்திரமும் இருக்கின்றது. (எ—று)

(தா—ம்) சங்கர புகவத்பாத பாஷ்யம்—எவனொருவன் பிரும்மமில்லை என்றெண்ணுகின்றானோ அவன் மலடியின் புத்திரனுக் கொப்பாக வாகிறான். அதாவது:—மலடியின் பிள்ளை புருஷார்த்த ஸம்பந்த மற்றவனாவது போல இவனும் ஆகிவிடுகின்றான் என்பதாம். அதற்கு மாறாக ஸர்வவிகற்பங்களுக்கும் ஆஸ்பதமானதும் அதாவது:—ஸர்வத்வைதத்திற்கும் அதிஷ்டானமானதும், ஸர்வப்ரவிருத்திக்கும் காரணமானதும், அதாவது:—ஸர்வ சிருஷ்டி கர்த்தாவும், ஸர்வ விசேஷப்ரத்யஸ்தமிதமும், அதாவது:—ஸர்வத்தின் லயத்திற்கு ஆதாரமானதுமான அந்தப் பிரும்மம் இருக்கின்றது என அறிவானாயின் என்பதாம். பிரும்மமானது இல்லை என்று சங்கை யுண்டாவதற்கு காரணம் யாது? எனின் பிரும்மமானது வியவஹாரத்திற்கு அதீதமாயிருத்தலே அதன் காரணம் என்கிறோம். அதாவது:—வியவஹாரவிஷயமான ஸகல விகாரத்திலும் அஸ்தித்வ (இருக்கு என்ற) பாவனையுடன் கூடின லோகபுத்தியானது வியவஹார விஷயமான குடம் முதலியவற்றில் அஸ்தித்வத்தைக் (இருக்குந் தன்மையை)கிரஹிப்பது போலவே அதற்குநேர்மாறான முயற்கோடுமுதலியவற்றில் நாஸ்தித்வத்தையும் (இல்லை யென்பதையும) வியவஹாரகாலத்தில் நிச்சயிக்கக்கூடும். எவ்விதமெனின் வியவஹார விஷயத்வத்தை யடைந்த குடம் முதலியன அஸ்தி (இருக்கின்றது), அதற்கு மாறானது நாஸ்தி (இல்லை) என்பது உலகப்பிரசித்தம். இவ்விதமே அந்த முயற்கோடு முதலியவைகளுடன் கூட பிரும்மத்தினிடத்திலும் வியவஹாராதீ தத்வமானது ஸமானமாயிருப்பதால் முயற்கோடு முதலியவைகளுக்குப் போலவே பிரும்மத்திற்கும் நாஸ்தித்வம் (இல்லாமை) சித்திக்கிறது என்ற நிச்சயமுண்டாகின்றது. ஆனது

பற்றியேதான் अस्ति ब्रह्मेति चेद्वेद பிரும்மமானது இருக்கு என்று அறிந்தால் என்று சொல்லப்பட்டது. பிரும்மமானது இருக்கு என்றறிந்தவனுக்கு வருவது யாது எனின்? இவ்விதம் பிரும்ம மிருக்கு என்றறிந்தவனை सन्तम्=பிரும்மஸ்வரூபத்தால் பரமார்த்த ஸத்ரூபாத்மா புன்னகைப் பிரும்மவித்துக்கள் அறிகின்றனர். ஆனதுபற்றி பிரும்மாஸ்தித்வவேதனத்தால் ஸத்ரூப பிரும்மக் ஞானத்தை யடைந்தமையால் இவ்விதப் பிரும்மவித்தானவன் மற்றவர்க்கு பிரும்மம் போலவே வேதனீயனாக (அறியத்தகுந்த வனாக) ஆகிவிடுகிறான் என்று பெறப்பட்டது. அல்லது எவனொ ருவன் பிரும்மமானதில்லை என்றெண்ணுகின்றானோ அவன் வர் ணாசிரமாதி வியவஸ்தையை ஸாதனமாயுடைய எல்லா ஸன்மார்க் கத்திற்கும் நாஸ்தித்வத்தை (இல்லாமையை) எண்ணினவனாகி றான்.

முற்கூறிய வர்ணாசிரமவியவஸ்தாலக்ஷணமான ஸர்வஸன் மார்க்கமும் பிரும்மக்ஞானப்பிராப்திக்குவேண்டியேஏற்பட்டிருக் கின்றது என்பது வெளிப்படை. ஆனதுபற்றி அவ்விதஎண்ண முள்ள நாஸ்திகனை அவன் உலகில் அஸாதுவாகவே சொல்லப் படுகிறான். அதற்குமாறாக எவனொருவன் பிரும்மமிருக்கின்றது என எண்ணுகின்றானோ, அவன் அந்தப்பிரும்மக்ஞானத்திற்குக் காரணமானதும் வர்ணாசிரம வியவஸ்தாலக்ஷணரூபமானதுமான ஸன்மார்க்கத்தை சிரத்தையுடன் கூடினவனாய் உள்ளபடியறிந்து அதைப்பின்பற்றுபவனாக யாதுகாரணத்தால் ஆகின்றானோ, அக் காரணத்தால் ஸன்மார்க்கத்திலிருக்கின்றவனென இவனை ஸாதுக் கள் எண்ணுகின்றார். ஆனதுபற்றி இருக்கு என்றேதான் பிரும் மமானது எண்ணத்தகுந்தது, என்றவாக்கியார்த்தம் ஏற்படு கிறது. யாதொரு ஆனந்தமயனுண்டோ இவன் விக்ஞானமய சரீரத்திலுள்ள ஆத்மாவாகின்றான். இந்தமந்திரத்தை ஆனந்தமய விஷயமாகச் சொன்னால் ஆனந்தமயனைக்குறித்து விருத்திகாரர் களாற் சொல்லவேண்டிய ஆனந்தமயநாஸ்தித்வ விஷயமான யா தொரு ஆசங்கையுண்டோ அதற்கே இடமில்லாமலாகிவிடுகின் றது. மந்திரத்தைப் பிரும்மவிஷயமாகச் சொல்லுவோமானால் பிரும்மமானது எவ்விதவிசேஷமும் (குணமும்) இல்லாதிருத்தல்

பற்றி அதன்விஷயமாக நாஸ்தித்வ ஆசங்கைவருவது பொருந்தும். பிரும்மானது ஸர்வஸமமாகவிருப்பதுபற்றியுமே மேற்கூறியதுபொருந்தும். யாதுகாரணம்பற்றி பிரும்மமானது ஸர்வஸமமோ அக்காரணம்பற்றி ஆசார்யோக்தியை யொட்டி சுரோதாவன சிஷ்யனுடைய கேள்விகள் பின்னருண்டாகின்றன. பிரும்மமானது ஆகாசாதிகளுக்குக் காரணமானதுபற்றி வித்வானுக்கும், அவித்வானுக்கும் ஸமமாகவே தானுகின்றது. ஆகவே அவித்வானுக்கும் பிரும்மப்பிராப்தி ஆசங்கிக்கப் படுகின்றது. அவ்வாசங்கையாவது:—அவித்வான் மரித்தபின்னர் பிரும்மத்தையடைவதுண்டா? என்பதாம். இந்தவிடத்தில் अनुप्रश्नाः எனபஹுவசன (பன்மை) ப்ரயோக மிருப்பதையொட்டி அல்லது இல்லையா? எனமற்ருெருப் பிரச்னமும் செய்ததாகக்கொள்ளல்வேண்டும். ஆகவே அவித்வானைக்குறித்து இரண்டுப்ரச்னங்களேற்பட்டன. இனிவித்வானைக்குறித்து இரண்டுபிரச்னங்கள் ஏற்படுவதைக்கூறுவம். அவையாவன:—அவித்வான் ஸர்வகாரணமாயுள்ள பிரும்மத்தையடைவதில்லையென்ருல் அப்பொழுது வித்வானும் பிரும்மத்தையடைதில்லை என்றுதான் ஏற்படும். ஆகவே வித்வான் பிரும்மத்தையடைகின்ருனு? அல்லது இல்லையா? என்பதாம். வித்வஅவித்வத்விஷயமாக இரண்டே பிரச்னங்களாயினும் முன்னர் அஸ்தித்வ, நாஸ்தித்வரூபமான இரண்டுபக்ஷங்கூறின ஸாமர்த்தியத்தினுல் கிடைத்தவேறுபிரச்னங்களையனுஸரித்து प्रश्नाः என்று பஹுவசனப்பியோகஞ்செய்யப்பட்டிருக்கிறது. அதாவது:—असद्ब्रह्मेति वेद चेत्, என்றும், अस्ति ब्रह्मेति चेद्वेद என்றும் சொல்லியிருப்பதால் அஸ்தி, நாஸ்தி என்ற ஸம்சயமுண்டாகின்றது. இதினின்றும், பிரும்மமானது இருக்கா? இல்லையா? என்ற முதலாவதுப் பிரச்னம் ஏற்பட்டு விடுகின்றது. பிரும்மமானது பொதுவாயுள்ளதுபற்றி அவித்வான் பிரும்மத்தை யடைகிருனு? இல்லையா? என இரண்டாவது பிரச்னம் உண்டாகின்றது. பிரும்மமானது ஸமமாயினும் அவித்வானுக்குப் போலவே வித்வானுக்கும் அதன் அப்பிராப்தி ஆசங்கிக்கப் படுகின்றது. அதாவது: வித்வான் பிரும்மத்தை யடைகிருனு? இல்லையா? எனமூன்ருவதுபிரச்னம் உண்டாகின்றது என்பதாம்.

இவ்விதப்பிரச்னங்களுக்குப் பதில் சொல்லவேண்டி மேலுள்ள கிரந்தம் ஆரம்பிக்கப் படுகின்றது. அவற்றுள் முதலில் அஸ்தித்வமே சொல்லப்படுகின்றது. सत्यं ज्ञानमनन्तं ब्रह्म என யாதொன்று சொல்லப்பட்டதோ அவ்விடத்தில் ஸங்கிரஹமாகச் சொல்லப்பட்ட सत्यत्वமானது எவ்விதமென்று ஆசங்கை வரும்பொழுது அந்த ஸத்யத்வத்தை விரிவுபடுத்தி உபதேசிக்கவேண்டும். सदेव सत्यं என்றும் சொல்லப்பட்டது. ஆதாவது:—ஸத்பத வாச்சியம் எதுவோ அதுதான் ஸத்ய பதத்தாலும் சொல்லப்படுகின்றது என்பதாம். ஆகவே ஸத்வோக்தியினாலேயே ஸத்யத்வம் சொல்லப்பட்டதாகின்றது. மேலுள்ள கிரந்தத்திற்கு இவ்வித பொருள் எவ்விதம் சித்திக்கின்றது எனின்? கூறுவாம். तत्सत्यमित्याचक्षते यदेष आकाश आनन्दो न स्यात् என்பது முதலிய வாக்கியங்கள் இங்கு கூறிய ஸத்வஸாதனரூப அர்த்தத்துடன் பொருந்தின அர்த்த முள்ளவைகளாகக் காணக்கிடக்கின்றனவேயன்றி வித்வான் அவித்வான் இவர்களுக்கு பிரும்மப்ராப்தி அப்ராப்தி லக்ஷண ரூபமான அர்த்தங்கூறி முடிவு பெறுவதாகக் காணக்கிடக்கவில்லை. ஆதலால் எது ஸத்தோ அதுதான் ஸத்யம் என்றேற்பட்டது. மேலும், பிரும்மமானது ஸத்தா? அஸத்தா? என்ற சங்கை யுதயமாகும்பொழுது 'அஸன்னேவ பிரும்ம' என்ற ஆசங்கைக்கிட மிருக்கின்றது. ஏனெனில்—எது இருக்கின்றதோ அது குடம் முதலியது போல விசேஷமாக (வியவஹார கோசரமாக) கிரஹிக்கப்படுகின்றது. எது இல்லையோ அது முயற்கொம்பு முதலியது போல அறியப்படுவதில்லை ஆகையால் விசேஷமாக (வியவஹார கோசரமாக) கிரஹிக்கப்படாமைபற்றி பிரும்மம் இல்லையென்றேதான் ஏற்படுகின்றது என்ற சங்கையுண்டாகும். ஆனால் அவ்வித சங்கைக்கிடமில்லை. ஏனெனில்—பிரும்மமானது ஆகாசாதிகாரணமாயிருப்பதுபற்றி பிரும்மம் இல்லையென்று சொல்லுவதற்கில்லை. ஏனெனில் கூறுவாம். ஆகாசம் முதலிய ஸர்வகாரியமும் பிரும்மத்தினிடமிருந் துண்டானதாக அறியப்படுகின்றது. எதனிடமிருந்து எது உண்டாகின்றதோ அந்தக் காரண வஸ்துவானது இருப்பதாகவே மண், விதை முதலிய காரணங்களினின்றும் உண்டாகும் குடம், முளை

முதலிய விடங்களில் அனுபவத்தில் காண்கிறோம். ஆகவே ஆகாசாதி காரணமா யிருத்தல்பற்றி பிரும்மம் இருக்கின்றது என்று தானேற்படுகின்றது. உலகில் ஸ்வல்பகாரியமும் கூட அஸத்தினிடமிருந்துண்டானதாகக் காணப்படவில்லை. நாமரூபாதி காரியமானது அஸத்தினிடமிருந் துண்டாகுமானால் ஸ்வரூப மில்லாமைபற்றி அறியப்படாததாகவே ஆகிவிடும். ஆகாசாதிகாரியமோ அறியப்படுகின்றது. ஆகவே ஆகாசாதி காரியத்திற்குக் காரணமான பிரும்மமானது இருக்கின்றது(ஸத்ரூபமானது)என்பதில் யாதும் ஆக்ஷேபமில்லை. அஸத்தினிடமிருந்தே காரியமுண்டாகுமானால் கிரஹிக்கப்படுவதும் காரணமான அஸத்துடன் கலந்தேதான் கிரஹிக்கப்படும். அனுபவத்திலோ ஸத்துடன் கூடினதாகவே காரியமானது கிரஹிக்கப்படுகின்றது. ஆகவே காரணமான பிரும்மம் ஸத்ரூபமானதே. कथमसतः सज्जायेत (அஸத்தினிடமிருந்து ஸத்தானது எவ்வித முண்டாகும்) எனவேறு சுருதியும் அஸத்தினிடமிருந்து ஸத்துக்கு உத்பத்தியில்லையாதென யுக்தி பூர்வகமாக விளக்கியிருக்கிறது. ஆகவே பிரும்மமானது ஸத்தே என்று சொல்லுவதுதான் பொருத்தமாகிறது.

சங்கை—அந்த பிரும்மமானது மண்ணும், விதையும் போல காரணம் என்று சொல்லப்படுமானால் அசேதனமாக ஆகிவிடும் அன்றோ? எனின்.

உத்தரம் — அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் அதற்கு காமனையிருப்பதாகத் தெரிவதே அதன்காரண மாகும். எதற்குக் காமனையிருக்கின்றதோ அதை அசேதனமாக நாம் உலகில்காணவில்லையன்றோ. பிரும்மத்தை ஸர்வக்ஞம் என்றும் சொல்லியிருக்கிறோம். ஆனதுபற்றி அதற்குக் காமயித்ருத்வம் ஸம்பவிக்கக்கூடும்.

சங்கை—பிம்மத்திற்கு காமனை யிருக்குமாயின் ஜீவன் போலவே அனாப்தகாமம் பிரும்மம் என்றேற்படுமன்றோ? எனின்.

உத்தரம்—பிரும்மமானது ஸ்வதந்திரமாகையால் முற்கூறிய சங்கைக்கிடமில்லை. அதாவது:—காமதோஷங்கள் பிறரைப் பரவசமாக்கி எவ்விதம்பிரவிருத்திக்கசெய்கின்றனவோ அவ்விதம்

பிரும்மத்திற்குப் பிரவர்த்தகங்களன்று. எவ்விதமெனின்? கூறுவாம் —மாயாபரிணும மானதுபற்றி ஸத்யம், க்ஞானம் என முன்னர் மந்திரத்திற் சொல்லப்பட்ட பிரும்மத்திற் கொப்பான ஸ்வரூபமுடையவைகளும் ஆகவே விசுத்தங்களுமாக பிரும்மத்தின்காமனைகள் இருப்பதே அதன் காரணமாகும். அதாவது: பிரும்மத்தின் உபாதிபூதமான மாயையானது விசுத்தமாகையால் மாயையின் பரிணுமமான காமங்களும் விசுத்தங்களேயாகும். மாயையானது பிரும்மத்திற்கு வசியமானதுபற்றி மாயாபரிணுமமான காமங்கள்யாவும் பிரும்மவசியங்களாகவே தாணுகின்றன. ஆகவே பிரும்மானது ஆனுப்தகாமமாக ஆவதில்லை. மேலும் பிரும்மத்திற்கு தனது காமங்களில் ஸ்வகீய ஸாதனுந்தராபேக்ஷயில்லாதபடியாலும் பிரும்மமானது அனுப்தகாமமாக ஆவதில்லையென்றும் கண்டுகொள்ள வேண்டும். அதாவது:—பிரும்மத்தைவிட மற்றவர்க்கு அனுத்மபூதங்களும் (ஸ்வாதீனமற்றவைகளும், அல்லது தோஷரூபங்களும்)தர்மாதி நிமித்தமூலமுண்டாகக்கூடியவைகளுமான காமங்கள் தன்னைவிடவேருன காரிய, காரணரூபங்களான ஸாதனுந்தரங்களை யபேக்ஷித்து எவ்வித முண்டாகின்றனவோ அவ்விதம் பிரும்மத்திற்கு நிமித்தாந்தராபேக்ஷை வேண்டுவதில்லை. பின்னையோவெனில் ஸ்வரூபத்தைவிட்டுவேறில்லாதவைகளாகவே இருக்கின்றன. அதையே சுருதியும் **सोऽकामयत** எதனிடமிருந்து ஆகாசமுண்டாயிற்றோ அந்த ஆத்மா ஸங்கற்பித்தது என்று சொல்லுகிறது. எவ்விதமெனின்:—**बहुस्याम्**= வெகுவாக ஆவேனுக என்பதாம். ஒரே ஆத்மாவுக்கு வேறு பொருளின் பிரவேசமில்லாவிடின் வெகுவாகுகை எவ்விதம் ஸம்பிக்கும் எனின்? **प्रजायेय**=உத்பத்தியை யடைவேனுக் என உபதேசிக்கப்பட்டது. இங்கு கூறிய **बहुभवन** (வெகுவாக ஆகுகை) மானது புத்திரோத்தியினுல் போல அர்த்தாந்தர விஷயமானதன்று பின்னையோ வெனின் ஆத்மஸ்தங்களும் அனபிவ்யக்தங்களுமான நாமரூபங்களுடைய அபிவ்யக்தியினுலுண்டாகக் கூடியது என்பதாம். அதாவது:—எப்பொழுதும் தன்னிடத்திலுள்ளவைகளும், அனபிவ்யக்தங்களும் (பிரகாசத்தை யடையாதவைகளும்) ஆன நாமரூபங்கள் ஆத்மஸ்வரூபா பரித்யாகத்தாலேயே பிரும்மத்தை

விட்டுப் பிரியாதவைகளான தேசகால முள்ளவைகளாய் ஸர்வா வஸ்தைகளிலும் விரிவுபடுத்தப்படுமோ, அப்பொழுது அந்த நாமரூப வியாகரணமானது பிரும்மத்தினுடைய பஹுபவனமாகும். இதற்கு மாறாக நிரவயவமான பிரும்மத்திற்கு வெகுவாக ஆகுகையோ, அற்பமாக ஆகுகையோ ஸம்பவிப்பதற்கில்லை. ஆகாசத்திற்கு அற்பத்வம், பஹுத்வம் இவைகள் வேறு வஸ்துவின் (குடம் முதலிய உபாதியின்) மூலமுண்டாவது போலவே இங்கும் கண்டுகொள்ள வேண்டும். ஆனதுபற்றி ஆத்மாவுக்கு பரிணாமமூலம் (வேறுரூபத்தையடைதல்மூலம்) வெகுவாக ஆகுகை ஸம்பவிக்காதானது பற்றி தன்னிடத்தில் அத்யஸ்தமான நாமரூபங்கள் வாயிலாகவே அது வெகுவாக ஆகின்றது என்றேற்படுகின்றது. ஆத்மாவைக் காட்டிலும் வேறானதும், ஆனதுபற்றியே அனாத்மாவானதும், ஆத்மாவைவிட்டுவேறான தேசகாலமுள்ளதும், சூக்ஷ்மமானதும், வியவஹிதமானதும் வெகுதூரத்திலிருக்கின்றதும், சென்றகாலம், நிகழ்காலம், எதிர் காலம் ஆகிய மூன்றுகால ஸம்பந்தமுள்ளதுமான வஸ்துவானது இல்லையன்றோ. ஆகவே எந்தஎந்த அவஸ்தைகளை நாமரூபங்கள் அடைந்தபோதிலும் அந்தந்த அவஸ்தையுள்ள நாமரூபங்கள் பிரும்மத்தாலேயே ஆத்மா (ஸ்வரூப) வுள்ளன வாகின்றனவே இன்றி பிரும்மமானது நாமரூபாத்மகமாக ஒருபொழுதும் ஆவதில்லை. அந்தநாமரூபங்கள் பிரும்மமில்லாவிடில் ஸ்வரூபலாபமற்றவைகளாக வாகின்றன வாதலால், பிரும்மாத்மகங்கள் என்றே சொல்லப்படுகின்றன. அந்தநாமரூபங்களாகிற உபாதிகளால் ஞாத்ரு, க்ஞானம், க்ஞேயம், சப்தம், அர்த்தம் முதலிய ஸர்வவியவஹாரத்தையும் பிரும்மமானது அடைகின்றது. அந்த ஆத்மா இவ்விதகாமனையுள்ளதாய்க் கொண்டு தபஸ்ஸைச் செய்தது. தபஸ் என்றால் ஞானமாகும். यस्य ज्ञानमयं तपः "எதனுடைய தவம் ஞானவடிவமானதோ" என வேறு சுருதிகூறியிருத்தலே அதன் காரணமாகும். பிரும்மமானது ஆப்தகாமம் (அடையவேண்டியவை யாவற்றையும் அடைந்தது) ஆகையால் வேறுதபஸ்ஸு இங்கு சொல்லுவதற்கில்லை. அவ்விததபஸ்ஸை (ஞானத்தை)செய்தது. அதாவது; ஸிருஷ்டிக்கப்படுகின்ற ஜகத்த

சனுவிஷடான ஆலோசனையைப் பிரும்மம் செய்தது என்பதாம். இவ்விதம் ஆலோசனையைச் செய்து பிராணிகளின் கர்மக்ஞான வாஸனுநிமித்தங்களுக்கு அநுரூபமானதும், தேசம், காலம், பெயர், உருவம் இவற்றால் அவரவர் அநுபவத்திற்கேற்றபடி ஸர்வப்பிராணிகளாலும் எல்லா அவஸ்தைகளிலும் அநுபவிக்கப்படுகின்றதுமான இந்தப் பிரபஞ்சம் யாவையும் அணுவும் மீதமின்றி ஸிருஷ்டிசெய்தது. அந்த பிரும்மம் இந்தஜகத்தை ஸிருஷ்டித்துப் பிறகு என்ன செய்தது எனின்? ஸிருஷ்ட ஜகத்தைப் பிரவேசித்தது என்று तदेवानुप्राविशत् என்ற சுருதியானது சொல்லுகிறது.

### பிரவேசசப்தார்த்தவிசாரம்.

அந்த ஸிருஷ்டி சொல்லிய விடத்திலுள்ள பிரவேசத்தை விசாரிக்க வேண்டுவது அவசியமாகிவிடுகின்றது. அதாவது—எவ்விதம் பிரவேசித்தது பிரும்மம் என்பதாம். எவன் ஸ்ரஷ்டாவோ அவன் அதேஸ்ரஷ்ட்ருரூபத்துடன் பிரவேசித்தாறு? அல்லது வேறுரூபத்துடன் பிரவேசித்தாறு? என்ற சங்கை நிகழும். இவற்றுள் முதல் பக்ஷமாகத்தோற்ற கூடியது யாது எனின்? क्त्वाप्रत्यय சிரவணம் இருப்பதால் அதாவது: तत्सृष्ट्वा என்ற விடத்தில் க்த்வா ப்ரத்யயத்தைச்சுருதி பிரயோகித்திருப்பதால் எவன் ஸ்ரஷ்டாவோ அவனே தான் பிரவேசித்தான் என்று சொல்லவேண்டுவது உசிதமாகிறது. ஆனுல் அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் மண்ணுனதுபோல பிரும்மமானது காரணமாகுமானுல் காரணுத்மகமாக காரியமிருப்பதால் காரணமானவஸ்துவே கார்யவடிவமாக பரிணுமத்தை (மாறுதலை) யடைந்தது என்று வரும். அப்படியானுல் காரியோத்பத்திக்குப் பிறகு தனியாய் முன்னர் பிரவேசத்தை யடையாதது போல காரண வஸ்துவுக்குப் பிரவேசம் சொல்லமுடியாது. மிருத்தான காரணத்திற்கு காரியமான குடபரிணுமத்தைத் தவிர்த்து காரியமான குடத்தில் தனியாகப்பிரவேசஞ் சொல்லமுடியுமா? ஒருபொழுதும்முடியாது. ஆகவே காரணமான பிரும்மமே காரியமான பிரபஞ்சரூபமாகப் பரிணுமத்தை யடைந்து பின்னர்

அதில் பிரவேசித்தது என்று சொல்லுவது பொருத்தமில்லாமலாகி விட்டது.

சங்கை—அங்ஙனமாயின் மண்ணென காரணத்திற்கு காரியமான குடத்தில் அதே மண்ரூபமான பிரவேசமில்லாவிடினும், பொடியாகிற வேறு ரூபத்தால் பிரவேசமிருப்பதை நாம் பார்க்கிறோம். இதுபோலவே अनेन जीवेनात्मनाऽनुप्रविश्य என வேறு சாந்தோக்கிய சுருதி சொல்லுவதை யொட்டி வேறு ரூபத்தால் காரணமான பிரும்மத்திற்கு நாமரூபாத்மகமான காரியத்தில் பிரவேசமானது சம்பவிக்கலா மன்றோ? எனின்

உத்தரம்—இவ்விதம் சொல்லுவது யுக்தமாகாது. ஏனெனில் பிரும்மமானது ஒன்றாயிருப்பதே அதன் காரணமாகும். அதாவது:—மிருத்ரூபகாரணமானது அனேகமாயும் ஸாவயவமாயும் இருப்பதுபற்றி பொடிரூபமாக காரியமான குடத்தில் பிரவேசித்தது என்று சொல்லுவது ஒருவாறு பொருந்தும். ஆத்மாவோ ஒன்றாயிருப்பது பற்றியும், எவ்வித அவயவமு மில்லாதது பற்றியும், ஆத்மப்பிரவேசமில்லாத தேசமின்மை பற்றியும், அது போன்ற பிரவேசம் இங்கு கூறமுடியாது என்பதாம்.

சங்கை—பிரவேசமானது எவ்விதம் ஸம்பவிக்காது? तदेवानुप्राविशत् என சுருதி சொல்லியிருப்பதைக் கொண்டு பிரவேசம் யுக்தமானதென்றே தானேற்படுகிறது. ஆகவே பிரும்மமானது ஸாவயவமாகவே இருக்கட்டும். ஸாவயவமா யிருத்தல் பற்றி வாயில் கை நுழைவது போல நாமரூபகாரியத்தில் ஜீவரூபமாக பிரவேசித்தது பிரும்மம் என்று சொல்லுகிறோம். ஆகவே இவ்விதம் சொல்லுவதுதான் பொருத்தமுமாகும் எனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஆத்ம சூன்னிய (இல்லாத) தேசமில்லா திருத்தலே அதன் காரணமாகும். அதாவது:—காரியமான பிரபஞ்சரூபமாகப் பரிணமித்தை யடைந்த பிரும்மத்திற்கு நாமரூபாத்மக காரிய பிரதேசத்தில் பிரவேசம் சொல்ல முடிவதில்லை. மண்ணின் காரியமான குடாதிகளுக்கு, காரணமான மண்ணினாலும், அதன் அவயவங்களாலும் ஜன்மம் முதற்கொண்டே வியாப்தி யிருப்பதுபோல பிரும்ம காரியமான

ஸர்வத்திற்கும் காரணமான பிரும்மத்தினுலும், அதன் அவயவமான ஜீவர்களாலும் ஜன்மம் முதற்கொண்டே வியாப்தி யிருப்பதைக் காண்கிறோம். ஆகவே எந்தப் பிரதேசத்தை பிரும்மமானது ஸ்வாவயவ பூதமான ஜீவாத்மாவினுல் பிரவேசிக்கக் கூடுமோ அத்தகைய ஆத்ம சூன்யப்ரதேசம் ஒன்று தனியாய் இருப்பதற்கிட மில்லாமலாகி விடுகின்றது.

சங்கை—காரியமான ஜீவாத்மாவானது காரணத்தைப் பிரவேசிக்கின்றதென்று சொல்லக்கூடாதோ எனின்?

உத்தரம்:— அங்ஙனமாயின் காரியமான ஜீவாத்மாவுக்கு ஜீவாத்மத்வமே அடியோடு போய்விடும். உலகில் பச்சையான மண் குடமானது காரணமான மிருத்தில் பிரவேசிக்குமானல தனது குடத்துவத்தையே இழந்து விடுவதைக் காண்கிறோம். மேலும், காரணத்திற்குப் பிரவேசத்தைச் சுருதி சொல்லியிருப்பதால் காரியமானது காரணத்தைப்பிரவேசித்தது என்று சொல்லுவதே முற்றிலும் பொருத்தமாகவாகாது.

சங்கை — ஜீவாத்ம ரூபகாரியமானது நாமரூப பரிணதமான வேறு கா்ரியத்தை யடைந்தது என்று சொல்லுவோமெனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லவியலாது. ஏனெனில் ஒரு காரியமானது மற்றொரு காரியமாக ஆவதென்பது முற்றிலும் விருத்தமாவதாலேயே என்க. குடம் வேறு குடமாக ஆவதில்லை யன்றோ? மேலும் நாமரூப காரியங்களைவிட ஜீவனை வேறாகக்கூறும் சுருதி விரோதமும் உண்டாகும். அத்துடன் ஜீவன் நாமரூபகாரியபாவத்தை யடைந்தான் என்று சொல்லும் பக்ஷத்தில் ஜீவனுக்கு மோக்ஷமே ஸம்பவிக்காது. எவன் எதனினின்றும் விடுபடுகின்றனே அவன் அதையே அடைகிறன் என்பது ஸம்பவிக்க கூடியதல்ல வன்றோ! கட்டுண்ட திருடன் முதலியோர் சங்கிலியாக ஆவதில்லை யன்றோ?

சங்கை — அதே காரணப்பிரும்மமானது சரீராதிகளாகிற ஆதாரமாகவும், அதற்குள்ளிருக்கும் ஆதேயமான ஜீவாத்மாவாக

வும் பரிணாமத்தை (ரூபாந்தராபத்தியை) அடைந்திருக்கிறது என்று சொல்லுவோமெனில்?

உத்தரம் — அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் வெளியிலுள்ள வற்றிற்கே உள்ளில் பிரவேசமானது ஸம்பவிப்பதைக் காண்கிறோம். இயற்கையில் எவன் எதற்குள்ளிருக்கின்றானோ அவன் அதைப் பிரவேசித்தான் என்று சொல்ல முடியாதன்றோ! வெளியிலுள்ளவனுக்கே பிரவேசம் என்பது ஸம்பவிக்கும். வீட்டைக் கட்டிக்கொண்டு பிரவேசித்தான் என்ற விடத்திற் போலவே பிரவேசம் என்ற சப்தத்தின் பொருளையும் கொள்ளுவது அவசியமாகின்றது.

சங்கை—ஜலத்தில் சூரிய பிரதிபிம்பம் போல பிரவேசத்தைச் சொல்லுவோமெனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லவியலாது. ஏனெனில் அபரிச்சின்னமாயும், அமூர்த்தமாயு மிருத்தலே அதன் காரணமாகும். அதை விளக்குவாம்—பரிச்சின்னமாயும், மூர்த்தமாயு மிருக்கின்ற சூரியாதிகளுக்கு வேறாயும் தெளிவாயுமுள்ள ஜலம் முதலியவற்றில் பிரதிபிம்போதய முண்டாவதைக் காண்கிறோம். ஆத்மாவுக்கோ அவ்விதஞ் சொல்லவியலாது. ஏனெனில் அமூர்த்தமாயிருத்தலாலும், ஆகாசாதி காரணமா யிருத்தலாலும், வியாபகமாயிருத்தலாலும், ஆத்மாவை விட்டு விலகின தேசமுள்ள பிரதிபிம்பாதாரமான வேறு வஸ்து இல்லாதிருத்தலாலுமே என்க. ஆகவே பிம்பம் போல பிரவேசம் சொல்லுதல் யுக்தமாகாது. அங்ஙனமாயின் பிரவேசமே கிடையாது. तदेवानुप्राविशत् என சுருதிகூறிய பிரவேசத்தைச் சாதிப்பதற்கு வேறு கதியையும் காணோம். சுருதியோ இந்திரியங்களுக் கெட்டாத வஸ்து விஷயமான விஞ்ஞானத்தை யுண்டுபண்ணும் விஷயத்தில் பிரமாணமென நாமங்கீகரிக்கின்றோம். இந்தப் பிரவேச வாக்கியத்தினின்றும் வெகுயத்தினமுள்ளவர்க்கும் கூட விஞ்ஞானமுண்டாவதில்லை.

சங்கை—அங்ஙனமாயின் பயனற்றதான तदेवानुप्राविशत् என்றவாக்கியத்தையே விட்டுவிடுவோம் என்றாலோ?

உத்தரம் — அவ்விதம் விட்டுவிட முடியாது. ஏனெனில் அந்தச்சுருதிக்கு வேறுபொருளிருக்கின்றது. ஆகவே வாக்கியத்தைப் பொருளற்றதெனக் கற்பிப்பது வீண்வாதமே யாகும். இந்தச்சுருதிக்கு இதுவரை கூறியதைவிட வேறாயும், பிரகிருதமாயும், விவக்ஷிதமாயுமுள்ள வாக்கியார்த்த மிருக்கின்றது. அதைக்ஞாபகப்படுத்திக் கொள்ளல்வேண்டும். அதைச்சொல்லுகிறோம். ब्रह्मविदाप्नोति परं, सत्यं ज्ञानमनन्तं ब्रह्म, यो वेद निहितं गुहायाम्, என்ற வாக்கியத்தினால் பிரும்மவிக்ஞானம் விவக்ஷிதமாயும் பிரகிருதமாயு மிருக்கின்றது. பிரும்மஸ்வரூப ஸாக்ஷாத்காரத்திற்கு வேண்டி ஆகாசாதி அன்னமயாந்த காரியம் சொல்லப்பட்டது. பிரும்மக்ஞானமும் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றது. அந்தக்கோச வாக்கிய மத்தியில் அன்னமய ஆத்மாவைக் காட்டினும் அன்னியோந்தர ஆத்மா ப்ராணமயன், அவனுக்குள்ளில் மனோமயன் விக்ஞானமயன் என விக்ஞானகுஹையில் பிரவேசம் செய்விக்கப்பட் டிருக்கிறது. இவ்விடத்தில் பிரிய மோத பிரமோதாதி விசிஷ்ட ஆனந்தமயன் உபதேசிக்கப்பட்டிருக்கிறான். இந்த ஆனந்தமயனுக்குப் பிறகு ஆனந்தமயனுகிற லிங்காதிகமம் வாயிலாக(ஆனந்தமயனுகிற சுத்தப்பிரும்மாதிகமோபாயம் வாயிலாக) ஆனந்த விருத்திக்கு முடிவாகவான (நிரதிசயானந்தரூபனுன) ஆத்மா வானவன் "பிரும்மபுச்சம் பிரதிஷ்டா, ஸர்வவிகற்பாஸ்பதன், ஆனதுபற்றியே நிர்விகல்பனுக ஆகிறான். அத்தகைய ஆத்மா இந்த ஆனந்தமய குஹையிலேயே அறியத்தக்கவனுக வாகிறான்". என்பதைச் சொல்லவேண்டி அதன் பிரவேசம் கற்பிக்கப்படுகின்றது. பிரும்மமானது இந்த ஆனந்தமய கோசத்தை விட வேறானவிடத்தில் அறியப்படுவதில்லை. நிர்விசேஷமாயிருத்தலே அதன்காரணமாகும். ராஹுவுக்கு சந்திரார்க்க விசேஷஸம்பந்தமானது போல விசேஷஸம்பந்தமானது உபலப்தி (அறிவு) க்கு ஹேதுவாகக் காணக்கிடக்கின்றது. இவ்விதமே அந்தக்கரண குஹாஸம்பந்தமானது ஸமீபித்திருப்பதால் பிரும்மத்தின் உபலப்தி(அறிவு)க்கு ஹேதுவாகவாகின்றது. அந்தக்கரணமானது பிரகாசவடிவமாயிருத்தலே அதன் காரணமாகும். பிரகாசத்துடன் கூடின குடாதிகளின் உபலப்தி(அறிவு)ஏற்படுவதுபோல

வே புத்திவிருத்தியாகிற ஆலோக (பிரகாசம்)த்துடன் கூடின ஆத்மோபலப்தியானது உண்டாகின்றது. ஆகவே உபலப்திக்கு ஹேதுவான குஹையில் நிஹிதம் என்பது பிரகிருதமானதே. அதை விரிக்கவேண்டி இங்கு "तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् அதை சிருஷ்டித்து அதைப்பிரவேசித்தது" என்று சொல்லப்பட்டது.

ஆகவே ஆகாசாதிகாரணமான பிரும்மவஸ்துவானது காரியத்தை சிருஷ்டித்து அதில் அனுப்பிரவேசத்தை யடைந்தது போல அந்தர்க்குஹையான புத்தியில் த்ரஷ்டாவாகவும், சுரோதாவாகவும், மந்தாவாகவும், விக்ஞாதாவாகவும், விசேஷமாகக் காணப்படுகின்றது. அதுதான் அதற்குப் பிரவேசமெனப்படும். ஆகவே காரணமான அந்தப் பிரும்மமானது இருக்கின்றது. ஆனதுபற்றியே அதை இருக்கும் வஸ்து என்றே அறியவேண்டும். அந்தப் பிரும்மமானது காரியத்தை அனுப்பிரவேசஞ் செய்து என்ன செய்தது? सत् (ஸத்)=மூர்த்தமாகவும், त्यच्च (த்யச்ச)=அமூர்த்தமாகவும் ஆயிற்று. உத்பத்திக்கு முன்னர் அனபிவ்யக்த நாமரூபகமாயிருத்தல் பற்றி ஆத்மாவினிடத்திலிருந்த மூர்த்தா மூர்த்தங்களே சிருஷ்டியாரம்பத்தில் ஸ்வாந்தர்கதமான பரமாத்மாவினால் ஸ்தூலமாக்கப்பட்டது பற்றி மூர்த்தா மூர்த்தங்களாக ஆத்மா ஆயிற்று என்று சொல்லப்பட்டது. மேலும் நிருக்தமாயும், அநிருக்தமாயும் ஆயிற்று. அவற்றுள் நிருக்தமாவது—ஸமானமாயும், அஸமானமாயு முள்ளவற்றைக் காட்டிலும் தேசகால விசிஷ்டமாகத் தனித்துப் பிரித்து 'இது தான் அது' என காட்டக் கூடியது எதுவோ அதுவே நிருக்தம் எனப்படும். இதற்கு நேர்மாறாகவுள்ளது அநிருக்தமாகும். அவற்றுள் நிருக்தம் மூர்த்தத்திற்கும், அநிருக்தம் அமூர்த்தத்திற்கும் அபேதக விசேஷணமாகின்றது. அதாவது: நிருக்தம் என்றதால் ப்ரத்யக்ஷம் என்றும், அநிருக்தம் என்றதால் பரோக்ஷமென்றுப் முறையே மூர்த்தா மூர்த்தங்கள் சொல்லப்பட்டனவாக வாகின்றது. அவ்விதமே நிலயனம் நீடம். அதாவது: ஆச்ரயம் என்று பொருள். இதுவும் மூர்த்த வஸ்துவின் தர்மமேயாகும். அநிலயனம் இதற்கு நேர்மாறானது. இது அமூர்த்தத்தின் தர்மமேயாகும். த்யத், அநிருக்த, அநிலயனங்கள் அமூர்த்த தர்மங்க

வராயினும், வியாகிருத விஷயங்களே யாகும். சிருஷ்டிக்குப் பிறகுள்ளவைகளா யிருத்தலே அதன் காரணமாகும். த்யத் என்றால் ப்ராணாதிகளாகும். அதுவே அநிருக்தமாயும், அநிலயனமாயும் ஆயிற்று. ஆனதுபற்றி இந்த த்யத், அநிருக்த, அநிலயன ரூபங்களான விசேஷணங்கள் வியாகிருத விஷயங்களாகவே ஆயின என்றேற்பட்டது. மேலும் விக்ஞானம் சேதனவஸ்துவாயும், அவிக்ஞானம் அசேதன வஸ்துவாயும் அதாவது: பாஷாணாதியாயும் ஆயிற்று. ஸத்யம் வியவஹாரத்திலுள்ள ஸத்யமாயும் ஆயிற்று என்று பொருள். ஏனெனில் வியவஹாரவிஷயமான காரியங்களைச் சொல்லும் பிரகரணத்தில் सत्य சப்தம் படிக்கப்பட்டிருத்தலே அதன் காரணமாகும்.

பரமார்த்த ஸத்யம் என்று சொல்லுதல் பொருந்தாது. பரமார்த்த ஸத்யமானபிரும்மம் ஒன்றேயாதலால் என்க. இவ்விடத்தில் வியவஹார விஷயமானதும் கானல் ஜலம் முதலியவற்றைக் காட்டிலும் ஆபேக்ஷிக ஸத்யமானதுமான ஜலம் முதலியவை ஸத்யம் என்றதாற் சொல்லப்பட்டது. அந்ருதம் முற்கூறியதற்கு மாறான கானல்ஜலம் முதலியவையாகவும் ஸத்யம்=பரமார்த்த ஸத்யப்ரும்மம் ஆயிற்று. யாதுகாரணத்தால் ஸர்வமாயும் மீதமற்றதாயும் ஸத், த்யத் இவற்றை ஆதியாகவுடையதாயும், மூர்த்தாமூர்த்ததர்ம முள்ளதாயும் இருக்கிற விகார(காரிய)சமூகமாக ஒன்றாகவே இருக்கிறஸத்சப்தவாச்யமான பிரும்மமானது ஆயிற்றோ, நாமரூபவிகாரங்கள் அதற்கு வேறாகயில்லாதிருத்தலே அதன்காரணமாகுமோ, அக்காரணம்பற்றி அந்தப்பிரும்மத்தை பிரும்மவித்துக்கள் ஸத்யமென்றே சொல்லுகின்றனர்.

“அஸ்தி” “நாஸ்தி” என்ற பிரச்னம் பிரகிருதமாயிருப்பதால் அந்தப்பிரச்னத்திற்குப் பதிலுரைக்கவேண்டி “ஆத்மாவானது வெகுவாக ஆவேன் என ஸங்கல்பஞ்செய்தது” என்று சொல்லப்பட்டது. இதினின்றும் அந்த ஆத்மாவானது தனது காமத்திற்கனுகுணமாக ஸத், த்யதாதிரூபமான ஆகாசாதிகாரியத்தை சிருஷ்டித்து அதில் பிரவேசித்து பார்க்கின்றதாயும், கேட்கின்றதாயும், மனனம் செய் கின்றதாயும், அறிகின்றதாயும், ஆகி வெகுவாக ஆயிற்று. ஆனதுப்பற்றி அதே இந்த பிரும்மம்

ஆகாசாதிகாரணமாயும், காரியத்தில் இருக்கின்றதாயும், பரமவ்யோமமாகிற ஹ்ருதயகுஹையில் நிஹிதமாயும், அந்த:,ஹ்ருதயகுஹா என்ற சப்தத்தால் சொல்லப்பட்ட ப்ரத்யயத்தால் அதாவது: ஸாக்ஷியினுல் அறியப்படும் அந்தக்கரணத்திலுள்ள விசேஷத்தால், அதாவது: த்ரஷ்ட்ருத்வாதி ரூபபேதத்தால் பிரகாசமானமாயும் இருக்கின்றது என அறியவேண்டும் என உபதேசிக்கப்பட்டதாய் அறிந்து கொள்ளவேண்டும் என்றேற்பட்டது. இது வரை பிராம்மண வாக்கியத்தாற் சொல்லப்பட்ட அர்த்தத்தில் பின்வரும் மந்திரமும் இருக்கிறது. அதாவது:—முன்னருள்ள ஐந்துகோசங்களில் அன்னமயாதிகளாகிற ஆத்மப்ரகாசகங்களான மந்திரங்கள் எவ்விதம் படிக்கப்பட்டனவோ இவ்விதமே இங்கு ஸர்வாந்தரமான ஆத்மா இருக்கின்றது என்றதை காரியத்வாரா்வாக பிரகாசப்படுத்தும் மந்திரமுமிருக்கின்றது என்று பொருள்.

ஆறுவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஏழாவது அனுவாகம்.

(मन्त्रः) असद्वा इदमग्र आसीत् । ततो वै सदजायत । तदात्मानꣳस्वयमकुरुत । तस्मात्तत्सुकृतमुच्यत इति । रसो वै सः । रसꣳह्येवाऽयं लब्ध्वाऽऽनन्दीभवति । कोह्येवान्यात्कः प्राण्यात् । यदेष आकाश आनन्दो नस्यात् । एष ह्येवानन्दयाति । यदा ह्येवैष एतस्मिन्नदृश्येऽनात्म्येऽनिरुक्तेऽनिलयनेऽभयं प्रतिष्ठां विन्दते । अथ सोऽभयं गतो भवति । यदा ह्येवैष एतस्मिन्नुदरमन्तरं कुरुते । अथ तस्य भयं भवति । तत्त्वेव भयं विदुषो मन्वानस्य । तदप्येषश्लोको भवति ॥ १ ॥

(ப—ரை) इदम्=நாமரூபவிசேஷமுள்ளதாக வியாகிருதமான அதாவது: ஸ்தூலமாக்கப்பட்ட ஜகத்தானது अग्रे=ஸிருஷ்டிக்கு முன்னர் असत्=அவியாகிருதமாக அதாவது: நாமரூபாபிவியக்தியற்றதாக आसीत्=இருந்தது. பிரும்மமே அஸத் என்றசப்த

வாச்யமாக இருந்தது என்று கருத்து, ततः वै=அஸத் சப்த வாச்யமான பிரும்மத்தினிடமிருந்தே सत्=நாமரூபவிசேஷத்துடன் கூடினஜகத்தானது अजायत=உண்டாயிற்று. பிதாவினிடமிருந்து புத்திரனுண்டாவதுபோல உண்டாயிற்றா? என்றால் அவ்விதமில்லை யென்பது உபதேசிக்கப் படுகின்றது. तत्=அஸத் சப்தவாச்ய பிரும்மமானது आत्मानम्=தன்னை स्वयम्=தானாகவே अकुरुत=வெளிப்படுத்திக் கொண்டது. யாதுகாரணத்தால் தன்னைத்தானே வெளிப்படுத்திக் கொண்டதோ तस्मात्=அக்காரணத்தால் तत्=அந்த பிரும்மமே सुकृतम्=ஸ்வயம் கர்த்தாவாக அதாவது: தனக்குத்தானே கர்த்தாவாக उच्यते=சொல்லப்படுகின்றது. பிரும்மமானது ஸர்வகாரணமா யிருப்பதுபற்றி ஸ்வயம்கர்த்தா என உலகில் பிரசித்தமாகவே யிருக்கின்றது. यद्वै=யாதுகாரணத்தால் ஸ்வயமே ஸர்வத்தையும் எல்லாவிதமாகவும் தானே செய்ததோ तत्=அக்காரணத்தால் सुकृतम्=புண்ணியரூபமாக அதே காரண பிரும்மம் சொல்லப்படுகின்றது. ஸுக்ருத சப்தத்தாற் சொல்லப்படுவது எதுவோ அது பல ஸம்பந்தாதிகளுக்குக் காரணம் என்பது உலக (சாஸ்திர) ப்பிரஸித்தமாகவே யிருக்கிறது. புண்ணியமோ, மற்றொன்றோ எதுவாயினும் தனது பலனைத்தருகின்றது என்ற அந்த சாஸ்திரப் பிரஸித்தியானது நித்தியமான சேதனரூப காரண மிருந்தாற்றான் உபபன்னமாக (பொருத்தமுள்ளதாக) வாகும். ஆகவே ஸுக்ருதத்திற்கு பலஸம்பந்தாதி காரணப்பிரஸித்தி யிருப்பதைக்கொண்டு பலஜனகமான பிரும்மம் இருக்கின்றது என்று தானேற்படுகின்றது.

மேலும், பின்வரும் காரணத்தாலும் பிரும்மம் இருக்கின்றது என்றே ஏற்படுகின்றது. அது யாதெனில் ஸுக்ருதம் என யாதொன்று சொல்லப்பட்டதோ स एव=அதுவே रसः=ரஸமாக (திருப்தி ஹேதுவாக) இருக்கின்றது. அதாவது: ஸுக்ருத சப்தவாச்யமாகப் பிரஸித்தமான யாதொரு பிரும்மமுண்டோ அதுவே ரஸமாகவு மிருக்கின்றது என்று பொருள். பொதுவாய் உலகில் திருப்தி ஹேதுவாயும், ஆனந்தபற்றியே ஆனந்தகரமாயு முள்ளதாக மதுரம், புளிப்பு முதலியன பிரஸித்தமாகவே இருக்கின்றது. ஆனதுபற்றியே अयम्=இந்த லோகமானது

**रसम्**=ரஸத்தை **लब्ध्वैव**=அடைந்தே **आनन्दी**=ஆனந்தமுள்ளதாக **भवति हि**=ஆகின்றதென்பது பிரசித்தமன்றோ! ஆகவே இல்லாத வஸ்துவுக்கு ஆனந்தஹேதுத்வம் பிரஸித்தமன்று. உலகில் ஆனந்தத்தைத்தரும் வெளியிலுள்ள ஸாதனமற்றவர்களாயிருந்தபோதிலும்,எவ்வித காரணசேஷ்டையற்றவர்களாயும் அதாவது: ஸமாதிநிஷ்டர்களாயும்,எவ்வித ராக(ஆசை)மற்றவர்களாயும் இருக்கின்ற பிரும்ம தத்துவ ஸாக்ஷாத்காரஞ்செய்த மஹான்கள் வெளியிலுள்ள ரஸலாபத்தாற்போல ஆனந்தமுள்ளவர்களாகவே காணக்கிடக்கின்றனர். ஆனதுபற்றி அத்தகைய பெரியாரின் ஆனந்த காரணமான பிரும்மம் இருக்கின்றது என்றுதான் ஏற்படுகின்றது. பின்வரும் காரணத்தாலும் பிரும்மம் இருக்கின்றதென்றே தானேற்படும். ஏனெனில் பிராணனாதி கிரியைகாணப்படுவதே அதன் காரணமாகும். அதாவது: — ஜீவிக்கின்றவனுடைய ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிகமான இந்த சரீரமோவேனில் பிராணனால் பிராணனவியாபாரமுள்ளதாகவும், அபானனால் அபானவியாபார முள்ளதாகவும் காணப்படுவதிலிருந்து வாயுவினுடைய வைகளும், இந்திரியத்தினுடையவைகளுமான சேஷ்டைகள் ஒன்றுசேர்ந்த தேஹேந்திரியங்களால் செய்யப்படுகின்றனவாகக்காணக்கிடக்கின்றன. காரியகாரணங்களுடைய அந்த சேர்க்கையானது ஒரு சேதனனுடைய பிரயோஜனத்திற்கு சாதனமாயிருக்கும்படி ஏற்பட்டிருக்க வேண்டுமாதலால் இக்கூட்டத்திற் சேராதசேதனனொருவ னில்லாவிடில் முற்கூறிய கூட்டமோ, அதன் பிரயோஜனமோ இல்லாமலாகிவிடும். அசேதனங்களின் கூட்டமானது தன்னைவிட வேறான சேதனனொருவனில்லாமல் நடைபெறுவதை உலகில் காணவில்லை.

இதையே சுருதியும் சொல்லுகிறது — **आकाशे**=ஹிருதய குஹையில் **एषः**=இந்த **आनन्दः**=ஆனந்தமானது **न स्यात् यत्**=இல்லாதிருக்குமானால் **कोह्येव**=எவன்தான் **अन्यात्**=அபான சேஷ்டையைச்செய்வன் **कः**=எவன்தான் **प्राण्यात्**=பிராணனத்தைச் செய்வன். வெளியிலிருந்து காற்றையுட்கொள்ளுதல் பிராணனம் என்றும், உள்ளிலிருந்து வெளிவிடுதல் அபானம் என்றும் சொல்லப்படும். பிரும்மமில்லாவிடில் பிராணாபான வியவஹாரங்கள்

-நடைபெறமாட்டா. ஆகவே பிரும்மம் இருப்பதாகவேதான் ஏற்படும். மேலும் சரீரேந்திரியங்களுடைய பிராணாதி ஸர்வ சேஷ்டைகளும், சரீரேந்திரியாதி ஸங்காதத்தை (கூட்டத்தை) விட உண்மையில் வேறான எந்த சேதனனுடைய போகத்திற்கு வேண்டி ஏற்பட்டனவோ அந்த சேதனன் இருக்கவே இருக்கிறான். அவனில்லாவிடில் போக்தா (அநுபவிப்பவன்) இல்லாததுபற்றி காரிய கரண (சரீரேந்திரிய) ங்களின் சேஷ்டைகள் வீண் என்றே ஏற்பட்டுவிடும். அத்தகைய சேதனன் உண்மையில் பிரும்மமானது பற்றியும், பிரும்மமானது இருக்கின்றது என்றேதான் ஏற்படும். एषह्येव=இந்த பரமாத்மாவே आनन्दयाति= லோகத்தை தர்மத்திற்குத்தக்கபடி சந்தோஷப் படுத்துகிறது. அதாவது: ஆனந்தரூபனான அதே பரமாத்மாவானது அவித்யையினால் பரிச்சின்னனாய் இருந்துகொண்டு பிராணிகளால் அநுபவிக்கப்படுகிறார் என்பதாம்.

வித்வான் அவித்வான் இவர்களுக்கு பயம், அபயம் இவற்றிற்குக் காரணமாயிருத்தல் பற்றியும் அந்தப் பிரும்மமானது இருக்கின்றது என்று ஏற்படுகின்றது. அதாவது: ஸத்தான (முக்காலத்திலும் அழிவற்ற) வஸ்துவை யாசிரயித்தலாலன்றோ அபயமானதுண்டாகும். அஸத்தான வஸ்துவை யாசிரயித்தலால் பயநிவிருத்தியானது ஒருபொழுதும் உண்டாவதில்லையன்றோ என்பதாம். பிரும்மம் அபயஹேதுவாகவாகும் முறையுபதேசிக்கப்படுகின்றது. एषः=இந்த உத்தமாதிகாரியானவன் यदा=எப்பொழுது ह्येव=யாதுகாரணத்தால் अदृश्ये=விஷயமாகஇல்லாததாயும், अनात्म्ये=சரீரமற்றதாயும், अनिरुक्ते=எவ்வித விசேஷமு மற்றதாயும், अनिलयने=தனக்கு வேறொரு ஆதாரமற்றதாயும் இருக்கின்ற एतस्मिन्=இந்த பிரும்மத்தினிடத்தில் अभयम्=பயமற்றிருக்கும்படி அல்லது, எவ்வித பயமுமற்ற प्रतिष्ठाम्=நிலையை ஆத்மபாவத்தை विन्दते=அடைகின்றானோ, अथ=அப்பொழுது सः=அந்த உத்தமாதிகாரியானவன் अभयं=முக்தியை गतः= அடைந்தவனாக भवति=ஆகின்றான். அதாவது:— பிரும்மத்தினிடத்தில் அபயப்ரதிஷ்டை யேற்பட்டதும் அவித்யாகிருதமாயும், பயஹேதுவாயும் இருக்கின்ற பேதத்தின் தோற்றமானது

இல்லாமலாகி விடுகின்றது என்பதாம். இந்த அதிகாரி அப்பொழுது ஸ்வரூபத்தில் நிலைபெற்றவனாகவே ஆகிவிடுகிறான்.

"यत्र नान्यत्पश्यति, नान्यच्छृणोति, नान्यद्विजानाति स आत्मा"

"வேறொன்றைப் பார்ப்பது என்பது எதனிடத்திலில்லையோ, வேறொன்றைக் கேட்பதென்பது எதனிடத்திலில்லையோ, வேறொன்றை யறிதல் என்பது எதனிடத்திலில்லையோ, அது ஆத்மா" என வேறு சுருதிசொல்லுகிறது. 'உண்மையில் வேறான ஒரு வஸ்துவுக்கு வேறுவஸ்துவினிடமிருந்து பயமுண்டாவதென்பது பிரஸித்தம். தனக்கே தன்னிடமிருந்து பயமுண்டாவதுண்டோ! ஒருபொழுதுமில்லை. ஆகவே அனாத்மாவாகவுள்ளது எதுவோ அதுவே பயத்திற்குக் காரணம் எனப்பெறப்பட்டது. உலகில் பயஹேதுக்கள் பல்காணப்படினும் எதிலும் பயமற்றவர்களாகவே பிரும்மவித்துக்கள் காணக்கிடக்கின்றனர். ஸர்வ பயத்தையும் போக்கி ரக்ஷிக்கும் பிரும்மமில்லாவிடில் இவ்வித அனுபவம் ஏற்படுவதற்கில்லை. ஆனதுபற்றி பிரும்மவித்துக்களுக்கு அபயமானது காணக்கிடப்பதால் அபயகாரணமான பிரும்மம் இருக்கின்றது என்றே ஏற்படுகின்றது.

அந்த உத்தமாதிகாரி எப்பொழுது அபயத்தை யடைகிறான் எனில்? எப்பொழுது ஆத்மாவினிடத்து பேதத்தைப் பார்ப்பதில்லையோ அப்பொழுதுதான் அபயத்தை (முக்தியை) யடைந்தவனாக வாகிறான். மேலும், यदा ह्येव எப்பொழுது அதாவது: அவித்யாதசையில் एषः=இந்தமந்தன் एतस्मिन्=இந்த பரமாத்ம வஸ்துவினிடத்தில் उदरम् = அல்பமேனும் अन्तरम्=பேதத்தை (வேற்றுமையை) कुरुते = செய்கின்றானோ, अथ=அப்பொழுது तस्य=அந்த அவித்வானுக்கு भयम्=ஆத்மாவினிடமிருந்து பயமானது भवति=உண்டாகின்றது. ஆகவே அவித்வானுக்கு ஆத்மாவே பயகாரணமாகவும் ஆகின்றது என்றேற்பட்டது என்பதாம். அதாவது: तत्वेव=வேறாகப் பார்க்கப்பட்ட அந்தப் பிரும்மமே, विदुषः=பேதஞானமுள்ள வித்வானாயினும் अमन्वानस्य=ஒன்றாக எண்ணாதவனுக்கு भयं=பயஹேதுவாக வாகின்றது. ஆகவே எவனொருவன் வேறாகயில்லாததாயும், ஏகமாயும் ஆத்மதத்துவத்தைப் பார்க்க (அறிய) வில்லையோ அவன்

வேறு வழியில் வித்வானுயினும் அவித்வான் (அறியாதவன் மூடன்) என்றேதான் சொல்லப்படுவென் என்பதாம். மேலும், உலகில், நாசம், பீடை இவற்றை யடையக்கூடிய வஸ்துவென்றும், நாசம், பீடை இவற்றை உண்டுபண்ணக்கூடிய வஸ்துவென்றும் பதார்த்தங்களை இரண்டுவிதமாகக் காண்கிறோம். இவற்றுள் நாசபீடாதிகளை யுண்டுபண்ணும் வஸ்துவைக் கண்டதும், நாச பீடாதிகளை யடையக்கூடியதாகவுள்ள வஸ்துவுக்கு பயமுண்டாகின்றது என்பது உலகப்பிரசித்தம். நாசபீடாதி ஹேது எதுவோ அது (பிரும்மம்) நாசபீடாதிகளை யடையக்கூடியதாக காணப்படவில்லை. ஆகவே நாசபீடாதிக ளற்றதும், நாசபீடாதி ஹேதுவாக உள்ளதுமான வஸ்துவில்லாவிடில் அதை (உச்சேத ஹேதுவை) ப்பார்த்தலாலுண்டாகும் பயம் உண்டாவதற்கே இடமில்லை. ஸர்வஜகத்துமோ பயமுள்ளதாகவே காணப்படுகின்றது. ஆகவே இவ்விதம் ஸர்வஜகத்திற்கும் பயமிருப்பதைக் கொண்டு பின்வருமாறு ஊஹித்தறிய வேண்டியதாக ஏற்படுகின்றது. அதாவது:— எதனிடமிருந்து ஜகத்தானது பயத்தை யடையுமோ அத்தகைய பயகாரணமானதும், தான் எவ்வித நாசம் பீடை இவை யற்றதுமான வஸ்து இருக்கின்றது என்றேதான் ஏற்பட்டது என்பதாம். இதுவரை கூறிய பொருளில் பின்வரும் மந்திரமும் இருக்கின்றது. (எ—று)

சங்கர பகவத்பாத பாஷ்யப்படி ஏழாவது அனுவாகம் முற்றிற்று.

---

## வித்யாரண்ய தீபிகை.

(அ—கை) இதுவரை கூறியதினின்றும் கிடைத்த பிரும்ம தத்துவ ஸாக்ஷாத்காரமே அன்னமயாதி ஆனந்தமயாந்த கோசோபாஸ்தியின் பலன் எனக்கருதி சுருதியானது வேறு பலன் எதையும் கூறாது கேவலம் ब्रह्मपुच्छं प्रतिष्ठा என ஸர்வஜகதாதாரபூதமான பிரும்மதத்துவோபதேசத்தில் முடிவையடைந்து பிறகு முன்னர் கூறின ஆனந்தமய கோசத்தில் முக்கியமாயுள்ள பிரும்மத்தைக் கூறும் மந்திரத்தை யுபதேசிக்கின்றது—.

**(मन्त्रः) तदप्येषः श्लोको भवति ॥**

(ப—ரை) तदपि=அந்த முன் சொன்ன அர்த்தத்தில் एषः श्लोकः=இந்தப் பின்வரும் மந்திரம் भवति=இருக்கின்றது. (எ—று).

(அ—கை) அந்த மந்திரம் சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) असन्नेव.........विदुरिति ॥**

(தா—ம்) லோகத்தில் ஜலங்கொண்டுவருதல், கண்ணுற் காணல், முதலிய வியஹாரவிஷயமான குடத்தைக்குறித்து எல்லாப்பிராணிகளும் இந்தக்குடம் இருக்கின்றது என வியவஹரிக்கின்றனர். இதற்கு மாறான விஷயத்தில் குடம் இல்லை எனப் பேசுகின்றனர். ஆகவே வியவஹாரவாஸனையுடன் கூடின புருஷன் வியவஹாரத்திற்கு விஷயமாக இல்லாத பிரும்மத்தை இல்லைஎன எண்ணுகிறான். இவனை விடவேறான விவேகியானவன் வியவஹாரவிஷயங்களான பூத, பௌதிக பதார்த்தங்கள் சுருதி, யுக்தி, அனுபவங்கள் மூலம் மாயாமயங்கள் என நிச்சயிக்கப் படுவதைக்கொண்டு அஸத்துக்கள் அதாவது: நிலைத்த ஸ்வரூபமற்றவைகள் என்றே எண்ணுகின்றான். வியவஹாரத்தைக் கடந்த பிரும்மமானது சுருதி,யுக்தி அனுபவங்களால் ஸத்தியம் (முக்காலத்திலும் அழிவற்றது) என நிச்சயிக்கப்படுவதை யொட்டி ஸத் என்றே எண்ணுகிறான். இவ்விதமிருக்க எந்த மனிதன் பிரும்மத்தை அஸத் என எண்ணுகின்றானோ அம்மனிதன் அஸத்தாகவே ஆகிவிடுகிறான். எவனொருவன் பஞ்சகோசத்தையும் கடந்ததான பிரும்மத்தை இருக்கும் என்று எண்ணுகின்றானோ அவனுக்கு அதே பிரும்மம் ஸ்வரூபமாகவாகின்றது. ततः=பிரும்மமானது இருக்கின்றது என்ற ஞானத்தினால் एनम्=இந்த ஞானமுள்ளவிவேகியை सन्तम्=இருக்கின்றவனாக அதாவது: ஆத்மாவுடன் கூடினவனாக विदुः சாஸ்திரத்தின் கரைகண்டபெரியார் எண்ணுகின்றனர். அல்லது எவனொருவன் பிரும்மம் असत् என எண்ணுகின்றானோ सः அவன் அசாதுவாகவே ஆகிறான். வர்ணாசிரமாதி வியவஹாரத்தையே அடையாளமாகவுடைய எல்லாஸன்மார்க்கமும் பிரும்மப்ராப்திக்கு உபாயமாயிருப்பதுபற்றி பிரும்மத்தை அஸத் (இல்லாதது)என மறுத்தலால் எல்லாஸன்மார்க் துஷக

னை நாஸ்திகனுகவே ஆகிவிடுகிறுன். இதற்கு நேர்மாருக பிரும்மம் இருக்கு என்று சொல்லுகின்றவனை எல்லாவிதமான ஸன்மார்க்கத்தையும் ஸ்தாபிப்பவனுகச் சொல்லுகின்றனர். இந்த அபிப்பிராயம் கொண்டுதான் **अस्तीत्येवोपलब्धव्य:** எனகடோப நிஷத்து உபதேசித்தது. உபாஸகனை அதிகாரிக்கு ஆனந்த மயனிலும், பிரும்மதத்துவத்தையறிய வெண்ணமுள்ளவனுக்கு பிரும்மதத்துவத்திலும் ஆத்மபுத்தியை நிலைக்கச்செய்ய வேண்டி சுருதி உபதேசிக்கின்றது—

## (मन्त्र:) तस्यैषएव.........य:पूर्वस्य ॥

(க—ரை) யாதொரு ஆனந்தமயனுண்டோ அவனே **तस्य**= அந்த முன்னருள்ள விக்ஞானமயனுக்கு **शारीर: आत्मा**=ஸ்வாமியான ஆத்மாவாகிறுன். இது **आनन्दमय आत्मा** என உபாஸிப்பவனைக் குறித்து உபதேசிக்கப்பட்டது. பிரும்ம தத்துவத்தை அறிய வெண்ணமுள்ளவனைக் குறித்து பின்வருமாறு பொருள் கொள்ளவேண்டும். அதாவது:—**ब्रह्मपुच्छं** என்றதால் எந்த பதார்த்தமானது உபதேசிக்கப் பட்டதோ **एषएव**=இதுவே **तस्य पूर्वस्य**=முன்னர் கூறிய ப்ரியமோதாதி நான்கிற்கும் **शारीर आत्मा**=பிரியாதியான சரீரத்திலிருக்கின்ற பிரும்மமே ஆத்மாவாகின்றது.

### ஆனந்தமயப் பிரகரணத்தைப் பற்றிய விசாரம்.

தைத்திரீயத்தில் அன்னமய, பிராணமய, மனேமய, விக்ஞானமய, ஆனந்தமய என்ற பெயரையுடையவைகளான அன்ன, ப்ராண, மனே, புத்தி, விக்ஞான, ஆனந்தரூபங்களான ஐந்து பதார்த்தங்கள் முறையே ஒன்றிற்குள் மற்ருென்றிருப்பதாக உபதேசிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஸர்வாந்தரனுன ஆனந்தமயன் ஸம்ஸாரியான ஜீவனு? அல்லது பரமாத்மாவா? என்ற சங்கை உதயமாவதால் ஸம்ஸாரியான ஜீவன் தான் ஆனந்தமயன் என பூர்வபக்ஷம் ஏற்படுகின்றது. ஏன் எனில்? **आनन्दस्य विकार: आनन्दमय:** ஆனந்தத்தின் விகாரம் ஆனந்தமயன் என்ற வியுத்பத்தியானது ஜீவனிடத்தில் பொருந்துவதே அதன் காரணமாகும். விகாரமற்ற பரமாத்மாவினிடத்தில் இந்த விகாரவாசக

மான மயட் என்ற சப்தமானது பொருந்ாது. மேலும், **तस्य प्रियमेव शिरः। मोदो दक्षिणः पक्षः। प्रमोद उत्तरः पक्षः। आनन्द आत्मा। ब्रह्मपुच्छं प्रतिष्ठा** என்றதால் ஆனந்த மயனுக்கு 5 அவயவங்கள் சொல்லப்படுகின்றன. கோறின விஷயங்களின் தர்சன ஜன்யமான சுகமானது ப்ரியம் என்றும், அவற்றின் ப்ராப்தியாலுண்டான ஆனந்தம் மோதம் என்றும், அவற்றின் அனுபவத்தாலுண்டான ஆனந்தம் ப்ரமோதம் என்றும், ஸுஷுப்த்யாதிகளில் பிரகாசிக்கின்றதும், அக்ஞானோப ஹிதமுமான சுகசாமான்னியமானது ஆனந்தம் என்றும் சொல்லப்படும். நிருபாதிகமான சுகமே பிரும்மமாகும். பிரியாதிகளான ஐந்து அவயவங்களுக்கு தலை முதலிய ரூபமுள்ளதா யிருக்குந் தன்மையானது உபாஸனை ஸௌகரியத்திற்கு வேண்டி சாஸ்திரத்தாற் கற்பிக்கப்படுகின்றது. கல்தபினை ஆனந்தமயனுக்கு தலை, இரண்டு பக்ஷங்கள் என மூன்று அவயவங்களும் **आत्मा**=என்றதால் நடுவுடலான நான்காவது அவயவமும் சொல்லப்படுகின்றன. **पुच्छम्**=பின்பாகமானது **प्रतिष्ठा**=ஆதாரமாகும். இது 5 வது அவயவமாகும். எவ்வித அவயவமுமற்ற பரமாத்மாவுக்கு அவயவங்கள் சொல்லுவது பொருந்தா. ஆகவே இங்குள்ள ஆனந்தமயன் ஸம்ஸாரியான ஜீவனேயாவன் எனப்பூர்வபக்ஷமானது ப்பிராப்தமாகவே அதற்குப்பதில் கூறப்படுகின்றது. ஆனந்தமயன் பரமாத்மாவே யாவன். ஏனெனில் இந்தப் பிரகரணத்தில் **सैषाऽऽनन्दस्य मीमांसा भवति, एतमानन्दमयमात्मानमुपसंक्रामति** என்றது முதலியவற்றால் ஆனந்தமயன் அடிக்கடி சொல்லப்படுகின்றான். அடிக்கடி கூறப்படுவதானது தாத்பர்யலிங்கம் எனப்படும். வேதாந்தங்களின் தாத்பர்யமோ பிரும்மத்தினிடத்திலேயே எனச்சொல்லியிருக்கிறோம். மேலும், **सत्यं ज्ञानमनन्तं ब्रह्म** என பிரும்மோபக்கிரமத்தாலும் **इदं सर्वमसृजत** என ஸர்வஜகத் சிருஷ்ட்ருத்வாதிகளாலும் ஆனந்தமயன் பிரும்மமாகும். பிரும்மத்தினிடத்தில் மயட் சப்தம் பொருந்தாது என்று சொல்லுவதற்கில்லை. ப்ராசுர்யம் (அதிகமாயிருத்தல்)என்ற பொருள் மயட்டுக்கு கொள்ளப்படுவதே அதன் காரணமாகும். பிரியாதி அவயவங்களும் விஷயதர்சனாதி உபாதிகிருதங்களாக பிரும்மத்திற்குச் சம்பவிக்கலாம். ஆகவே பர

மாத்மா ஆனந்தமயன் எனச்சிலரின் மதம். ஆனால் உபநிஷத்தின் கருத்தறிந்து சொந்த மதம் இனி எழுதப்படும்.

அத்வைத சித்தாந்தப்படி ஆனந்தமய ப்ரகரணத்தின் பொருள்.

**ब्रह्मपुच्छं प्रतिष्ठा** என்ற விடத்தில் சொல்லப்பட்ட பிரும்மமானது ஆனந்தமயனுக்கு அங்கமாகச் சொல்லப்படுகின்றதா? அல்லது ஸ்வயம் ப்ரதானமாகவே சொல்லப்படுகின்றதா? என சம்சயம். ஆனந்தமயனுக்கு அவயவமாகத்தான் பிரும்மம் சொல்லப்படும் எனப் பூர்வபக்ஷம். லோகத்தில் புச்சம் என்ற சப்தமானது அவயவத்தைச் சொல்லுவதிலேயே பிரசித்திபெற்றிருப்பதே அதன் காரணமாகும் எனப் பூர்வபக்ஷம் பிராப்தமாகவே சித்தாந்தம் பின்வருமாறு — **ब्रह्मपुच्छम्**=என்ற விடத்திலுள்ள **पुच्छ** சப்தமானது அவயவவாசியன்று. பின்னேயோவெனில் லாங்கூல (வால்)வாசியேயாகும். ஆனந்தமயனுக்கு லாங்கூலமா (வாலா) னது ஸம்பவிக்காது. லாங்கூலமானது பசு முதலிய அன்னமயனுக்கே அவயவமாயிருத்தலே காண்பதே அதன்காரணமாகும். ஆகவே **पुच्छ** சப்தத்திற்கு முக்கியமான அர்த்தம் (பொருள்)ஸம்பவிக்காமல் போகவே பொருத்தமாயிருப்பதுபற்றி லக்ஷணையாக ஆதாரம் என்ற பொருளே கொள்ளவேண்டி வருகின்றது. இதினின்றும் பிரும்மமானது ஆனந்தமய சப்தவாச்சியனான ஜீவனுக்கு ஆதாரம் என்றுகூறப்பட்டதாக வாகின்றது. ஜீவகல்பனைக்கு பிரும்மம் அதிஷ்டான மாயிருத்தலே அதன் காரணமாகும். ஆகவே, ஆனந்தமயன் பரமாத்மாவன்று. **आनन्दमय** என்ற விடத்திலுள்ள **मयट्** ப்ரத்யயத்திற்கு ப்ராசுர்யம் (அதிகமாயிருத்தல்) எனப்பொருள் கொண்டபோதிலும் அற்பதுக்க மிருப்பதான தோற்றம் ஏற்படுவதில் யாதும் தடையில்லை. ஆனதுபற்றி ஜீவாதாரமாயிருப்பது பற்றி பிரும்மமே இந்தவிடத்தில் ப்ரதானமாகக் கூறப்படுகின்றதெனக் கொள்ளுவதுதான் உசிதமாகிறது. இவ்விதம் பொருள்கொள்ளும் விஷயத்தில் “**असन्नेव स भवति असद्ब्रह्मेति वेद चेत्** என்பது முதலிய விடத்திலுள்ள பிரும்ம சப்தாப் * பியாசமும், **ब्रह्मविदाप्नोति परम्**

* ஒருதரம் சொன்னதையே திருப்பித்திருப்பிச் சொல்லுதல் அப்

என்ற பிரும்ம சப்த உபக்ரம (ஆரம்ப)மும் அனுகூலமாயிருக்கின்றது. ஆகவே பிரும்மமே க்ஞேயமாக வாகின்றதேயொழிய ஆகாசாதி சிருஷ்டியோ, அன்னமயாதிகோசமோ க்ஞேயமாக வாவதில்லை. மேலும் பிரும்மத்திற்கு ஆனந்த்யத்தைச் சொல்லுவதற்கு வேண்டியே ஆகாசாதி சிருஷ்டியானது சொல்லப்பட்டிருக்கிறது. गुहानिहितम् என்பதை விளக்கவேண்டி அன்னமயாதி ஐந்து கோசங்களுபதேசிக்கப் பட்டன. அறியத்தக்கது பிரும்மம் ஒன்றேயாகும். அந்த பிரும்மமானது ஸத்தியக்ஞானதி லக்ஷணமாயும்,குஹாநிஹிதமாயு மிருப்பதுபற்றி ப்ரத்யகாத்மாவாகவுமே இருக்கின்றது என்பது உறுதியாகின்றது.

(அ—கை) இவ்விதமாகப் பிரும்மோபதேச ரூபமான சிரவண ப்ரகரணத்தை முடித்து பஹிர்முகர்களுக்கு உபதேசிக்க வேண்டியதான மனனப்ரகரணத்தின் தொடக்கத்தில் சிஷ்யர்களின் ப்ரச்னங்களைச் சொல்லவேண்டி சுருதி ஆரம்பிக்கின்றது.

**(मन्त्रः) अथातोऽनुप्रश्नाः ॥**

(ப—ரை) अथ=உபதேசத்திற்குப் பின்னர் யாது காரணம் பற்றி சிஷ்யனுக்கு புத்தி தோஷத்தால் வெகு சந்தேஹங்கள் உதயமாகின்றனவோ अत:=இக்காரணம் பற்றி अनु=உபதேசம் செய்யப்பட்டவற்றை யொட்டி प्रश्ना:=ப்ரச்னங்கள் (கேள்விகள்) [क्रियन्ते=செய்யப்படுகின்றன]

(அ—கை) முற்கூறிய ப்ரச்னங்களுபதேசிக்கப் படுகின்றன.

**(मन्त्रः) उताऽविद्वानमुं.........समश्नुता ३ उ ॥**

(க—ரை) இங்குள்ள उत=என்ற சப்தம் ப்ரச்னத்யோதகமான (கேள்விக்குறியான) किम्=என்ற சப்தத்தின் பொருளுள்ளதாகப் படிக்கப்பட்டிருக்கின்றது. चन=என்ற சப்தம் अपि=என்ற சப்தத்தின் பொருளைச்சொல்லும் अमुं लोकम्=என்றது முன்னருள்ள பரமாத்மாவைச் சொல்லும். ஆகவே அவித்வானுகவுள்ள எவனும் இந்த தேஹம் விட்டு நீங்கினதும்பரமாத்மாவை அடைகின்

---

யாசம் எனப்படும். இதினின்றும் எதுஅடிக்கடி சொல்லப்படுமோ அதில் சுருதிக்குக் கருத்திருப்பதாக ஏற்படும்.

ருனு? என்ற முதல் ப்ரச்னமும், அல்லது அடைவதில்லையா? என்ற இரண்டாவது ப்ரச்னமுமான இரண்டு ப்ரச்னங்கள் சொல்லப்பட்டன். இவ்விதமே வித்வான் விஷயமாகவும் இரண்டு ப்ரச்னங்கள் சொல்லப்படுகின்றன. அவையாவன:—வித்வானுயுள்ளவன் எவனும் பிரும்மத்தை யடைகின்ருனு? அல்லது அடைவதில்லையா? என்பனவாம். ஸர்வஜகத் காரணமானதும், ஜீவரூபமாக தேஹத்தில் பிரவேசத்தை யடைந்திருப்பதுமான பிரும்மமானது வித்வானுக்கும், அவித்வானுக்கும் பொதுவாயிருப்பது பற்றி வித்வான் பிரும்மத்தை யடைவதாயிருந்தால் அவித்வானும் பிரும்மத்தை யடையவேண்டியதாகவே தான் ஏற்படும். அவித்வான் அடைவதில்லையாயின் வித்தானும் அடைவதில்லை என்றுதானேற்படும். என்பது மேல் சொல்லிய நான்கு ப்ரச்னங்களின் கருத்தாகும். அல்லது வித்வத்விஷயமாயும், அவித்வத் விஷயமாயும் இரண்டே ப்ரச்னங்களென்றும் கொள்ளலாம். प्रश्नाः=என்ற விடத்திலுள்ள பஹுவசனமா(பன்மையா)னது முன்னுள்ள வாக்கியத்திற் கூறிய ப்ரச்னத்துடன் சேர்ப்பதால் உண்டாவதைக் குறிக்கும். असद्ब्रह्मेति वेद चेत्, अस्ति ब्रह्मेतिचेद्वेद என்ற முன்னுள்ள வாக்கியத்தில் இருபிரிவாகக் கூறப்பட்டதினின்றும் குறிப்பிடப்பட்ட பிரும்ம ஸத்பாவத்தின் (இருப்பின்) விஷயமானது முதலாவது பிரச்னமாகும். இந்த ப்ரச்னத்திற்குப் பிரதி வசனமாக குருவானவர் பிருட்பத்தின் ஸத்பாவத்தை (இருப்பை) ஸாதிக்கவேண்டி சிருஷ்டியை உபதேசிக்கிறுர்.

## (मन्त्रः) सोऽकामयत.........सर्वमसृजत ॥

(க—ரை) ब्रह्मपुच्छं प्रतिष्ठा என்றதாற்குறிப்பிடப்பட்ட யாதொரு பிரும்ம பதார்த்தமானது அன்னமயம் முதல் ஆனந்தமயன் முடியவுள்ள ஐந்து கோசங்களுக்கு சாரீர (அந்தந்தசரீரத்திலுள்ள) ஆத்மாவாக உபதேசிக்கப்பட்டதோ அந்த இந்த பிரும்மபதார்த்தமான ஆத்மாவானது சிருஷ்டிக்கு முன்னர் ஒன்ருகவே அதாவது இரண்டாவதற்றதாகவே இருந்துகொண்டு தனது சக்திஸம்யோகமூலம் காமனையைச் செய்தது. அதாவது: ஆத்மா வினிடத்தில் ஆசிரயித்திருக்கும் மாயாசக்தியானது காமன ரூபமாக விகாரத்தை (மாருதலை) அடைந்தது என்ப

தாம். அவிக்கிரியனும், சிதேகரஸனுமான ஆத்மாவுக்கு மாயை இல்லாவிடில் காமனை ஒருபொழுதும் ஸம்பவிக்காதன்றோ.

சங்கை — ஈசுவரனுக்கு மாயர்கற்பிதமான காமனானது இருப்பதாகச் சொல்லக்கூடுமாயினும். காமியாக ஆவதுபற்றி ஜீவனைப்போல நித்யதிருப்தனுக ஒருபொழுதும் ஆகமாட்டான் என்றாலோ?

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. லீலையையும் சுவாஸத்தையும் திருஷ்டாந்தமாக கூறி இந்த ஆசங்கையானது உத்தரமீமாம்ஸையில் போக்கப்பட்டிருப்பதுடன், காமிதமான (விரும்பின) பொருளுக்கு ஒருபொழுதும் தடையேற்படாதிருப்பதும், ஜீவனைவிட ஈசுவரன் எவ்விதத்திலும் வேறுபட்டவனுக வாகிறான் என்றேற்படுவதுவுமே அதன் காரணமாகும். सत्यकामः सत्यसंकल्पः "அழிவற்ற காமமுள்ளவர், அழிவற்ற ஸங்கற்பமுள்ளவர்" எனவேறிடத்திற் சொல்லப்பட்டிருக்கிறது. बहुस्याम् "வெகுவாக ஆவேனுக" என காமனையின் முறை இங்குமுபதேசிக்கப்பட்டிருக்கிறது. ஆகாசத்திற்கு குடம் முதலிய உபாதிமூலம் வெகுவாகுகை காணக்கிடக்கின்றது. அத்விதீயமான (இரண்டற்ற) வஸ்துவுக்கு வெகுவாகுகை எவ்விதம் ஸம்பவிக்கும் எனின்? அதற்கு வேண்டியே प्रजायेय முன்னருள்ள ரூபத்தினின்றும் அதிகமாக மிக்கமேலான முறையில் உத்பத்தியை யடைவேனுக எனச்சொல்லப்பட்டது. ஆகவே स तपोऽतप्यत=அந்த ஜகத்காரண ஈசுவரன் ஆலோசனையைச் செய்தார். स तपस्तप्त्वा=அவர் சிருஷ்டிக்கவேண்டிய வஸ்துவிஷயமான ஆலோசனையைச் செய்து इदं सर्वं=பிராணிகளின் கர்மங்களாகிற நிமித்தத்திற்குத் தக்கபடி, தேசத்தாலும், காலத்தாலும், பெயராலும், ரூபத்தாலும், எல்லாப்பிராணிகளாலும் ஸர்வாவஸ்தைகளினுலும் அநுபவிக்கப்படுகின்ற இந்த எல்லாஜகத்தையும் சிருஷ்டித்தார். இங்கு காமனை செய்தல், ஆலோசனை செய்தல், ஜகத்தைச் சிருஷ்டித்தல் ரூபமான காரணங்களால் பரமாத்மா இருப்பதாக ஏற்பட்டது.

(அ—கை) மேலும் "பிரும்மம் ஸத்ரூபம், பிரவேசிக்கின்றதாயிருத்தலால், வீடு முதலியவைகளில் பிரவேசித்த புருஷன்

போல" என சொல்லவேண்டி பிரவேசத்தைச் சுருதி சொல்லுகிறது.

(मन्त्रः) यदिदं किञ्च। तत्सृष्ट्वा। तदेवाऽनुप्राविशत् ॥

(க—ரை) ஹிரண்ய கர்பர் முதல் ஸ்தாவராந்தமான சரீரக் கூட்டம் யாதுண்டோ, அவையாவையும் சிருஷ்டித்து தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட சரீர சமூஹத்தைப் பரமாத்மாப் பிரவேசித்தது. (எ—று)

குறிப்பு—இங்கு வித்தியாரண்ய தீபிகையில் பிரவேசத்தைப் பற்றி வெகு விரிவாக எழுதப்பட் டிருக்கின்றது. ஆயினும், பகவத்பாத பாஷ்யார்த்தத்தைவிட அதிகம் எதுவும் இல்லாததால் திரும்பவும் எழுதப்படவில்லை. (எ—று)

(அ—கை) சரீரத்தில் போக்தாவான ஜீவரூபத்தால் கூறிய பிரவேசத்தைக் கொண்டு பரமாத்மா இருக்கிறார் என ஸாதித்துப் பின்னர், போக்கியமான திரவ்வியமாகவும் அவர் இருப்பதால் பரமாத்மா இருக்கிறார் என்பதை ஸாதிக்கவேண்டி பரமாத்மாவின் போக்யவஸ்து ரூபமான பரிணமத்தைச் சுருதி சொல்லத் தொடங்குகின்றது—

(मन्त्रः) तदनु प्रविश्य........सत्यमभवत् ॥

(க—ரை) தன்னால் சிருஷ்டிக்கப்பட்ட தேஹசமூஹத்தைப் போக்த்ரு ஜீவரூபத்தால் பிரவேசித்துப் பின்னர் सच्च=பிருதிவீ, அப், தேஜஸ் ஆகிய மூன்று மூர்த்த பூதவடிவமாகவும், त्यच्च= அமூர்த்தமான வாயு, ஆகாச வடிவமாகவும் अभवत्=ஆயிற்று. இதனால் சாக்ஷாத்ஷம் என்றும், பரோக்ஷம் என்றும் பிரிக்கப்பட்ட ஜகத் யாதுண்டோ அவையாவும் சொல்லப்பட்டதாக வாகின்றது. அத்துடன் இங்குள்ள, च=என்ற இரு சப்தங்களாலும், முற்கூறிய ப்ரத்யக்ஷ பரோக்ஷமான ஜகத்தின் அபாவமும் சொல்லப் படுகின்றது. ஆகவே ப்ரத்யக்ஷபரோக்ஷமான ஜகத் வடிவமாகவும், அவற்றின் அபாவ வடிவமாகவும் பிரும்மம் பரிணமத்தை யடைந்தது என்று உபதேசிக்கப் பட்டதாக யேற்பட்டது. निरुक्तं च=தெளிவா யுபதேசிக்கத்தகுந்த வஸ்துவாகவும், अनिरुक्तं च=அதற்கு நேர்மாறானதாகவும் உள்ள வஸ்துவாகவும் ஆயிற்று

என்பதாம். அதாவது: ஒரு குடமானது 'நேரிலிருக்கின்றது, வயிறு பெருத்தது, மண்மயமானது, ஜலம் கொண்டுவரக்கூடியது' என தனது விவரம் முழுவதும் தெளிவாகச் சொல்லக்கூடியதாக இருப்பதுபற்றி இதுபோன்ற வஸ்து निरुक्तम्=என்றதால் சொல்லப்பட்டது. இங்குள்ள च=என்ற சப்தத்தால் அதன் அபாவமும் சொல்லப்பட்டதாகவே கொள்ளவேண்டும். கரும்பின் ருசிக்கும், பாலின் ருசிக்கும், தாழம்பூவின் மணத்திற்கும், சண்பகப்பூவின் மணத்திற்கும் இயற்கையிலமைந்துள்ள வேற்றுமையானது अनिरुक्तम्=என்றதாற் சொல்லப்படும். ஏனெனில் இவ்விரண்டிற்கும் வேற்றுமை யிருப்பதாக மட்டும் குறிக்கக் கூடுமே ஒழிய அந்த வேற்றுமை இத்தகையது என குடத்தைச் சொன்னது போல பிரித்துக்காட்ட முடியாதானது பற்றியே என்க. இங்குள்ள च=என்றதால் அதன் அபாவம் சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும். निलयनम्=புஷ்பம், வெல்லம் முதலியன. च=அதன் அபாவம் இவையாகவும், अनिलयनम्=கந்தம் (மணம்) ரஸம் முதலியன च=அதன் அபாவம் ஆகவும், विज्ञानम्= சேதனவகுப்பிற் சேர்ந்த பசு, குதிரை முதலியனவாகவும், अविज्ञानम्=அசேதன வர்க்கத்திற் சேர்ந்த மரம், சுவறு, கல் முதலியன வாகவும், सत्यम्=லோக வியவஹாரத்தால் பாதிக்கப்படாத, சுக்தி, கயிறு, மரம் முதலியனவாகவும், अनृतम्=வியவஹாரதசையில் ஆரோபிதமான வெள்ளி, பாம்பு, திருடன் முதலிய ரூபமாகவும், सत्यम्=பிரும்மமானது अभवत्=ஆயிற்று. இதுவரை கூறிய உதாஹரணங்களால் சீதோஷ்ண, சுக துக்க மான அவமானாதியான ஸர்வஜகத் விபாகமும் சொல்லப்பட்டதாகவாகின்றது. ஆகவே "பிரும்மம், ஸத்ரூபமானது, போக்யரூபமாகப்பரிணமத்தை யடைந்திருப்பதால் க்ஷீராதிகளைப்போல" எனச் சுருதியின் கருத்து. (எ—று).

(அ—கை) பிரும்மத்திற்கு ஸத்பாவத்தை யுக்திகளால் சாதித்துக் கொடுத்து வித்வதனுபவத்தாலும் அதைச்சாதிக்கத் தொடங்குகின்றது—

(मन्त्रः) यदिदं किञ्च। तत्सत्यमित्याचक्षते ॥

(க—ரை) போக்த்ரு, போக்ய ரூபமான யாதொரு இந்த ஜகத்தானது காணப்படுகின்றதோ உண்மையில் அது ஜகத்தில் லை. முக்காலத்திலும் அழிவற்ற பிரும்மமென்றே விவேகிகள் சொல்லுகின்றனர். ஆகவே வித்வான்களின் அநுபவசித்தமான பிரும்மத்தை இல்லையென்று சொல்லுவது யுக்தமாகாது. (எ—று)

ஆறுவது அநுவாகம் முற்றிற்று.

---

## ஏழாவது அநுவாகம்.

(அ—ரை) முன்னர் கூறிய பிரும்மத்தின் ஸத்பாவத்தை (இருப்பை) பிரகாசப்படுத்தும் மந்திரம் உதாஹரிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) असद्वा.........सुकृतमुच्यत इति ॥**

(க—ரை) நாமரூபங்களால் அபிவ்யக்தியை (பிரகாசத்தை) அடைந்த **इदम्**=இந்த ஜகத்தானது உத்பத்திக்கு முந்தி **असद्वा**= அனபிவ்யக்தமாகவே இருந்தது. **ततः**=அனபிவ்யக்த நாமரூபமுள்ள பிரும்மத்தினிடமிருந்து **सत्**=அபிவ்யக்த நாமரூபமுள்ள ஜகத்தானது **अजायत**=உண்டாயிற்று. இந்த விடத்தில் பிதாவினிடமிருந்து வேறுபட்ட புத்திரன் போன்று ஜகத்தானது பிரும்மத்தினிடமிருந்து வேறுபட்டுண்டாயிற்றெனப் பொருள் கொள்ளல் தகா. பின்னையோ வெனில் **तत्**=அந்தப்பிரும்மமானது **आत्मानम्**=சச்சிதானந்தைகரஸஸ்வ ரூபத்தை **स्वयम्**=வேறு கர்த்தாவினுடைய உதவியின்றியே **अकुरुत**=ஜகத்வடிவமாகச் செய்து கொண்டது. மண் ஸ்தானத்திலுள்ள உபாதானகாரணமோ குயவன் ஸ்தானத்திலுள்ள நிமித்தகாரணமோ பிரும்மத்தை விட வேறொன்று மில்லாது பிரும்மமே ஜகத்திற்கு உபாதான காரணமாகவும், நிமித்தகாரணமாகவும் ஆயிற்று என்று பொருள். யாது காரணத்தால் பிரும்மமானது இவ்விதமாயிற்றோ **तस्मात्**=அக் காரணத்தால் **तत्**=அந்த பிரும்மமானது **सुकृतम्**=ஸ்வயம் கர்த்தாவென்றே **उच्यते**=சொல்லப்படுகின்றது. ஜீவர்களோவெனில் ஸ்வயம் கர்த்தாக்களாக ஆகாமல் அந்தர்யாமி பிரேரிதர்களாகவே

கர்த்தாவாக ஆகின்றனர். இவ்விதமே य आत्मानमन्तरो यमयति என்றும், केनापि देवेन हृदि स्थितेन यथा नियुक्तोऽस्मि तथा करोमि என்றும் முறையே சுருதியும், ஸ்மிருதியும் இருக்கின்றது.

(அ—கை) இவ்விதம் ஸ்வயம் கர்த்தாவாக இருக்கும் பிரஸித்தியும் பிருமத்தின் ஸத்பாவத்தை (ஸ்திதியை) ஸாதித்துக் கொடுக்கின்றது. ஆகவே வேறுப்பிரகாரத்தால் பிருமத்தின் ஸ்திதியை ஸாதிக்கவேண்டி. ஆனந்தரூபத்வத்தை சுருதி சொல்லத் தொடங்குகின்றது—

(मन्त्रः) यद्वैतत्सुकृतं........लब्ध्वाऽऽनन्दी भवति ॥

(க—ரை) यद्वैतत्सुकृतम्=ஸுக்ருத சப்தத்தாற் சொல்லப்படும் யாதொரு பிருமமுண்டோ सः=அந்த பிருமபதார்த்தமானது रसोवै=ஆனந்தரூபமாகவேயாகின்றது. லோகத்தில் மதுராதி ரஸ பதார்த்தமானது திருப்தி ரூபமான ஆனந்தத்திற்கு ஹேதுவாகச் சொல்லப்படுகின்றது. பிருமமும் கிருதகிருத்யத்வாதி ரூபமான பிருமவித்துக்களின் ஆனந்தத்திற்கு ஹேதுவாக வாவதால் ரஸமாகவே ஆகின்றது. வெகு ரஸமுள்ள வேதாந்தவாக்கியத்தாலுண்டான அகண்டாகார மனோவிருத்திரூபக் ஞானத்தால் ஆஸ்வாதனீயமாவதால் பிருமத்திற்கு ரஸத்வமானது பொருத்தமுள்ளதாக வாகின்றது. வெகுப்ரீதியுடன் ரஸத்தைக் கிரஹித்தலே ஆஸ்வாதனம் எனப்படும். பிருமமும் ப்ரீதிபூர்வகமாகவே ஜிக்ஞாஸுக்களால் கிரஹிக்கப் படுகின்றது. ப்ரீதியோ ஆனந்தமின்றிச் சம்பவிப்பதில்லை. ஆனதுபற்றியே தான் ரஸசப்தத்தால் பிருமத்திற்கு ஆனந்தரூபத்வமானது சொல்லப்படுகின்றது. अयम्=தத்துவமறிந்த புருஷன் रसं लब्ध्वा=பிரும்ம ஸாக்ஷாத்காரத்தை யடைந்து आनन्दी भवति=தன்னியனுனேன் என ஆனந்தமுள்ளவனுகிறுன். ஆகவே வித்வானுடைய சந்தோஷஹேதுவான ஆனந்தரூபமாயிருப்பது பற்றியும், பிரும்மமானது இருக்கு என்றே கொள்ளவேண்டும். இங்குள்ள हि=என்றதால் வித்வானுடைய பிரசித்தி சொல்லப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும். (எ—று)

(அ—கை) தேஹாதி சேஷ்டைக்கும், வைஷயிகா நந்தத்திற்கும் ஹேதுவாக இருப்பதாலுமே பிரும்மமானது இருக்கு என்றே கொள்ளவேண்டும் என்பதைச் சுருதி சொல்லத் தொடங்குகிறது—

(मन्त्रः) कोह्येवान्यात्कः प्राण्यात्.........आनन्दयाति ॥

(க—ரை) இங்குள்ள आकाश என்ற பதமானது ஸப்தம்யந்தமா (ஏழாம்வேற்றுமையுள்தா)கவோ, பிரதமாந்தமா (முதல் வேற்றுமையுள்ளதா)கவோ கொள்ளப்படலாம். அவற்றுள் ஏழாம் வேற்றுமையுள்ளதாகக் கொள்ளப்பட்டால் ஆகாசத்தில் என்று பொருள். அதாவது: குஹாயாம் பரமேவ்யோமன் என்றவிடத்தில் எந்த அர்த்தம் கொள்ளப்பட்டதோ அதேபொருள் தான் இங்கும் கொள்ளவேண்டும். ஒன்றுவது வேற்றுமையுள்ளதாகக் கொள்ளப்பட்டால் अ=நாலாபக்கத்திலும் काशते=பிரகாசிக்கின்றது பற்றி ஆகாசமெனப்படும். அத்தகைய एषः=பூர்வவாக்கியத்தில் ரஸமாகச் சொல்லப்பட்ட ஆத்மரூபமான आनन्दः=ஆனந்தமானது यदि न स्यात्=இல்லாதிருக்குமானால் அப்பொழுது कोह्येव=எந்தகர்த்தாதான் अन्यात्=தேஹத்திற்குள் வாக்குமுதலிய இந்திரியங்களால் சேஷ்டிப்பன். कः=எவன் தான் प्राण्यात्=வெளியில் மூச்சைவிடுவன். ஆகவே பிராணபானஹேதுவாக இருப்பதுபற்றியும் பிரும்மமானது இருக்கின்றது என்றே அறிந்து கொள்ளவேண்டும். (எ—று)

(அ—கை) இவ்விதம் காமயிதிருத்வம் முதலிய ஹேதுக்களால் பிரும்மானது இருக்கின்றது என்பதை ஸ்தாபித்ததால் பிரும்மமானது இருக்கின்றதா? இல்லையா? என்ற சங்கை போக்கப்பட்டதாக வாகின்றது. பிறகு முறையே சொல்லவேண்டுவதாக ப்ராப்தமான அவித்வான் பிரும்மத்தை யடைவதுண்டா? இல்லையா? என்றது விஷயமாக வெகுவாகச் சொல்ல வேண்டுவதாயினும் அற்றை நெறுத்திக்கொண்டு முதன் முதலில் வித்வான் பிரும்மத்தை யடைவதுண்டா? இல்லையா? என்ற விஷயமான ஸம்சயத்தைப்போக்கவேண்டி சுருதி தொடங்குகின்றது—

(मन्त्रः) यदा ह्येवैष.........अभयं गतो भवति ॥

(க—ரை) एष:=இந்த ஜிஜ்ஞாஸுவானவன் एतस्मिन्=ஸத்பாவஸாதனத்தினின்றும் ஸ்வானுபவ வேத்யமாகவான ப்ரகிருத ப்ரும்மத்தினிடத்தில் प्रतिष्ठाम्=ஸ்வாத்மத்வ புத்திதார்ட்டியத்தை यदा=எப்பொழுது विन्दते=அடைகின்றானோ अथ=அப்பொழுது सः=அந்தவித்வான் अभयं ஜனனமரணாதியற்ற முக்திபதத்தை गतो भवति=அடைந்தவனாக ஆகின்றான். இங்குள்ள एव என்ற பதத்தால் காலவிளம்பமில்லை என்பது தெரிவிக்கப்படுகின்றது. அதாவது: எப்பொழுது அறிகின்றானோ அப்பொழுதே யடைகிறான் என்றேற்பட்டது. (இதனின்றும் க்ஞானந்தான் ப்ராப்தி யென்றும், ஞானத்தை விடப்ராப்தி என்பது தனியாய் ஒன்று இல்லைஎன்றும் ஏற்படும்) இவ்விஷயத்தில் வித்வான்களின் ப்ரசித்தி யிருக்கின்றதென்பதை हि=என்றசப்தம் தெரிவிக்கும். ப்ரும்மமானது अदृश्ये என்பது முதலிய நான்குவிசேஷணங்களால் விளக்கப்படுகின்றது. அதாவது— சக்ஷுராதி இந்திரியங்களா லறியக்கூடாததுபற்றி अदृश्यं எனப்படும். அனுமானப் ப்ரமாணத்தாலு மறியமுடியாதிருப்பதுபற்றி अनात्म्यं எனப்படும். லிங்கமின்றி சப்தத்தாற் சொல்லக்கூடியது எதுவோ அதுநிருக்தமாக வாவதால் यतो वाचो निवर्तन्ते என்ற ப்ரமாணத்தையொட்டி ப்ரும்ம தத்துவத்தை நேரில் போதிக்கும் சப்தம் எதுவுமில்லாமை பற்றி அது अनिरुक्तम्=என்றும் சொல்லப்படும் என்பதாம். இவ்வித மூன்று விசேஷணங்களால் ப்ரத்யக்ஷம், அனுமானம், ஆகமம் இவற்றிற்கு விஷயமாகாதது ப்ரும்மம் என்று பெறப்பட்டது. இதினின்றும் எல்லாவிதமான காரியப் ப்ரபஞ்சத்தையும் விட ப்ரும்மம் விலக்ஷண (வேறுவித) மானது என்றேற்பட்டது. தன்னைவிடத் தனக்கு வேறான ஆதாரமற்றது என்பது अनिलयनम्=என்றதாற் சொல்லப்பட்டது. अभयं=என்ற சப்தத்தால் த்வைதமற்றது என்பது சொல்லப்பட்டது. அதாவது: நான் வேறு, ப்ரும்மம் வேறு என்ற த்வைதரூபமான பயமானதற்றிருக்கும்படி நிலையை யடைகின்றான் என்று சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். (எ—று)

(அ—கை) வித்வானுக்கு நிச்சயமாகப் ப்ரும்மப் ப்ராப்தி உண்டாவதால் முன்னேற்பட்ட ஸம்சயங் எவ்விதம் போக்கப்

பட்டதோ, அவ்விதமே அவித்வானுக்குப் பிரும்மப் பிராப்தி கிடையா என்ற நிச்சயத்தாலும் அவித்வான் விஷயமான ஸம்சயத்தையும் சுருதி போக்குகின்றது.

**(मन्त्र:) यदाह्येवैष.........तस्य भयं भवति ॥**

(க—ரை) இந்த லௌகிகனை மனிதன் **एतस्मिन्**=இந்தப் பிரும்மத்தினிடத்தில் **उत्, अरम्, अन्तरम्**=அதாவது: அல்பபேதத்தையும், **यदाकुरुते**=எப்பொழுது செய்கின்றானோ அதாவது: தன்னைவிட வேறாகப் பிரும்மத்தைப் பார்க்கின்றானோ **अथ**=அப்பொழுது **तस्य**=அவனுக்கு **भयम्**=ஜனன மரணாதி ஸம்ஸார பயம் **भवति**=உண்டாகின்றது. இவ்விஷயத்தையே **मृत्योः समृत्युमाप्नोति यइह नानेव पश्यति** என்றும், **ब्रह्मतं परादाद्योन्यत्रात्मनो ब्रह्मवेद** என்றும் வேறு சுருதியும் தெளிவாயுபதேசித்து மிருக்கின்றது.

(அ—கை) பிரும்மத்தை வேறாக உபாஸனம் செய்பவர்க்கு ஸ்வரூபாவஸ்தான ரூபமான நிர்க்குணப் பிரும்மப்பிராப்தி உண்டாக மாட்டாது என்பதைச் சுருதி உபதேசிக்கின்றது—

**(मन्त्र:) तत्त्वेव भयं विदुषोऽमन्वानस्य ॥**

(க—ரை) ஸ்வாபேதேன பிரும்ம தத்வ ஸாக்ஷாத்காரமில்லாத உபாஸகனுக்கு **तदेव भयम्**=ஜனனமரண ஸம்ஸார ரூபமான அதே பயம் உண்டாகின்றது.

**(मन्त्र:) तदप्येष श्लोको भवति ॥**

(க—ரை) முன் சொன்ன விஷயத்தில் பின்வரும் மந்திரமுமிருக்கின்றது. (எ—று)

வித்தியாரண்ய தீபிகை முற்றிற்று.

---

## விசிஷ்டாத்வைதம், ஆறுவது அநுவாகம்.

(அ—கை) முன்னர் கூறப்பட்ட நான்கு பரியாயங்களிலும் புச்சவத் வஸ்துவிஷயங்களான சுலோகங்களே சொல்லப்பட்டிருப்பதால் இந்த விடத்திலுள்ள சுலோகமும் ஆனந்தமய விஷயமாகவே சொல்லப்பட்டதெனக் கொள்ளல் வேண்டுமேயொழிய

ஆனந்தமய ஏகதேசமான பிரும்மவிஷயமாகக் கொள்ளல் தகா. இதை இந்த சுலோகம் விளக்குகிறது—

**(मन्त्र:) असन्नेव........आचक्षते । तदप्येषश्लोको भवति॥**

(க—ரை) இங்குள்ள பிரும்மசப்தத்தால் ஆனந்தமயனே சொல்லப்படுகிறான். ஆனந்தமயனுடைய ஸத்வக்ஞானத்தால் (ஆனந்த மயனிருக்கிறான் என்ற ஞானத்தால்) மோக்ஷமும்; அவனில்லை யென்ற க்ஞானத்தால் ஸம்ஸாரமும் உண்டாகின்றது என்பது பொருள். ஆகாசாதி விக்ஞான மயாந்தமான வஸ்து வுக்கு அந்தர்யாமியாக க்குறிப்பிடப்பட்ட ஆனந்தமய ரூபமான பிரும்மத்திற்கும் வேறு ஆத்மா உண்டா? என்ற சங்கையானது **तस्यैष एव** என்றபாகத்தால் போக்கப்படுகின்றது. **पूर्वस्य**=விக்ஞான மயாந்தமான பதார்த்தத்திற்கு ஆத்மபூதனான இந்த ஆனந்தமய ஆத்மாவானவன் **तस्य**=அந்த ஆனந்தமயனுக்கு ஆத்மாவாகிறான். அதாவது:— தனக்குவேறொரு ஆத்மாவற்றிருத்தலானது சொல்லப்பட்டதாக வாகின்றது.

சங்கை:—முன்னுள்ள பர்யாயங்களில் **तस्यैष एव शारीर आत्मा** என்ற வாக்கியத்திற்கு தனக்கு வேறொரு ஆத்மா வற்றிருத்தல் என்ற பொருள் கூறப்படாததால் இந்த பர்யாயத்தில் மட்டும் அவ்விதம் பொருள் கொள்ளுவதால் மாறுபாடான பொருள் கூறினதாக வாகுமன்றோ? எனின்.

உத்தரம் — முன்னருள்ள பர்யாயங்களிற் கூறப்படாத பிரும்மாவயவத்வத்தை இங்கு உபதேசித்திருப்பதாலும் **तस्माद्वा एतस्मादानन्दमयादन्योऽन्तर आत्मा** "அந்த ஆனந்தமயனுக்கும் வேறாக ஒரு ஆத்மா இருக்கிறான்" என உபதேசிக்காததாலும் இந்தப் பரியாயத்திலுள்ள **तस्यैष एव शारीर आत्मा** என்றதற்கு வேறொரு ஆத்மாவற்றிருத்தல் என்றேதான் பொருள் கொள்ள வேண்டும். ஆனந்தமய பிரும்மத்தைப் பிரதிபாதனஞ் செய்த பின்னர் **ब्रह्मविदाप्नोति परम्** என தொடக்கத்திற் சொல்லப்பட்டப் பிராப்தியைத் தெளிவுபடுத்த வேண்டி சில ப்ரச்னங்களை (கேள்விகளை) ச் சொல்லுகிறது **अथातोऽनु** என்பது முதலிய பாகம்.

**अथ**=பின்னர் **अत:**=முன்னர் சொல்லப்பட்டதைத் தெளிவாக்க வேண்டி **अनुप्रश्ना:**=கேள்விகளுண்டாகின்றன. **विद्वान्** = மிக்க ஸமீபமாயுள்ள ஹிருதயாதி ஸ்தானத்திலுள்ளதும், அனவச்சின்னமு (எவ்விதக்குறைவு மற்றது) மான பிரும்மத்தை உபாஸிக்கின்றவன் இந்த சரீரம் விட்டு நீங்கின பின்னர் **अमुं लोकम्**=பரம வ்யோம சப்தத்தாற் சொல்லப்பட்ட லோகத்தை **गच्छति**=அடைகின்றானா? என ஒரு கேள்வியும், **उता**=அல்லது கதியை (போகுதலை) எதிர் பாராதபடி இங்கேயே பிரும்மத்தை யடைகின்றானா? என மற்றொரு கேள்வியும், ஏற்படுகிறது. **उता विद्वान्**=என்றவிடத்தில் **उत** என்ற சப்தத்தில் வைதிகப் பிரயோகத்தை யொட்டி **अथासपत्नान्** என்ற விடத்திற் போல **उता** என தீர்க்கமானது வந்திருக்கிறது. ஆகவே **उता, विद्वान्** என்று பதம் பிரிக்கப்படுகின்றது. இவ்விதமின்றி **उत, अविद्वान्** எனப்பதம் பிரிப்போமானால் **उत** என்ற விடத்தில் ஆதியிலுள்ள **उ** என்ற அக்ஷரமானது உதாத்த ஸ்வரமுள்ளதாக ஏற்படவேண்டி வரும். ஆனால் **उता** என்றவிடத்தில் **उ** என்றதை அநுதாத்த ஸ்வரமுள்ளதாயும் **ता** என்ற எழுத்தின் மேலுள்ள ஆகாரத்தை உதாத்தஸ்வர முள்ளதாயும் வழக்கத்திற் சொல்லப்பட்டுவருகிறது.

ஆகவே முற்கூறியபடி **उता,विद्वान्** என்றேதான் பதம்பிரித்து முற்கூறியபடி பொருள் கொள்ளவேண்டுவது அவசியமாகி விட்டது. **आहो विद्वान् समश्नुते** என்றதால் போக்த்ருத்வம் சொல்லப்படுகின்றது. அதாவது: — அஹங்கிரஹோபாஸன முறையாலுபாஸிப்பவனான யாதானுமொரு வித்வான் இந்த லோகத்தை யடைந்து போக்யமாகவான பிரும்மத்தை அனுபவிக்கின்றானா? என்பது ஒருவித ப்ரச்னமாகும். அல்லது ப்ரும்மரூபத்துடன் ஒன்றாக (இரண்டறக்கலந்தவனாக) வாகின்றானா? என முன்சொன்ன பொருளினின்றும் கிடைத்த மற்றொரு ப்ரச்னமும் ஏற்படுகின்றது. இவ்விதமே **प्रश्ना:** என்ற விடத்திலுள்ள பஹுவசன (பன்மை)த்தால் சாஸ்திரத்திலுள்ள பற்பல முறைகளை மூலமாகக்கொண்டவைகளான கதிவிசேஷம்,ஸ்வரூபபேதம்,ஸத், அஸத்பாவம் ஆகிய இவற்றை விஷயமாகவுடைய ப்ரச்னங்கள் குறிக்கப்பட்டனவாகின்றன. இங்கு சொல்லிய இவையாவும்

उपासात्रैविध्यात् என்ற ஸூத்திரத்தில் வியாஸாசாரியாள் அவர்களால் தெளிவாகவே சொல்லப்பட்டிருக்கின்றன.

இத்தகைய ப்ரச்னங்களுக்குப் பதிலுரைக்கவேண்டி ஜகத்காரணத்வத்திற்கு உபயோகப்படக்கூடிய குணங்களுடன் கூடினதாகவே யிருக்கிற பிரும்மமே ப்ராப்யமாக வாகின்றது என்பதை ஞாபகப்படுத்த வேண்டி சுருதியானது सोऽकामयत என்றதாற் சொல்லத் தொடங்குகிறது. सः=அந்த ஆனந்தமய ஆத்மாவானவர் बहुस्याम्=தேவமனுஷ்யாதி ரூபமாக வெகுவாக ஆவேனுக. அதற்கு வேண்டி प्रजायेय=ஆகாசாதிரூபமாக உண்டாவேனுக என अकामयत=வியஷ்டி, ஸமஷ்டி ரூபசேதனுசேதன விஷயமான ஸங்கல்பத்தைச் செய்தார் என்பதாம். மேலும் सः=அந்த பரமாத்மாவானவர் तपः=ஸிருஷ்டிக்க வேண்டியதைப்பற்றிய ஆலோசனுரூபமான தபஸ்ஸை अतप्यत=செய்தார். तप आलोचने என்ற தாது யிருப்பதால். இங்குள்ள தப: என்றதற்கு ஆலோசனம் என்றுபொருள். तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्= அதைச்ஸிருஷ்டித்து அதையே பிரவேசித்தார்.

சங்கை—எப்பொழுதும் எல்லாவற்றிலும் நிறைவுபெற்றதான பிரும்மத்திற்கு ஸிருஷ்டிகாலத்திற்கூறிய அனுப்பிரவேசமானது எத்தகையது எனின்?

உத்தரம்—பசுவின் வயிற்றிலிருக்கும் கன்றுபோல எங்கும் நிறைவு பெற்ற பிரும்மத்திற்கு தனித்தனியே புஷ்கலமான (பரிபூர்ணமான) தோற்றத்திற்குத் தகுந்தபடி ஏற்படும் ஸ்திதி விசேஷமே இங்குள்ள அனுப்ரவேசத்தா லுபதேசிக்கப்பட்டது என்றறியவேண்டும். இதனுல் सत्यं ज्ञानमनन्तं ब्रह्म यो वेद निहितं गुहायाम् என்ற மந்திரத்தாற் சொல்லப்பட்ட அனந்தனுன (எங்கும் நிறைவு பெற்றவனுன) பிரும்மத்திற்கு குஹா நிஹிதத்வமான (ஹிருதய குஹையில் வசிக்கும் தன்மை) து விளக்கப்பட்டதாகவாகின்றது. तदनुप्रविश्य, सच्च त्यच्चाऽभवत्॥ सत्=என்றதால் நிர்விகாரமா யிருப்பதுபற்றி எப்பொழுதும் ஒரே ரூபனுன சேதனன் சொல்லப்படுகிறுன். त्यत्=என்ற சப்தத்தால் முன்னருள்ள நிலையை விடுதல் என்ற விகாரமுள்ள அசேதனம் சொல்லப்படு

கின்றது. பிரும்மமே சேதநாசேதன ரூபமான பெயரை யடைந்ததாக வாகின்றது என்று பொருள். பிரும்மமானது ஸர்வத்திற்கும் உபாதான காரணமாவதுபற்றி சேதநாசேதன ரூபமான ஸர்வபாவத்தையும் அடையும் பொழுது விகாரத்திற்கு ஆஸ்பதமாக (ஆசிரயமாக) இருத்தல் சம்பவிக்கக் கூடும் என்ற சங்கையைப் போக்க வேண்டியே निरुक्तं என்பது முதலியபாகம் உபதேசிக்கப் படுகின்றது. निरुक्तम्=ஜாதி, குணம், க்ரியை இவையுள்ளதா யிருத்தல் பற்றி ஜாதி, குணம், கிரியை இவற்றைச் சொல்லும் சப்தங்களால் வாச்யமான வஸ்து நிருக்தம் எனப்படும். ஜாதி குணாதிகளற்ற சேதன வர்க்கமானது अनिरुक्तम् எனப்படும். एताभूतमात्राः प्रज्ञामात्रास्त्वर्पिताः என்று சொல்லியிருப்பது போன்று அசேதன வர்க்கத்திற்கு ஆதாரமாகவான சேதன வர்க்கமானது निलयनं எனப்படும். சேதநாசிரிதமான அசேதன வர்க்கமானது अनिलयनं எனப்படும். विज्ञानं=அஜடஸ்வரூபம், अविज्ञानं=ஜடஸ்வரூபம், सत्यं நிர்விகாரனா யிருத்தல்பற்றி சேதனனுக்கு ஸத்யத்வம் சொல்லப்படுகின்றது. अनृतं=இதற்கு நேர் மாறாகவுள்ளது அநிருதம் எனப்படும். ஆகவே நிருக்தத்வ, அநிருக்தத்வ, நிலயனத்வ, அநிலயனத்வ, விக்ஞானத்வ, அவிக்ஞானத்வ யுக்தமானதும் ஸத்ய அநிருத சப்தத்தாற் சொல்லப்படும் சேதநாசேதன ரூபமானதுமான நாமரூபத்தைப் பிரும்மமானது அடைந்த போதிலும், ஸத்தியமாகவே ஆயிற்று. அதாவது:— தன்னைவிட்டு எச்சமயத்திலும் விலகாத நிர்விகாரத்வரூப தனது சொந்தஸ்வபாவ முள்ளதாகவே இருந்தது என்பதாம். யாது காரணம் பற்றி சேதநாசேதன வடிவமான வர்க்கத்தை அனுப்ரவேசம் செய்திருத்தல் பற்றி ஸத்ய சப்தத்தாற் சொல்லப்படும் பிரும்மத்திற்கு ஆத்மத்வம் சொல்லப்பட்டதோ அக்காரணம் பற்றி சேதநா சேதன வடிவமான ஸர்வஜகத்தை சாஸ்திர திருஷ்டியுள்ள பராசராதிபுருஷர்கள் हरेर्नकिञ्चिद्व्यतिरिक्तमस्ति என்றும், ज्योतींषि विष्णुर्भुवनानि विष्णुः என்றும் பிரும்மமாகவே உபதேசிக்கின்றனர். (எ—று)

ஆறுவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஏழாவது அனுவாகம். விசிஷ்டாத்வைதம்.

**(मन्त्रः) असद्वा इदमग्र......तत्त्वेव भयं विदुषो मन्वानस्य ॥**

(க—ரை) **इदम्**=ஸ்தூல சேதன சேதன சரீரகனான இந்த பிரும்மமானது **असद्वा**=அநபிவ்யக்த நாமரூபத்தையுடைய பிரும்மமாகவே **अग्रे**=ஸிருஷ்டிக்கு முன்னர் இருந்தது. அதனிடமிருந்தே இந்த ஜகத்தானது அபிவ்யக்த நாமரூபமுள்ளதாக ஆயிற்று.

சங்கை—அஸத் சப்தத்தால் சொல்லப்படும் பிரும்மத்திற்கு உபாதான காரணத்வம் சொல்லப்படுமானால் நிமித்தமானது தனியாய் ஒன்று வேண்டிவருமன்றோ. ஏனெனில்? உபாதான காரணமான மண்ணுக்கும் நிமித்த காரணமான குயவனுக்கும் உண்மையில் வேற்றுமை யிருப்பதை உலகில் நாம் காண்பதே அதன் காரணமாகும் எனின்?

உத்தரம்—**तदात्मानं स्वयमकुरुत** தன்னையே உபாதானமாக ஸ்வீகரித்து தானே அவ்விதம் செய்தது என்று சொல்லியிருப்பதால் முற்கூறிய வாசங்கைக் கிடமில்லை. மேலும், யாது காரணம் பற்றி தானே தனது காரியமாக வாயிற்றோ அதுபற்றியே பிரும்மமானது **सुकृतम्** அதிகம் கிலேசமின்றி செய்யப்பட்ட காரியத்தை யுடையது என்று சொல்லப்படுகின்றது. தன்னைவிட வேறான காரியத்தைச்செய்யுமிடத்திலன்றோ கிலேசப்ரஸக்தி யேற்படும். அதுபற்றியே தான் கிலேசமின்றியே காரியத்தைச் செய்யக்கூடியது பிரும்மம் என **निश्वसितमेतन्महतो भूतस्य** என்பது முதலிய சுருதிகளுபதேசிக்கின்றன. பிரும்மமானது அனாயாஸமாகச் செய்யப்பட்ட காரியமுள்ளதாக இருக்கட்டும். அதனால் உபாஸ்யத்வம், பிராப்யத்துவம் இவற்றிற்கு யாது பயன் எனின்? **सुकृतं** என சொல்லப்பட்ட பிரும்மமானது **रसः**= ஆனந்தமாகிறது. அந்த ஆனந்தலாபத்தினால் இந்த ஜீவன் ஆனந்தியாகிறான். ஆகவே பிரும்மமானது ஆனந்தமாயிருத்தல் பற்றி பிராப்யத்வம், உபாஸ்யத்வம் இரண்டும் அதற்குப் பொருத்தமுள்ளதாகவே ஆகின்றது. **कोह्येवान्यात्** என்பது முதலிய மேலுள்ள பாகமானது இதையே விளக்குகின்றது. இந்த பரமாத்மா அளவுகடந்த ஆனந்த ரஸனாக இல்லாதிருந்தால்

ஸாம்ஸாரிக சுகத்தையோ, மோக்ஷசுகத்தையோ எவனாலடைய முடியும். ஆகவே இவரே आनन्दयाति=ஆனந்தப்படுத்துகிறார். ஆனது பற்றியே ஸர்வவித ஆனந்தத்திற்கும் அவரே ஹேதுவாக இருப்பதால் ப்ராப்யத்வமும் அவருக்கே பொருந்துகின்றது. एषः= இந்த ஜீவன் यदा=எப்பொழுது अदृश्ये=சக்ஷுராதிகளாற் கிரஹிக்க முடியாதவனும், अनात्म्ये=சரீரமற்றவனும், अनिरुक्ते=ஜாதி குணாதி வாசியான தேவாதிபதங்களாற் சொல்ல முடியாதவனும், अनिलयने=ஆதாரமற்றவனுமான एतस्मिन् இந்த பரமாத்மாவினிடத்தில் अभयं=பயமற்றிருத்தற்கு வேண்டி प्रतिष्ठां அபயஸாதனபூதமான பிரதிஷ்டையை அதாவது: இடைவிடாது' அநுஸந்தித்தலை எவன் विन्दते=அடைகின்றானோ அவன் அபயத்தை யடைகிறான். இங்கு अदृश्ये என்றதால் அசித்பதார்த்தம் விலக்கப்படுகின்றது. अनात्म्ये என்றதால் பத்தஜீவன் விலக்கப்படுகின்றான். அவன் பரமாத்மாவினால் வியாப்யனாயிருத்தலே அதன் காரணமாகும். அல்லது கர்மகிருதமான சரீரமானது आत्म्यं எனப்படும். अनात्म्ये கர்மகிருத சரீரமற்றவர் என்று பொருள். अनि-रुक्ते என்றதால் முக்த ஜீவன் விலக்கப் படுகின்றான். அவன் பந்தாவஸ்தையில் தேவாதி சப்தவாச்யனாக வாகுதலே அதன் காரணமாகும். अनिलयने என்றதால் நித்தியமுக்தர்கள் விலக்கப் படுகின்றனர். அவர்கட்கு பகவான் ஆதாரமாயிருத்தலே அதன் காரணமாகும்.

இவ்விதம் விதிக்கப்பட்ட ப்ரதிஷ்டைக்கு விச்சேதமுண்டானால் அனர்த்தம் விளையும் என உபதேசிக்கப் படுகின்றது. एषः இந்த உபாஸகன் एतस्मिन् இந்த பரமாத்மாவினிடத்தில் (ध्यानस्य) अन्तरम्=தியானத்தின் பேதத்தை, அதாவது: விச்சேதத்தை उदरं அற்பமேனும் எவனொருவன் செய்கின்றானோ அவனுக்கு பயம் உண்டாகின்றது. இங்கு பூர்வ வாக்கியத்திலுள்ள நிரந்தரதியான வாசியான ப்ரதிஷ்டா சப்தத்தால் தியானத்தின் இடைவிடாதிருத்தல் விதிக்கப்பட்டிருப்பதால் இங்குள்ள अन्तर சப்தத்தாலும் தியானத்திலுள்ள இடைவிடாமைக்கு நேர் விரோதியான தியான விச்சேதத்தைக் கிரஹிப்பது தான் உசிதமாகுமே யொழிய, அத் வைதிகள் சொல்லுகிறபடி பிரும்மத்தினிடத்தில் अन्तरं பேதத்

தை எவன் எண்ணுகின்றானோ என்று பொருள் கொள்ளுவது உசிதமாகாது என்றும் கண்டுகொள்ளவேண்டும். உண்மையாகப் பார்த்தாலோ பிரும்மைக்யவாதிகளுக்கும், நாநாப்பிரும்மவாதத்தை யொப்பாதவர்களுமான நமக்கும் பிரும்மத்தினிடத்தில் நானுத்வத்தை (பேதத்தை) நிஷேதிப்பதானது விரோதமானதன்று தானாயினும், இந்தப் பிரகரணத்தை யொட்டிப் பார்க்கும் பொழுது நாம் முன் சொன்னபடிதான் பொருள் கொள்ளவேண்டுவதாக ஏற்படுகிறது. तत्वेव भयं विदुषो मन्वानस्य=பிரும்மோபாஸனநிஷ்டனானவன் பிரும்மத்தை விட வேறான விஷயேச்சையினால் அதை இடைவிடாது தியானஞ் செய்யாதிருப்பானாயின் அந்த இடைவிடாது மனனம் செய்யாதிருத்தலே அவனுக்கு பயமாகிறது இதைக்காட்டிலும் வேறான பயம் என்பது ஒன்றில்லை. இதையே மஹருஷிகளும் यन्मुहूर्तं क्षणं वापि वासुदेवो नचिन्त्यते । सा हानिस्तन्महच्छिद्रं सा भ्रान्तिः साच विक्रिया। वरं हुतवहज्वालापंजरान्तन्तर्व्यवस्थितिः । न शौरिचिन्ताविमुखजनसंवासवैशसम्" என்றதாற் சொல்லி யிருக்கின்றனர். (எ-று)

விசிஷ்டாத்வைதப்படி 7வது அனுவாகம் முற்றிற்று.

---

## அத்வைதப்படி எட்டாவது அனுவாகம்.

(मन्त्रः) भीषास्माद्वातः पवते। भीषोदेति सूर्यः। भीषास्मादग्निश्चेन्द्रश्च। मृत्युर्धावति पञ्चम इति। सैषाऽऽनन्दस्य मीमाꣳसा भवति। युवास्यात्साधु युवाऽध्यायकः। आशिष्ठो द्रढिष्ठो बलिष्ठः। तस्येयं पृथिवी सर्वा वित्तस्य पूर्णा स्यात्। स एको मानुष आनन्दः। ते ये शतं मानुषा आनन्दाः॥ १॥

स एको मनुष्यगन्धर्वाणामानन्दः। श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतं मनुष्यगन्धर्वाणामानन्दाः। स एको देवगन्धर्वाणामानन्दः। श्रोत्रियस्य चाऽकामहतस्य। ते ये शतं देवगन्धर्वाणामानन्दाः। स एकः पितृणां चिरलोकलोकानामा-

नन्दः। श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतं पितॄणां चिरलोकलोकानामानन्दाः। स एक आजानजानां देवानामानन्दः॥

श्रोत्रियस्य चाऽकामहतस्य। ते ये शतमाजानजानां देवानामानन्दाः। स एकः कर्मदेवानां देवानामानन्दः। ये कर्मणा देवानपियन्ति। श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतं कर्मदेवानां देवानामानन्दाः। स एको देवानामानन्दः। श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतं देवानामानन्दाः। स एक इन्द्रस्याऽऽनन्दः॥ ३॥

श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतमिन्द्रस्याऽऽनन्दाः। स एको बृहस्पतेरानन्दः। श्रोत्रियस्य चाऽकामहतस्य ते ये शतं बृहस्पतेरानन्दाः। स एकः प्रजापतेरानन्दः। श्रोत्रियस्य चाकामहतस्य। ते ये शतं प्रजापतेरानन्दाः। स एको ब्रह्मण आनन्दः। श्रोत्रियस्य चाऽकामहतस्य॥ ४॥

स यश्चायं पुरुषे। यश्चासावादित्ये। स एकः। स य एवंवित्। अस्माल्लोकात्प्रेत्य। एतमन्नमयमात्मानमुपसंक्रामति। एतं प्राणमयमात्मानमुपसंक्रामति। एतं मनोमयमात्मानमुपसंक्रामति। एतं विज्ञानमयमात्मानमुपसंक्रामति। एतमानन्दमयमात्मानमुपसंक्रामति। तदप्येष श्लोको भवति॥५॥

इति अष्टमोऽनुवाकः॥

(ப-ரை) अस्मात्=இந்த பரமாத்மாவினிடமிருந்துண்டான भीषा=பயத்தினால் वातः=காற்றானது पवते=வீசுகின்றது. भीषा=பயத்தினால் सूर्यः=சூரியன் उदेति=உதயமடைகிறான். अस्मात्=இவரிடமிருந்துண்டான भीषा=பயத்தினால் अग्निश्च=அக்னியும், इन्द्रश्च=இந்திரனும்,पञ्चमः=ஐந்தாவதான मृत्युश्च=மிருத்யுவும் धावति (ஆயுள் முடிந்தவர்களைக் குறித்து) ஓடுகிறான். आनन्दस्य=பிரும்மானந்தத்தினுடைய सैषा=அந்த இந்த मीमांसा=விசாரமானது

भवति=ஏற்படுகின்றது. युवा=முதல்வயதிலுள்ளவனும், साधुयुवा=சாதுவாயுள்ளவனுயும், (அதாவது: முறைதவறாது செய்பவன் என்று பொருள்) अध्यायक:=வேதாத்தியயனஞ் செய்தவனுயும் आशिष्ठ:=காலந்தவறாது விளம்பமின்றி பிரவிருத்தியுள்ளவனுயும், द्रढिष्ठ:=யுத்தாதிப் பிரவிருத்தியில் மனோதைரியமுள்ளவனுயும், बलिष्ठ:=தேஹவலுவுள்ளவனுயும், (य:=எவன் இருக்கின்றானோ) यस्य=எவனுக்கு அதீனமாக वित्तस्य पूर्णा=திருஷ்டா திருஷ்டமான உபபோக சாதனத்துடன் கூடினதான इयं पृथिवी=இந்தப் பூமியானது स्यात्=இருக்குமோ तस्य=அத்தகைய மனிதனுக்குண்டாகும் स:=அந்த आनन्द:=ஆனந்தமானது एक: ஒரு मानुष आनन्द:=மானுஷமான ஆனந்தமாகும். शतं=நூறுமடங்கு அதிகமான मानुषा आनन्दा:=மானுஷானந்தங்கள் ये=எவைகளுண்டோ, ते=அவைகள் मनुष्यगन्धर्वाणाम्=மனுஷ்ய கந்தர்வர்களுடைய एक: आनन्द:=ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=மனுஷ்யானந்தத்தில் ஆசையற்றவனுன श्रोत्रियस्य=சுரோத்திரியனுக்கும் அதுவேயாயாகும்.

शतम्=நூறுமடங் கதிகமான मनुष्यगन्धर्वाणाम्=மனுஷ்ய கந்தர்வர்களுடைய आनन्दा:=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவைகள் देवगन्धर्वाणाम्=தேவ கந்தர்வர்களுடைய स एक: आनन्द:=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=மனுஷ்ய கந்தர்வானந்தத்தில் ஆசையற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத்திரியனுக்கும் அதுவே யாகும். शतम्=நூறுமடங்கு அதிகமான देवगन्धर्वाणाम्=தேவ கந்தர்வர்களுடைய आनन्दा:=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவைகள் चिरलोकलोकानाम् =வெகுகாலமிருக்கின்றதான லோகத்தில் வஸிப்பவர்களான पितृणाम्=பிதிருக்களுடைய स एक: आनन्द:=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=தேவகந்தர்வ ஆனந்தத்தில் காமனையற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத்திரியனுக்கும் அதுவேயாகும். शतम्=நூறுமடங்கு அதிகமான चिरलोकलोकानाम्=சிரலோக வாஸிகளான पितृणाम्=பிதிருக்களுடைய आनन्दा:=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவைகள் आजानजानाम्–देवानाम्=பிறக்கும்பொழுதே தேவதையாக உண்டான தேவர்களுடைய स एक: आनन्द:=அந்த ஒரு

ஆனந்தமாகும். अकामहतस्य=பிரலோக வாஸிகளான பித்ருக்க ளுடைய ஆனந்தத்தில் காமனையற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத் திரியனுக்கும் அதுவேயாகும். शतम्=நூறுமடங்கு அதிகமான आजानजानां देवानाम्=ஆஜானஜ தேவர்களுடைய आनन्दाः=ஆனந் தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவைகள் कर्मदेवानां देवानाम्= கர்மாவினுல் தேவபதவியை யடைந்த தேவர்களுடைய स एकः आनन्दः=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=ஆஜானஜதே வர்களுடைய ஆனந்தத்தில் காமனையற்றவனுன श्रोत्रियस्य च= சுரோத்திரியனுக்கும் அதுவே யாகும்.

शतम्=நூறுமடங்கு அதிகமான कर्मदेवानां देवानाम्=ஸ்மிருதி யிற் சொல்லிய கர்மாவினுல் கிடைத்த தேவபாவ முடையவர்க ளுடைய आनन्दाः=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவை கள் देवानाम्=வைதிக கர்மாவான அக்னி ஹோத்ராதியினுல் தேவபாவத்தை யடைந்தவர்களுடைய स एकः आनन्दः=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=மேற்சொன்ன கர்ம தேவர்க ளுடைய ஆனந்தத்திற் காமனையற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத் திரியனுக்கும் அதுவே யாகும். शतम्=நூறுமடங்கு அதிகமான देवानाम्=முற்கூறிய தேவர்களுடைய आनन्दाः=ஆனந்தங்கள் ये= எவைகளுண்டோ ते=அவைகள் इन्द्रस्य=தேவராஜனுடைய स एकः आनन्दः=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=தேவா னந்தத்தில் காமனையற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத்திரியனுக் கும் அதுவேயாகும். शतम्=நூறுமடங்கு அதிகமான इन्द्रस्य= இந்திரனுடைய आनन्दाः=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते= அவைகள் बृहस्पतेः=தேவராஜ குருவினுடைய स एकः आनन्दः= அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=தேவராஜனின் ஆனந் தத்தில் காமனை யற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத்திரியனுக்கும். அதுவேயாகும்.

शतम्=நூறுமடங்கு அதிகமான बृहस्पतेः=தேவராஜ குருவி னுடைய आनन्दाः=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते=அவை கள் प्रजापतेः=விராட் புருஷனுடைய स एकः आनन्दः=அந்த ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=தேவராஜ குருவினுடைய ஆனந் தத்தில் காமனை யற்றவனுன श्रोत्रियस्य च=சுரோத்திரியனுக்கும்.

அதுவேயாகும். शतम्=நூறு மடங்கதிகமான प्रजापतेः=விராட் புருஷனுடைய आनन्दाः=ஆனந்தங்கள் ये=எவைகளுண்டோ ते= அவைகள் ब्रह्मणः=ஹிரண்ய கர்ப்பருடைய स एकः आनन्दः=அந்த. ஒரு ஆனந்தமாகும். अकामहतस्य=விராட் புருஷனுடைய ஆனந் தத்தில் ஆசையற்றவனான श्रोत्रियस्य च—சுரோத்திரியனுக்கும் அதுவே யாகும். पुरुषे च—சரீரத்திலுள்ள ஹிருதய குஹையி லும், योऽयम्—யாதொரு ப்ரத்யகாத்மாவுண்டோ सः—அவனும் आदित्ये च—சூரிய மண்டலத்திலும் योऽसौ—யாதொரு இந்த ஆத் மாவுண்டோ सः அவனும் एकः—உண்மையில் வேறுபட்டவ னன்று. एवं वित्—ப்ரத்யகாத்மாவையும் சுத்தப்ரும்மத்தையும் ஒன்றென அறிந்தவன் यः எவனோ सः—அவன் अस्मात्—இந்த लोकात्—திருஷ்டமாயும் அதிருஷ்டமாயுமுள்ள இஷ்டமான விஷ யங்களின் நிறைவுபெற்ற லோகத்தினின்றும் प्रेत्य—திரும்பி அதா வது: நிரபேக்ஷனாகவாகி (விரக்தனாகி) एतम्—முன்னர் சொல்லப் பட்ட अन्नमयमात्मानम्—அன்னமயாத்மாவைக் குறித்து उपसंक्राम- ति—வெறுப்பை யடைகிறான். அதாவது: விஷய ஸமூஹங்கள் யாவையும் அன்னமயாத்மாவை விட வேறாகப் பார்க்காதவனாய் ஸகல ஸ்தூல பூதங்களும் அன்னமயமானதே என்று எண்ணுகி றான் என்பதாம். (இவ்வித எண்ணமுள்ளவனுக்கு அதில் வெ றுப்புண்டாவது இயற்கையாகையால் அந்த வெறுப்பையே उपसं- क्रामति—என்றதால் சுருதி சொல்லுகிறது என்று கொள்ளவேண் டும்). இந்த சூத்ராத்மாவுடன் ஒன்றான பிராணமயாத்மாவையும் எல்லா அன்னமயாத்மாவிலிருப்பவனாக நினைக்கிறான். (ஆனதுபற் றி இங்கும் முற்கூறியபடி उपसंक्रामति—என்றதற்கு வெறுக்கிறான் என்ற பொருளே பொருத்தமாகிறது) இவ்விதமே மேலுள்ள மனோமயனையும், விக்ஞானமயனையும், ஆனந்தமயனையும் உபஸங் க்ரமணஞ்செய்து பின்னர் அதிருச்யமாயும், அனாத்மயமாயும், அநி ருக்தமாயும், அநிலயனமாயும் இருக்கின்ற பிரும்மத்தினிடத்தில் இவன் நிலையைப் பெறுகிறான். (எ—று)

(தா—ம்) இந்த பரமாத்மாவினிடமிருந்துண்டான பயத்தி னால் வாயு, சூரியன், அக்னி, இந்திரன், 5வதான மிருத்யு இவர் கள் ஸ்வயம் ஈசுவரர்களாயிருந்தபோதிலும் தத்தமது காரியத்

தை வழுவாது செய்கின்றனர். ஆகவே அவர்களை விடத்தனியாய் நியந்தா ஒருவன் இருக்கவேண்டும் என்றேற்படும். ஆகவே ராஜாக் களிடம் வேலைக்காரர்கள் போல் அந்தவாயு முதலியோர் எதனிடமிருந்து பயப்படுகின்றனரோ அத்தகைய அவர்களுக்கு பயகாரணமான பிரும்மம் ஒன்றிருக்கின்றது என்றேற்பட்டது. எந்தப்பிரும்மத்தினிடமிருந்துண்டான பயத்தால் அவர்கள் தமது காரியத்தில் பிரவிருத்திக்கின்றனரோ, எதுபயகாரணமான ஆனந்தரூபியான பிரும்மமோ அந்த இந்த பிரும்மஸ்வரூபா னந்தத்தினுடைய விசாரமானது தொடங்கப்படுகின்றது.

சங்கை—துக்காதிஸ்வரூபமானது போல ஆனந்தஸ்வரூபமும் பிரசித்தமாயிருப்பதுபற்றி ஆனந்தஸ்வரூபத்தைப் பற்றிய விசாரம் எதற்கு எனலாம்.

உத்தரம்—ஆயினும் பிரும்ம ஸ்வரூபமாக சாஸ்திரத்திற் சொல்லப்பட்ட ஆனந்தமானது விஷயத்திற்கும் விஷயியான போக்தாவுக்கும் உள்ள சம்பந்தத்தாலுண்டான லௌகிகானந்தமானது போல ஜன்னியமா? அல்லது நித்தியமா? என அறியவேண்டுவது அவசியமாகின்றமையின் ஆனந்தத்தைப் பற்றிய விசாரம் அவசியமாகவே ஆகிவிடுகின்றது.

சங்கை — அங்ஙனமாயின் பிரும்மானந்தத்தைப் பற்றிய விசாரத்தை யன்றோ தொடங்க வேண்டும். மானுஷாதி ஆனந்தோபன்னியாஸம் இங்கு எதற்காக எனின்?

உத்தரம்—கூறுவாம். வெளியிடத்திலுள்ள விஷயாதிகளென்ன, சரீரத்திலுள்ள யௌவனாதிகளென்ன இவைகளாகிற சாதனங்களுடைய சேர்க்கையை நிமித்தமாக உடைய்து எதுவோ அதுவே லௌகிக ஆனந்தமாகும். தொடர்ந்துள்ள பிரும்மானந்தத்தை விளக்கவேண்டி मानुष आनन्दः என சாஸ்திரத்தால் குறிப்பிடப்படுவது எதுவோ, அதுவும் உத்கிருஷ்டமான அந்த லௌகிகானந்தமே யாகும். மிக்கப் பிரசித்தமான இந்த மானுஷானந்தத்தைக்கொண்டு விஷயப்பற்றற்ற புத்தியாலறியத்தகுந்த ஆனந்தமானது தொடர்ந்து வருவது ஊஹிக்க முடிகின்றது. லௌகிகமான ஆனந்தமும் பிரும்மானந்தத்தின் ஏகதேசமேயா

கும். அதாவது:—விவேகமானது அவித்யையினால் திரஸ்கரிக்கப்படும் பொழுது அவித்யையானது காமக்குரோதாதிகளாகிற தனது காரியங்கள் மூலம் உத்கர்ஷத்தை (ஆதிக்யத்தை) யடையுங்கால் பிரும்மாதிகளால் தத்தமது கர்மத்திற் கேற்றபடியும், விஷயாதி ஸாதன ஸம்பந்தத்தை யொட்டியும், அவரவரது அறிவுக்குத் தக்கபடி அறியப்படுவதும், க்ஷணிகமும் நிலைபெறாததுமான ஆனந்தமானது லௌகிகானந்தமெனப்படுகின்றது. அதே ஆனந்தமானது அவித்யா காமகர்ம அபகர்ஷத்தால் (குறைவால்) மனுஷ்யகந்தர்வர் முதலிய மேன்மேலுள்ள விடங்களில் ஹிரண்யகர்ப்ப பிரும்மம்வரை அகாமஹத வித்வத் சுரோத்திரியப்ரத்யக்ஷமாய் நூறு நூறு மடங்கு உத்கர்ஷத்துடன் அநுபவிக்கப்படுகின்றது. வித்யையினால் அவித்யாகிருதமான (அவித்யையினாற் செய்யப்பட்டதான) விஷயவிஷயி விபாகமானது போக்கப்பட்டதும். (அதாவது:—ஸாதனஸம்பத்தியினாற் செய்யப்பட்ட அந்தக்கரணவிருத்தி விசேஷத்தில் உபஹிதமான ஸ்வரூபானந்தமானது விஷயம் எனப்படும். அத்தகைய உபஹிதானந்தத்தை அநுபவிப்பவனான ஜீவன் விஷயீ எனப்படுவன். இவ்விரண்டினுடையவும் பிரிவானது மூலாவித்யையினாற் செய்யப்பட்டது. ஆகவே அவித்யையாற் செய்யப்பட்ட அந்தப் பிரிவானது பிரும்மாத்மைக்ய வித்யையினால் போக்கப்பட்டதும் என்பதாம்) யாதொரு ஆனந்தமானது ஸமாதியில் அநுபவிக்கப்படுகின்றதோ அதுவே ஸ்வாபாவிகானந்தமென்றும், பரிபூர்ணம் என்றும், ஏகம் என்றும், அத்வைதமென்றும் சொல்லப்படுவதாகவாகும்.

இதையே மேலுள்ள வற்றால் சுருதி விளக்கிக்காட்டத் தொடங்குகின்றது. **युवा**—பூர்வவயதிலுள்ளவனும், **साधुयुवा**—சாஸ்திர விஹிதகர்மாவை வழுவாது செய்பவனும், **अध्यायक:**—வேதாத்யயனஞ் செய்தவனும். **आशिष्ठ:**—போக்யமான வஸ்துக்களில் அந்தந்த காலம் தவறாது தாமதமின்றிப் பிரவிருத்திப்பவனும், **द्रढिष्ठ:** யுத்தாதிப் பிரவிருத்தியில் மனோதைரிய முள்ளவனும், **बलिष्ठ:**—சரீரத்தில் மிக்க வலிவுள்ளவனும், அதாவது: ஆத்யாத்மிக சாதன ஸம்பன்னனும், திருஷ்டமானப் பிரயோஜன முள்ளதும், அதிருஷ்டமானப் பிரயோஜன முள்ளதுமான வித்தத்தால்

நிறைவு பெற்ற இந்தப் பூமி முழுவதும் தனது வசத்தில் இருக்கப் பெற்றவனும் எவனோ அவனுடைய ஆனந்தம் யாதுண்டோ அதுவே ஒரு மானுஷானந்தமாகும். அதாவது: மனுஷ்யானந்தங்களுள் மிக்க உயர்ந்த ஆனந்தமாகும் என்பதாம். இந்த மனுஷ்யானந்தத்தின் நூறுமடங்கு அதிகமான ஆனந்தம் யாதுண்டோ அதுவே மனுஷ்ய கந்தர்வர்களின் ஒரு ஆனந்தமாகும். மானுஷானந்தத்தைவிட மனுஷ்ய கந்தர்வானந்தம் நூறுமடங்கு அதிகமானது என்று பொருள். முன்னர் மனிதர்களாயிருந்து கர்ம விசேஷத்தாலும், உபாஸனா விசேஷத்தாலும் கந்தர்வ (ஒர்வகை தேவர்) ப் பதவியை யடைந்தவர்களே மனுஷ்யகந்தர்வர் எனப்படுவர். அவர்களோ அந்தர்த்தானம் (ஒருவருமறியாது மறைந்து வஸித்தல்) என்ற சக்தியுடன் கூடினவர்களாகவும், மிக்க சூக்ஷ்மமான தேஹேந்திரிய முள்ளவர்களாகவும், இருக்கின்றனர். ஆனதுபற்றி அவர்களுக்கு சீதோஷ்ணாதி த்வந்த்வங்கள் அற்பங்களாகவே தானேற்படுகின்றன. அவ்விதம் அற்பமான த்வந்த்வங்களேற்படினும் அவைகளை விலக்கும் விஷயத்தில் சக்தியும், மாலை, சந்தனம் முதலிய ஆனந்த ஸாதனங்களின் நிறைவும் அவர்களுக்கு இருக்கின்றது. ஆனதுபற்றி எவ்விதத் தடையுமற்றவனும், தடையைத் தடுப்பதற்குப் போதிய சாதனமுள்ளவனுமான மனுஷ்ய கந்தர்வனுக்குச் சித்தத் தெளிவு உண்டாகக் கூடும். அவ்விதமுண்டாகும் சிறந்த சித்தப்ரசாதத்தால் உயர்ந்த சுகமானது பிரகாசத்தை யடைகின்றது. இம்முறைப்படியே முன்முன்னுள்ள பூமியைக் காட்டிலும் மேன்மேலுள்ள பூமியில் சிறந்த சித்தத் தெளிவு உண்டாவதினின்று நூறு மடங்கதிகமான ஆனந்தோத்கர்ஷம் உண்டாகும் என்று கூறினது பொருத்த முள்ளதாக வாகின்றது. முதல் பரியாயத்தில் अकामहतस्य எனக்கூறுததினின்றும்மனுஷ்ய விஷய போக காமனையற்றவனான சுரோத்திரியனுக்கு மனுஷ்யானந்தத்தைக் காட்டிலும் நூறு மடங்கதிகமாயும், மனுஷ்ய கந்தர்வனுக்கொப்பானதாயு மிருக்கிற ஆனந்தோத்கர்ஷமானது சொல்ல வேண்டும் என்றேற்படுகின்றது. साधुयुवा, अध्यायकः என்றதால் சுரோத்திரியனா யிருக்கும் தன்மையும், பாபமற்றிருக்குந் தன்

மையும் சொன்னதாகக் கிரஹிக்கப்படல் வேண்டும். மேலும், ஒவ்வொரு பரியாயத்திலும், श्रोत्रियस्य चाकामहतस्य எனச் சொல்லப்படும் சுரோத்திரியனும் சாஸ்திரோக்த கர்மானுஷ்டானஞ் செய்கின்றவனுயிருத்தல் வேண்டும் என்று கொள்ளல்வேண்டும்.

சங்கை—இரண்டாவது பரியாயம் தொடங்கி படிக்கப்படும் சுரோத்திரியர்களுள் சிலர்க்கு மனுஷ்யகந்தர்வானந்த துல்லியமான ஆனந்தமும், சிலர்க்கு தேவகந்தர்வாதி ஆனந்த துல்லியமான ஆனந்தமும் உண்டாவதாகச் சொல்லுவது எங்ஙனம்? ஆனந்த ஸாதனங்களான, சுரோத்திரியத்வம், அவ்ரஜினத்வம், அகாமஹதத்வம் ஆகிய இவைகளோ யாவற்கும் ஒரேவிதமாகச் சொல்லப்பட்டு மிருக்கின்றதன்றோ எனின்?

உத்தரம்—கூறுவாம். எல்லாபரியாயங்களிலும் சுரோத்திரியத்வம், அவ்ரஜினத்வம் ஆகிய இவ்விரண்டுமட்டும் பொதுவே யொழிய அகாமஹதத்வமென்பது பொதுவல்ல. அந்தந்த பார்யாயத்திலுமுள்ள சுரோத்திரியனுக்கு அகாமஹதத்வம் மட்டும் வேறுபடுகின்றது. அதாவது:—மனுஷ்யகந்தர்வபரியாயத்திலுள்ள சுரோத்திரியனுக்கு மானுஷானந்தத்தில் மட்டும் காமனை யில்லையே யொழிய அதைவிட மேலான ஆனந்தங்களில் ஆசைகள் இருக்கவே இருக்கின்றன. இவ்விதமே தேவகந்தர்வ பார்யாயத்திலுள்ள சுரோத்திரியனுக்கு மானுஷானந்தம், மனுஷ்யகந்தர்வானந்தம் இவற்றில் காமனையில்லையே யொழிய அதற்கு மேலுள்ள ஆனந்தங்களில் காமனைஇருக்கவே தானிருக்கின்றது. இவ்விதமே மேலுள்ளவிடங்களிலும் காண்க. ஆகவே விஷயம் அதிகமாகவாக காமனையின் உத்கர்ஷமும் அதன் நிவிருத்திரூபமான அகாமஹதத்துவத்தின் (வைராக்கியத்தின்) குறைவும், விஷயம் குறையக்குறைய வைராக்கியத்தின் பெருக்கும் காமனையின் குறைவும் உண்டாகும். ஆகவே அகாமஹதத்துவமானது (வைராக்கியமானது) விருத்தியாகவாக சுரோத்திரியர்களுக்கு மேன்மேலும் ஆனந்தோத்கர்ஷ முண்டாகின்றது. ஆகவே அகாமஹதத்துவமானது (வைராக்கியமானது) விசேஷமாகவாவதினின்றும் நூறுமடங்கு சுகப்பெருக்குண்டாவதால் அது பரமானந்தப்பிராப்திக்கு சாதனமாகின்றது என்பது பெறப்பட்டது.

கல்பத்தின் ஆதியிலேயே தேவலோகத்தில் பிறந்தகாயகர்கள் தேவகந்தர்வர் எனப்படுவர். ஆஜானமென்பது தேவலோகமாகும். கல்பாதியில் தேவலோகத்திற் பிறந்ததேவர்கள் ஆஜானஜதேவர் எனப்படுவர். ஸ்மிருதியிற்சொல்லிய பூர்த்தாதிகர்மங்களால் தேவ ஸ்தானங்களிற் பிறந்தவர்களென்றும், உபாஸனையுடன்சேருதவை திகமான அக்னிஹோத்திராதி கர்மங்களால் தேவபாவத்தை யடைந்தவர்களென்றும் கர்மதேவர் இருவகைப்படுவர். 33 பிரதானதேவர்கள் இங்குள்ள தேவா: என்றதாற் சொல்லப்படுவர். அவர்கட்க்கெல்லாம் ஸ்வாமி இந்திரன். இந்திரனுடைய ஆசாரியன் பிருஹஸ்பதி. மூன்றுலோகங்களையும் சரீரமாகவுடைய விராட் பிரஜாபதி என்பதாற் சொல்லப்படுவர். பிரும்மா என்றதால் ஆனந்தபேதமானது எவரிடத்தில் ஒன்றுகவாகின்றதோ, ஆனந்த உத்கர்ஷ நிமித்தபூதமான தர்மமானது எவரிடத்தில் எல்லையற்றதாகின்றதோ, இதுவரை சொல்லிய பலமும் அதன்நிமித்தமான தர்மமும் இவ்விஷயமான ஞானமும் எவரிடத்தில் ஒப்புயர்வற்றிருக்கின்றதோ, எவரிடத்தில் அகாம்ஹததவமானது (வைராக்கியமானது) ஒப்புயர்வற்று விளங்குகின்றதோ. அத்தகைய ஸமஷ்டி, வியஷ்டிரூபியான ஹிரண்யகர்ப்பர் என்பவர் சொல்லப்படுவர். அந்தப் பிரும்மதேவனுடைய இந்த ஆனந்தமானது அகாமஹதனும், அவ்ருஜினனும், (அதாவது: பாபமற்றவனும்) ஆன சுரோத்ரியனால் பிரத்யக்ஷமாக அநுபவிக்கப்படுகின்றது. ஆகவே இம் மூன்றும் சாதனங்களென்றே அறியப்படுகின்றன. அம்மூன்றிற்குள் எல்லாசுரோத்திரியர்களுக்கும் சுரோத்ரியத்வமும், அவ்ருஜினத்வமும், பொதுவாக வுள்ளது. அகாமஹதத்வமானது அந்தந்த பூமிக்குத்தக்கபடி உத்கர்ஷத்தை யடைகின்றதாய்க் கொண்டு எப்பொழுதுமே ஆனந்தோத்கர்ஷத்திலே காரணமாகவாவதுபற்றி மூன்றுசாதனங்களுள் சிறந்தஸாதனமாக வாகின்றது. எந்த பரமானந்தத்தின் ஏகதேசத்தை ஸர்வப்பிராணிகளும் அநுபவிக்கின்றனரோ அந்தப் பிரும்மத்தினுடைய ஆனந்தமும் அகாமஹதத்வ ப்ரகர்ஷ(ஆதிக்ய)த்தால் அறியப்படுவதாய்க் கொண்டு சுரோத்திரிய ப்ரத்யக்ஷமாக வாகின்றது. மேலும் எந்த பரமானந்தத்தினுடைய லேசமானது சமுத்திர ஜலத்தின்

துளிபோல எதனிடமிருந்து உபாதியால் வேறுபட்டு முடிவில் எதனிடத்து இரண்டறக்கலக்கின்றதோ அத்தகைய பூர்ணனந்தமானது இயற்கையில் எதனிடமிருக்கின்றதோ, இந்தப் பூர்ணனந்தமானது அத்வைதமாயிருப்பது(ஒன்றானது)பற்றி ஆனந்தமென்றும் ஆனந்தியென்றும் சொல்லும் பேதம் இங்கு கிடையா.

இதுவரை சொல்லிய ஆனந்ததாரதம்மிய விசாரபலன் முடிக்கப்படுகின்றது. எதுபரம வ்யோமமென்கிற ஹ்ருதயகுஹையில் பிரகாசிக்கின்றதோ, எது ஆகாசம்முதல் அன்ன மயம் வரையுள்ள காரியத்தை சிருஷ்டித்து அதையே அனுப்பிரவேசம் செய்திருக்கின்றதோ? எது சரீரத்தில் பிரகாசிக்கின்றதோ அந்த இந்த ஆத்மவஸ்துவும், எந்தபரமானந்தம் சுரோத்திரியப்ரத்யக்ஷம் எனச் சொல்லப்பட்டதோ, எதனுடைய ஏகதேசத்தை சுகார்ஹர்களான பிரும்மா முதலிய பிராணிகள் அனுபவிக்கின்றனரோ, எது சூரிய மண்டலத்தில் பிரகாசிக்கின்றதோ அந்த இந்த ஆனந்தமும் வேறுனதேசத்திலிருக்கின்ற குடாகாசமும் பெரிய ஆகாசமும் உண்மையில் ஒன்றுவது போல் ஒன்றுனதென்றே கொள்ளல் வேண்டும்.

சங்கை—அந்த ஆத்மாவைக்குறிக்குங்கால் **स यश्चायं पुरुषे** எனப் பொதுவாய்ச் சொன்னது பொருந்தாது. வலதுகண்ணில் எவனொருவ னறியப்படுகிறுனே எனப்பிரசித்தியை யொட்டி சொல்லவேண்டுவதன்றே பொருத்தமாகும் எனின்?

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை ஏனெனில் கூறுவாம். இங்கு "**अदृश्येऽनात्म्ये**" என்றும் "**भीषास्माद्वातः पवते**" என்றும் "**सैषाऽऽनन्दस्य मीमांसा भवति**" என்றும் நிர்விசேஷமான ஆத்மாவைச் சாஸ்திரம் சொல்லத்தொடங்கி யிருப்பதே அதன் காரணமாகும். இவ்வித மிருக்க முன்பின் தொடர்ச்சியில்லாது ஒன்றைச் சொல்லுவது எவ்விதம் பொருந்தும். பரமாத்ம விக்ஞானமோ விவக்ஷிதமாயிருக்கின்றது. ஆகவே பரமாத்மாவே **एकः** என்றதாற் சொல்லப்படுகிறுர். ஆனந்த மீமாம்ஸை (தாரதம்மிய விசாரம்) யானது பிரகிருதமாயிருக்கிறது. அதற்கும் பலன் சொல்லி முடிக்கவேண்டும். அதாவது:—வேறுன ஸ்வரூப மில்லாத ஆனந்தம் யாதுண்டோ அது பரமாத்மாவே யா

கும். விஷயவிஷயி ஸம்பந்தத்தாலுண்டாகும் ஆனந்தம் பரமாத்மாவாக வாவதில்லை என்பதாம்.

**स यश्चायं पुरुषे, यश्चासावादित्ये, स एकः** என்றதாற் சொல்லப்பட்ட இந்த உபதேசமும் முற்கூறியதற்கு ஒத்ததாகவே இருக்கிறது. அதாவது:—**स यश्चायं पुरुषे** என்பது ஜீவனையும், **यश्चासावादित्ये** என்பது பரமாத்மாவையும் அனுவாதம் செய்து **स एकः** என்றதால் வேவ்வேறான விடத்தில் பிரகாசிக்கின்ற ஜீவேசுவர உபாதிகளைப் போக்கி ஏகத்வத்தை உபதேசித்தது என்று முற்கூறப்பட்டதென்பதாம். அவ்விதமாயினும், **आदित्ये** என்றதால் சூரியரூப விசேஷோபாதியைச் சொல்லவேண்டிய தவசியமில்லையன்றோ என்னின்? அவ்விதம் சொல்லுவதற்கில்லை. உயர்வுதாழ்வைப் போக்கவேண்டியே இவ்விதம் சூரியரூப விசேஷோபாதியைச் சொல்லவேண்டுவது அவசியமாகிவிட்டது. அதாவது:— சூரிய மண்டலத்திற்குள் பிரகாசிக்கும் வஸ்துவே மூர்த்தாமூர்த்தரூபமான த்வைத ப்ரபஞ்சத்திற்கு மேலாயுள்ளதாகும். அந்த வஸ்துவே இந்த சரீரத்திலுள்ள வேற்றுமைக்குறிய காரணங்களைப் போக்கி பரமானந்தத்தை யபேக்ஷித்து ஸமமாகுமானால் அத்தகைய நிலையை யடைந்தவனுக்கு உயர்ந்ததென்றோ தாழ்ந்ததென்றோ சொல்லக்கூடியது எதுவும் கிடையா என்றேற்படுவதால் **अभयं प्रतिष्ठां विन्दते** என்றது மிக்கப்பொருத்தமாகவே ஆகிவிட்டது என்பதாம்.

இதுவரையுள்ள கிரந்தத்தால் பிரும்மம் இருக்கா? இல்லையா? என்ற பிரச்னத்திற்கு, பிரும்மம் இருக்கு என காரியம், ரஸலாபம், பிராணனம், அபயப் பிரதிஷ்டை, பயதர்சனம், ஆகியவைகளைக் கொண்டு பதிலளிக்கப்பட்டது. பின்னும் வித்வானுக்கு பிரும்மப் பிராப்தி, அப்ராப்தி விஷயமான இரண்டு பிரச்னங்கள் பதில் சொல்லவேண்டுவதாக எஞ்சியிருக்கின்றன. அவற்றுள் வித்வான் பிரும்மத்தை யடைகிறானா? அடைவதில்லையா? என்பது கடைசியிலுள்ள ப்ரச்னமாகும். இந்தப் பிரச்னத்திற்கே பதில் சொல்லப்படுகின்றது. இந்தப் பிரச்னத்திற்குச் சொல்லிய பதிலைக் கொண்டே நடுவிலுள்ள அவித்வத் விஷயப்ரச்னத்திற்கும் பதில் சொல்லப்பட்டதாக ஆகும். அதற்கு வேண்டி வேறு

பிரயத்தினம் எதையும் சாஸ்திரம் செய்யவில்லை. ஆகவே எவனொருவன் உயர்வுதாழ்வை விடுத்து அத்வைதமாயும், ஸத்யமாயும், ஞானமாயும், அனந்தமாயுமுள்ள பிரும்மமாகவே நானிருக்கிறேன் என அறிகின்றானோ அத்தகைய பிரும்ம வித்தானவன் திருஷ்டமாயும், அதிருஷ்டமாயுமுள்ள விஷயசமுதாய ரூபமான இந்த லோகத்தினின்றும் (அதாவது: ஸகல கர்ம பலத்தினின்றும்( என்பதாம். **प्रेत्य**—நிரபேக்ஷனாகவாகி (அதாவது: விரக்தனாகி என்பதாம்) இதுவரை சொல்லப்பட்ட அன்னமயாத்மாவை உபஸங்கிரமிக்கின்றானோ, அதாவது: ஸர்வகர்மபலனான விஷயசமூஹத்தை அன்னமயனான பிண்டாத்மாவை விடவேறாகப் பார்க்கின்றானில்லையோ, ஸர்வஸ்தூல பூதத்தையும் அன்னமயாத்மாவாகவே பார்க்கின்றானோ என்பதாம். இவ்விதமே ஸர்வான்னமயாத்மாவிலும் கலந்து நிற்கின்றவனும் சூத்ராத்மாவுடன் ஒன்றாக ஆனவனுமான ப்ராணமயனையும், அதுபோலவே இந்த மனோமயனையும், விக்ஞானமயனையும், ஆனந்தமயனையும், உபஸங்க்ரமிக்கிறானோ, அப்பொழுது அவன் அதிருச்யமாயும், அனாத்ம்யமாயும், அநிருக்தமாயும், அநிலயனமாயும், இருக்கின்ற ஆத்மாவினிடத்தில் அபயமான நிலையை யடைகின்றான்.

உபஸங்க்ரமண விசாரம்.

**एवंवित्**—என்று சொல்லப்பட்டவன் யார்? எவ்விதம் ஸங்கிரமிக்கிறான். அதாவது: ஏவம்வித்தின் ஸ்வரூபம்யாது, ஸங்க்ரமணத்தின் ஸ்வரூபம் யாது என்பதாம். ஸங்க்ரமண கர்த்தாவானவன் பரமாத்மாவை விடவேறாகப் பிரிந்தவனா? அல்லது பரமாத்மாவே தானா? என்பதாம். இவ்விதம் சங்கிப்பதன் பயன் யாது எனின்? கூறுவாம். பரமாத்மாவைவிட வேறாக இருப்பானயின் **'तत्सृष्ट्वा तदेवानुप्राविशत्' 'अन्योऽसावन्योऽहमस्मीति न सवेद' 'एकमेवाद्वितीयम्' 'तत्त्वमसि'** முதலிய ஏகத்வ போதகசுருதிகளுக்கு விரோதம்வரும். இதற்கு வேண்டி பரமாத்மாவேதான் என்று சொன்னாலோ **आनन्दमयमात्मानमुपसंक्रामति** என்றதாற் சொல்லிய *கர்மகர்த்திருத்வம் ஸம்பவிக்காது. அதுடன் ஜீவாத்மாவுக்கும்

* இங்கு उपसंक्रामति என்றதற்குப் பிராப்தி எனப்பொருள் கொண்டு இவ்விதம் ஆசங்கிக்கப்படுகின்றது.

பரமாத்மாவுக்கும் அபேதம் சொல்லும் பக்ஷத்தில் ஜீவனுக்குப் பரமாத்மாவிடத்தில் அடக்கம் சொல்லப்படவேண்டும். அல்லது பரமாத்மாவுக்கு ஜீவனிடத்தில் அடக்கம் சொல்லப்படவேண்டும். இவ்விரண்டிற்குள் முதலாவது சொன்னது ஸம்பவிக்காது. பரமாத்மாவைவிட ஜீவனொருவன் தனிமையில் இல்லை என்றாகிவிடுவதிலிருந்தும், அசேதனபதார்த்தங்களுக்கு ஸம்ஸாரித்வம் சொல்லமுடியாததைக்கொண்டும் அநுபவத்திற் காணப்படும் ஸம்ஸாரித்வம் பரமாத்மாவுக்கே சொல்லவேண்டிவரும். பரமாத்மாவுக்கு ஜீவனிடத்திலடக்கம் சொல்லுதலென்ற இரண்டாவது பக்ஷத்திலும் ஜீவநியந்தாவாக சுருதிப்ரசித்தமான பரமாத்மா தனியில் இல்லை யென்று வரும். ஆகவே எந்தப்படி பார்த்த போதிலும் விலக்கமுடியாத தோஷமே வருகின்றது. ஆகவே இந்த ஸங்க்ரமணத்தைப் பற்றிய சிந்தையே (விசாரமே) அநுவச்யமானது என்று ஏற்படும்.

இதுவரை கூறிய இரண்டு பக்ஷங்களுள் யாதானுமொன்றில் தோஷமில்லாவிடினும், இரண்டு பக்ஷங்களைக் காட்டிலும் ஜீவேசுவரர்களுக்கு பேதமும் அபேதமும் வாஸ்தவமானது என்று கூறும் பாஸ்கரர் முதலியோரின் 3-வது மதம் ஒன்று எவ்வித தோஷமும் அற்றதாயிருப்பினும் அதுவே சாஸ்திரார்த்தமாகவாகுமாதலால் நிச்சிதமான சாஸ்திரார்த்த விஷயத்தில் திரும்பவும் விசாரஞ் செய்வது வீணேயாகும் அன்றோ எனின்? அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் முற்கூறிய பக்ஷங்களுள் எவ்வித தோஷமுமற்ற பக்ஷம் இன்னது தான் என நிர்த்தாரணஞ் செய்தல் வாயிலாக விசாரம் அவசியம் என்றே ஏற்படுகின்றது. அதாவது: முற்கூறிய இரண்டு பக்ஷங்களுள் ஒன்றோ அல்லது இவ்விரண்டையும் விட வேறான மூன்றாவது பக்ஷமோ எவ்வித தோஷமுமற்றதாக நிர்த்தாரணம் செய்யப்பட்டு விடின் விசாரமானது வீணென்றே ஏற்படும். அவ்வித நிர்தாஷ்டபக்ஷமானது இன்னதென நிர்த்தாரணம் செய்யப்படவில்லை யாதலால் தோஷமற்ற அந்தப் பக்ஷத்தை நிர்த்தாரணஞ் செய்தல் இந்த விசாரத்தாலேயே ஏற்படுவதால் இந்த விசாரமானது பயனுள்ளதாகவே தானாகிறது. சாஸ்திரார்த்த நிர்ணயம் செய்து கொடுப்பதுபற்றி

இந்த விசாரமானது பயனுள்ளதுதான் என்பதை ஒருவாறு ஒப்புகிறோம். ஆனால் இது வெரும் விசாரமே யொழிய சாஸ்திரார்த்த நிர்ணயத்தை நீ செய்யவில்லை யன்றோ எனின்? அவ்விதமானால் விசாரஞ் செய்து நிர்ணயஞ் செய்தல் தகா, என ஏதேனும் வேத வசனமுண்டா என்றால்? அவ்வித மொன்றுமில்லை. பின் ஏனையோ வெனில் இம்மாதிரியான நிர்துஷ்ட பக்ஷ நிர்த்தாரணஞ் செய்யும் விஷயத்தில் சத்துருக்கள் அதிகம் கிளம்புவர். அத்வைதம் என்பதோ வேதத்தின் கருத்துக்கிசைந்த பக்ஷமாகும். நீயோ பிரும்மாத்மைக்யவாதியாக விருக்கின்றாய். ஜீவபிரும்மபேதவாதிகளும், வேதத்தை நம்பாதவர்களுமான, சத்துருக்கள் பலர் உனக்கிருக்கின்றனர். ஆனதுபற்றியே தான் நீ சாஸ்திரார்த்த நிர்ணயத்தை செய்யப் போவதில்லை என்ற ஆசங்கை எனக்குண்டாகின்றது எனலாம். அப்படியானால் ஏகத்வவாதியாகவும், பேதவாதிகளான வெகுசத்துக்களை யுடையவனாகவும் யாது காரணம்பற்றி என்னை நீ சொல்லுகின்றனையோ இதுவே எனக்கு க்ஷேமத்தைத் தரக்கூடியது. அதாவது:—நிர்ணயஞ் செய்வதில் சாமர்த்தியம் எனக்குண்டென்பதை சூசிப்பிக்கக்கூடியது என்பதாம். ஆகவே யாவரையும் ஜயிக்கின்றேன், சாஸ்திரார்த்த விசாரத்தை ஆரம்பம் செய்கின்றேன். அதாவது:—வாதிகளின் விருத்தாபிப்பிராயத்தால் ஆத்மைகத்வ விஷயத்தில் சந்தேஹ முண்டாவதாலும், ஆத்மைகத்வ நிர்ணயஞ் செய்வதால் மோக்ஷபலன் உண்டாகுமாதலாலும், விஷயம், பிரயோஜனம் இவையுள்ளதும், ஆத்மதத்வ கோசரமானதுமான விசாரத்தை நான் தொடங்குகிறேன் என்பதாம். (இதுவரை கூறியதிலிருந்து ஜீவேசுவர பேதம் கூறும் பக்ஷமும், ஜீவேச்வரர்களுக்கு பேதம் அபேதம் இரண்டையும் கூறும் பக்ஷமும், சித்தாந்தி சொல்லும் ஜீவேச்வர அபேதபக்ஷமும் ஆகிய 3 பக்ஷங்களுள் முன்னர் கூறிய பேதவாதிகளும், பேதாபேதவாதிகளும், ஆகிய இருவரும் அபேதவாதியான சித்தாந்தியினிடம் தோஷம் கூறுவதாக ஏற்படுகிறது. இவ்விதம் கூறப்படும் தோஷத்தை முறையே போக்க வேண்டி சித்தாந்தி முதன் முதலில் தனது சித்தாந்தத்தை சாதிக்கிறார்). ஜீவப்ரும்மங்களுக்கு உண்மையில் பேதங்கிடையா.

ஏனெனில் ஜீவப்பிரும்ம பேதத்தை உண்மையெனக் கூறும் பிரமாண மில்லாதிருத்தலே அதன்காரணமாகும் என்க.

சங்கை—ஜீவப்பிரும்ம அபேதத்தைச் சொல்லும் பக்ஷத்தில் பரப்பிரும்மத்திற்கே ஜீவபாவமோ, பரமாத்மா தனியாயில்லையென்றோ வந்து விடலாம் அன்றோ ? எனின்.

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை ஏனெனில் கூறுவாம். சுத்த சிதாத்மாக்களுக்கு உண்மையில் ஏகத்வமிருந்த போதிலும் புத்யுபஹிதனான சித்தாத்மா ஜீவனென்றும் புத்திக்கு காரணமாக வான அவித்யோபஹிதமான சிதாத்மா பரமேசுவரன் என்றும் ஜீவேசபேதம் சொல்லப்படுவதால் ஸம்ஸாரித்வம் ஜீவனுக்கும், அஸம்ஸாரித்வம் ஈசுவரனுக்கும் ஏற்பட்டு விடுவதிலிருந்து முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை. இவ்விதமே **कार्योपाधिरयं जीवः कारणोपाधिरीश्वरः।** என்றதால் சுருதியும் உபதேசித்திருக்கிறது. இவ்விதம் கூறியதினின்றும், "நான் ஈசுவரனன்று" என ப்ரத்யக்ஷத்தில் ஜீவேசபேதம் தோன்றுவதைக் கொண்டும், சுக துக்காதி வைசித்ர்யத்தைக் கொண்டும், ஜீவேசபேதத்தை நிலை நாட்டிவிடுவதாக எண்ணுவது பகற்கனவே யாகும் என உபதேசிக்கப்பட்டது. ஏனெனில் முற்கூறியபடி உபாதிமூலம் கிடைத்த பேதத்தைக் கொண்டே பிரத்யக்ஷாதிகளுக்கு உபபத்தி (பொருத்தமாயிருத்தல்) சொல்லக் கூடியதாயிருக்கும் பொழுது உண்மையான பேதத்தை சாதிக்கும் விஷயத்தில் பிரத்யக்ஷாதிகளுக்குச் சாமர்த்தியமே கிடையாதென்பதும் பெறப்பட்டது. ஆகவே ஜீவேசுவரர்களுக்கு பேதமும், அபேதமும் உண்மையானதே என்று கூறும் பாஸ்கராதிகளின் பக்ஷமும் மறுக்கப்பட்டு விட்டது. ஏனெனில் ஒரே இடத்தில் ஒரே சமயத்தில் உண்மையாகவே பேதம், அபேதம் இரண்டும் இருக்க முடியாதிருத்தலே அதன் காரணமாகும். ஆகவே ஜீவன் உண்மையில் பரமாத்மாவைவிட வேறுபட்டவனன்று. "**अन्योसौ**" என்று பேத திருஷ்டியை சுருதி நிந்தித்திருப்பதுடன் "**एकमेवाद्वितीयम् तत्त्वमसि**" என்ற சுருதி வாக்கியங்கள் அபேதத்தையு முபதேசித்திருக்கின்றன. ஆகவே **एवं वित्** பரமாத்ம ஸ்வரூபமேயாவன். பரமாத்ம பாவமே இங்கு விவக்ஷிக்கப்பட் டிருக்கிறது. அதாவது: **ब्रह्म**

विदाप्नोति परम् என்றதால் பரமாத்ம க்ஞானத்தால் பரமாத்ம பாவம் இங்கு கூறப்பட்டிருக்கிறது. அன்னியமா யுள்ளதற்கு அன்னியரூபாபத்தியானது பொருத்தமுள்ளதாக வாகாதன்றோ என்பதாம்.

சங்கை—பிரும்மத்திற்கு பிரும்மபாவாபத்தியானது அயுக்மாகவே தானாகும் எனின் ?

உத்தரம்—அவ்விதஞ் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் பிரும்மஸ்வரூபமாகவே இருக்கும் பிரும்மவித்துக்கு பிரும்மபாவாபத்தியானது முக்கியமானதன்று தானாயினும், அவ்வித்யாகிருதமான யாதொரு அப்பிரும்மாத்மபாவமுண்டோ அதைப்போக்குவதே தான் புருஷார்த்தமாகின்றது என்பதாம். பிரும்மவித்தையினால் யாதொரு ஸ்வாத்ம ப்ராப்தியானது உபதேசிக்கப்படுகின்றதோ அந்த ஸ்வாத்மப்ராப்தியானது அவித்யாதிகளாற் செய்யப்பட்ட அன்னாதி விசேஷாத்மாவுக்கு ஆத்மாவாக அத்யாரோபிதமான அனாத்மாவின் நிவிருத்தியையேபயனாகவுடையது.

சங்கை—தேவதத்தனுக்குக் கிராமாதிப்பிராப்திபோலவே இங்கும் முக்கியமான பிராப்தி சொல்லுவதை விடுத்து பலவாக்கியத்திற்கு முக்கியமில்லாத ப்ராப்தி அர்த்தகத்துவம் சொல்லுவதின் காரணம் யாது எனின் ?

உத்தரம்—ब्रह्मवित् என்றதால் வித்யையை (க்ஞானத்தை) மட்டுமே சாஸ்திர முபதேசித்திருப்பதால் அவித்யாநிவிருத்திதான் பரப்ராப்தி என்பது பெறப்படுகின்றது. அவித்யாநிவிருத்தியே வித்யையின் காரியம் என்பது அனுபவத்திற் காணப்படுகின்றது. அத்தகைய வித்யைமட்டுமே ஆத்மப்ராப்தியில் சாதனமாக இங்கு உபதேசிக்கப்படுகின்றது.

சங்கை—"य एवं वेद" என்றவிடத்தில் போலவே ब्रह्मविदाप्नोति परम् என்ற விடத்திலும் वित् என்றபதத்திற்கு வித்யையின் ஆவிருத்தி ரூபமான உபாஸனாவாசித்வம் சொல்லலாமாதலால், ஞானமாத்திரோபதேசத்தை மட்டும் அந்த वित् என்ற பதம் சொல்லுகிறது என்பது எவ்விதம் பொருந்தும் எனின் ?

உத்தரம்—இங்குள்ள वित् என்றதற்கு உபாஸனை என்று பொருள் கொள்ளும் பக்ஷத்தில் லக்ஷணையை யாசிரயிக்க வேண்டிவரும். ஆதலால் முக்கியார்த்தமான ஞானம் மட்டும்தான் அதன்பொருள் என்று கொள்ளப்பட்டது. य एवं वेद என்ற விடத்திலோ வெனில் यां देवतामुपास्से எனதொடக்கத்திற் கூறியிருக்கும் லிங்கத்தையொட்டி லக்ஷணையாசிரயிக்கப் படுகின்றது. ஆதலால் वित् என்றதற்கு ஞானம் என்ற முக்கியார்த்தம் கொள்ளுவதுதான் ஆவசியமாகிறது.

சங்கை—அங்ஙனமாயின் ब्रह्मविदाप्नोतिपरम् என்ற உபதேசமானது मार्गविदाप्नोति ग्रामम् என்ற உபதேசதுல்லியமாக இருப்பதால் அங்கு மார்க்கத்தை யறிந்தவனுக்கு கிரியாத்வாரா கிராமப்ராப்தியையும், அடையத்தகுந்ததான கிராமமானது மார்க்கத்தை யறிந்தவனை போகின்றவனைக்காட்டிலும் வேறாயிருப்பதையும் காண்பதுபோலவே இங்கும் பிரும்ம வித்யையுள்ளவனுக்கு வித்யையை ஆவிருத்தி செய்தல் என்ற உபாஸ்தித்வாராவாக் பரப்ராப்தியும் ப்ராப்தவ்யமான (அடையவேண்டியதான) பிரும்மத்திற்கு பிரும்மவித்தைவிட பேதமும் ஸம்பவிக்கலாம். ஆகவே 'அவித்யா நிவிருத்திரூபம் பரப்ராப்தி' என்று கூறினது பொருந்தாது. உபாஸ்தியானது அவித்யையைப் போக்கக் கூடியதாக கண்டதுமில்லை. கிராமமே கந்தாவாக (போகின்றவனாக) ஆவதுமில்லை யன்றோ! எனின்?

உத்தரம் — அவ்விதஞ் சொல்லுவதற்கில்லை. கிராமத்தை யறிந்தவன் கிராமத்தையடைகிறான் என்பதற்கும், பிரும்மவித் பிரும்மத்தை யடைகிறான், என்பதற்கும் உபதேசமுறையில் வேற்றுமையிருக்கின்றது. அதாவது:—அவ்விடத்தில் கிராமவிஷயமான ஞானம் உபதேசிக்கப்படவில்லை. கிராமப் பிராப்திக் குறிய மார்க்க விஷயமான ஞானமே உபதேசிக்கப்படுகின்றது. இவ்விடத்திலோ அடையவேண்டியதான யாதொரு பிரும்ம முண்டோ அதன் விஷயமான ஞானம் ब्रह्मवित् என்றதாலுபதேசிக்கப்படுகின்றதே யொழிய அதற்கு வேறாக உபாஸனையின் ஆவிருத்திரூபமான வேறுஸாதனமோ, வேறுவிதமான ஞானமோ உபதேசிக்கப்படவில்லை. वेद=என்றதால் உபாஸனா ரூப

மான ஸாதனந்தரம் சொல்லப்படும் என்றாலோ, முக்யார்த்தத்தை விடுத்து அமுக்கியமான லக்ஷணை கற்பிக்கவேண்டி வரும் என்பதாம்.

சங்கை—ब्रह्मविदाप्नोति परम् என்றவிடத்தில் வித்யாமாத்திர (க்ஞானமாத்திர) உபதேசமிருந்த போதிலும், ஞானம் மட்டுமே பரப்ராப்தி ஸாதனமாக வாவதில்லை. பின்னையோவெனில் ஸம்ஹிதோபனிஷத்திற் சொல்லப்பட்ட கர்மஞானங்களுடன் சேர்ந்த பிரும்மக்ஞானமே பரப்ராப்தி ஸாதனமாகும். ஆகவே வித்யை (க்ஞானம்) மட்டுமே உபதேசிக்கப்பட்டது என்று சொன்னது சித்திக்காது எனின்.

உத்தரம்—அவ்விதம் சொல்லவியலாது. மோக்ஷமானது நித்தியமானதாக (ஒரு ஸாதனத்தா லுண்டுபண்ணப்படாததாக) வுள்ளது என்றதால் ஞானகர்ம சமுச்சயமானது அவ்விடத்திலேயே மறுக்கப்பட் டிருக்கிறது. மேலும், तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् என்ற சுருதியும் தேஹாதி ஸங்காதரூபமான காரியத்தில் ஸாக்ஷியாகப் பிரகாசிக்கின்ற ப்ரத்யகாத்மா பிரும்மஸ்வரூபன் என்பதைத் தெரிவிக்கின்றது. மேலும், சுருதியில் अभयं प्रतिष्ठां विन्दते என்றதால் அபயப்ரதிஷ்டை சொல்லியிருப்பதைக் கொண்டும் एवं वित् பரன் என்றே ஏற்படுகின்றது. அதாவது:—ஞானமுள்ளவன் தன்னைவிட வேறொன்றைப் பார்க்காவிடில் அப்பொழுது அபயம் ப்ரதிஷ்டாம் விந்ததே என்பது ஏற்படும். ஏனெனில் பயஹேதுவான வேறு பதார்த்த மில்லாதிருத்தலே அதன் காரணமாகும். ஸ்வஸ்வரூபத்திற்கு வேறான வஸ்துவானது அவித்யாமூல மேற்படுவதால் வித்யையி (ஞானத்தி) னால் அதை அவஸ்துவாகக் காண்கிறான் என்பது பொருந்தும். உலகில் திமிரம் என்ற ரோகமற்ற கண்ணினாற் பார்க்கப்படாமை என்பது யாதுண்டோ இதைத்தான் பிரமத்தாற் றோன்றும் இரண்டாவது சந்திரனுடைய அஸத்வம் (இல்லாமை) என்கிறோம்.

சங்கை—உலகில் திமிரம் என்ற ரோகமற்ற கண்ணினால் இரண்டாவது சந்திரன் எவ்விதம் பார்க்கப்படுவதில்லையோ, இவ்விதம் த்வைதமானது வித்வானால் (ஆத்ம ஞானமுள்ளவனால்)

பார்க்கப்படுவதில்லை என்பது கிடையாது. வித்வானுக்கும் த்வைதபதார்த்தானுபவம் இருக்கவே தானிருக்கிறது. அவ்விதமில்லாவிடில் சாஸ்திரார்த்த உபதேசம் முதலியவற்றில் பிரவிருத்தியேற்படுவதற்கே இடமில்லை யன்றோ எனின் ?

உத்தரம்—அவ்விதம் சொல்லுவதற்கில்லை. வியவஹாரகாலத்தில் வித்வானுக்கு த்வைதபதார்த்தத் தோற்றமிருந்த போதிலும், ஸமாதிகாலத்தில் அவற்றின் தோற்றமிருப்பதில்லை. வித்வான் அவித்வான் இருவர்க்கும் ஸுஷுப்திகாலத்தில் த்வைதபதார்த்தானுபவமிருப்பதில்லை என்ற வேற்றுமை யிருப்பதால் முற்சொன்ன ஆசங்கைக்கிடமில்லை.

சங்கை—ஸுஷுப்தியில் த்வைதத்தோற்றமில்லாமையானது த்வைதத்தின் இல்லாமையாலன்று. பின்னேயோ வெனில் லக்ஷியத்தில் (குறியில்) பாணத்தைப் பிரயோகஞ் செய்பவன் அம்பிற் பதிந்த மனமுள்ளவனுயிருத்தல் காரணமாய் அம்பைவிட மற்றொன்றை எவ்விதம் பார்ப்பதில்லையோ அவ்விதமே ஸுஷுப்தியிலோ, சமாதியிலோ உண்மையில் த்வைதமிருப்பினும் வேறிடத்தில் மனப்பற்றை யடைந்திருப்பது பற்றி த்வைதத்தை இவன் பார்ப்பதில்லை என்று ஏன் சொல்லக்கூடாது எனின்?

உத்தரம்—அதனுண்மை இங்கு கூறுவாம். பாணப்பிரயோகம் செய்பவனுக்கு ஸர்வத்தையும் அறியாதிருத்தல் என்பது கிடையாது. தன்னைவிட வேருன அம்பைப்பற்றிய அறிவு இருப்பதைக் காண்கிறோம். ஸுஷுப்தி, சமாதிகளிலோ தன்னைவிட வேருன எந்த பதார்த்தத்தின் தோற்றமும் இருப்பதில்லை. ஆகவே இரண்டாவது சந்திரனைப் போலவே த்வைதபதார்த்தத்தை ஒருபொழுதும் கிரஹிக்காததால் த்வைதமானது இல்லையென்றே தான் சொல்லவேண்டும்.

சங்கை—ஸுஷுப்தி ஸமாதிகளில் தோற்றப்படாததுபற்றி த்வைதத்தை இல்லை யென்று சொல்லுவோமானல் ஜாக்கிரம் முதலியவற்றில் தோற்றத்தை யடைவதைக் கொண்டு த்வைதம் நிலைத்துள்ளதென்றே ஏன் சொல்லக்கூடாது எனின் ?

உத்தரம்—ஜாக்ரம், ஸ்வப்னம் இரண்டும் அவித்யைமூல மேற்படுவது பற்றி அவற்றில் வேறான த்வைதத் தோற்றம் யாதுண்டோ அதை அவித்யையா லேற்பட்டது என்கிறோம். ஆகவே அவித்யை யில்லாவிடில் அவித்யா மூலமேற்பட்ட அதுவும் இல்லாமலே தான் ஆகிவிடுகின்றது ஆதலால் முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை.

சங்கை—ஸுஷுப்தியில் த்வைதத் தோற்றமில்லா திருத்தலானது அவித்யையாலேயே ஏற்படுவதாக ஏன் சொல்லக்கூடாது எனின்?

உத்தரம்—ஸுஷுப்த்யாதிகளில் த்வைதத்தோற்றமில்லா திருத்தல் அதன் இயற்கை யாலுண்டாவதேயன்றி வேறொன்றாலுண்டாவதில்லை. அதாவது: லோகத்தில் ப்ரஸித்தமான மண் முதலிய த்ரவியமானது குயவன் முதலியோரால் விகாரமுள்ளதாகச் செய்யப்படாதிருக்குங்கால் எவ்வித விகாரமுமற்றதாய் தனது சொந்த ரூபத்துடன் இருப்பதை நாம் அனுபவத்திற் காண்கின்றோம். ஆகவே எந்தவஸ்துவுக்கும் விகாரம் (மாருதல்) அற்றிருத்தல் இயர்க்கையென்றும், மாருதல் வேறொன்றினாலேற்படுகின்றதென்றும் தெளிவாகின்றது. மாருதல் என்பது வஸ்துவின் தத்துவமாகா. தன்னை விட வேறான ஒன்றை முன்னிட்டு அம்மாருதலுண்டாவதே அதன்காரணமாகும். வஸ்துவின் உண்மையான (மாருதலற்ற) நிலையானது வேறொன்றின் உதவியாலேற்படக் கூடியதன்று. ஆகவே ஜகத்காரணமான பிரும்மமானது பிறவொன்றை யெதிர்பாராத ஸ்வரூபமுள்ளதானதுபற்றி மிருத்முதலிய த்ரவியம் போல ஸத்யமாகவே ஆகின்றது. மிருத் முதலியவற்றின் மாருதலான குடாதிகள் போல பிரும்மத்தின் விகாரமாகத்தோன்றும் த்வைதபதார்த்தமும் அந்ருதமாகவே தானாகின்றது. விகாரவடிவமான ஜகத்தானது பிரும்மத்தின் விசேஷமெனப்படும். ஜாக்ரம், ஸ்வப்னம் முதலியவற்றில் அறியப்படுவது தான் விசேஷம் என்பதின் பொருளாகும். ஆகவே எதனுடைய எந்த ஸ்வரூபமானது பிறவொன்றை எதிர்பாராது ஸித்திக்கின்றதோ அது தான் அதனுடைய உண்மையான தத்துவம். எதுபிறவொன்றை எதிர்பார்த்து உண்டாகுமோ

அது அதனுடைய தத்துவமாகாது. பிறவொன்றில்லாவிடில் இதுவும் விலகிவிடுவதே அதன் காரணமாகும். ஆகவே ஜாக்கிரம் ஸ்வப்னம் இவற்றில் அநுபவிக்கப்படும் விசேஷமானது (விக்ரியையானது) ஏதோ சிலஸமயத்தில் தோற்றத்தை யடைவது பற்றி எவ்விதம் அவித்யையாலேற்பட்டதாக வாகின்றதோ, அவ்விதமே ஸுஷுப்திகாலத்தில் அத்தகைய ஸுஷுப்தி முதலியவற்றிர்க்கும் ஸாதகமாகத் தோன்றும் ஸத்தாயும், அத்விதீயமாயுமுள்ள வஸ்துவானது அவித்யையா லேற்படக்கூடியதன்று என்கிறோம். பிறவொன்றை எதிர்பாராத ஸ்வரூபமுள்ளதாயிருந்தலே அதன் காரணம் என்கிறோம். ஆகவே பயஹேது வான இரண்டாவது வஸ்துவானது உண்மையிலில்லாததுபற்றி **अभयं प्रतिष्ठां विन्दते** என்று கூறியது மிக்கப்பொருத்தமுள்ளதென்றே தானேற்பட்டது.

பிறமதத்தில் அபயப்பிரதிஷ்டை ஸம்பவிக்காது என்பது.

எவர்கள் மதத்தில் ஈசுவரன் ஜீவனைவிட வேறு என்றும், காரியமான ஜகத்தானது இவ்விருவரையும் விடவேறு என்றும் சொல்லப்படுகின்றதோ, அவர்கள் மதப்படி பயநிவிருத்தியுண்டாவதற்கே இடமில்லை, என்கிறோம். பயமானது பிறவொன்றாலேற்படுவதைக் காண்கிறோம். உலகில் ஸத்தானது (நிலைத்தஸ்வரூபமுள்ளது) எதுவோ அதற்கு ஆத்மநாசம் ஒருபொழுதும் ஸம்பவிப்பதில்லை. இதுபோலவே அஸத்தானது (நிலைத்தஸ்வரூபமற்றது) எதுவோ அதற்கு ஒருபொழுதும் ஸ்வரூபலாபமுண்டாவது மில்லை. ஆகவே ஜீவனை விடவேறாக ஈசுவராதியானது உண்மையாக இவர்கள் மதப்படி இருப்பதால் பயநிவிருத்திக்கே இடமில்லாமலாகிவிடுகிறது.

* சங்கை—ஜீவனை விட வேறான ஈசுவரன் பிராணிகர்மங்களை எதிர்பார்த்தே பயஹேதுவாக வாகிறான் என நாங்கள் சொல்லுகிறோம். வித்வத்ஜீவனுக்கோ எவ்விதகர்மும் இல்லாதபடியால் பயமுண்டாவதற்கிடமில்லை யாதலால் அபய ப்ரதிஷ்டையுண்டாகக் கூடுமன்றோ எனின்?

* இங்குள்ளசங்கை அத்வைதி வேறுமத விஷயத்திற் கொள்ளுவதாகும் என்று அறியவேண்டும்.

* உத்தரம்—ஈசுவரனால் அபேக்ஷிக்கப்படுவதாக ஒப்பப்படும் தர்மாதிகளுக்கும் இதே கதிதானுண்டாகின்றது. அதாவது:—நித்யமாகவோ அநித்யமாகவோ உள்ள யாதொரு தர்மாதிரூபமான நிமித்தத்தை யபேக்ஷித்து ஜீவனைவிட வேறான பிரும்மம் பயகாரணமாக ஆகுமோ அந்த தர்மாதிரூப நிமித்தமும் ஈசுவரன் போலவே பரமார்த்தமாக வாவதுபற்றி இவனுக்கு பய நிவிருத்தி யுண்டாவதற்கிடமில்லை. உண்மையில் நாசமற்றதாக ஒப்பப்பட்ட தர்மாதிகளுக்கு ஸ்வரூப நாசஞ் சொல்லும் பக்ஷத்தில் ஸத் அஸத்தாகவும், அஸத் ஸத்தாகவும், ஆகிவிடுவதிலிருந்து உனது மதத்தில் எதிலும் அவநம்பிக்கையே மேலிடும். ஜீவப்பிரும்ம ஐக்கியம் சொல்லும் எங்கள் பக்ஷத்திலோ வெனில் அவித்யா நிமித்தமாயுண்டான ஜீவேசுவர விபாகரூப ஸம்ஸாரமானது அவித்யையாலுண்டாவது பற்றி அவித்யை விலகினதும் இதுவும் விலகிவிடுமாதலால் எவ்விததோஷத்திற்கு மிடமில்லை. திமிரம் என்ற நேத்திர ரோகமுள்ளவனால் பார்க்கப்பட்ட இரண்டாவது சந்திரனுக்கு ஸ்வரூபலாபமாவது, நாசமாவது ஒருபொழுதும் சொல்லமுடியாதன்றோ! ஆகவே சந்திரனிற்றோன்றும் இருமைபோல அநிர்வசனீயமானதும், ஸ்தூலஸூக்ஷ்ம ரூபமாக அநாதிகாலந்தொடங்கி தொடர்ச்சியாக வருவதுமான ஸம்ஸாரத்திற்கு அவித்யாதியாகிற காரணபலத்தைக்கொண்டு சிருஷ்டியின் ஆதியில் ஸ்வரூபலாபத்தை ஒருவாறு ஒப்பினபோதிலும், அஸத்வஸ்துவுக்கு ஸத்வமில்லை, அஸத்துக்கு உத்பத்தியை ஒப்புவதுமில்லை, உத்பன்னமான ஸம்ஸாரத்திற்கு ஆத்மவஸ்துபோன்று ஸத்வத்தை ஒப்புவதுமில்லை. ஆகவே வித்யையின் பலத்தால் ஸம்ஸாரத்திற்கு அஸத்வம் வந்தபோதிலும் ஸத்துக்கு அஸத்தாக ஆகுதல் என்ற ஸ்வரூப மாறுபாடானது ஒருபொழுதும் ஏற்படாது. ஸம்ஸாரத்திற்கு ஸத்வத்தை ஒப்பாதிருத்தலே அதன்காரணமாகும் என்பதாம்.

சங்கை—வித்யை, அவித்யை இவ்விரண்டும் ஆத்மதர்மங்களென்றே ஒப்பவேண்டும். வேறுதர்மி ஒன்று தனியாய் காணப்

---

* இங்குள்ள உத்தரம் வேறு மதக்காரர் கூறுவதாகும் என்று கொள்ளவும்.

படாதிருத்தலே அதன் காரணமாகும். ஆகவே ஸம்ஸாரகாரண பூதமான அவித்யையை ஆத்மதர்மமாக எவ்விதம் ஒப்பவேண்டி வருகிறதோ, அவ்விதமே அவித்யையை நிவிருத்தி செய்கின்ற தான வித்யையையும், தன்னால் போக்கப்படும் அவித்யையுள்ள விடத்தில் இருக்கவேண்டிய ஆவச்யகத்தையொட்டி ஆத்மதர்ம மென்றே தான் சொல்ல வேண்டிவரும். ஆகவே அவித்தியாதி தர்மமுள்ளவனை புருஷனுடன் நிர்தர்மகமான பிரும்மத்திற்கு ஐக்கியம் சொல்லும் பக்ஷம் எவ்விதம் பொருந்தும் எனின்?

உத்தரம்—தர்மாதர்மங்களை ஆத்மதர்மங்களாக கற்பிக்க வேண்டி வரும் என்று கூறுகின்றாயா? அல்லது உண்மையிலேயே அவை ஆத்மதர்மங்கள் தான் என்கின்றாயா? என்று கேட்கிறோம். அவற்றுள் கற்பிக்கவேண்டி வரும் என்று கூறும் முதற்பக்ஷத்தில் ஜீவபரர்களுக்கு ஐக்கியங்கூறுவதில் யாதும் தடையில்லை. தர்மம், வித்யை, அவித்யை இவைகள் திருச்யமானதுபற்றி அவைகளை உண்மையில் திருக்ரூபமான ஆத்மாவினுடைய தர்மங்கள் என சொல்ல முடியாது. அதாவது: ரூபாதிகள் எப்படி திருச்யங்க ளாகக் காணப்படுகின்றனவோ, இப்படியே மனத்திலிருக்கும் விவேகம், அவிவேகம் இவைகளும் திருச்யங்களாகவே தான் காணப்படுகின்றன. பிரத்யக்ஷமாக இருக்கின்ற (திருச்யமாக இருக்கின்ற) ரூபமானது திரஷ்டாவின் தர்மமாக வாகுமோ! ஒருபொழுதும் ஆகாது. இதுபோல அவித்யையும் திருச்ய மென்றே நிரூபிக்கப் படுகின்றது. அதாவது:—குரு சிஷ்யனைப் பார்த்து "நீ ஆத்மதத்துவத்தை அறிவாயா?" எனக் கேட்க் கும் பொழுது சிஷ்யன் "நான் ஆத்மதத்வ விஷயத்தில் மூடனாக வே இருக்கிறேன். எனது ஸ்வரூப பூதஞானமானது பிரித்து அறியப்படவில்லை" என்கிறான். இங்கு ஸ்வானுபவ சித்தமான மூலா வித்யையானது சிஷ்யனால் பிரித்து நிரூபிக்கப்படுகின்றது. அவ்விதமே வித்யோபதேசத்தில் பிரவிருத்தித்தவனை குருவி னால் முதலில் தனது வித்யையானது இத்தகையது என அனுப விக்கப்படுகின்றது. பிறகு அனுபவசித்தமான அந்த வித்யையை சிஷ்யர்களுக்கு உபதேசிக்கிறான். சிஷ்யர்களும் அதைப் பெற்று உபபத்தி (யுக்தி) களால் நிர்த்தாரணஞ் செய்து கொள்ளுகின்ற

னர். ஆகவே வித்யையோ, அவித்யையோ நாமரூபங்களான திருச்ய வகுப்பிற் சேர்ந்ததாகவே தானாகின்றது. நாமரூபங்களோ "नामरूपयोर्निर्वहिता ते यदन्तरा तद्ब्रह्म" என்ற சுருதி வசனத்தை யொட்டி அனாத்ம தர்மங்களென் றேற்படுகின்றன. அந்த நாமரூபங்களும் சூரியனிடத்தில் அஹோராத்ரங்கள் (இரவு பகல்கள்) போல கற்பிதங்களே யொழிய உண்மையிலிருக்கக் கூடினவைகளல்ல.

சங்கை—ஜீவப்பிரும்ம அபேதம் சொன்னால் "एतमानन्दमयमात्मानमुपसंक्रामति" என்றதால் அடையப்படும் கர்மாவும், அடைகின்றவனான கர்த்தாவும் ஒன்றுவதன் மூலம் ஒன்றே கர்த்தாவாகவும், கர்மாவாகவும் வருமாதலால் அவ்விதம் சொல்லுவது பொருத்தமுள்ளதாக வாகாதன்றோ எனின்?

உத்தரம் — அவ்விதம் சொல்லுவதற்கில்லை. ஏனெனில் இங்கு आनन्दमयम्=என கர்மாவாக (இரண்டாம் வேற்றுமையுள்ளதாக) கொள்ளப்பட்ட ஆனந்தமயன் பரமாத்மாவன்று என்பதை முன்னரே சொல்லியிருக்கிறோம். அத்துடன், இங்கு கூறிய ஸங்க்ரமணமானது ப்ராப்தியுமன்று. ஸங்க்ரமணத்திற்குப் ப்ராப்தி என்ற பொருள் பின்னர் மறுக்கப்படப்போகின்றது. ஆகவே பிரும்மாத்மைக்ய விக்ஞானத்தால் செய்யப்பட்ட பிரம (அக்ஞான) நிவிருத்தியே ஸங்க்ரமணசப்தத்தாற் சொல்லப்படுகின்றதே யொழிய அட்டைபோல ஒன்றைவிட்டு மற்றொன்றை யடைதல் என்ற பொருள் அதற்கில்லை. ஆகவே முன்னர் சொன்ன ஆசங்கைக்கிடமில்லை.

சங்கை — आनन्दमयमात्मानमुपसंक्रामति என்றதால் முக்கியமான ஸங்கிரமணமே (பிராப்தியே) இங்கு उपसंक्रामति என்றதாற் சொல்லப்படுகின்றது. ஆகவே அன்னமயத்திற் போலவே இங்கும் முக்கியமான பொருளே ஏன் கொள்ளக் கூடாது எனின்?

உத்தரம் — வெளியிலுள்ள புத்திரபாரியாதிரூபமானதும் போக ஸாதனமானதுமான இந்த லோகத்தினின்றும் விலகி அன்னமயாத்மாவை உபஸங்கிரமிக்கின்ற இவனுக்கு அட்டையானது ஒரு புல்லை விட்டுவேறொருபுல்லை அடைவது போன்ற ஸங்

கிரமணம் (பிராப்தி) ஆனது அனுபவத்திற் காணக்கிடைக்கவில்லை. ஆகவே அந்த பிரகரணத்திற் படிக்கப்பட்ட ஆனந்தமயனிடத்திற் சொல்லிய உபஸங்கிரமணமும் முக்கியமானதன்று என்றே ஏற்படுகின்றது. அத்துடன் பிரும்மவித்தானவன் சரீரத்திலேயே இருப்பதைக் காண்பதால் கூட்டில் பக்ஷி பிரவேசிப்பது போன்ற ஸங்கிரமணமும் சொல்ல முடியாமலாகி விடுகின்றது.

சங்கை—ஸம்சயவடிவமான விருத்தியுள்ள அந்தக்கரணம் மனோமயன் என்றும், நிஸ்சயவடிவமான விருத்தியுள்ள அந்தக்கரணம் விக்ஞானமயன் என்றும் சொல்லப்படும். ஆகவே ஜீவப்பிரும்மங்களுக்கு அபேதம் சொல்லப்பட்டபோதிலும் ஏவம்வித்தானப்ரத்யகாத்மாவுக்கு பரமாத்மாவைக்குறித்து பிரவேசாதிரூபமான ஸங்க்ரமணம் ஸம்பவிக்கலாம். மனோமயன், விக்ஞானமயன் இவர்களுக்கு தத்தமது விருத்திவாயிலாக வெளியிற் சென்று திரும்பவும் தன்னையே யடைதல் என்ற ஸங்கிரமணத்தை அனுபவத்திற் காண்கிறோம் அன்றோ எனின்?

உத்தரம்—அவ்விதமனுபவமில்லை. பின்னேயோவெனில் ஸம்சய நிஸ்சயரூபங்களான விருத்திகளே சக்ஷுராதிகள் வழியாக வெளியில் விஷயதேசத்திற் சென்று திரும்பவும் தமது ஆசிரயமான மனோவிக்ஞானங்களை வந்தடைதல் என்ற ஸங்க்ரமணத்தை அனுபவத்திற் காண்கின்றோமேயொழிய நேரில் மனோமய விக்ஞானமயங்களை வெளியிற் செல்லுவதையும் திரும்பவும் அவைகளே தமது ஸ்வரூப ப்ராப்தியென்ற ஸங்கிரமணத்தை யடைதலையும் நாம் அனுபவத்திற் காண்பதில்லை. அவ்விதம் ஸம்பவிக்கவும் முடியாது. தன்னையே தான் பிரவேசித்தல் என்ற பிரவேசாதி கிரியை ஸம்பவிக்க முடியாதிருத்தலே அதன் காரணமுமாகும். மேலும் மனோமயன் மனோமயனையும், விக்ஞானமயன் விக்ஞானமயனையும் அடைகிறான் என்று சொல்லுவது ப்ரக்ரம (தொடக்க)த்திற்கு விரோதமுமாகும். ஏனெனில் வேறாயுள்ள ஏவம் வித்தானவன் வேறாயுள்ள அன்னமயனை யடைகிறான் எனத்தொடங்கிவிட்டு மனோமயன் மனோமயனையும், விக்ஞானமயன் விக்ஞானமயனையும் அடைகிறான் என்று சொன்னால் அது தொடக்கத்திற்கு விரோதமாக வாகுமன்றோ. ஆனந்த

மயன் ஆனந்தமயனை யடைகிறான் என்று சொல்லுவதும் அது போலவே தான் விருத்தமாக (பொருத்த மில்லாததாக) வாகும். ஆகவே ஸங்க்ரமணம் என்றதற்கு ப்ராப்தி என்ற பொருள் பொருந்தாது. அதுபோல அன்னமயாதிகளுள் ஒருவன் மற்றொருவனை யடைகிறான் என்று சொல்லுவதும் பொருத்த மில்லாததாகவே தானாகும். * பரிசேஷ நியாயத்தை யொட்டி அன்னமயாதி ஆனந்தமயாநந்தமான ஆத்மாவைவிட வேறொன்றைக் கர்த்தாவாக வுடைய ஞானமாத்திரமே ஸங்க்ரமணம் என்றேற்படுகின்றது. ஸங்க்ரமணமானது ஞானமாத்திரமான விப்ரம நாசமாகும் பொழுது ஆனந்தமயத்திற்கு உள்ளிருப்பதும், ஸர்வாந்தரமானதும், ஆகாசாதி அன்னமயாந்த காரியத்தை ஸிருஷ்டித்து அதில் அனுப்பிரவேசஞ் செய்ததுமான பிரும்மத்திற்கு ஹிருதய குஹாஸம்பந்தத்தால் ஏற்பட்ட அன்னமயாதி அனாத்மாக்களிலுள்ள ஆத்மப்ரமமானது முறையே ஆத்மவிவேக ஞானோத்பத்தியினால் நாசத்தை யடைகின்றது. ஆகவே இத்தகைய அவித்யா விப்ரம நாசத்தில் ஸங்க்ரமணம் உபசார முறையாற் சொல்லப்படுகின்றதே யொழிய முக்கியமான ஸங்க்ரமணஞ் சொல்லப் படவில்லை. ஸர்வகதமான ஆத்மாவுக்கு முக்கியமான ஸங்க்ரமணஞ் சொல்லமுடியாதிருத்தலே அதன் காரணமாகும். சிதாத்மாவைவிட வேறான வஸ்து உண்மையிலில்லா திருத்தலாலுமே முக்கியமான ஸங்கிரமணம் ஸம்பவிப்பதற்கில்லை. தன்னையே

---

* प्रसक्तप्रतिषेधे अन्यत्राप्रसङ्गाच्छिष्यमाणे संप्रत्ययः परिशेषः என்பது பரிசேஷ நியாயமாகும். அதாவது: ஆனந்தமய ஸங்க்ரமணத்தில் அஹம் என்ற அனுபவத்தில் விஷயமானவன் எவனோ அவனே கர்த்தாவாவான். அவ்வித கர்த்திருத்வமானது அன்ன மயாதிகளிலும் பிரஸக்தமாகும். அன்னமயாதிகளும் அஹம் என்ற அனுபவ விஷயமாயிருத்தலே அதன் காரணமாகும். அன்னமயாதிகளில் ஸங்கிரமணம் நிஷேதிக்கப்படவே அஹம் என்ற அனுபவ விஷயமாக யில்லாத ஸ்தம்பாதிகளில் ஸங்க்ரமண கர்த்திருத்வம் ப்ரஸக்தமாகாமல் போகவே மீதமுள்ள ஏவம்வித்என ப்ரகிருதமான சிதாத்மாவினிடத்தில் புத்தியாகிற உபாதிஸம்பந்தத்தால் ஆனந்தமய ஸங்க்ரமண கர்த்திருத்வமானது இருக்கிறது என ப்ரமாணுபமான ஸம்ப்ரத்யமானது வருகிறது.

தான் ஸங்க்ரமிக்க முடியாதன்றோ! அட்டையானது தன்னையே தான் ஸங்க்ரமிப்பதில்லை யன்றோ! ஆகவே सत्यं ज्ञानमनन्तं ब्रह्म என்றதாற் சொல்லப்பட்ட ஆத்மஞானத்திற்கு வேண்டியே பஹுபவனம், ஸிருஷ்டி, ப்ரவேசம், ரஸலாபம், அபயம், ஸங்க்ரமணம் ஆகிய இவை ஸம்வியவஹார விஷயமான பிரும்மத்தினிடத்தில் கற்பிக்கப்படுகின்றதே யொழிய உண்மையில் நிர்விகல்பமான பிரும்மத்தினிடத்தில் ஒருவித விகல்பமும் ஸம்பவிப்பதற்கில்லை. அத்தகைய நிர்விகல்பமான ஆத்மாவை இம்முறையாக அறிந்து எதனிடமிருந்தும் பயத்தை யடையாது அபயப்ரதிஷ்டையை யடைகிறான் என்ற இந்த விஷயத்தில் இந்த மந்த்ரமு மிருக்கின்றது. எல்லா ஆனந்தவல்லியினுடையவும் அர்த்தத்தை சுருக்கமாக ப்ரகாசப்படுத்துவதற்குரிய இந்த மந்திரமிருக்கின்றது.

சங்கர பாஷ்யப்படி எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அனுவாகம்.

**(मन्त्रः) यतो वाचो निवर्तन्ते । अप्राप्य मनसा सह । आनन्दं ब्रह्मणो विद्वान् । न बिभेति कुतश्चनेति । एतꣳहवाव न तपति । किमहꣳसाधु नाकरवम् । किमहं पापमकरवमिति । स य एवं विद्वानेते आत्मानꣳस्पृणुते । उभे ह्येवैष एते आत्मानꣳस्पृणुते । य एवं वेद । इत्युपनिषत् ॥ १ ॥**

### इति नवमोऽनुवाकः ॥

(ப—ரை) **यतः**=நிர்விகல்பமாயும், இதுவரை சொல்லப்பட்ட ஸ்வரூபமுள்ளதாயும், அத்வயமாயும் இருக்கிற யாதொரு ஆத்மாவினிடமிருந்து **वाचः**=திரவ்யாதி ஸவிகல்பவஸ்து விஷயங்களான சப்தங்கள், இதுவும் ஓர்வஸ்துவாயிருத்தல் பற்றி நிர்விகல்பமாயும், அத்வயமாயு மிருக்கின்ற பிரும்மத்தினிடத்தில் அறிவுக்கு வேண்டி பிரயோகிப்பவர்களால் பிரயோகிக்கப்பட்டவைகளாய்க் கொண்டு **मनसा सह**=தன்து பொருளான விக்ஞானத்துடன் கூட

अप्राप्य=அவ்வஸ்துவைப் பிரகாசிப்பிக்காமலே निवर्तन्ते=நிவிருத்திக்கின்றனவோ அதாவது: தனது ஸாமர்த்தியத்தை இழக்கின்றனவோ [तम्=அத்தகைய] ब्रह्मण:=பிரும்மரூபமான आनन्दम्=ஆனந்தத்தை विद्वान्=முற்கூறிய முறைப்படி அறிந்தவன் कुतश्चन=எந்த நிமித்தத்தினின்றும் न बिभेति = பயத்தையடைவதில்லை. மேலும், अहम्=நான் साधु=நற்காரியத்தை किं नाकरवम्=ஏன் செய்யாது போனேன், अहम्=நான் पापम्=பாபத்தை किमकरवम्=ஏன் செய்தேன் इति=என்பதானது एतम्=இதுவரை சொல்லியபடி பிரும்மத்தை யறிந்தவனை न तपति ह्वाव=தபிக்கச்செய்வதில்லை. एवं विद्वान्=இவ்விதம் பிரும்மக்ஞானமுள்ளவன் य:=எவனோ स:=அவன் एते=இந்த புண்ணியபாபங்களை आत्मानम्=பரமாத்மாவாக எண்ணி स्पृणुते=சந்தோஷிக்கிறான். மேலும் य:=எவன் एवं वेद=இவ்விதம் அறிகிறானோ एष: இந்த பிரும்மக்ஞானியானவன் हि=யாதுகாரணத்தால் उभे एते=இந்த இரு புண்ணியபாபங்களையும்; आत्मानम् ஆத்மாவாக स्पृणुते=எண்ணுகின்றானோ அதாவது: ஸ்வரூபமற்றதாகச் செய்கின்றானோ [तस्य=அவனுக்கு] ஆத்மபாவத்தால் பார்க்கப்பட்ட புண்ணியபாபங்கள் நிர்வீர்யங்களாக வாகி ஜன்மாவைத் தருபவைகளாக ஆவதில்லை. इति=இவ்விதம் இந்த ஆனந்த வல்லியில் उपनिषत्=ஆத்ம க்ஞானமானது சொல்லப்பட்டது. (எ—று)

(தா—ம்) பிரும்மமானது ஜாதி, குணம், கிரியை முதலிய எவ்வித விகற்பமும் அற்றதானதுபற்றி ஜாதி குணாதிகளை முன்னிட்டுப் பிரவிருத்திக்கும் சப்தங்களும், அதன் பொருளான ஞானமும் எந்தப் பிரும்மத்தைப் போதிக்க (அறிவிக்க) முடியாதனவாக வாகின்றனவோ அத்தகைய பிரும்மானந்தத்தை அறிந்தவன் எதனிடமிருந்தும் பயத்தை யடைவதில்லை. ஏனெனில் பயஹேதுவான இரண்டாவது வஸ்துவில்லாதிருத்தலே அதன் காரணமாகும். பொதுவாய் சப்தங்கள் ஜாதிகுணாதிகளுள்ளவஸ்துவில் பிரவிருத்திக்குமாதலால் பிரும்மமும் ஓர் வஸ்துவானதுபற்றி இவ்விஷயத்திலும் அத்தகைய சப்தம் பிரயோகம் செய்பவரால் பிரயோகிக்கப்பட்டு தனது பிரவிருத்திக்குரிய ஜாதிகுணாதிகள் பிரும்மத்தினிட மில்லாதிருத்தல் பற்றி அதைத்தெரிவிக்கச் சக்

தியற்றதாய் அதனிடமிருந்து திரும்புகின்றன வென்று பொருள். இங்குள்ள **मनसा** என்றதால் சப்தத்தின் பொருளான விக்ஞானம் சொல்லப்படும். சப்தமானது இந்திரியங்களுக்கு விஷயமாகாத எந்த வஸ்துவில் பிரவிருத்திக்குமோ இந்த விக்ஞானமும் அவ்விடத்திலேயே தான் பிரவிருத்திக்கும். எங்கு விக்ஞானமோ, அங்குதான் சப்தங்களுக்கும் பிரவிருத்தியுண்டு.

*சங்கை*—முன்னருள்ள மனோமய கோசத்திலும் இதே மந்திரம் சொல்லப்பட்டிருப்பதன் காரணம் என்னை எனின் ?

*உத்தரம்*—கூறுவாம். மனோமய சப்தத்தாற் சொல்லப்படும் நம்முடைய மனஸ்ஸானது பிரும்மவிக்ஞானத்திற்கு சாதனமாயிருப்பதுபற்றி அந்த மனத்தில் பிரும்மத்வத்தை ஆரோபஞ் செய்து அந்தமனோமய உபாஸனத்தை ஸ்துதிக்க வேண்டி **न बिभेति कदाचन** என்றதால் பொதுவாய் பயம் யாவும் மறுக்கப்பட்டது. இவ்விடத்திலோ **न बिभेति कुतश्चन** என்றதால் பயத்திற்குரிய நிமித்தமே கிடையாதெனப் பயநிமித்தமானது நிஷேதிக்கப்படுகின்றது.

*சங்கை*—நற்காரியம் செய்யாமை பாபகாரியம் செய்தல் என்ற பயகாரணமிருக்கும் பொழுது பயநிமித்தமே இல்லை என்றது எங்ஙனம் எனின் ?

*உத்தரம்*—உலகில் ஆத்மக்ஞானமில்லாத அவித்வானுக்கு நாம் ஏன் புண்ணியத்தைச் செய்யாதுபோனோம் பாபத்தை ஏன் செய்தோம் எனமரணகாலத்தில் நரகபாதாதி துக்கபயமுண்டாகி ஸாதுகர்மாவைச் செய்யாமையும், அஸாதுகர்மாவைச் செய்தலும் அவனுக்குத் தாபத்தை யுண்டாக்குமே யொழிய, இதுவரை சொல்லியபடி ஆத்மதத்துவத்தை யறிந்த ஞானியை, நற்கர்மஞ்செய்யாமையும், பாபகர்மஞ்செய்தலும் தாபப்படுத்துவதில்லை. ஏனெனில்? இந்த ஞானியானவன் முற்கூறியவற்றை பரமாத்மாவாகவே பார்க்கிறான். ஆனது பற்றியேதான் இவனை அவை தாபப்படுத்துவதில்லை என்பதாம். அவ்விதம் ஆத்மஸ்வரூபமாகப் பார்க்கப்பட்ட புண்ணியபாபங்கள் நிர்வீர்யங்களாகவாகி திரும்பவும் ஜன்மாரம்பகங்களாக வருவதில்லை என்றேற்

பட்டது. ஆகவே இந்த ஆனந்தவல்லியில் இவ்விதம் ஸர்வ வித்யையைக் காட்டிலும் மேலான ரஹஸ்யமானது உபதேசிக்கப்பட்டது. (எ—று)

சங்கரபாஷ்யப்படி 9வது அனுவாகம் முற்றிற்று.

---

## வித்யாரண்யதீபிகை. எட்டாவது அனுவாகம்.

(அ—கை) பிரும்ம தத்துவக்ஞானமில்லாதவன் வேறு உபாஸனு ரூபவித்யையுள்ளவனு யிருந்தபோதிலும் பயத்தை யடைகிறுன் என்ற விஷயத்தில் இந்த மந்திர முபதேசிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) भीषास्माद्वातः.........पञ्चम इति ॥**

(க—ரை) முந்தின ஜன்மத்திற் சிறந்த க்ஞானகர்மங்களைச் செய்து இந்த ஜன்மாவில் வாயுதேவனுகப் பிறந்து அத்தகைய மஹிமையுள்ள தேவனுயினும் கூட அந்தர்யாமி ரூபமான இந்தப் பிரும்மத்தினிட மிருந்துண்டான பயத்தால் இடைவிடாது சோம்பலற்றவனுய் சஞ்சரிக்கிறுன். சூரியன் முதலியோர் விஷயத்திலும் இவ்விதமே பொருள் செய்து கொள்ளவும். அக்னியும் இந்திரனும் தனது வியாபாரத்தைச் செய்கின்றனர் என்று சேர்த்துப் பொருள் கொள்ளவும். இதுவரை கூறிய வாயு, சூரியன், அக்னி, இந்திரன் இந்த நான்கு தேவர்களையபேக்ஷித்து மிருத்யு ஐந்தாவதாக ஆகிறுன். அவன் க்ஷீணுயுஸ்ஸுகளை மரிக்கச் செய்யவேண்டி ஆங்காங்கு எப்பொழுதுமே ஓடுகிறுன். ஆனல் அஸங்கமும், நிர்க்குணமுமான பிரும்மத்திற்கு பயஹேதுவாகுந் தன்மை ஸம்பவிப்பதற்கில்லை தான் ஆயினும், மாயையை உபாதியாகவுடைய ஈசுவரனுக்கு அந்தர்யாமித்வம் ஸம்பவிப்பதால் பயஹேது வாகுதல் ஸம்பவிக்கலாம் என்று கொள்ளவும். இதையே "नियन्तृकार्यमापेक्ष्य नियन्तैष तमोऽवधिः" என்றதால் சுரேச்வர வார்த்திகத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

(அ—கை) இதுவரை கூறியதினின்றும் எல்லா ப்ரச்னங்களுக்கும் பதில் சொல்லியாகிவிட்டது. முன்னர் "सर्वान्कामान्समश्नुते" என்றும், "रसो वै सः" என்றும் பிரும்மத்திற்கு யாதொரு

ஆனந்த ரூபத்வமான்று சூசிப்பிக்கப்பட்டதோ அவ்விரண்டை யும் நிர்த்தாரணஞ் செய்யவேண்டி விசாரத்தை சுருதிதொடங்கு கிறது—

(मन्त्रः) सैषाऽऽनन्दस्य मीमांसा भवति ॥

(க—ரை) सा=வேறு சுருதியில் பிரசித்தமானதும் एषा=அடுத்துள்ள கிரந்தத்தில் சொல்லப்படப்போவதுமான आनन्दस्य= ஆனந்தத்தின் मीमांसा=இந்த ஆனந்தமானது லௌகிகானந்தம் போன்று விஷயவிஷயி ஸம்பந்தத்தாலுண்டாக்க் கூடியதா? அல்லது ஸ்வாபாவிகமா (நித்யமா) என்ற விசாரமானது பிரவிருத்திக்கின்றது. (எ—று)

(அ—கை) அவற்றுள் நித்யமான பிரும்மானந்தத்தைப் பிரித்துக் காண்பிக்கவேண்டி அதற்குபயோகப்படக்கூடிய மற்றுமுள்ள விஷயானந்தங்கள் முறையே சொல்லப்படுகின்றன. இந்த விஷயானந்தங்கள் பிரும்மானந்தத்தின் லேசமாக இருப்பனபற்றி நிர்ஸ்சயம் செய்வதற்குப்யோகப் படுகின்றன என்பது பொருந்தும். விஷயானந்தங்கள் பிரும்மானந்தத்தின் லேசங்கள் என்ற விஷயத்தைப் பின்வருவனவற்றூர் காண்க. அதாவது:—விவேகமானது (பகுத்தறிவானது) அவித்யையினுல் திரஸ்கரிக்கப்படும் பொழுது அவித்யையானது உத்கர்ஷத்தை யடையுங்கால் ஹிரண்யகர்ப்பர் தொடங்கி மனுஷ்யன் வரையுள்ள ஜீவர்களிடத்தில் பிரும்மானந்தமானது அவரவர் கர்மவசத்தாலும், விஷயாதிஸாதன ஸம்பந்த வசத்தாலும், அவரவரது அறிவுக்குத் தக்கபடி அனுபவிக்கப் படுவதன் மூலம் குறைவு பட்டதாயும், சஞ்சலமாயும் நிலையற்றதாயுமிருந்து கொண்டு லௌகிகம் எனப் படுகின்றது. அதே ஆனந்தம் அவித்யா காமகர்மங்களின் பெருக்கையொட்டி மனுஷ்யகந்தர்வர் தொடங்கி ஹிரண்யகர்ப்பர் வரையுள்ள மேன்மேலுள்ள பூமிகளில் நூறுநூறுமடங்கு உத்கர்ஷமுள்ளதாய் அகாமஹத (விரக்தரான) வித்வத் சுரோத்திரிய ப்ரத்யக்ஷமாகப் பிரித்து அனுபவிக்கப்படுகின்றது. வித்யையினுல் அவித்யா மூலமேற்பட்ட விஷயவிஷயி விபாகமானது நிவிருத்தமாக வானதும் ஸ்வாபாவிகமாகவும், பரிபூர்ணமாகவும்,

ஏகமாகவுமே அந்த ஆத்மானந்தமானது நிலை பெறுகின்றது. அந்த ஆத்மானந்தத்திற்கு த்வாரபூதங்களான விஷயானந்தங்களுள் நமக்குப் பிரசித்தமான ஆனந்தமானது முதன் முதலில் காண்பிக்கப்படுகின்றது—

**(मन्त्र:) युवास्यात्साधुयुवा.........मानुष आनन्द:॥**

(க—ரை) மனிதனுக்கு பால்யத்தில் விஷயங்களின் குணம் இன்னதெனத்தெரியாதாதலால் மாலை, சந்தனம், ஸ்திரீ முதலிய விஷயங்களாலுண்டாகு மானந்தம் கிடையா. வார்த்தகத்தில் (கிழப்பருவத்தில்) அவ்வறிவிருப்பினும் அவற்றை அனுபவிக்கும் திறமை கிடையாதானது பற்றி அப்பொழுதும் இந்த விஷயானந்தம் கிடையா. ஆகவே யௌவனம் மட்டுமே எஞ்சுகின்றது. ஆனதுபற்றியே தான் **युवा** என்று சொல்லப்பட்டது. யௌவனத்திலும், குரூபத்தாலும், கோபத்தாலும் பீடிக்கப்பட்டவனுக்கு துக்கம் அதிகமாயிருக்குமாதலால் அவைபற்றவனாயிருத்தல் வேண்டும் என்பதற்கு வேண்டி **साधु युवा** என்று சொல்லப்பட்டது. அப்படிப்பட்டவனாயினும் 64 கலைகளுள் ஒருவித்யை கூட இல்லாவிடில் துக்கமுண்டாகக் கூடும் என்பதற்கு வேண்டி **अध्यायक:** என்று சொல்லப்பட்டது. வித்யையுள்ளவனாயினும் காரியங்களில் மந்தமான பிரவிருத்தியிருக்குமானாலும், அக்கினிமாந்தியம் முதலியவற்றால் போஜனாதிகளில் ருசியற்றவனானாலும் சுகமுண்டாவதில்லை. அதற்கு வேண்டி **आशिष्ठ:**=எல்லாகாரியங்களிலும் சீக்கிரமாகப் பிரவிருத்திக்கக்கூடியவன் என்று சொல்லப்பட்டது. அல்லது **आशिष्ठ:** எல்லா போஜ்யத்திரவியங்களிலும் அதிகம் ருசியுள்ளவனாயிருத்தல்பற்றி ஆசைப்படுபவன் என்றும் பொருள் கொள்ளலாம். இவ்விதமுள்ளவனாயினும் மனவுறுதி யற்றவனாயின் யுத்தாதிகளில் தைரியம் உண்டாகாதானதுபற்றி அதற்கு வேண்டி **दृढिष्ठ:** என்று சொல்லப்பட்டது. இதுவரையுள்ளவற்றால் போக்திருத்வத்தின் நிறைவு சொல்லப்பட்டது. **तस्येयं पृथिवी** என்றதால் போக்கியத்தின் நிறைவு சொல்லப்படுகிறது. நான்கு திக்குகளிலும் சமுத்திரத்தாற் சூழப்பெற்ற பூமியானது யாதுண்டோ அப்பிருதிவீ முழுவதும் **वित्तस्य**=போக்கியத்திரவியத்தினுடைய [**जातेन**=ஸமூஹத்தால்] **पूर्णा**=நிறைவுபெற்றதாக

யிருக்கவேண்டும். இவ்விதம் யாதானு மொருஸார்வபௌமனுக்கு ஸம்பவிக்குமானால், அப்பொழுது இதுமானுஷமான ஆனந்தமாகும். இதற்குக்கீழுள்ளவைகளை துக்கமிச்ரங்களாயாவதுபற்றி அவை ஆனந்தங்களை யாகமாட்டா. உலகில் இதுவரை கூறிய ஸார்வபௌமனைவிட வேறான எந்த ஒருமனிதனும் நானவிதத்திலும் திருப்தியுள்ளவனைக்காணப்படவில்லை யன்றோ? திருப்தியே ஆனந்தமெனப்படும். அந்தத்திருப்திக்கு ஒருவிஷயத்தில் ஆசையிருந்தால் அது விரோதியே யாகும். அந்த இச்சையானது அடையப்படாத விஷயமொன்றில் ஒருவனுக்கு கட்டாயமிருக்கவே தானிருக்கும். ஸார்வபௌமனுக்கோ வெனில் மனிதவுலகிலுள்ள எல்லாவிஷயங்களும் கிடைத்திருப்பதுபற்றி விரோதியான இச்சையானது இல்லாமலாகிவிடவே எவ்வித இடையூறுமின்றி திருப்தியானது பிரகாசத்தை யடைகின்றது.

(அ—கை) ஆகவே எவ்வளவுக்கெவ்வளவு இச்சையின் நிவிருத்தியானது அதிகப்படுகின்றதோ, அவ்வளவுக் கவ்வளவு ஆனந்தமும் விருத்தியடைந்து கொண்டே வருகின்றது. இதை விளக்க வேண்டியே முன்னர் சொல்லப்பட்டதைவிட அதிகமான ஆனந்தத்தைச் சுருதி உதாஹரிக்கின்றது—

## (मन्त्रः) ते ये शतंमानुषा.........चाकामहतस्य ।

(க—ரை) முன்னர் சொல்லப்பட்ட ஸார்வபௌமனிடமுள்ள ஆனந்தத்தின் நூறு மடங்கு அதிகமான ஆனந்தங்கள் மனுஷ்ய கந்தர்வனுடைய ஒரு ஆனந்தமாகும். அதாவது: நூறு ஸார்வபௌம ஆனந்தங்களில் எவ்வளவு திருப்தியுண்டாகுமோ அவ்வளவு திருப்தியானது ஒரு மனுஷ்ய கந்தர்வனுக்குண்டாகும் என்பதாம். இந்த கல்பத்தில் மனிதர்களாயிருந்து வித்யாகர்ம விசேஷானுஷ்டானத்தினல் கந்தர்வப் பதவியை யடைந்தவர் மனுஷ்ய கந்தர்வர் எனப்படுவர். அந்தர்தானதி சக்தியோகத்தால் அவர்கள் மனிதரைவிட உயர்ந்தவர்களாவர். இவ்விதமே சுரேஶ்வர வார்த்திகத்திலும்

सुगन्धिमः कामरूपा अन्तर्धानादिशक्तयः।
नृत्यगीतादिकुशला गन्धर्वाः स्युर्नलौकिकाः॥

என்றதால் தெளிவா யுபதேசிக்கப் பட்டிருக்கிறது. ஆகவே அவர்களுக்கு மனிதர்கட்குப்போல ஆனந்தத்திற்குப் பெரும்பாலும் தடை யேற்படுவதில்லை. ஒரு ஸமயம் தடை யேற்படினும் அதைப் போக்குவதற்குரிய ஸாதனங்களின் நிறைவு அவர்களுக் குண்டு. ஆகவே சித்தத்திலுள்ள தெளிவு அதிகமாகவே சுக விசேஷாபிவியக்தி உண்டாகி விடுகின்றது. ஸார்வ பௌமன் மனுஷியனைகையால் அவனது ஆனந்தத்தை நம் போன்றவர் அபேக்ஷிக்க கூடுமானதுபற்றி அவ்விடத்தில் சுரோத்திரியன் உதாஹரிக்கப்படவில்லை. அத்தகைய மனுஷ்ய கந்தர்வர் அந்தரிக்ஷலோகத்தில் வசிப்பவராவர். ஆகவே அப்பிரசித்தமான மனுஷ்ய கந்தர்வரின் ஆனந்தப் பிரசித்தியை மனுஷ்ய லோகத்தில் காண்பிக்கவேண்டி அவ்விடத்தில் சுரோத்திரியன் உதாஹரிக்கப் பட்டிருக்கிறான். வேதாத்தியானஞ் செய்தவன் க்ஷ்ரோத்திரியன் எனப்படுவன். அவன் ஸர்வ லோகங்களிலிருக்கும் ஆனந்த ஹேதுவான விஷயபோகமானது மிக்கப்பிரயாஸ சாத்தியமாயிருப்பதுபற்றியும், உயர்வு தாழ்வுள்ளதா யிருப்பது பற்றியும், அநித்யமா யிருப்பதுபற்றியும், சாஸ்திரம் அனுபவம் இவற்றைக் கொண்டு அவற்றில் தோஷத்தை நன்குணர்ந்து அவற்றில் காமனையற்றவனாகிறான். ஆகவே மனுஷ்ய கந்தர்வலோகத்திலுள்ள விஷயங்களை அனுபவிக்கின்றவனுக்கு எவ்வளவு ஆனந்தமுண்டோ அவ்வளவு ஆனந்தம் காமனையற்ற வேதவித்தான சுரோத்திரியனுக்கும் உண்டாகின்றது. அகாமஹதத்துவமானது கந்தர்வ லோகத்தையறியாதவனான மூடனுக்கு இப்பொழுது இருப்பினும் காலாந்தரத்தில் சாஸ்திர மூல மறிந்தானாயின் அந்த லோகத்திலுள்ள போகேச்சையானது உண்டாகும்பொழுது அது விலகிவிடுகின்றது. சுரோத்திரியனுக்கோ வெனில் அங்குள்ள தோஷத்தை நன்கறிந்தவனா யிருத்தல்பற்றி ஒருபொழுதும் அதில் காமனை உண்டாகாதாகையால் அகாமஹதத்துவம் நிலை பெறுகின்றது. ஆகவே திருப்தி ரூபமான ஆனந்தமானது கந்தர்வனுக் குண்டாவது போலவே அகாமஹத சுரோத்திரியனுக்கும் உண்டாகின்றது.

(அ—கை) மூன்றாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं.........चाकामहतस्य ॥

(க—ரை) சிருஷ்டி காலத்திலேயே தேவ லோகத்திலுண்டான காயகர்கள் (பாட்டுப்பாடுகின்றவர்கள்) தேவகந்தர்வர் எனப்படுவர்.

(அ—கை) நான்காவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं देवगन्ध.........चाकामहतस्य ॥

(க—ரை) சிரகால மிருக்கும் லோகம் யாதுண்டோ அதைக் கண்டவர் சிரலோகலோகர் எனப்படுவர்.

(அ—கை) ஐந்தாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं पितॄणां.........चाकामहतस्य ॥

(க—ரை) பிதிரு லோகத்திற்கு மேலுள்ள ஆஜானம் என்ற லோகத்திலுண்டானவர் ஆஜானஜர் எனப்படுவர்.

(அ—கை) ஆறுவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतमाजानजानां.........चाकामहतस्य ॥

(க—ரை) ஆஜானஜ தேவ போகத்திற்கு மேலுள்ள உத்தம போகத்தை யடையவேண்டி வைதிகமான கர்ம விசேஷத்தை யனுஷ்டித்து தேவர்களை யடைகின்றவர்கள் கர்மதேவர் எனப்படுவர்.

(அ—கை) ஏழாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं कर्मदेवानां.........चाकामहतस्य ॥

(க—ரை) 33 பிரதான தேவர்கள் இங்குள்ள தேவசப்தத்தாற் சொல்லப்படுவர்.

(அ—கை) எட்டாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं देवानां.........चाकामहतस्य ॥

(க—ரை) தேவராஜன் இந்திரன் எனப்படுவன்.

(அ—கை) ஒன்பதாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतमिन्द्रस्य.........चाकामहतस्य ॥

(க—ரை) இந்திரனுடைய ஆசாரியர் பிருஹஸ்பதி எனப் படுவர்.

(அ—கை) பத்தாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं बृहस्पते.........चाकामहतस्य ॥

(க—ரை) விராட்புருஷன் பிரஜாபதி எனப்படுவர்.

(அ—கை) பதினொன்றாவது பரியாயம் சொல்லப்படுகின்றது—

(मन्त्रः) ते ये शतं प्रजापते.........चाकामहतस्य ॥

(க—ரை) எல்லா ஸம்ஸாரமண்டலத்திலும் நிறைவு பெற்றவரும், ஸமஷ்டி ரூபமாயுள்ளவரும் சூத்ராத்மாவுமான ஹிரண்ய கர்ப்பர் பிரும்மா எனப்படுவர். ஆகவே ஸம்ஸாரிகமான ஆனந்தோத்கர்ஷமானது அவரிடத்தில் முடிவு பெறுகின்றது. ஆகவே இதுவரை சொன்ன முறைப்படி சுரோத்திரியனிடத்தில் எல்லாருடைய ஆனந்தமும் இருப்பதால் सोऽश्नुते सर्वान्कामान्सह என்று கூறியது நன்கு விளக்கப்பட்டதாக வாகிறது. ஆனது பற்றி ப்ரும்மானந்த த்வாரமாகவான ஸாம்ஸாரிக ஆனந்தோத்கர்ஷமானது ஆகமத்தாலும், சுரோத்திரியப்ரத்யக்ஷத்தாலும் உதாஹரிக்கப்பட்டதாக வாகிறது.

(அ—கை) இனி அறியத்தகுந்ததான பிரும்மானந்தமானது காண்பிக்கப் படுகின்றது—

(मन्त्रः) स यश्चायं पुरुषे । यश्चासावादित्ये । स एकः ।

(க—ரை) ஞானத்திலிச்சையுள்ள புருஷன் இங்குள்ள புருஷ சப்தத்தாற் சொல்லப்படுவன். அவனிடத்தில் ஒருவித ஆனந்தமிருக்கின்றது அந்த ஆனந்தமிருக்கும் விஷயத்தில், பிரஸித்தமான யுக்தியும், அனுபவபிரஸித்தியும் सः, अयम् என்ற இவ்விருபதங்களாலும் காண்பிக்கப்படுகின்றது. அவற்றுள் யுக்திப்ரஸித்தியாவது—आत्मनस्तु कामाय सर्वं प्रियं भवति என ப்ரதிக்ஞை செய்து கொண்டு புத்திர, வித்தாதிரூபமான எல்லாபோக்கியவஸ்துவும் ஆத்மசேஷமாக வாவதின் மூலமே பிரியமாகவர்வதிலிருந்து ஆத்மாவானது மேலான ப்ரீதிக்கு விஷயமாகவாவதால் ஆனந்தரூபமாகவே தானாகின்றது. என பிருஹதாரண்ணியக சுருதியில்

கூறப்பட்டிருக்கிறது. அதுபோலவே "எப்பொழுதுமே நானி ருக்கவேண்டும், ஒருபொழுதும் எனக்கு இல்லாமை உண்டாக வேண்டாம்" என்ற எண்ணமானது எல்லாப் பிராணிகளுக்கு மிருப்பதைக்கொண்டு ஆத்மா ஆனந்தரூபன் என்பது தெளிவா கின்றது. இங்குள்ள च என்றதால் ஞாதாவுக் கொப்பான பிரா ணியினிடத்துள்ள ஆனந்தம் சொல்லப்பட்டதாக ஏற்படுகிறது. அதனின்றும், ஆத்யாத்மிகம், ஆதிபௌதிகம் முதலிய எல்லா ஆனந்தமும் கிரஹிக்கப்பட்டதாக வாகின்றது. மேலும் வேதத் தில் इदम् என்ற சப்தம் பிரத்யக்ஷமான வஸ்துவிலும், अदः என் றசப்தம் பரோக்ஷமானவஸ்துவிலும் பிரயோகம் செய்யப்படு வதைக் காண்கின்றோம். ஆகவே இங்குள்ள असौ என்ற अदः சப்தத்தால் பரோக்ஷமான சூரியதேஹத்திலுள்ள ஆனந்த மானது சொல்லப்படுகின்றது. இங்குள்ள च என்றதால் ஆதித் யனுக் கொப்பான வேறு தேவதைகளிடத்துள்ள ஆனந்தத் தையும் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்பது உபதேசிக்கப் படுகின்றது. அதனால் ஆதிதைவிகமான எல்லா ஆனந்தமும் கிரஹிக்கப்பட்டதாக வாகிறது. இவ்விதம் கூறியதினின்றும் அத்யாத்மம், அதிபூதம், அதிதைவம் ஆகிய எல்லா உபாதிகளி லும் யாதொரு ஆனந்தமுண்டோ அவையாவும் ஸ்வரூபத்தால் ஒன்றானதே யொழிய ஒருபொழுதும் வேறுபட்டதன்று. மா னுஷ ஆனந்தம், தைவ ஆனந்தம் என்றவிடத்திலுள்ள அடை மொழி (விசேஷண) யான மானுஷ, தைவ சப்தத்தாற் சொல்லப் படும் உபாதி மூலமன்றோ ஆனந்தத்தில் பேதம் காணக்கிடக்கின் றது. அகண்டைக ரஸமானதும்,ஸமுத்திர ஸ்தானத்திலுள்ளது மான யாதொரு இந்த பிரும்மானந்தத்திற்கு ஹிரண்ய கர்ப்பாதி யரின் ஆனந்தங்கள் பிந்து (துளி) போன்றனவோ ஞானேச்சை யுள்ளவர்களா லறியத்தகுந்த அந்த இந்த ஆனந்தம் ஒரே வித மானது என்றே மீமாம்ஸையின் நிர்ணயம் ஏற்பட்டது. (எ—று)

(அ—கை) இதுவரை கூறிய ஆனந்த வேதன (ஞான) த்தின் பயனுபதேசிக்கப் படுகின்றது—

(मन्त्रः) स य एवंवित्........उपसंक्रामति ॥

(க—ரை) எந்த புருஷன் இதுவரை சொல்லிய முறைப்படி தனது ஆனந்தத்தை யறிகின்றானோ அந்தப் புருஷன் அதே முறையாக அந்த ஆனந்தத்தை யடையவுமடைகிறான். ஸத்ய, க்ஞானாதி லக்ஷணமான பிரும்மமானது தனது மாயாசக்தி வசத்தால் ஆகாசந்தொடங்கி நமது தேஹம் முடியவுள்ள ஜகத்தைச் சிருஷ்டித்து தேஹாதி பஞ்சகோச ரூபமான குஹையில் பிரவேசத்தை யடைந்தது போல அதன் நடுவில் நிருபாதிக ரூபத்தால் ஸாக்ஷாத்காரஞ் செய்வதற்கு யோக்கியமாகவாகும்படி பிரகாசிக்கின்றது. அது அகண்டைகரஸமான பரமானந்த ரூபமுமாகும் என்பது முன்னர் கூறப்பட்ட முறையாகும் என்பதாம். அந்த அகண்டைக ரஸப்பிரும்மத்தை இம்முறைப்படி ஸாக்ஷாத்கரிப்பவனுக்கு ஆனந்தப்பிராப்தி யேற்படும் விஷயத்தில் கிரமமானது இனி சொல்லப்படுகின்றது. அதாவது: போக்தா, போக்யம் என இருவகையான ஜகத்தானது பிரும்மத்தால் சிருஷ்டிக்கப்பட்டது. அவற்றுள் ப்ரத்யக் சைதன்னிய ரூபமான ஆத்மா தொடங்கி தேஹம் வரையுள்ளதும், நான் என்ற அறிவில் தோற்றுகின்றதுமான ஜகத்பாகமானது போக்தா எனப்படும். தேஹத்திற்கு வெளியிலுள்ளதும், இது, இது என்ற அறிவிற் றோற்றுகின்றதும் புத்திரபாரியாதிரூபமானதுமான ஜகத்பாகமானது போக்யம் எனப்படும். ஆனால் போக்கியமாகக் கூறின புத்திரபாரியாதிகளிடத்தில் அவர்களுக்குண்டாகும் சுகதுக்கத்தைக் கொண்டு தான் சுகீ,துக்கீ என ஸர்வஜனங்களும் அனுபவிப்பதைக்கொண்டு ஆத்மபுத்தியிருப்பதாகச் சொல்லக்கூடுமாயினும்,தன்னைவிட புத்திராதிகள் வேறு என்பதை யாவரும் அறிந்ததொரு விஷயமாதலால் புத்திராதிகள் கௌணாத்மாவே ஒழிய முக்கியாத்மாவன்று எனக்கருதி சுருதியானது புத்திராதிகளிடத்தில் ஆத்மபுத்தியை விலக்கவேண்டி அன்னமயாத்மாவை உபதேசித்தது. ஆகவே இந்த ஜிக்ஞாஸுவும் அதை யறிந்துகொண்டு **अस्माल्लोकात्**=இது இது என்ற அறிவிற்றோன்றுகின்ற புத்திராதிகளிடமிருந்து **प्रेत्य**=விலகி அதாவது: அங்குள்ள ஆவலை யொழித்து **एतं**=சுருதியாற் சொல்லப்பட்ட **अन्नमयम्** அன்னமயனான ஆத்மாவை **उपसंक्रामति**=அடைகிறான். அதாவது:—புத்திராதிகளின்

சுகதுக்கங்களில் ஸ்வகீயத்வபுத்தியை (தன்னுடையது என்ற எண்ணத்தை) விடுத்து அன்னமயன் மட்டில் நிலைபெறுகிறான் என்பதாம். இம்முறைப்படியே பிராணமயாதிகளின் உபஸங்க்ரமணத்தையும் பொருள்செய்து கொள்ளவும். ஆனந்தமயனை யும் உபஸங்கிரமணம் செய்து அவ்விடத்திலும் பிரியம், மோதம், பிரமோதம், ஆனந்தம் ஆகிய நான்கையும் விடுத்து அகண்டை கரஸமான புச்சபிரும்மத்தில் நிலைபெற்றவனாக வாகின்றான்.

குறிப்பு—இதற்குப் பிறகு एवं वित् என்றதாற் சொல்லப்படு பவன் யார் என்பதைப்பற்றியும், ஸங்க்ரமணத்தைப்பற்றியும் தீபி கையில் விரிவாய் எழுதியிருந்தபோதிலும் ஸ்ரீசங்கரபகவத்பாத பாஷியார்த்தம் எழுதியதில் அவைபாவும் அடங்கியிருப்பதால் அவற்றைத் தனியாய் இங்கு எழுதவில்லை என்றறிக.

(அ—கை) பிரும்மமானது வாக், மனஸ் இவற்றிர்க்கு கோச ரமன்று என்பதை விளக்கும் மந்திரம் பின்வருமாறு—

**(मन्त्रः) तदप्येषश्लोको भवति ॥**

(க—ரை) மனோமயாத்மகோசத்தில் இதன் பொருள் சொல் லப்பட்டிருப்பதைக்காண்க. (எ—று)

வித்யாரண்யதீபிகைப்படி எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அனுவாகம்.

**(मन्त्रः) यतोवाचो..........कुतश्चन ॥**

(க—ரை) மனோமய கோச மந்திரத்தில் இதன் பொருள் விரி வாகக் கூறப்பட்டிருப்பதைக் காண்க. वाचः=ஒரு பொருளைக் கூறும் சப்தங்கள் ஸவிகல்பமான வஸ்துக்களில் வியுத்பத்தியை யுடையன. பிரயோகிப்பவரால் வஸ்துத்வ ஸாம்யத்தை யொட்டி நிர்விகல்பமான பிரும்மத்தினிடத்திலும் பிரயோகம் செய்யப்பட் டன வாயினும் அதைப் போதிக்கச் சக்தியற்றனவாய் அவைகள் விலகுகின்றன. தனது அபிதான ஸாமர்த்தியத்தை இழக்கின்றன் என்பதாம். மனஸ்ஸோ அதீந்திரியமான வஸ்துவில் சப்தத்தை

யொட்டி எங்கும் பிரவிருத்திக்கின்றதே யொழிய ஸ்வதந்திரமாய் பிரவிருத்திப்பதில்லை. ஆகவே நிர்விகல்ப பிரும்மத்தினிடத்தில் சப்தங்கள் சாமர்த்திய மற்றவைகளாய் திரும்பும்பொழுது அவைகளுடன் கூட மனஸ்ஸும் திரும்புகின்றன வென்பதாம். ஆனது பற்றி பிரும்மானந்தமானது ஹிரண்ய கர்ப்பானந்தத்தை விட அதிகமானதுபற்றி அதை இவ்வளவு என்று சொல்லுவதற்கும் அறிவதற்கும் முடிவதில்லை என்றேற்பட்டது. அத்தகைய பிரும்மத்தின் ஸ்வரூப பூதானந்தத்தை லக்ஷணாவிருத்தியால் சப்தங்களே தெரிவிக்கும்பொழுது மனதால் எந்த புமான் அறிகின்றானோ அவன் எதனிடமிருந்தும் பயத்தை யடைவதில்லை. முன்னர் மனோமய கோசத்தில் பிரஸ்தாவத்தை யொட்டி மனோமயோபாதி விசிஷ்டமான பிரும்மத்தை உபாஸிப்பவனுக்கு இந்த ஜன்மத்திலோ, ஜன்மாந்தரத்திலோ ஒருபொழுதும் பயம் உண்டாவதில்லை, பிரஸக்தமான பயத்திற்குப் பிரதீகாரமிருப்பதே அதன் காரணமாகும் என்று சொல்லப்பட்டது. இவ்விடத்திலோ அத்விதீயமான பிரும்மானந்தத்தை பிரமாணத்தைக் கொண்டு ஸாக்ஷாத்கரிப்பவனுக்கு பயத்திற்குரிய காரணமே கிடையாதென **कुतश्चन** என்றதாற் சொல்லப்பட்டது. **द्वितीयाद्वै भयं भवति** என்ற சுருதியில் தன்னைவிட வேறான வஸ்து பயத்திற்கு காரணமென்றும், அந்தத்விதீய வஸ்துவானது அத்விதீய பிரும்மத்தினிடத்தில் கிடையாதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. (எ—று)

(அ—கை) **नबिभेति कुतश्चन** என்று கூறியது பொருந்தாது. பயஹேதுவான தர்மாதர்ம ஜனிதமான ஸந்தாபமிருப்பதே அதன் காரணமாகும் என்று ஆசங்கித்து அதற்குப் பதில் சொல்லப்படுகின்றது.

**(मन्त्रः) एतꣳ ह वाव.........पापमकरवमिति ॥**

(க—ரை) மரணகாலம் சமீபித்ததும் எல்லா உயிர்களுக்கும் மனதில் பின்வருமாறு சிந்தையுண்டாகின்றது. அதாவது:— நான் யௌவனகாலத்தில் தேஹேந்திரியாதிகளில் வலுவிருக்கும் பொழுதும், திரவியாதிசாதன நிறைவிருக்கும்பொழுதும் ஸ்வர்க்க லோகாதிகளுக்கு ஸாதனமான யாகாதிகளை நன்கு என்

செய்யாது விடுத்தேன். நரகத்தைத் தரும் பாபகர்மத்தை ஏன் செய்தேன் என்பதாம். இத்தகைய சிந்தை யாவர்க்கும் ஸந்தாபத்தை யுண்டாக்க கூடியதாயினும் பிரும்மவித் ஒருவனை மட்டுமே தாபப்படுத்துவதில்லை.

(அ—கை) தாபத்தை யுண்டுபண்ணுமையில் காரணம் சொல்லப்படுகிறது—

**(मन्त्रः) स य एवं विद्वानेते आत्मानꣳस्पृणुते ॥**

(க—ரை) யாதொரு புருஷன் இந்த புண்ணியபாப கர்மங்களை இவ்விதம் ஸந்தாபஹேதுவாக சாஸ்திரம், யுக்தி இவைகளைக் கொண்டு நன்கு அறிகின்றானோ அவன் கர்மமூலமுண்டாகும் ஸந்தாபத்தைப் போக்க வேண்டி ஆத்மாவை திருப்திசெய்விக்கிறான். அல்லது பலப்படுத்துகிறான். அதாவது:—இந்த ஆத்மா ஸாக்ஷியாகையால் தர்மாதர்ம கர்த்தாவாக வாவதில்லை என்றெண்ணி ஸந்தாபமற்றவனாக வாகிறான். "அஹம் பிரும்மாஸ்மி" என்ற நிச்சயத்தால் தர்மாதர்மம், அதன்பலன் முதலிய ஸமஸ்த ஸம்ஸாரஹேதுவான அவித்யா நிவிருத்தியான தேறபட்டிருப்பதால் மிக்க வலுவுள்ளவனாகவாகி விடுகிறான். இவனுக்கு தர்மாதர்மாதிகளாலுண்டாகும் பராஜயம் ஒருபொழுது முண்டாவதில்லை என்பதாம். (எ—று)

(அ—கை) ஆத்மா அகர்த்தாவாயினும், அது பிரும்மமென அறியப்படினும், தேஹேந்திரியாதி சேஷ்டைகளால் புண்ணிய பாபங்கள் கட்டாயமுண்டாகவே தான்செய்யும், முன்னற் செய்யப்பட்ட வைகளுமிருக்கின்றன, என ஆசங்கித்து அதற்குப் பதில் சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) उभे ह्येवैष एते आत्मानꣳस्पृणुते। य एवं वेद॥**

(க—ரை) **यः**=எந்த புருஷன் **एवम्**=புண்ணியபாபங்கள் தாபஹேதுக்களென்றும் ஆத்மஞானம் தாபநிவாரகமென்றும் **वेद**=அறிகின்றானோ **सः**=அவன் **एते**=இந்த புண்ணியபாபங்களை **आत्मानमेव स्पृणुते**=ஆத்மாவாகவே பார்க்கிறான். இங்குள்ள **स्पृणुते** என்றதற்குப் பார்க்கிறான் எனப் பொருள் கொள்ளப்பட்டிருக்கிறது. சாஸ்திரதிருஷ்டியைக் கொண்டு அந்தப் புண்ணியபாபங்களை பர

மாத்மஸ்வரூபமாகவே அநுஸந்தானம் செய்கிறான். இவ்விஷய மானது தத்வவித்துக்களிடம் பிரசித்தமாயுள்ளது என்பதை இங்குள்ள हि என்ற சப்தம் தெரிவிக்கின்றது. யாது காரணம் பற்றி பிரும்மவித்துக்கு தனது ஸ்வரூபத்திற்கு வேறாக முன்னர் அநுஷ்டிதங்களாகவோ, பின்னர் அநுஷ்டிக்கப்படப்போகின்றன வாகவோ உள்ள எந்த புண்ணிய பாபங்களும் ஸ்வரூபத்தில் எப்பொழுதும் இல்லாதவைகளாகின்றனவோ அக்காரணம்பற்றி அப்பொழுது அவற்றின் சிந்தாமூல முண்டாகும் தாபமானது இவனுக்கு இல்லை யென்றுசொல்லவும் வேண்டுமோ? என்பது சுருதியின் கருத்து. (எ—று)

(அ—கை) அநுவாகத்தின் அர்த்தம் முடிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) इत्युपनिषत् ॥**

(க—ரை) **ब्रह्मविदाप्नोति परम्** என்று தொடங்கி **य एवं वेद** என்றதுமுடியவுள்ள கிரந்தத்தால் யாதொன்று உபதேசிக்கப்பட்டதோ அந்த உபநிஷத்தானது (ரஹஸ்ய வித்யையானது) சொல்லப்பட்டது. (எ—று)

**(मन्त्रः) सहनाववतु.........शान्तिः ॥**

வித்யாரண்யதீபிகைப்படி 9வது அநுவாகம் முற்றிற்று.

---

## விசிஷ்டாத்வைதம். எட்டாவது அநுவாகம்.

**(मन्त्रः) भीषाऽस्माद्वातः.........तदप्येष श्लोको भवति ॥**

(க—ரை) அக்னி சூரியன் முதலிய எல்லாதேவ சிரேஷ்டர்களும் பரமாத்மாவினுடைய ஆக்ஞையை மீறினால் என்ன வந்துவிடுமோ என்ற பயத்துடன் தத்தமது கர்மங்களில் ஜாகரூகர்களாகவே இருக்கின்றனர். ஆனதுபற்றி பிரும்மத்தைவிட வேறான எல்லா பதமும் துக்கத்தையே முடிவாகவுடைய தாதலால் அனர்த்த ரூபமானதென்றே ஏற்படுகின்றது. ஆனது பற்றி அத்தகைய பதத்தில் காமனை கொண்டு மனனவிச்சேதம் செய்வது அதிகபயத்தை யுண்டாக்குமென்பதும் அதன் மூலம் பயன்

கொஞ்சமுமில்லை என்பதும் அதன் பொருள். இதனால் பிரும்ம வேதனத்திற்கு ஜகத்காரணத்வம், அதற்குபயோகப்படும் ஸார்வக்ஞ்யாதி குணம் ஆகியவற்றுடன் கூடினவற்றை விஷயமாகவுடையத் தாயிருக்குந்தன்மை, அவிச்சின்னகத்வம் (இடையற்றிருத்தல்) இவற்றை விதித்து பிராப்யனை ஆனந்தமய பிரும்மத்திற்கு ஆனந்தமய சப்தப் பிரவிருத்திக்குரிய நிமித்தத்தையும், ஆனந்த பிராசுர்யத்தையும் சுருதி காண்பிக்கின்றது. सेषा=சொல்லப்படப்போகும் ஆனந்த விஷயமான விசாரமிருக்கின்றது என்று பொருள். साधुयुवाध्यायिक:* साधु=முறைதவறாது, அல்லது நல்ல ஸம்ப்ரதாய சித்தமாயிருத்தல் பற்றி ஸ்வரவர்ணாதி தவறில்லாதிருக்கும்படி என்று பொருள். யுவா என்றதற்கு புதிதானது என்று பொருள். ஆகவே மறதியற்றிருத்தல் பற்றி நித்யமும், புதிதுமாயிருக்கும்படி அத்யயனஞ்செய்கின்றவன் என்று பொருள். அல்லது தனக்கு ஸமான வயதுள்ளவர்களான யாவர்க்கும் அத்யாபனஞ் செய்துவைப்பவன். அவர்களைவிட அதிகக்ஞானமுள்ளவன் என்றும் பொருள் கொள்ளலாம். आशिष्ठ:=விரைவில் காரியத்தைச் செய்பவன். அல்லது அசனக்ஷமன் ரோகமற்றவன் என்று பொருள். அல்லது ஆசீர்வாதத்திற்கு விஷயமானவன். அதாவது: எல்லா தேவர்களையும் நமஸ்கரிக்கிறான் என்பது போல ஸர்வானுரஞ்ஜகன் என்று பொருள் கொள்ளலாம். बलिष्ठ:=மனோ பலமுள்ளவன், द्रढिष्ठ: என்றதால் சரீரபலம் சொல்லப்பட்டிருப்பதே அதன் காரணமாகும். அல்லது द्रढिष्ठ:=மிக்கத் திருடமானவன். அதாவது: நிலைக்காத ஸ்வபாவமில்லாதவன் என்பதாம். बलिष्ठ: சாரீர, மானஸ ஸர்வவித பலமுள்ளவன் என்று பொருள். वित्तस्य पूर्णा=பணத்தால் நிறைந்தது என்று பொருள். இவ்விதம் குண ஸமுதாயத்தையும் விபூதியின் நிறைவையும் சொல்லி स एको मानुष आनन्द: என்ற சுருதியால் அதற்கே ஆனந்தத்வம் சொல்லப்பட்டது.

சங்கை—ஞானத்தைவிட வேறான குணம், விபூதி முதலிய

* अध्यायक: என வைதிக ஸம்ப்ரதாயசித்தமான பாடம். ஆனால் இங்கு ரங்கராமானுஜ பாஷ்யத்தில் अध्यायिक: என்ற பாடமிருக்கிறது.

வற்றிர்க்கு ஆனந்தத்தன்மை எவ்விதம் ஸம்பவிக்கும் எனின் ?

உத்தரம்—அதனுண்மை கூறுவாம். அனுகூலத் தன்மை எதுவோ அதுவேதான் ஆனந்தத் தன்மையாகும். அந்த ஆனந்தத் தன்மையும் ஸ்வயமாகவே இஷ்டத்தன்மையாகவாகின்றது. அத்தகைய இஷ்டத்வமானது குணவிபூதிகளுக்கும் ஸம்பவிக்கலாம். அவ்விஷயத்திற்கும் அனுகூலத்வமானது விஷயானுகூல ப்ரயுக்தமானதே என்பது அன்வயவியதிரேக ஸித்தமாகிறது. இந்த விடத்திலுள்ள சுருதி ஸ்வாரஸ்யத்தினால் குணவிபூதிகளுக்கே ஆனந்தத்வம் சொல்லவேண்டி வருகிறது. श्रोत्रिय:=பிருப்ம நிஷ்டன். अकामहत:=ஸமஸ்தமான ஸாம்ஸாரிக போகானுபஹதன் ஆனதுபற்றியே முக்தன் எனச்சொல்லப்படுகிறான். இவ்விதம் கூறியதினின்றும், யுவாவாயிருத்தல், திடதேஹமுள்ளவனாயிருத்தல், ஸௌந்தர்யம், ஞானம் பலம், ஐசுவரியம் முதலியன ஒன்று சேர்ந்து எவனிடமிருக்கின்றனவோ அவனுக்குண்டாகும் ஆனந்தம் மானுஷ ஆனந்தமாகும் என்றேற்பட்டது. அகாமஹத சுரோத்திரியனான முக்தனுக்கும் அந்த ஆனந்தம் இருக்கின்றது. முக்தனானவன் ஸர்வானந்தானுபவ சாலியாயிருப்பதால் அவனிடத்தில் ஸர்வானந்தமும் அந்தர்பாவத்தையடைகின்றது என்றுகருத்து. எவர்கள் மனுஷ்யர்களாகவே இருந்து கர்மவிசேஷத்தாலோ, வித்யா விசேஷத்தாலோ அந்தர்தானுதி சக்தியுடன் கூடியிருத்தல் பற்றி கந்தர்வத்வத்தையடைந்தனரோ அவர் மனுஷ்யகந்தர்வர் எனப்படுவர். அந்தரிக்ஷலோக வாசிகள் தேவகந்தர்வர் எனப்படுவர். வெகுகாலமிருக்கும் லோகம் சிரலோகம் எனப்படும். அந்த சிரலோகத்தை தமது லோகமாகவுடையவர்கள் பிதிருக்களாவர். ஆஜானம் என்பது தேவலோகமாகும், அங்குண்டானவர் ஆஜானஜர் எனப்படுவர். ஸ்மார்த்தமான கர்மவிசேஷத்தால் தேவலோகத்திலுண்டானவர் என்று பொருள். அக்னி ஹோத்திராதி கர்மத்தினால அக்னி, இந்திராதிஸாயுஜ்யத்தை யடைந்தவர் கர்மதேவர் எனப்படுவர். வஸு, ருத்திரர் முதலிய 33பிரதான தேவர்கள் இங்குள்ள தேவர் என்றதாற் சொல்லப்படுவர். இந்திரன், பிருஹஸ்பதி, இருவரும் பிரஸித்தமானவர்களே, பிரஜாபதிஎன்றதால் நான்முகன்

சொல்லப்படுவரே அன்றி தக்ஷாதிகள் சொல்லப்படமாட்டார், **प्रजापतिः** என்ற விடத்தில் ஏகவசனம் (ஒருமை) பிரயோகிக்கப் பட்டிருப்பதே அதன் காரணமாகும். இங்குள்ள பிரும்மா என்ற தால் **ब्रह्मविदाप्नोति** என்று தொடங்கப்பட்ட பிரும்மமே சொல் லப்படும்.

சங்கை — பிரும்மானந்தத்திற்கு **ते ये शतम्** என்றதாற் கூறிய பரிச்சின்னத்வமானது எவ்விதம் ஸம்பவிக்கும் எனின்?

உத்தரம்—வெகுயோஜனை தூரம் வேகமாகச்செல்லுகின்ற சூரியனைப்பார்த்து **इषुवत्** = அம்பு போலப்போகிறுன் என்ற தாற் சொல்லப்படும் இஷு (அம்பு) ஸாம்யவசனத்திற்கு கதிமாந் த்ய (வேகக்குறைவு) நிவிருத்திபரத்வம் சொல்லுவதுபோல **ते ये शतं** என்றவாக்கியத்திற்கு நான்முகனுடைய ஆனந்தத்தைக்காட் டிலும் ஆதிக்யமாத்திரபரத்வம் கொள்ளப்படுவதால் முற்கூறிய ஆசங்கைக்கிடமில்லை. **यो वेद निहितं गुहायाम्**=ஹிருதயகுஹாநி ஹிதனை உபாஸிக்கப்படும் இத்தகைய ஆனந்தமயன் எம்மாதிரி யான விக்ரஹ (மூர்த்தி) விசேஷத்துடன் கூடினவன்? அந்த தேவதாவிசேஷம் யார்? என்ற ஆசங்கைவரும்பொழுது அதற்கு வேண்டி சுருதியானது **स यश्चायम्** என்றதாலு பதேசிக்கத்தொ டங்குகிறது. **य एषोऽन्तरादित्येहिरण्मयः पुरुषो दृश्यते हिरण्यश्मश्रुः हिरण्यकेशः आप्रणखात्सर्वएव सुवर्णः तस्य यथा कप्यासं पुण्डरीकमेवमक्षिणी। तस्योदिति नाम** என்றதால் ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தி யும், கமனீய(மிக்க வழகு பொருந்திய)விக்ரஹ யுக்தனுமான யா தொரு புண்டரீகாக்ஷனுண்டோ அவனே ஹிருதய குஹாந்தர் வர்த்தியும், விக்ஞானமயனுக்கு ஆந்தரனுமாவான். ஆகவே புண் டரீகாக்ஷத்வாதி விக்ரஹத்துடன் கூடின நாராயணனே அவன் என்று பொருள். இதினின்றும் அத்தகைய விக்கிரஹ விசிஷ்ட னை ஹிருதய குஹாந்தர்வர்த்தியினுடைய் தியானத்தைச்செய்ய வேண்டும் என்றேற்பட்டது. இவ்விடத்தில் **सच्च त्यच्चाभवत्** என்றதால் சித் அசித் சரீரகனை அநுஸந்தானம் செய்யவேண்டு வதாகச் சொல்லப்பட்டதாகவும் **सत्यं ज्ञानमनन्तम्** என்றதால் ஸ்வ ரூபத்தால் அநுஸந்தானம் செய்யவேண்டுவதாகச் சொல்லப் பட்டதாகவும் கொள்ளல்வேண்டும். ஸ்வரூபத்தால் செய்யவேண்

டுவதாகச் சொல்லப்பட்ட அனுஸந்தானமாவது:—ஆதித்ய மண்டலாந்தர்வர்த்தியாயும் புண்டரீகாக்ஷத்வ விசிஷ்டனாயும் அனுசந்திக்க வேண்டும் என்பதாம்.

जीवमुख्यप्राणलिङ्गान्नेतिचेन्नोपासात्रैविध्यात् என்ற 1வது அத்தியாயம் 4வதுபாதம் 17வது சூத்திரத்தில் ஸ்ரீபாஷ்யக்காரர் அவர்கள் சொல்லியிருப்பதாவது—"அந்த இந்த மூன்றுவிதமான பிரும்மானு ஸந்தானமானது வேறு பிரகரணங்களிலும் ஆசிரயிக்க பட்டிருக்கிறது. அதாவது:—सत्यं ज्ञानमनन्तं ब्रह्म என்பது முதலிய விடங்களில் ஸ்வரூபத்துடன் அனுஸந்தானமும், तत्सृष्ट्वा तदेवानुप्राविशत् तदनुप्रविश्य सच्च त्यच्चाभवत् என்ற விடத்தில் போக்திரு சரீரகனாகவும், (அதாவது: போக்தாவான ஜீவனை சரீரமாகவுடையவனாகவும் என்பதாம்) போக்யபோகோபகரணங்களை சரீரமாக வுடையவனாகவும் ஆசிரயிக்கப்பட்டிருக்கிறது" என்பதாம். இவ்விதம் இவருக்கு ப்ராப்யத்வத்திற்கு உபயுக்தமானவற்றைச்சொல்லி उता विद्वानमुं लोकम् என்பனவற்றால் சொல்லப்பட்ட பிரச்னங்களுக்கு स य एवंवित् என்றதாற் சுருதி பதில் சொல்லுகிறது. இவ்விடத்தில் स य एवंवित् अस्माल्लोकात्प्रेत्य என்றதால் பிரும்ம வித்துக்களான யாவர்க்கும் அர்ச்சிராதிமார்க்கமானது சொல்லப்பட்டதாகவாகிறது. आनन्दमयमात्मानमुपसंक्रामति என்றதால் உபாஸ்ய உபாஸகர்களான ஜீவப்பிரும்மங்களுக்கு போக்யபோக்த்ருபாவத்தை ப்ரதிபாதனஞ் செய்திருப்பதிலிருந்து முக்தியில் பிரும்மத்துடன் ஐக்யஞ் சொல்லும் பக்ஷமானது மறுக்கப்பட்டதாக வாகின்றது. एतमन्नमयम्= என்பது முதலிய ஐந்து பரியாயங்களிலுமுள்ள एतम् என்ற சப்தமானது பரமாத்மாவையேசொல்லுகின்றது अन्नमय प्राणमय मनोमय विज्ञानमय சப்தங்கள் அவற்றைச் சரீரமாகவுடைய பரமாத்மாவையே சொல்லுகின்றன. இந்த விடத்தில் வியாஸாசாரியர் அவர்களால் "எல்லா வித்வானும் இந்த வுலகினின்றும் ப்ரேத்ய (விலகி) அன்னமயாதி ஸமஷ்டி வியஷ்டியாகிற விபூதியை யுடையவரும், நிரதிசயானந்த ரூபியும் போக்யனாக ஆனவருமான பரமாத்மாவை தான் போக்தாவாக இருந்து கொண்டு அனுபவிக்கிறான் என கேள்விக்குப்பதில் சொல்லப்பட்டதாக வாகிறது" என்றதாற்

சொல்லப்பட்டு மிருக்கிறது. "अभयं प्रतिष्ठां विन्दते, अथ सोऽभयं गतो भवति" என்றதாற் சொல்லப்பட்ட விஷயத்தில் சாக்ஷியாக तदप्येष श्लोको भवति என்ற சுலோகமானது படிக்கப்படுகின்றது.

எட்டாவது அநுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அநுவாகம்.

### (मन्त्रः) यतो वाचो.........इत्युपनिषत् ॥

(க—ரை) வாக்கு, மனஸ், ஆகிய இவ்விரண்டும் ஆனந்தத்தின் முடிவைக்காண வேண்டி பிரவிருத்தித்து அதன் முடிவு காணுமலே நிவிருத்தியை யடைகின்றன. அத்தகைய் ஆனந்தத்தைக் குணமாகவுடைய பிரும்மத்தின் உபாஸனத்தால் ஸர்வக்லேச பயத்தின் நிச்சேஷ நிவிருத்தி யுண்டாகின்றது என்பது பொருள். அதையே சுருதியானது एतं ह वाव என்ற பாகத்தால் விளக்குகிறது. ஸ்வர்க்காதி ஹேதுவான புண்ணியத்தை செய்தேனில்லை, நரகாதி ஹேதுவான பாபத்தைச் செய்தேன் என இம்மாதிரியான சிந்தையானது இந்தப் பிரும்மவித்தைப் பாதிப்பதில்லை. ஏனெனில் ஸ்வர்க்காதி லோகங்களில் இச்சையில்லாதிருத்தலே அதன் காரணமாகும் என்பதாம். பிரும்மக்ஞானத்தால் இவனுடைய பாபங்கள் யாவும் பொசுக்கப்பட்டு விட்டபடியால் நரகாதி பயமும் இவனுக்கில்லை. இத்தகைய பிரும்ம வித்யையாலுண்டாகும் மாஹாத்ம்யமும் தியானஞ் செய்யத்தக்கதாகவே ஆகின்றது என்பதை स य एवम्=என்றதால் சுருதி உபதேசிக்கின்றது. एते= என்றதை एताभ्याम् என மாற்றிக்கொள்ளவேண்டும். ஆகவே இந்த புண்ணிய பாபங்களால் ஆத்மாவை स्पृणुते=ரக்ஷிக்கிறான். அதாவது: புண்ணிய பாபபலன் கிடையாது என்பதாம். திரும்பவும் उभे ह्येवैष என்று கூறினதானது எப்பொழுதுமே புண்ணியபாப ஸம்பந்தம் கிடையாதென்பதையும், அநுவாகத்தின் முடிவையும் விளக்குகின்றது. इत्युपनिषत्=இவ்விதம் பரமரஹஸ்யோபதேசம். அத்தகைய உபதேசயோக்கியனுக்கே இதைச் சொல்லவேண்டும் என்பது கருத்து. (எ—று)

குறிப்பு—இங்கு விசிஷ்டாத்வைதப்படி ஆனந்தமய ப்ரகரணத்தைப்பற்றி ரங்கராமாநுஜ பாஷ்யத்தில் விரிவா யுபதேசித்திருப்பதை அந்த ஸம்ப்ரதாய குருபதேசமூலம் தெரிந்து கொள்ளுவது அவசியமாதலால் அதை இங்கு மொழி பெயர்க்கவில்லை.

விசிஷ்டாத்வைதப்படி ஒன்பதாவது அநுவாகம் முற்றிற்று.

இரண்டாவது ஆனந்தவல்லீ முற்றிற்று.

---

## மூன்றாவது பிருகுவல்லீ.

### ஸ்ரீசங்கரபாஷ்யம் முதலாவதநுவாகம்.

(அ—கை) ஸத்ய, க்ஞான, அனந்தப் பிரும்மமானது ஆகாசம்முதல் அன்னமயம்வரையுள்ள காரியத்தை சிருஷ்டித்து அந்தக் காரியத்தையே அநுப்ரவேசஞ் செய்து விசேஷமுள்ளது (ஸாம்ஸாரிக தர்மஸமூஹமுள்ளது) போல யாதுகாரணத்தால் தோற்றத்தை யடைகின்றதோ, அக்காரணத்தால் ஸர்வகாரியத்தையும் விட உண்மையில் வேறானதாயும் அதிருச்யத்வாதி தர்மகமாயுமுள்ள அந்த ஆனந்தப் பிரும்மரூபமாகவே நானிருக்கிறேன் என்றறியவேண்டும். அவ்வித அறிவுக்கு வேண்டியே அநுப்பிரவேசமும் சொல்லப்பட்டது. இவ்விதம் அறிந்த னுபவிப்பவனுக்கு சுபாசுபகர்மங்கள் வேறு ஜன்மாவைத் தருவனவாகவாவதில்லை, என்பது ஆனந்த வல்லியி லுபதேசிக்கப்பட்டது. இத்துடன் பிரும்மவித்யையும் முடிந்து விட்டது. ஆயினும் இதற்குப் பின்னர் பிரும்ம வித்யைக்குச் சாதனமான தபஸ் சொல்லப்பட வேண்டும். அன்னமயாதி உபாஸனங்களும் அவசியஞ் செய்யவேண்டுமென முன்னர் சொல்லப்படவில்லை அதற்கு வேண்டியும் இந்த 3வது பிருகுவல்லீ ஆரம்பிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) भृगुर्वै वारुणिः। वरुणं पितरमुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तस्मा एतत्प्रोवाच। अन्नं प्राणं चक्षुः श्रोत्रं मनोवाचमिति। तꣳहोवाच। यतो वा इमानि भूतानि जायन्ते। येन जातानि जीवन्ति। यत्प्रयन्त्यभिसंविशन्ति। तद्विजिज्ञासस्व। तद्ब्रह्मेति। स तपोऽतप्यत। सतपस्तप्त्वा ॥१॥**

(ப—ரை) वारुणि:=வருணகுமாரரான भृगु: वै=பிரசித்தி பெற்ற பிருகுவானவர் पितरम्=தனதுபிதாவான वरुणम्=வருணனை हे भगव:=பெரியாரான பிதாவே! தாங்கள் ब्रह्म=பிரும்மத்தை अधीहि எனக்கு உபதேசஞ் செய்தருளல் வேண்டும் इति என उपससार=(சிஷ்யனாக) அடைந்தார். [स पिता=அந்த பிதாவானவர்] तस्मै=முறைப்படி சிஷ்யபாவத்தை யடைந்த புத்திரனுக்கு एतत्=இந்த अन्नम्=அன்னமாகிறவும், प्राणम्=பிராணனாகிறவும், चक्षु:=கண்ணாகிறவும், श्रोत्रम्=ச்ரோத்திரமாகிறவும், मन: மனதாகிறவும்,वाचम्=வாக்காகிறவுமான [ब्रह्मोपलब्धिद्वाराणि=பிரும்மத்தை அறிதற்குரிய உபாயங்களை] प्रोवाच=உபதேசித்தார். இவ்விதம் பிரும்மோபலப்தித்வாரங்களை யுபதேசித்தபின்னர் तम्=புத்திரனை அந்த பிருகுவைப்பார்த்து यत:वा=எதனிடமிருந்தே इमानि= இந்த भूतानि=பிரும்மாமுதல் (1) ஸ்தம்பம் ஈறாகவுள்ள பிராணிகள் जातानि=உண்டாயினவோ, जातानि=உண்டான அவைகள் येन=எதனால் जीवन्ति=பிராணதாரணஞ் செய்கின்றனவோ, (அதாவது:—விருத்தியையடைகின்றனவோ) (2) प्रयन्ति=லயமடைகின்றவைகளான பிராணிகள் यत्=எதை अभिसंविशन्ति=தாதாத்ம்ய முறையி லடைகின்றனவோ, तत्=அது ब्रह्म=பிரும்மம் इति என்பதாய் तत्=அதை विजिज्ञासस्व=விசாரித்தறிந்து கொள்வாயாக. இவ்வித முபதேசிக்கப்பெற்ற स:=அந்த பிருகுவானவர் तप:= ஆலோசனையை अतप्यत=செய்தார் स: அவர் तप: ஆலோசனையை तप्त्वा=செய்துவிட்டு.

(தா—ம்) பிதாவானவர் பிரியனான தனது புத்திரனுக்கு சிறந்ததான வித்யையையே உபதேசிப்பார், ஆனதுபற்றி இந்த வித்யையும் பிரிய புத்திரனான பிருகுவுக்கு பிதாவான வருணனால் உபதேசிக்கப்பட்டிருப்பதுபற்றி வெகு சிறந்ததே யாகும் என வித்யையைப் புகழவேண்டியே இங்கு கதை சொல்லப்பட்டிருக்கிறது. வருண புத்திரரும், மிக்கப் பிரசித்தருமான பிருகு மஹருஷியானவர் பிரும்மத்தை அறிய வெண்ணமுள்ளவராய்க் கொண்டு, ஓ பகவன்! எனக்குப் பிரும்மத்தை யுபதேசிக்கவேண்டு

(1) ஸ்தம்பம் என்பது ஓர்வகை சிறுபூச்சியாகும்.

(2) இந்த प्रयन्ति என்பது பிரதமாபஹுவசனமாகும்.

மெனத் தனது பிதாவ்வான வருணனை ஆசாரியனுக அடைந்தார். அவ்விதம் முறைப்படி சிஷ்யபாவத்தை யடைந்த புத்திரனுக்கு பிதாவான வருணன் பின்வரும் வசனத்தைச் சொல்லலானார். அத்தாவது: — அன்னம் (சரீரம்), அதற்குள்ளிருக்கும் அன்ன போக்தாவான பிராணன், அறிவு கருவிகளான கண், காது, மனது, வாக் ஆகிய இந்த பிரும்மோபலப்திக்குரிய த்வாரங்களை உபதேசித்தார் என்பதாம். இங்குள்ள **अन्नम्** என்றதால் ஸமஷ்டிஸ்தூல விராட் சரீரமும், **प्राणम्** என்றதால் அந்த சரீரத்திற்குள்ளிருக்கும் சூத்ராத்மாவான ஹிரண்ய கர்ப்பரும் சொல்லப்பட்டதாகக் கொள்ளல் வேண்டும். **मन:** என்றதால் **मनो ब्रह्मेति व्यजानात्** என்றதால் பின்னர் கூறப்போகும் ஆதிதைவிகமான மனஸ் சொல்லப் பட்டதாகவும் கொள்ளல்வேண்டும். அத்துடன் **चक्षु:**, **श्रोत्रम्**, **वाचम्** என்ற இவைகள் பிராணுதி கோசங்களில் அந்தர் பாவத்தை யடைந்தவைகளா யிருப்பதுபற்றி பிரும்மோபலப்தி த்வாரங்களாகவே தானுகின்றன என்றும் கொள்ளவேண்டும். இவ்விதம் பிரும்மோபலப்தி த்வார பூதங்களான அன்னுதிகளை யுபதேசித்த பின்னர் புத்திரனும் சிஷ்யனுமான பிருகுவை நோக்கி பின்வருமாறு பிரும்மலக்ஷணத்தை உபதேசித்தார். பிரும்ம லக்ஷணமாவது—ஹிரண்ய கர்ப்பர் முதல் ஸ்தம்பம் என்ற சிறு பூங்சி ஈறுகவுள்ள இந்த ஸகலப் பிராணிகளும் எந்தப் பிரும்மத்தினிடமிருந்தே உண்டாயினவோ, உண்டான அவைகள் எந்தப் பிரும்மத்தாலேயே பிராணதாரணஞ் செய்கின்றனவோ, முடிவில் லயமடைகின்ற இவைகள் எந்தப் பிரும்மத்தையே இரண்டறக் கலந்து விடுகின்றனவோ, (அதாவது: ஸகல பிராணிகளும் உத்பத்தி, ஸ்திதி லயகாலங்களில் எதன் ஸ்வரூபமாயிருத்தலை விட்டு விலகவில்லையோ என்பதாம்.) அந்த இது தான் பிரும்மத்தின் லக்ஷணமாகும். அந்தப் பிரும்மத்தை விசேஷமாக விசாரித்து அறிந்து கொள்ளுவதற்கு இச்சிப்பாயாக. அதாவது: இம்மாதிரி லக்ஷணமுள்ள பிரும்மம் யாதுண்டோ அதை அன்னுதிவாயிலாக அறிந்து அனுபவிப்பாயாக என்பதாம். இவ்விதமே **प्राणस्य प्राणमुतचक्षुषश्चक्षुरुत श्रोत्रस्य श्रोत्रमन्नस्यान्नं मनसो ये मनो विदुस्ते निचिक्युर्ब्रह्म पुराणमग्र्यम्** என்றதால் வேறு சுருதியும் இந்த அன்னுதி

களை பிரும்மோபலப்தி த்வாரங்களாகவே உபதேசிக்கின்றது. இவ்விதம் பிரும்மோபலப்தி த்வாரங்களையும், பிரும்ம லக்ஷணத்தையும் பிதாவினிடமிருந்து கேட்டு அந்தப் பிருகுவானவர் பிரும்மோபலப்திக்கு ஸாதனமாகும்படி தபஸ்ஸைச் செய்தார்.

சங்கை—குருவானவர் தபஸ்ஸைப் பிரும்மோபலப்தி ஸாதனமாக வுபதேசிக்காம லிருக்கும் பொழுது சிஷ்யனை பிருகுவானவர் தபஸ்ஸை பிரும்மவித்யா ஸாதனமாக எதனால் கொண்டார் எனின்?

உத்தரம்—அதனுண்மையை இங்கு கூறுவாம். அதாவது: குருவானவர் நேரில் இன்னதென பிரும்மத்தை உபதேசிக்காமல் பிரும்மத்தை யறிவதில் துவாரமாக அன்னாதிகளையும், यतो वा इत्यादि களால் அதன் லக்ஷணத்தையும் உபதேசித்திருப்பதினின்றும் அவரது உபதேசமானது ஏதோ ஸாவசேஷமாகவே (தொக்கி நிற்கின்றதாகவே) தான் ஆகிறது. இல்லாவிடில் பிரும்மத்தை யறியவெண்ணங்கொண்ட தனது புத்திரனுக்கு "இந்த மாதிரி ரூபமுள்ளது அந்தப் பிரும்மம்" என நேரில் அதைஸ்வரூபத்துடன் அன்றோ உபதேசிக்கவேண்டும். இவ்விதமோ உபதேசித்தாரில்லை. பின்னையோவெனில் தொக்கிநிற்கும்படியே உபதேசித்திருக்கிறார். ஆகவே பிதாவானவர் பிரும்மவிக்ஞானத்தைக் குறித்து வேறுஸாதனத்தை எதிபார்க்கிறார் என்பது கிடைக்கிறது.

சங்கை—அங்ஙனம் தொக்கிநிற்கும் ஸாதனமானது தபோவிசேஷம் என்பதை பிருகுவானவர் எவ்விதம் நிர்ணயஞ் செய்தார் எனின்?

உத்தரம்—கூறுவாம். உலகில் நிச்சிதமான பலனையுடைய எல்லா ஸாதனங்களுள் தபஸ்ஸே மேலான ஸாதனம் என்பது பிரசித்தமாயிருத்தலே அதன் காரணமாகும். ஆகவே தான் பிதாவினால் உபதேசஞ் செய்யப்படாவிடினும் பிருகுவானவர் பிரும்ம விக்ஞானஸாதனமாகத் தபஸ்ஸைக் கிரஹித்தார். வெளியிலுள்ள ஐம்புலன்களையும் விஷயங்களினின்றும் நிவிருத்திசெய்தலும், அந்தக்கரணமான மனதை தத்துவத்தில் நிலைத்திருக்கும்படி செய்தலுமே அத்தகைய தபஸ்ஸாகும்.

"मनसश्चेन्द्रियाणाञ्च ह्यैकाग्र्यं परमं तपः।
तज्ज्याय: सर्वधर्मेभ्य: स धर्म: पर उच्यते ॥

மனம், இந்திரியம் இவைகளை ஒருமுகப்படுத்தலே மேலான தவமாகும். எல்லா தர்மங்களைக் காட்டிலும் அதுவே மேலானது. அதுதான் மேலான தர்மமென்று சொல்லப்பட்டிருக்கிறது" என்றதால் ஸ்மிருதிகளிலும் அந்த தபஸ்ஸையே பிரும்ம பிரதிபத்திக்கு த்வாரமாகவும் சொல்லப்பட்டு மிருக்கின்றது. ஆகவே அந்த பிருகுவும் தபஸ்ஸைச் செய்து அதாவது:—மனத்தை ஒருமுகப்படுத்திக்கொண்டு என்பதாம். (எ—று)

குறிப்பு—சுருதியிலும், ஸ்மிருதியிலும், तपः=बाह्यान्तःकरण समाधानम् என்று உபதேசித்த பாஷ்யத்திலுமுள்ள तप என்ற பதத்திற்கு தத்வவிசாரஞ் செய்தல் என்ற பொருள் கொள்ள வேண்டுமே யொழிய யோக சாஸ்திரத்திற் சொல்லிய ஸமாதி என்ற பொருள் கொள்ளல் தகா. ஏனெனில் तप आलोचने ஆலோசனஞ் செய்தல் தபஸ் எனப்படும் என பாணினி சொல்லியிருப்பதும் தவிர, மஹாவாக்கியார்த்த க்ஞானத்தைக் குறித்து த்வம் பதார்த்த சோதன ரூபமான ஆலோசனமானது நெருங்கிய ஸாதனமாயிருத்தலும், இங்கு குருவினால் உபதேசிக்கப்பட்ட பிரும்ம லக்ஷணத்திற்கு முறையே ஐந்து கோசங்களினின்றும் ஆத்மதத்துவ விவேசனம் (பிரித்தறிதல்) செய்வதிலேயே உபயோகமிருத்தலும், பிரும்மத்தை அறிய விருப்பமுள்ள பிருகுவுக்கு பிரும்ம விஷயமான விசாரமின்றி ஜிக்ஞாஸா நிவர்த்தகமான நிர்ணயமுண்டாவதற் கிடமில்லாதிருத்தலுமே அதன் காரணமாகும். ஆனது பற்றியே தான் तद्विजिज्ञासस्व என்ற சுருதியை மூலமாகக் கொண்ட अथातो ब्रह्मजिज्ञासा என்ற முதல் சூத்திரத்தில் பிரும்மக்ஞானத்தை யடைய விருப்பமுள்ளவன் அது விஷயமான விசாரத்தை அவசியம் செய்யவேண்டும் என உபதேசிக்கவும் பட்டது. ஆனது பற்றியே தான் சுரேசுவரவார்த்திகத்தில்

अन्वयव्यतिरेकादिचिन्तनं वा तपो भवेत्।
अहं ब्रह्मेति वाक्यार्थबोधायालमिदं यत: ॥

என்றதால் தபஸ் சப்தமானது பிரும்ம விசாரத்தையே

சொல்லும் எனத்தகுந்த யுக்தியுடன் உபதேசிக்கப் பட்டிருக்கின்றது. இவ்விதமே சூத ஸம்ஹிதையிலும்

कोऽहं, मुक्तिः कथं, केन संसारं प्रतिपन्नवान् ।
इत्यालोचनमर्थज्ञास्तपः शंसन्ति पण्डिताः ॥

என்றதாற் தெளிவா யுபதேசிக்கப்பட்டு மிருக்கிறது என வனமாலை என்ற பாஷ்ய வியாக்கியானத்திற் கூறப்பட்டிருக்கிறது. (எ—று)

முதலாவது அநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாவது அநுவாகம்.

**(मन्त्रः) अन्नं ब्रह्मेति व्यजानात् । अन्नाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते । अन्नेन जातानि जीवन्ति । अन्नं प्रयन्त्यभिसंविशन्तीति । तद्विज्ञाय । पुनरेव वरुणं पितरमुपससार । अधीहि भगवो ब्रह्मेति । तꣳहोवाच । तपसा ब्रह्म विजिज्ञासस्व । तपो ब्रह्मेति । स तपोऽतप्यत । स तपस्तप्त्वा ॥**

(ப—ரை) **अन्नम्**=அன்னத்தை **ब्रह्मेति**=பிரும்மமென்று **व्यजानात्** = விசாரித்தறிந்தார். ஏனெனில்? **अन्नात् हि एव खलु**=அன்னத்திடமிருந்தே யன்றோ **इमानि**=இந்த **भूतानि**=பிராணிகள் **जायन्ते**=உண்டாகின்றன. **जातानि**=உண்டான அவைகள் **अन्नेन**=அன்னத்தினால் **जीवन्ति**=பிராணதாரணஞ் செய்கின்றன. **प्रयन्ति**=லயமடைகின்றவைகளான இவைகள் **अन्नम्**=அன்னத்தைக் குறித்து **अभिसंविशन्ति**=லயமடைகின்றன. அதாவது: அன்னத்தி லொடுங்குகின்றன **इति**=என்பதாம். **तद्विज्ञाय**=அந்த அன்னத்தைப் பிரும்மமாக வறிந்தபின்னர் **पुनरेव**=திரும்பவுமே **पितरं वरुणम्**= பிதாவான வருணனை **भगवः**=ஓ பெரியீர்! **ब्रह्म**=பிரும்மத்தை **अधीहि**=உபதேசம் செய்வீராக **इति** எனச்சொல்லி **उपससार**=ஸமீபத்தை வந்தடைந்தான். **तं ह**=அந்தப் புத்திரரான பிருகுவைப் பார்த்து பிதாவான வருணன் **तपसा**=தபஸ்ஸினால் **ब्रह्म विजिज्ञासस्व**=பிரும்மத்தை யறிந்து கொள்ளுவாயாக. **तपः**=தபஸ்ஸா

னது ब्रह्म=பிரும்மம் इति என்று उवाच=சொன்னார். स तपोऽतप्यत= அந்தப்பிருகு தபஸ்ஸைச் செய்தார். स तपस्तप्त्वा=அவர் தபஸ் ஸைச்செய்து.

(தா—ம்). எல்லா பூதங்க் (பிராணிக)ளும் அன்னத்தினிடமிருந்துண்டாகி, அன்னத்தாலேயே பிராணதாரணத்தையும் செய்து முடிவில் அன்னத்திலேயே ஒடுங்குகின்றன என்பதுபற்றி அன்னத்தைப்பிரும்மம் என்றெண்ணியது பொருத்தமானதே. இவ்விதம் அவர் அன்னத்தைப் பிரும்மமென ஆலோசித்தறிந்த பின்னர் பிதாவான வருணனை நோக்கி ஒபெரியீர்! தாங்கள் எனக்கு பிரும்மத்தை யுபதேசிக்கவேண்டும் எனச்சொல்லிக் கொண்டு திரும்பவுமே வந்தடைந்தார். என்ன ஸந்தேஹத்தால் திரும்பவும் இவர் பிதாவை வந்தடைந்தார் எனின்? கூறுவாம். தான் பிரும்மமாக எண்ணின அன்னமானது உத்பத்தியுள்ளதாகக் காணப்படுதலே அவரது ஸந்தேஹத்திற்குக் காரணமாகும். அடிக்கடி தபஸ்ஸைச் சொல்லுவதினின்றும் இந்த தபஸ்ஸானது ஸாதனங்களுள் மிக்க உயர்ந்தது என்பது விளக்கப்படுகின்றது. எதுவரை பிரும்மத்தின் நிரதிசயமான லக்ஷணமேற் படுவதில்லையோ, எதுவரை ஜிக்ஞாஸையும் விலகுவதில்லையோ, அதுவரை தபஸ்ஸு ஒன்றுதான் ஸாதனமாகின்றது. ஆகையால் தபஸ்ஸினால் பிரும்மத்தை யறிந்து கொள்ளுவாயாக. இவ்விதம் திரும்பவும் தபஸ்ஸைச் செய்தார். அவ்விதம் தபஸ்ஸைச் செய்த பின்னர். (எ—று)

குறிப்பு—"இங்குள்ள அன்னம் என்பது விராட்டாகும். பிரும்மத்திற்கோ உத்பத்தியில்லை. அதை நித்யமானதென சாஸ்திரங்கள் கூறுகின்றன. அன்ன சப்தத்தாற் சொல்லப்படும் விராட்புருஷனே ஹிரண்யகர்ப்பரிடமிருந்துண்டானதாக சுருதி சொல்லுகிறது. பிருதிவீ முதலிய ஸ்தூல பூதவடிவமான விராட் புருஷன் பூதங்களுக்குக் காரணமாயிருத்தலைக் காண்கிறோம்" என இவ்விதம் ஆலோசிக்கும் பிருகுமஹருஷிக்கு அன்னம் பிரும்மமா? இல்லையா? என ஸந்தேஹமுண்டாகிவிட்டது. சுருதியில் तपोब्रह्म என்ற வாக்கியமானது விதிக்கப்பட்ட தபஸ்ஸை பிரும்மமாக ஸ்துதிக்க வேண்டியேற்பட்டது என்றறியவும். மேலும் स तपोऽतप्यत சூத்ராத்ம ரூபமான பிராணனினால்

அன்னத்திற்கு (விராட்டிற்கு) நிரபேக்ஷப் பிரும்மத்துவம் ஸம்பவிப்பதற்கில்லை. பிராணன் ஸ்வதந்திரனாயிருப்பது பற்றி அவனுக்கு அந்த பிரும்மத்துவம் ஸம்பவிக்கலாம் என விசாரித்தறிந்தான் என்பதாம். இவ்விதம் தபஸ்ஸைச் செய்து பிராணன் பிரும்மம் என நிச்சயம் செய்தார். அந்த நிச்சயத்திற்குபயோகமாகும்படி प्राणाद्ध्येव என்பது முதலிய சுருதியையும் அதனிடம் பொருத்திப்பார்த்தார். அன்னமானது பிராணாதீனமாக இருப்பதுபற்றி அன்னத்தினிட மிருந்துண்டாவதாகக் கூறப்படும் பிராணிகள் பிராணனிடமிருந்தே தானுண்டாகின்றன வென்று கூறுவதும் பொருத்தமானதே என்பதை இங்குள்ள हि என்ற சப்தம் விளக்குகின்றது. இவ்விதம் லக்ஷணம், யுக்தி இவைகளைக்கொண்டு பிராணரூபப் பிரும்மத்தையறிந்து திரும்பவும் பிராண பிரும்மத்தினிடத்தில் ஸந்தேஹங்கொண்டவனாய் பிதாவான வருணனை வந்தடைந்தான். பிராணனாது மனதிற்கு அடங்கினதாகையாலும், ஞானசக்தியற்றிருத்தலாலும் பிராணவிஷயத்திலும் ஸந்தேஹங்கொண்டான். இவ்விதம் பிராணப் பிரும்மத்தினிடத்தல் ஸம்சயம் கொண்டு முக்கியமாயுள்ள வேறுபிரும்மத்தை விசாரித்தறிய வெண்ணங்கொண்டவனாய் திரும்பவும் விசாரஞ்செய்யத் தொடங்கினான். மனதால் பிராணநிரோதம் செய்யப்படுவதை உலகில் காண்பதாலும் மனத்திற்கு ஸ்வாதந்திரியமும் ஞானசக்தியும் இருப்பதாலும், அனது பற்றியே மனதில் பிரும்மத்திற்குச் சொல்லிய லக்ஷணம் ஸம்பவிப்பதாலும் ஆதிதைவிகமான ஸமஷ்டியந்தக்கரணமே பிரும்மம் என நிச்சயம் செய்தான். இவ்விதம் மனதை பிரும்மம் என அறிந்து திரும்பவும் அதிலும் ஸந்தேஹங்கொண்டவனாய் பிதாவை யடைந்தான். மனோவிஷயத்தில் இவனுக்குண்டான ஸம்சயகாரணம் பின்வருமாறு—'நம்போன்றவரின் மனம்போலவே தான் ஆதிதைவிகமான மனதும் கரணமாகவாகிறது. விக்ஞான சப்தத்தாற் சொல்லப்படும் கர்த்தாவுக்கதீன மாகவுமாகிறது. பரதந்திரமான வஸ்துவிற்கு பிரும்ம லக்ஷணம் சம்பவிக்காதன்றோ' என்பதாம். இவ்விதம் கரணமான மனதில் பிரும்மலக்ஷணம் பொருந்தாமையாலும் கர்த்தாவான விக்ஞானத்தினிடம்

பொருந்து மாதலாலும் ஆதிதைவிக விக்ஞானமான மஹத்தத்துவமானது பிரும்மம் எனநிச்சயஞ் செய்தான். மற்றதற்கு முன்போல பொருள் கொள்ளவும். திரும்பவும் விக்ஞானப் பிரும்மத்திற்கும் உத்பத்தி விநாசாதிகள் தெரிவதால் ஸம்சயமடைந்தவனாய் பிதாவான வருணனை யடைந்தான் என ஊஹித்தறியவும் என்று வனமாலையி லெழுதப்பட்டிருக்கிறது. (எ—று)

## மூன்றாவது அனுவாகம்.

**(मन्त्रः) प्राणो ब्रह्मेति व्यजानात्। प्राणाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते। प्राणेन जातानि जीवन्ति। प्राणं प्रयन्त्यभिसंविशन्तीति। तद्विज्ञाय। पुनरेव वरुणं पितरमुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तꣳहोवाच। तपसा ब्रह्म विजिज्ञासस्व। तपो ब्रह्मेति। सतपोऽतप्यत। स तस्तप्त्वा॥**

(க—ரை) இதன் பொருள் தெளிவாகையால் திரும்பவும் எழுதப்படவில்லை. இதன் கருத்தை இரண்டாவது அனுவாகக் குறிப்பிற் சொல்லியிருப்பதைப் பார்க்க. (எ—று)

## நான்காவது அனுவாகம்.

**(मन्त्रः) मनोब्रह्मेति व्यजानात्। मनसोह्येव खल्विमानि भूतानि जायन्ते। मनसा जातानि जीवन्ति। मनःप्रयन्त्यभिसंविशन्तीति। तद्विज्ञाय। पुनरेव वरुणं पितरमुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तꣳहोवाच। तपसा ब्रह्मविजिज्ञासस्व। तपोब्रह्मेति। स तपोऽतप्यत। स तपस्तप्त्वा।**

(க—ரை) இதன் கருத்தையும் 2வது அனுவாகக்குறிப்பிற் காண்க. (எ—று)

## ஐந்தாவது அனுவாகம்.

**(मन्त्रः) विज्ञानं ब्रह्मेति व्यजानात्। विज्ञानाद्ध्येव खल्विमानि भूतानि जायन्ते। विज्ञानेन जातानि जीवन्ति। विज्ञानं प्रयन्त्यभिसंविशन्तीति। तद्विज्ञाय। पुनरेव वरुणं पि-**

तरमुपससार। अधीहि भगवो ब्रह्मेति। तꣳहोवाच। तपसा ब्रह्म विजिज्ञासस्व। तपो ब्रह्मेति। स तपोऽप्यत। स तपस्तप्त्वा ॥ ५ ॥

(க—ரை) இதன் கருத்தையும் 2வது அநுவாகக்குறிப்பிற் காண்க. (எ—று)

ஆறுவது அநுவாகம்.

(मन्त्रः) आनन्दो ब्रह्मेति व्यजानात्। आनन्दाद्ध्येव खल्विमानि भूतानिजायन्ते। आनन्देन जातानि जीवन्ति। आनन्दं प्रयन्त्यभिसंविशन्तीति। सैषा भार्गवी वारुणी विद्या। परमे व्योमन्प्रतिष्ठिता। य एवं वेद प्रतितिष्ठति। अन्नवानन्नादो भवति। महान्भवति प्रजया पशुभिर्ब्रह्मवर्चसेन। महान् कीर्त्या ॥ ६ ॥

(க—ரை) இவ்விதம் தபஸ்ஸினால் விசுத்தமான அந்தக்கரணமுள்ளவனாய் பிராணாதிகளில் பிரும்ம லக்ஷணத்தைக் காணாதவனாய் மெள்ளமெள்ள முறையே அன்னமயாதி கோசங்களுக்குள்ளில் பிரவேசித்து முடிவில் எல்லாவற்றிற்கும் உள்ளிலிருக்கும் ஆனந்த ரூபமான பிரும்மத்தை பிருகுவானவர் தபஸ்ஸினாலேயே அறிந்தார். ஆனதுபற்றி பிரும்மஜிக்ஞாஸுவானவன் பாஹ்யாந்தக்கரண ஸமாதான லக்ஷணமான மேலான தபஸ்ஸை அனுஷ்டிக்க வேண்டுவதவசியமாகிறது என்பது இந்தப்பிரகாணத்தின் கருத்து. பிறகு சுருதியானது பிருகுவருண ஸம்வாதரூபமான கதையினின்றும் விலகி தனது சொந்த வசனத்தால் இக்கதையினால் கிடைத்த பொருளைச் சொல்லுகிறது. भार्गवी=பிருகுமஹருஷியா லறியப்பட்டதும், वारुणी=வருணனாலுபதேசிக்கப்பட்டதுமான सैषा=அந்த இந்த विद्या=பிரும்மவித்யையானது परमे व्योमन्=ஹிருதயகுஹையிலுள்ள அத்வைதமான ஆனந்தத்தில் प्रतिष्ठिता=முடிவையடைகிறது. यः எவனொருவன் एवं=இவ்விதம் தபஸ்ஸாகிய ஸாதனத்தினாலேயே முறையே அன்னமயம் முதல் உள்ளில் பிரவேசித்து वेद=ஆனந்தரூபமான பிரும்

மத்தை யறிகின்றானோ அவன் பிரும்மவித்யையானது பிரும்மானந்தத்தில் முடிவடைவது பற்றி **प्रतितिष्ठति**=ஆனந்த ரூபமான பரப்பிரும்மத்தினிடத்தில் நிலைபெறுகிறான். அதாவது:—பிரும்மமாகவே ஆகிறான் என்பதாம். இவ்விதம் பிரும்மத்தில் நிலை பெற்றவனுக்கு திருஷ்டமான (வேறு) பலனும் சொல்லப்படுகின்றது. **अन्नवान्**=அதிகம் அன்னமுள்ளவனாகவும் (எவரும் யாதேனுமொரு முறையில் ஏதேனும் அன்னமுள்ளவராகவே இருக்கக் கூடுமாதலால் இங்குள்ள **அன்னவான்** என்றதால் அதிகம் **அன்ன முள்ளவன்** எனப்பொருள் கொள்ள வேண்டுவது அவசியமாகிறது. இவ்விதம் பொருள்கொள்ளாவிடில் பிரும்ம வித்யையின் பயனாக இதைச் சொன்னது வீணாகிவிடும்) **अन्नादः**=நல்ல பசியுள்ளவனாகவு மாகிறான். (இங்கும் அவ்விதமே கருத்துக்கொள்ளவும்) **प्रजया**=புத்திராதியினாலும், **पशुभिः**=பசுமுதலியவற்றாலும், **ब्रह्मवर्चसेन**=சமம், தமம், க்ஞானம் முதலியவற்றாலுண்டாகும் தேஜஸ்ஸினாலும் **महान्भवति**=மஹானாக வாகிறான். **कीर्त्या**=சுபசரித்திரநிமித்தமான கீர்த்தியினால். **महान्**=மஹானாகவும் [**भवति**=ஆகிறான்] (எ—று)

சங்கை — கிருதகிருத்யனான பிரும்ம வித்துக்கு இங்கு சொல்லிய வேறு திருஷ்ட பயனானது ஸம்பவிப்பதற்கில்லை. பிரும்ம வித்தாயுள்ளவர் எவர்க்கும் இந்த பலன் நியமமாகக் காணப்படவுமில்லை. **चित्रयायजेत पशुकामः** என்ற விடத்தில் சித்திராயாகம் செய்பவனுக்கு இந்த ஜன்மத்தில் பசுரூப பலன் ஸம்பவிக்காவிடில் வேறு ஜன்மத்தில் ஸம்பவிப்பதாக எவ்விதம் சொல்லுகின்றோமோ, அவ்விதம் பிரும்ம வித்துக்கு இந்த ஜன்மத்தில் மேற்கூறிய திருஷ்ட பலன்களில்லாவிடினும் அடுத்த ஜன்மத்தில் வரும் என்று சொல்லுவதற்கில்லை. அவனுக்கு வேறு ஜன்மமில்லாதிருத்தலே அதன் காரணமாகும். ஆகவே இங்கு கூறிய **अन्नवान्** என்றது முதலிய பயன் வீணே எனின் ?

உத்தரம்—நிர்க்குண பூம வித்யாப்ரகரணத்தில் **स एकधा भवति** என்பனவற்றாற் பூம வித்யையை ஸ்துதிக்க வேண்டி எவ்விதம் ஸகுண வித்யைக்குரிய பலனுபதேசிக்கப் படுகிறதோ, அவ்விதமே இங்கும் பின்னர் சொல்லப்படும் அன்ன, அன்னாத

த்வ உபாஸன பலனைது பிரகிருத பிரும்மவித்யையை ஸ்துதிக்க வேண்டி பிரகிருத பிரும்ம வித்யாபலனைச் சொல்லப்பட்டது என்று கொள்ளப்படுவதால் முற்கூறிய ஆசங்கைக் கிடமில்லை. "விரமோதாப தேசமானது அன்னத்தை ஸ்துதிக்கவேண்டியே" என்று சொன்ன பாஷியக்காரர் அவர்களுக்கும் இது ஸம்மதமானதே என வனமாலையில் சொல்லப்பட்டிருக்கிறது.

சங்கரபாஷ்யப்படி ஆருவது அனுவாகம் முற்றிற்று.

---

## மூன்ருவது பிருகுவல்லீ.

### வித்யாரண்ய தீபிகைப்படி முதலாவது அனுவாகம்.

### (मन्त्रः) भृगुर्वै.........तप्त्वा ॥

(க—ரை) இரண்டாவது அனுவாகத்தில் பிரும்ம வித்யை சொல்லப்பட்டது. பிறகு 3-வது அனுவாகத்தில் அதன் ஸாதனங்கள் சொல்லப்படுகின்றன. ஆனல் ஸம்ஹிதோப நிஷத்தில் பஹிரங்க ஸாதனங்களான கர்மாக்கள் சொல்லப்பட்டிருக்கின்றனவாயினும் விசாரரூபமான அந்தரங்க ஸாதனமானது சொல்லப்படாததால் அது இங்கு சொல்லப்படுகின்றது. விசாரமானது சொல்லப்படின் அதற்கு அங்கங்களான மனனதிகளும் சொல்லப்பட்டனவாகவே வாகிவிடும். ஆகவே முதலில் பிரும்மவித்யாஸ்துதிக்கு வேண்டி கதையைச் சொல்லத் தொடங்குகிறது. **भृगुर्वै वारुणिः**=மந்திரப் பிராம்மண பிரசித்தரும் கோத்திரப்ரவர்த்தகருமான பிருகு என்றமஹருஷியானவர் ஒருவருண்டு. அந்தபிருகு தனது பிதாவான வருணனை குருவாக அடைந்தார். இங்கு "**अधीहि भगवो ब्रह्म**" என்பது குருபஸத்திசெய்யும் மந்திரமாகும். ஹே **भगवः**=பூஜ்யஸ்வரூபரான ஹேகுருவே! பிரும்மத்தை சித்தத்தால் அதிகம் நினைத்து எனக்கு உபதேசம் செய்வீராக என்பது அதன் பொருள்.

(அ—கை) பிரும்மக்ஞானம் வரும் வழியின் உபதேசத்தைச் சொல்லுகிறது.

**(मन्त्रः) तस्माएतत्प्रोवाच.........वाचमिति ॥**

(க—ரை) மந்திர பூர்வமாய் சிஷ்யபாவத்தை யடைந்த பிருகுவுக்கு **एतत्**=இந்த அன்னாதியான ஞானத்வாரத்தை சொன்னார். அன்னமய, பிராணமய, மனோமய கோசங்களுக்கு உபாதான காரணங்களான அன்னம், பிராணன், மனஸ் இவைகளும், சக்ஷுஸ், சுரோத்திரம், வாக்கு இவைகளும் மனதானதுபோலவே துவார பூதங்களாகின்றன. இங்குள்ள **इति**=என்ற சப்தமானது சொல்லப்படாத த்வக் முதலிய ஞானேந்திரியங்களுடையவும், பாணி, பாதம் முதலிய கர்மேந்திரியங்களுடையவும்; ஸமுச்சயத்தைத் தெரிவிக்கின்றது. "கிளையின் நுனியில் சந்திரன்" என்ற விடத்தில் சந்திர தர்சன விஷயத்தில் அதனருகிலிருக்கின்ற மரக்கிளையானது சந்திரனைக் காண்பிப்பதுபற்றி எவ்விதம் த்வாரமாக வாகின்றதோ, அவ்விதமே குஹா நிஹிதமான பிரும்ம தரிசன விஷயத்தில் அதைத் தெரிவிக்கின்றவைகளான அன்னம், பிராணன், இவைகள் துவாரங்களாக வாகின்றன. பிராணாதி கல்பனாதிஷ்டானமானதுபற்றி பிராணாதிரூபமான பிரும்மமானது பிராணாதிகள் வாயிலாக அறிந்து கொள்ளக் கூடியதாகின்றது. அதாவது: அஹம் புத்திகம்யங்களான அன்னப்பிராணாதிகளின் மத்தியில் பிரும்மத்தை விசாரித்தறிய வேண்டியது என்பதாம்.

(அ—கை) பிரும்ம லக்ஷணத்தினுடையவும், பிரும்மக்ஞான ஹேதுவான விசாரத்தினுடையவும் உபதேசத்தை யுபதேசிக்கின்றது—

**(मन्त्रः) तꣳहोवाच.........तद्ब्रह्मेति ॥**

(க—ரை) ஞானத்வாரத்தைக் கேட்டதும் அதை அறிந்து கொள்ள மிக்க ஆவலுள்ளவனான அந்த பிருகுவைப்பார்த்து தனது ஆப்தத்வத்தை முன்னிட்டு அந்தப்பிருகு கேட்காவிட்டாலும் தானே (வருணன்) சொல்லலுற்றார். **ह**=என்றதால் அவ்விதமுபதேசிப்பதில் வருணனுக்குரிய பிரீத்யதிசயம் தெரிவிக்கப்படுகின்றது. **इमानि भूतानि**=ஆகாசாதிகளான பஞ்சபூதங்களும், பௌதிக தேஹோபேதர்களான ஹிரண்யகர்ப்பர் முதல் ஸ்தம்பம் என்ற சிறுபூச்சி ஈறாகவுள்ள எல்லாப்பிராணிகளும் **यतः**=எந்த

வஸ்துவினிடமிருந்து **जायन्ते**=உண்டாகின்றனவோ இங்குள்ள **वै** என்பது **इमान् लोकानसृजत** என்ற வேறுசுருதியிலுள்ள பிரசித்தியைத்தெரிவிக்கின்றது. உண்டான பூதங்கள் எந்தவஸ்துவினால் ஜீவிக்கின்றனவோ, அதாவது: ஸ்திதியை யடைகின்றனவோ, **प्रय-न्ति**=நாசத்தை யடையும் பிராணிகள் எந்தவஸ்துவை முற்றிலுமடைந்து விடுகின்றனவோ, அதாவது: நுரை, கொப்பளம், அலை இவைகளுக்கு உத்பத்தி, ஸ்திதிலயங்கள் ஸமுத்திரத்தில் எவ்விதமேற்படுகின்றனவோ அவ்விதமே இங்கும் காணவேண்டுமென்பதாம். ஆகவே **तत्** ஜகத்தின் உத்பத்தி, ஸ்திதி, லயம் இவற்றிற்குக் காரணமான வஸ்துவை **विजिज्ञासस्व**=விசாரிப்பாயாக. அதே வஸ்துதான் உன்னால் கேட்கப்பட்ட பிரும்மம். என சொல்லி முடித்தார். (எ—று)

(அ—கை) சாஸ்திரத்திற் சொல்லப்படும் ஜகத்காரணத்வமானது மாயாவிசிஷ்டமான பிரும்மத்துக்குத்தான் எல்லா விதத்திலும் பொருத்தமுள்ளது. ஜகத்காரணத்வ ரூபமாக தடஸ்த லக்ஷணத்தால் உபலக்ஷிதமான பிரும்மத்தினுடைய ஞானத்தில் விசாரமானது ஸாதனமாகிறது எனக்கேட்டவரான பிருகுவுக்கு முதல் பரியாயத்திலுண்டான நிச்சயமானது தெரிவிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) स तपोतप्यत.........अभिसंविशन्तीति ॥**

(க—ரை) இங்குள்ள **तपः** என்ற சப்தத்தால் நான்கு ஆசிரமங்களுடையவும் தர்மமானது சொல்லப் படுகின்றது. அந்த ஆசிரமதர்மங்கள் பிரும்மஞான ஹேதுவாக இருத்தலே அதன் காரணமாகும். ஆசிரமதர்மத்திற் சேருத ஜபாதிகளும் பிரும்மஞான ஹேதுக்களாகும் என நிர்ணயஞ் செய்யப்பட்டிருக்கின்றனவாயினும் ஆசிரமிகளின் தர்மமானது பிரும்மஞான ஹேதுவாகவாகும் விஷயத்தில் மிக்கச் சிறந்ததாகவாகும் என்பதில் ஆக்ஷேபமில்லை. ஆகவே அந்த பிருகுவானவர் ஸ்வாத்யாய பூர்வகமாய் சித்தைகாக்ர்ய ரூபமான தபஸ்ஸைச் செய்தார். அந்த சித்தைகாக்ர்யரூபமான தபஸ்ஸுடன் கூடினவராய்க் கொண்டு ஜகதுத்பத்தி, ஸ்திதி, லயஹேதுத்வ ரூபமான லக்ஷணத்தை பொருத்திப்பார்த்து அன்னத்திற்கு பிரும்மத்வத்தை நிஸ்சயம்

செய்துகொண்டார். इमानि भूतानि=ஸ்தூலதேஹங்கள் अन्नाद्ध्येव खलु=அன்னத்தினின்றேயன்றோ जायन्ते=உண்டாகின்றன. இங்குள்ள एव என்றதால் கர்ப்பாசயத்திலிருக்கின்ற அன்னரஸமயமாயிருத்தல் பற்றி காரணமாகவான சுக்ல, சோணிதத்தை விட வேறு ஒன்றும் காரணமாவதில்லை என்பதுதெரிவிக்கப்படுகின்றது. ஸ்தூலதேஹத்திற்கு அன்னம் காரணம் என்பது உலகப் பிரசித்தமாயுள்ளது என்பதை हि என்ற சப்தம் போதிக்கின்றது "अन्नात्पुरुष:" என்ற சுருதிப்பிரசித்தியை खलु என்றசப்தம் போதிக்கின்றது. ஆகாசாதி பூதங்கள் ஸ்வரூபத்தால் அன்னத்தினிடமிருந்து உண்டாவதில்லை தானாயினும், தேஹாகாரமாகப் பரிணமத்தை யடைந்த அவைகளுக்கு அன்னாதீனமான உத்பத்தி யிருப்பதால் அன்னத்திற்கு ஜகத்ஹேதுத்வம் சொல்லப்பட்ட தெனக்கொள்ளவும். (எ—று)

(அ—கை) பிருகுவுக்கு இரண்டாவது பரியாயத்திலுண்டான நிஶ்சயத்தைத் தெரிவிக்கிறது—

(मन्त्र:) तद्विज्ञाय.........संविशन्तीति ॥

(க—ரை) तत्=முன்னர் சொல்லப்பட்ட அன்னத்தின் பிரும்மத்வத்தை विज्ञाय=லக்ஷணமமைவதைக் கொண்டு விசேஷமாக நிஶ்சயஞ்செய்து கொண்டு அதிலும் ஸந்தோஷமடையாதவராய் ஸம்சயம்கொண்டு திரும்பவும் அதையறியவிரும்புகிறார். சோம்பலின்றித் திரும்பவும் மந்திரபூர்வகமாய் குருபஸத்திசெய்தார். அன்னப்பிரும்ம விசாரத்தால் பிருகுவுக்குச் சந்தோஷமுண்டாகாததற்கு காரணம் யாதெனின். கூறுவாம் வாஜஸநேய ப்ராம்மணத்தில் "अन्नं ब्रह्मेत्येव माहु: । तन्नतथा पूयति वा अन्नमृते प्राणात् ।" அன்னத்தைப் பிரும்மம் என்கின்றனர், அன்னம் பிரும்மமாகாது. ஏனெனில் அன்னமானது பிராணன் இல்லாவிடில் நாற்றமெடுத்துவிடுகிறது" என உபதேசிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதமே அன்னத்தினுடைய பூதிகந்தமானது அதன் காரியமான தேஹத்திற் காணப்படுகின்றது. ஆகவே தேஹோத்பத்தி ஸ்திதி லயகாரணமா யிருப்பினும் அன்னத்தை பிரும்மமென்பது பொருந்தாது என்பதாம். இவ்விதம் ஐயங்கொண்டு குருபஸத்

திசெய்த வரான பிருகுவுக்கு குரு முன்னர் சொன்ன சித்தை. கார்யரூபமான தபஸ்ஸையே ஸாதனமாக வுபதேசித்தார். அத்தகைய தபஸ்ஸானது பிரும்மஸாக்ஷாத்காரத்திற்கு அந்தரங்கஸாதன மென்பதைக் காட்டவேண்டி तपो ब्रह्म என அபேதமானது சொல்லப்பட்டது. ஸத்யக்ஞானாதி ஸ்வரூபலக்ஷண வாக்கியத்தினால் பிரும்மமானது உபதேசிக்கப்பட்டதிலிருந்து சாஸ்திரத்தாலறியக்கூடியதாயிருத்தல் பற்றி தர்மாதர்மம் போல பரோக்ஷமென்றே பிரும்மம் எண்ணப்படும். ஆனால் ஏகாக்ர புத்தியால் அதைப் பிரத்யக்ஷமாகக் காணக்கூடும் எனக்கருதி பிரும்மஸ்வரூபத்தைச் சொல்லாமலே வருணன் தபஸ்ஸையே உபதேசித்தார் என்பதாம். பிருகுவானவர் ஏகாக்ர சித்தத்தால் முன்னர் சொல்லப்பட்ட ஜகத்காரணத்வ லக்ஷணத்தைப் பொருத்திப் பார்த்து பிராணனைப் பிரும்மமென நிச்சயம் செய்து கொண்டார். ஆகவே உபாதானத்தன்மை யில்லாவிடினும் உத்பத்தி, ஸ்திதி,லயம், ஆகிய இம்மூன்றிற்கும் நிமித்தமாயிருத்தல் பற்றி பிராணன் பிரும்மமாகவாகலாம் என்ற நிச்சயம் பிருகுவுக்கேற்பட்டது.

(அ—கை) மூன்றாவது பரியாயத்தில் பிருகுவுக்குண்டான நிச்சயமானது சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) तद्विज्ञाय.........अभिसंविशन्तीति ॥**

(க—ரை) பிராணன் ஜடமானது பற்றி அதற்குப் பிரும்மத்வம் பொருந்ாது. प्रज्ञानं ब्रह्म विज्ञानमानन्दं ब्रह्म என்பது முதலிய விடங்களில் பிரும்மமானது சேதனம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. மனஸ்ஸோ க்ஞானசக்தி யுள்ளதானதுபற்றி சேதனமாகிறது. ஜன்மாதி காரணத்வரூபமான லக்ஷணமும் மனஸ்ஸிலிருக்கின்றது. மனதின் ஸங்கல்பத்தை யொட்டியே தேஹவிசிஷ்டப் பிராணிகளின் உத்பத்தியைக் காண்கிறோம். கிருஷி, வியாபாரம் முதலிய ஜீவனோபாயமானது மனதாலாலோசனை செய்தே உண்டாவதால் மனஸ்ஸானது ஜீவன ஹேதுவாகவும் ஆகிறது. மனதின் அபிமான மில்லாவிடில் மரண முண்டாவது பற்றி மரண ஹேதுவாகவும் மனஸ்ஸானது ஆகிவிடுகின்றது. ஆகவே உத்பத்தி, ஸ்திதி, லயரூப லக்ஷணமமைவதை யொட்டி மனதிற்கு பிரும்மத்வமானது நிச்சிதமாகிறது. (எ—று)

(அ—கை) நான்காவது பரியாயத்தில் பிருகுவுக்குண்டான நிஶ்சயமானது தெரிவிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) तद्विज्ञाय.........अभिसंविशन्तीति ॥**

(க—ரை) கண் முதலியவற்றைப்போலவே மனஸ்ஸூம் கரணமாக இருப்பது பற்றி கர்த்திரு பாதந்திரமாக வாவதால் மனஸ் பிரும்மமாக வாகாது. விக்ஞானமோ கர்த்தாவாக வாகின்றது என்பது **विज्ञानं यज्ञं तनुते** என்ற விடத்திற் சொல்லப்பட்டு யிருக்கிறது. விக்ஞானமானது கர்மம் வாயிலாக தேஹோத்பத்தி ஹேதுவாக வாவதால் உத்பத்தி காரணமாகவும், லௌகிகமான கிருஷி முதலியவற்றிற்குக் கர்த்தாவானதுபற்றி ஜீவன ஹேது வாகவும், மரண்காரணமான யுத்தாதி பிரவிருத்தி மூலம் லய ஹேதுவாகவும் ஆகிறது. ஆகவே உத்பத்தி ஸ்திதி லயம் என்ற லக்ஷணம் அமைவதை யொட்டி விக்ஞானமானது பிரும்மமாகக் கூடும். (எ—று)

(அ—கை) ஐந்தாவது பரியாயத்தில் பிருகுவுக்குண்டான நிஶ்சயமானது தெரிவிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) तद्विज्ञाय.........अभिसंविशन्तीति ॥**

(க—ரை) கர்த்திருத்வமானது கிலேசத்தைத் தரக்கூடியதாதலால் விக்ஞானத்திற்கு பிரும்மத்வம் பொருந்தாது. மேலும் அன்னம்முதல் விக்ஞானம்முடியவுள்ள நான்கிற்கும்ஸர்வபூதோத்பத்தி ஹேதுத்வம் கிடையா. ஆகாசாதி மஹா பூதங்கள் பௌதிகமான அன்னாதிகளினின்று முண்டாவதில்லை. ஆனந்தத்திற்கோ கிலேச மற்றிருத்தல் பற்றியும், ஸ்வரூபத்தால் யாவர்க்கு மிஷ்டமா யிருத்தல் பற்றியும், பரமபுருஷார்த்தமாக வாவதினின்றும், ஆகாசாதி ஸர்வ பூதகாரணமாக வாவதினின்றும் முக்கியமாகவே பிரும்மத்வம் ஸம்பவிக்கின்றது. ஆகவே ஜகத்காரணத்வ லக்ஷணத்தாற் காண்பிக்கப்பட்ட அத்வைத ஆனந்தமானது பிரும்மம் என பிருகுவானவர் ஐகாக்ர்யரூபமான தபஸ்ஸினால் ஸாக்ஷாத்கரித்தார். ஆகவே அந்த தபஸ் ஒன்றுதான் முக்கியமான ஸாதனமாகிறது இத்தகைய ஐகாக்ர்யரூபமான மேலான தபஸ்ஸை ஸம்

பாதனஞ் செய்வதற்குரிய பலவித உபாயங்கள் *பாதஞ்ஜலம்முத லியயோக சாஸ்திரத்தி லுபதேசிக்கப் பட்டிருக்கின்றன. (எ–று)

(அ–கை) இதுவரை கூறியகதையில் ஜகத்காரண ரூபமாக விசாரிக்கப்பட்ட ஆனந்தரூப பிரும்மத்தின் ஸாக்ஷாத்காரத்தில் சித்தைகாக்ர்ய ரூபமான தபஸ்ஸானது அந்தரங்க ஸாதனம் என்று உபதேசிக்கப்பட்டது. அன்னுதி விஞ்ஞானாந்தமான இந்த நான்கைக் காட்டிலும் வேறான ஆனந்தரூபமானது எவ்விதம் தத்வமாகின்றதோ, அவ்விதமே ஆனந்தத்தைக் காட்டிலும் வேறானதொரு தத்வம் இருக்கலாம் என்ற சங்கையைப் போக்க வேண்டி வித்யையை உபஸம்ஹாரஞ் செய்கிறது—

(मन्त्रः) सैषा भार्गवी.........प्रतिष्ठिता ॥

(க–ரை) एषा=ஏகாக்ரசித்த ஜன்யமான அனுபவப்பிரசித்தமானதும், भार्गवी=பிருகுவாலடையப்பட்டதும், वारुणी=வருணுற் சொல்லப்பட்டதுமான विद्या=வித்யையானது परमे व्योमन् பிரும்மதத்துவத்தில் முடிவையடைகிறது. (எ–று)

(அ–கை) ஏகாக்ர சித்தமுள்ள உத்தமாதிகாரிக்கு மேற் சொல்லிய பிரும்ம வித்யையானது சுலபமாகிறது. எவனொருவன் ஸாம்ஸாரிக பலகாமனையால் சஞ்சலமான சித்தமுள்ளவனுயிருக்கின்றானோ, அவனுக்கு அம்மாதிரியான ஸாம்ஸாரிக பலனுக்குரிய ஸாதனத்தைச் சொல்லும் வியாஜமாக சித்தைகாக்ர்ய ஹேதுவான உபாஸனத்தை சுருதி விதிக்கிறது—

(मन्त्रः) स य एवं वेद.........महान्कीर्त्या ॥

(க–ரை) एवम्='அன்னம் பிரும்ம'' என்று தொடங்கி "ஆனந்தோ பிரும்ம'' என்றது முடியவுள்ளவற்றால் சொல்லப்பட்டதில் यः=எந்தப் புமான், அன்னம் பிரும்ம என உபாஸிக்கின்றானே அந்தப் புமான் மனஸ்ஸின் சாஞ்சல்ய மின்மையால் நிலை பெற்றவனாக ஆகிறான். மேலும் அதிகமான அன்ன முள்ளவனாய் அந்த அன்னத்தை உண்பதற்கு ஸமர்த்தனாக அதாவது:

* அத்தகைய யோக ரஹஸ்யத்தின் உண்மையை நமது பாதஞ்ஜல யோகஸூத்திர மொழிபெயர்ப்பிற் காண்க.

ரோகாதி யற்றவனுக ஆகிருன் என்பதாம். மேலும், புத்திர பௌத்திராதி பிரஜையினுலும், பசு குதிரை முதலிய பசுவினு லும், வேத சாஸ்திராப்யாஸ ரூபமான பிரும்ம வர்ச்சஸ்ஸினுலும் அந்தந்த விஷயங்களினின்றுண்டான கீர்த்தியினுலும் ஸமிருத் தியை (நிறைவை) அடைகிருன். (எ—று)

வித்யாரண்ய தீபிகைப்படி ஆருவது அனுவாகம் முற்றிற்று.

---

## மூன்ருவது பிருகுவல்லீ.

## விசிஷ்டாத்வைதம் முதலனுவாகம்.

(அ—கை) வேறு லக்ஷணத்தால் பிரும்மத்தை பிரதிபாதனஞ் செய்யவேண்டியும், தபஸ்ஸாற் போக்கப்பட்ட கல்மஷத்தை யுடைய அந்தக்கரணம் தான் பிரும்ம பிரதிபத்தியில் ஹேதுவா கின்றது என்பதைப் பிரதிபாதனஞ்செய்ய வேண்டியும் பிருகு வல்லீ ஆரம்பஞ் செய்யப் படுகின்றது—

**(मन्त्रः) भृगुर्वै.........स तपस्तप्त्वा ॥**

(க—ரை) வருண புத்திரனுன பிருகு பிதாவான வருணனை **अधीहि भगवो ब्रह्म** என்ற மந்திர பூர்வகம் சிஷ்யனுக அடைந்தான். ஹே பகவ:! பூஜார்ஹரே! பிரும்ம அதீஹி, பிரும்மத்தை உபதே சிக்க வேண்டி நினைவில் கொண்டுவாரும். அல்லது உபதேசம் செய்யும். பிறகு குருவான வருணன் அவனுடைய மனதைச் சோதிக்க வேண்டி "அன்னம் பிரும்ம" "பிராணம் பிரும்ம" என் பது முதலியவற்றை யுபதேசிக்கவே எல்லாமே பிரும்மங்களா? அல்லது ஒன்றுதான் பிரும்மமா? அவற்றுள் எதைப் பிரும்ம மாக எண்ணுவது? என்று கலங்கின மனதுள்ளவனுன புத்திரனை நோக்கி பின்வருமாறு சொல்லத் தொடங்கினுர். **यतो वा इमानी-** .. **जीवन्ति**=ஆத்மபூதமாக வாகின்றன ஜீவிக்கின்றன என்று பொ ருள். **यत्प्रयन्त्यभिसंविशन्ति** லயமடையும் பிராணிகள் எதில் ஒடுங்கு கின்றனவோ என்று பொருள். இங்குள்ள **सम्**=என்றதால் ஒரே வடிவமாக வாகுதலாகிய பிரவேசம் சொல்லப்படுகிறது. அல்லது **यत्प्रयन्ति**=என்றதால் மோக்ஷமும், **अभिसंविशन्ति**=என்றதால் பிர

ளயமும் சொல்லப்படும். இந்தப் பக்ஷத்தில் **यत्** என்ற சப்தத்தை இரண்டுதடவை உச்சரித்துக் கொள்ளவேண்டும். இங்கு **यतो वा.........संविशन्ति** என்றவிடத்தில் ஒவ்வொரு வாக்யத்திலும் **तद्ब्रह्म** என்று சொல்லாததால் அதாவது: யதோவா இமானி பூதானி ஜாயந்தே தத்பிரும்ம, யேந ஜாதானி ஜீவந்தி தத்பிரும்ம, யத் ப்ரயந்தி அபிஸம்விசந்தி தத்பிரும்ம என்று சொல்லாததால் என்பதாம். ஜகஜ்ஜன்மாதிகள் ஒவ்வொன்றும் தனித்தனி பிரும்ம லக்ஷணமாவதில்லை. தனித்தனி பிரும்ம லக்ஷணமென்றாலோ ஒன்றே போதுமானதாயிருக்க வேறு லக்ஷணங்கள் வேண்டுவதில்லை என்றுவரும். ஆகவே இம்மூன்றும் சேர்ந்து பிரும்மத்திற்கு ஒரே லக்ஷணமாகிறது என்றேற்பட்டது.

**स तपोऽतप्यत**=கொம்பைப் பிடித்தமாதிரியாக இதுதான் பிரும்மம் என்று உபதேசிக்க வேண்டுவதை விடுத்து பிரும்ம லக்ஷணோபதேச பூர்வகமாய் அதை அறிந்துகொள் என உபதேசிப்பவரின் கருத்து பின்வருமாறு—ஸம்பாதிக்க வேண்டிய பிரும்மக்ஞான ஸாதனத்தை ஸம்பாதித்துக் கொண்டு இந்த லக்ஷணம் அமைந்த பிரும்மத்தை அறிந்துகொள் என்பதாம். இந்த அர்த்தத்தை நிச்சயித்துக்கொண்டு இந்திரிய நிக்ரஹாதி ரூபமான தபஸ்ஸானது பிரும்மவித்யையில் அந்தரங்க உபாயமாகையால் அதேதான் ஸாதனம் எனவெண்ணி தபஸ்ஸைச் செய்து.

முதலாவது அநுவாகம் முற்றிற்று.

---

## இரண்டாவது அநுவாகம்.

### (मन्त्रः) अन्नं ब्रह्मेति.........स तपस्तप्त्वा ॥

(க—ரை) ஸர்வ பூதங்களுடைய உத்பத்தி முதலியவற்றிற்கு அன்னம் காரணமாயிருத்தல் பற்றி அதைப் பிரும்மமென முதலில் அறிந்தான். அன்னத்தைப் பிரும்மமென வறிந்து பின்னர் உத்பத்தியாதிகள் அன்னத்திற்குக் காணப்படுவதிலிருந்து அன்னத்தைப் பிரும்மமென வெண்ணுவதில் மனதிற்குத் திருப்தி

யுண்டாகாதவராய் திரும்பவும் பிதாவின் ஸமீபம் வந்து அதீஹிபக வ: என்ற மந்திரத்தை சொன்னார். பிதாவானவர் புத்திரனை நோக்கி "நீ தபஸ்ஸைச் செய்வாயாக, தபஸ்ஸேதான் பிரும்மவித்யா ஸாதனம், ஆகையால் தபஸ்ஸாலேயே பிரும்மத்தை யறிந்து கொள்" என்றார். (எ—று)

(அ—கை) 3, 4, 5-வது அனுவாகங்களுபதேசிக்கப் படுகின்றன—

**(मन्त्रः) प्राणोब्रह्मेति.........तपस्तप्त्वा ॥ ३-४-५ ॥**

(க—ரை) 3-4-5 ஆகிய இம்மூன்று அனுவாகங்களுக்கும் முன்சொன்னது போலவே தான்பொருள் கொள்ளவேண்டும்.

(அ—கை) 6-வது அனுவாகத்தின் பொருளுபதேசிக்கப் படுகின்றது—

**(मन्त्रः) आनन्दो.........महान्कीर्त्या ॥ ६ ॥**

(க—ரை) **भार्गवी**=பிருகுவால் அடையப்பட்டதும் **वारुणी**=வருணனுலுபதேசிக்கப்பட்டதுமான, **सैषा विद्या**=அந்த இந்த பிரும்மவித்யையானது **परमे व्योमन्**=பரம்வியோம சப்தத்தாற் சொல்லப் படுகின்ற பரமாத்மாவினிடத்தில் **प्रतिष्ठिता**=நிலைபெறுகின்றது.. அவரையும் தாண்டி அதற்குமேல் போவதில்லை என்று பொருள். அவ்வித பரமாத்ம வேதனபலன் **स य एवं वेद** என்றதாற் சொல்லப் படுகின்றது. (எ—று)

விசிஷ்டாத்வைதப்படி ஆறுவது அனுவாகம் முற்றிற்று.

---

சங்கரபாஷ்யப்படி ஏழாவது அனுவாகம்.

**(मन्त्रः) अन्नं न निन्द्यात् । तद्व्रतम् । प्राणो वा अन्नम् । शरीरमन्नादम् । प्राणे शरीरं प्रतिष्ठितम् । शरीरे प्राणः प्रतिष्ठितः । तदेतदन्नमन्ने प्रतिष्ठितम् । स य एतदन्नमन्ने प्रतिष्ठितं वेद प्रतितिष्ठति । अन्नवानन्नादो भवति । महान्भवति प्रजया पशुभिर्ब्रह्मवर्चसेन । महान् कीर्त्या ॥ ७ ॥**

(க—ரை) अन्नम्=அன்னத்தை न निन्द्यात्=இகழக்கூடாது. तत्=அவ்விதம் அன்னத்தை நிந்திக்காதிருத்தலானது व्रतम्=பிரும்மவித்திற்கு நியமமாகிறது. प्राणो वा=பிராணன் अन्नम्=அன்னமாகிறது. शरीरम् = சரீரமானது अन्नादम् = அன்னாதமாகிறது. प्राणे=பிராணனிடத்தில் शरीरम्=சரீரமானது प्रतिष्ठितम् = நிலை பெறுகின்றது. शरीरे = சரீரத்தினிடத்தில் प्राणः = பிராணன் प्रतिष्ठितः=நிலைபெற்று நிற்கின்றது. तत्=சரீரமும், பிராணனும் அன்னமாவதினின்றும் अन्नम् = ஒரு அன்னமானது अन्ने=மற்றொரு அன்னத்தில் प्रतिष्ठितम् = நிலைத்து நிற்கின்றது. यः= எவன் एतत्=இவ்விதம் अन्नम्=அன்னமானது अन्ने=அன்னத்தில் प्रतिष्ठितम्=நிலைத்து நிற்பதாக वेद=அறிகின்றானோ सः=அவன் प्रतितिष्ठति=நிலைபெற்றவனாகவே ஆகிறான். अन्नवान् என்பது முதலியவற்றிற்கு முன்போலவே பொருள் கொள்ளவும்.

(தா—ம்) யாது காரணம் பற்றி பிரும்ம விஞ்ஞானமானது த்வாரபூதமான அன்னத்தினா லுண்டாகின்றதோ அக்காரணத்தால் அன்னமானது எவ்வளவு தாழ்ந்ததாயிருப்பினும் அதை இகழக்கூடாது. அவ்விதமே यदृच्छया चोपपन्नमद्याच्छ्रेष्ठमुतावरम्॥ தனது முயற்சியின்றியே கிடைத்த அன்னமானது சிறந்ததோ, தாழ்ந்ததோ எவ்வித மிருப்பினும் அதைப் புஜித்தல் வேண்டும் என ஸ்மிருதியிலு முபதேசிக்கப் பட்டிருக்கிறது. இது பிரும்மவித்துக்கு ஓர் விரதமாகும். இவ்விதம் விரதோபதேசமானது அன்னத்தை ஸ்துதிக்கவேண்டி உபதேசிக்கப்படுகின்றது. இவ்விதம் இந்த அன்னமானது பிரும்மோபலப்தி த்வாரமாகின்றது பற்றி அதை ஸ்துதிக்க வேண்டுவது அவசியமாகி விடுகின்றது. அன்னோபாஸனம் சொல்லி வருவதை யொட்டியே வேறு உபாஸனமும் உபதேசிக்கப் படுகின்றது. பிராணனும் அன்னமாகவே தானாகின்றது. பிராணனே சரீரத்திற்குள் ளிருக்கின்றது. எது எதற்குள் ளிருக்கின்றனவோ அது அதற்கு அன்னமாகவாகின்றதாக சாஸ்திரம் எண்ணுகின்றது என்று கருத்து. பிராணனும் சரீரத்தில் நிலைத்து நிற்கின்றது. ஆனது பற்றி பிராணன் அன்னமாகவும், சரீரமானது அன்னாதமாகவும் ஆகின்றது. அதுபோலவே சரீரமும் அன்னமாகின்றது. பிராணனும் அன்

னமாகின்றது பிராணனும் அன்னாதமாகின்றது ஏனெனில்? பிராணனில் சரீரமானது நிலை பெற்று நிற்கின்றது. பிராணனில் சரீரத்திற்கு அந்தர்பாவமான இல்லாவிடினும் பிராணாதீனமாகவே சரீரத்தின் ஸ்திதி யேற்படுவதால் இவ்வித முபதேசிக்கப்பட்டது என்று கொள்ளவும். ஆகவே சரீரம், பிராணன் ஆகிய இரண்டும் அன்னமாகவும், அன்னாதமாகவும் ஆகிறது. ஏனெனில்? எக்காரணம்பற்றி ஒன்றில் மற்றொன்று நிலை பெறுகிறதோ அக்காரணம்பற்றி அவ்விதம் நிலைபெறும் வஸ்து அன்னமாகவும் மற்றொன்றிற்கு எது பிரதிஷ்டையாக (நிலைத்தலுக் காதாரமாக) வாகின்றதோ அது அன்னாதமாகவும் ஆகின்றது. அத்தகைய அன்ன, அன்னாதரூபமான பிராணன் சரீரம் ஆகிய இரண்டையும் அன்னத்தில் பிரதிஷ்டிதமாக எவனொருவன் அறிந்துபாஸிக்கின்றானோ அவன் அன்ன அன்னாத ரூபமாகவே (அதாவது: வெகு காலம் ஜீவிப்பவனாகவே) நிலை பெறுகிறான். அன்னவானாகவும், அன்னாதனாகவும், பிரஜாதிகளாலும், கீர்த்தியினாலும் மஹானாகவும் ஆகிறான்.

ஏழாவது அனுவாகம் முற்றிற்று.

---

## எட்டாவது அநுவாகம்.

(मन्त्रः) अन्नं न परिचक्षीत । तद्व्रतम् । आपो वा अन्नम् । ज्योतिरन्नादम् । अप्सु ज्योतिः प्रतिष्ठितम् । ज्योतिष्यापः प्रतिष्ठिताः । तदेतदन्नमन्ने प्रतिष्ठितम् । स य एतदन्नमन्ने प्रतिष्ठितं वेद प्रतितिष्ठति । अन्नवानन्नादो भवति । महान्भवति प्रजया पशुभिर्ब्रह्मवर्चसेन । महान्कीर्त्या ॥ ८ ॥

(ப—ரை) **अन्नम्** = அன்னத்தை, **नपरिचक्षीत** = வீணாக்குதல் தகா. **तत्**=வீணாக்காமையானது **व्रतम्**=அன்னோபாஸகனுக்கு விரதமாகின்றது. **आप**:=சரீரமாகமாறின ஜலமானது, **अन्नम्**=அன்னம் என்றும். **ज्योति**:=சரீரமாகமாறின ஜ்யோதிஸ்ஸானது **अन्नादम्**= அன்னாதம் என்றும் **अप्सु**=ஜலத்தில், **ज्योति**:=ஜ்யோதிஸ்ஸானது **प्रतिष्ठितम्**=நிலைபெற்றிருக்கின்றதென்றும், **ज्योतिषि**=ஜ்யோதிஸ்

ஸில் आप:=ஜலங்கள் प्रतिष्ठिता: நிலைபெற்றன வென்றும் ஆனது பற்றியே இந்த அன்னமானது அன்னத்தில் நிலைபெற்றிருக்கிற தென்றுமான இவற்றை எவனொருவன் அறிகின்றானோ அவன் நிலைபெறுகிறான். மற்றவற்றிற்கு முன்போலவே பொருள் கொள்ளவும்.

எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அனுவாகம்.

**(मन्त्र:) अन्नं बहु कुर्वीत । तद्व्रतम् । पृथिवी वा अन्नम् । आकाशोऽन्नादः । पृथिव्यामाकाशः प्रतिष्ठितः । आकाशे पृथिवी प्रतिष्ठिता । तदेतदन्नमन्ने प्रतिष्ठितम् । स य एतदन्नमन्ने प्रतिष्ठितं वेद प्रतितिष्ठति ॥ अन्नवानन्नादो भवति । महान्भवति प्रजया पशुभिर्ब्रह्मवर्चसेन । महान्कीर्त्या ॥ ९ ॥**

(ப—ரை) अन्नम्=அன்னத்தை बहु=அதிகமாக. कुर्वीत=தேட வேண்டும். पृथिवी वा=பூமியானது अन्नम्=அன்னமாகிறது. आकाश:=ஆகாசமானது अन्नाद:=அன்னாதமாகிறது. पृथिव्याम्=பூமியில் आकाश:=ஆகாசமானது प्रतिष्ठित:=நிலைத்து நிற்கின்றது. आकाशे=ஆகாசத்தில் पृथिवी=பூமியானது प्रतिष्ठिता=நிலைத்து நிற்கிறது. तदेतदन्नम् என்ற பாகத்திற்கு முன்போலவே பொருள் கொள்ளவும்.

(தா—ம்) இங்கு பூமியானது அன்னமாகவும், ஆகாசமானது அன்னாதமாகவும் சொல்லப்பட்டிருக்கிறது. ஆயினும் சரீராகாரமாகவான பிருதிவீ, ஆகாசம் இவற்றிற்கு அன்னத்வமும், அன்னாதத்துவமும், சொல்லப்பட்டதாகக் கொள்ளவேண்டும் என வனமாலையில் சொல்லப்பட்டிருக்கிறது. (எ—று)

ஒன்பதாவது அனுவாகம் முற்றிற்று.

---

பத்தாவது அநுவாகம்.

(मन्त्रः) न कञ्चन वसतौ प्रत्याचक्षीत। तद्व्रतम्। तस्माद्यया कया च विधया बह्वन्नं प्राप्नुयात्। अराध्यस्मा अन्नमित्याचक्षते। एतद्वै मुखतोऽन्नꣳराद्धम्। मुखतोऽस्मा अन्नꣳराध्यते। एतद्वै मध्यतोऽन्नꣳराद्धम्। मध्यतोऽस्मा अन्नꣳराध्यते। एतद्वा अन्ततोऽन्नꣳराद्धम्। अन्ततोऽस्मा अन्नꣳराध्यते॥

य एवं वेद। क्षेम इति वाचि। योगक्षेम इति प्राणापानयोः। कर्मेति हस्तयोः। गतिरिति पादयोः। विमुक्तिरिति पायौ। इति मानुषीः समाज्ञाः। अथ दैवीः। तृप्तिरिति वृष्टौ। बलमिति विद्युति॥

यश इति पशुषु। ज्योतिरिति नक्षत्रेषु। प्रजातिरमृतमानन्द इत्युपस्थे। सर्वमित्याकाशे। तत्प्रतिष्ठेत्युपासीत। प्रतिष्ठावान्भवति। तन्मह इत्युपासीत। महान्भवति। तन्मन इत्युपासीत। मानवान्भवति॥

तन्नम इत्युपासीत। नम्यन्तेऽस्मै कामाः। तद्ब्रह्मेत्युपासीत। ब्रह्मवान्भवति। तद्ब्रह्मणः परिमर इत्युपासीत। पर्येणं म्रियन्ते द्विषन्तः सपत्नाः। परि येऽप्रिया भ्रातृव्याः। स यश्चायं पुरुषे। यश्चासावादित्ये। स एकः॥

स य एवंवित्। अस्माल्लोकात्प्रेत्य। एतमन्नमयमात्मानमुपसंक्रम्य। एतं प्राणमयमात्मानमुपसंक्रम्य। एतंमनोमयमात्मानमुपसंक्रम्य। एतं विज्ञानमयमात्मानमुपसंक्रम्य। एतमानन्दमयमात्मानमुपसंक्रम्य। इमाꣳल्लोकान्कामान्नीकामरूप्यनुसंचरन्। एतत्साम गायन्नास्ते। हा३ वु हा३ वु हा३ वु॥

अहमन्नमहमन्नमहमन्नम्। अहमन्नादो३ ऽहमन्नादो३ ऽहमन्नादः। अहꣳश्लोककृदहꣳश्लोककृदहꣳश्लोककृत्। अहमस्मि

**प्रथमजा ऋता ३ स्य। पूर्वं देवेभ्योऽमृतस्य ना३भायि। यो मा ददाति स इदेव मा ३ वाः। अहमन्नमन्नमदन्तमा ३ द्मि। अहं विश्वं भुवनमभ्यभवा ३ म्। सुवर्नज्योतीः। य एवं वेद। इत्युपनिषत्॥ १०॥**

ப-ரை) **वसतौ**=வஸிக்கும்விஷயமாக(வந்த)**कंचन**=எவனையும், **नप्रत्याचक्षीत**=மறுக்கலாகாது. **तत्**=அவ்விதம் மறுக்காதிருத்தலானது **व्रतम्**=பிருதி ஆகாசோபாஸகனுக்கு விரதமாகும். (வஸிக்க இடம்கொடுத்தபின்னர் அவசியம் அன்னமும் கொடுக்க வேண்டும்) **तस्मात्**=ஆனதுபற்றி **यया कया च विधया**=யாதாலுமொரு முறையை யொட்டி **बह्वन्नम्**=அதிகமான அன்னத்தை **कुर्यात्**=தேடிக்கொள்ளவேண்டும். ஏனெனில்? [**अन्नवन्तो विद्वांसः**=அன்னமுள்ள அறிஞர்] **अस्मै**=அன்னத்திற்குவேண்டி வந்தவருக்கு **अन्नम्**=அன்னமானது **अराधि**=தயாராக இருக்கின்றது **इति**=என **आचक्षते**=சொல்லுகின்றனர் என்பதே அதன்காரணமாகும். (மேலும், எவனொருவன் எந்தவயதில் அன்னதானஞ் செய்கின்றானோ அவனுக்கு அந்தவயதிலேயே அன்னஸமிருத்தி (நிறைவு) ஏற்படுகின்றது. என்பதை மேலுள்ளபாகத்தாற் சுருதி சொல்லுகிறது) **एतत्**=இந்த**अन्नम्**=அன்னத்தை [**यः**=எவன்] **मुखतः**=இளம்வயதில் நல்லமரியாதையுடன் அன்னார்த்திக்கு **राद्धम्**=தயாராக்கி [**प्रयच्छति**=கொடுக்கின்றானோ] **अस्मै**=இவனுக்கு **मुखतः**=இளம்வயதில் **अन्नम्**=அன்னமானது **राध्यते**=கொடுத்ததற்குத் தக்கபடியே கிடைக்கின்றது. அதாவது:—நல்லமரியாதையுடனேயே இளம்வயதில் அன்னம் கிடைக்கும் என்பதாம். **एतत्**=இந்த **अन्नम्**=அன்னத்தை [**यः**=எவன்] **मध्यतः**=நடுவயதில் நடுத்தரமான மரியாதையுடன் **राद्धम्**=தயாராக்கி [**प्रयच्छति**=கொடுக்கின்றானோ] **अस्मै**=இவனுக்கு **अन्नम्**=அன்னமானது **मध्यतः**=நடுவயதில் நடுத்தரமானமரியாதையுடன், **राध्यते**=கிடைக்கின்றது. **एतत्**=இந்த **अन्नम्**=அன்னத்தை [**यः**=எவன்] **अन्ततः**=கடைவயதில் தாழ்ந்த மரியாதையுடன் அதாவது: அலக்ஷியமாக **राद्धम्**=தயாராக்கி [**प्रयच्छति** = கொடுக்கின்றானோ] **अस्मै** = இவனுக்கு **अन्नम्** = அன்னமானது **अन्ततः**=கடைவயதில் அலக்ஷியமாகவே **राध्यते**=கிடைக்

கின்றது. **य एवं वेद**=எவன் இவ்விதம் சொல்லப்பட்ட அன்ன மஹிமையையும், அன்னதானத்தின் பலனையும் அறிகின்றனோ அவனுக்கும் இதே பலனுண்டாகின்றது.

இனி பிரும்மத்தின் உபாஸனமுறை யுபதேசிக்கப் படுகின்றது.

[**ब्रह्म**=பிரும்மமானது] **वाचि**=வாக்கில் **क्षेम: इति**=க்ஷேமரூபமாக இருக்கின்றதென உபாஸிக்கத் தகுந்தது. கிடைத்ததைக் காப்பாற்றல் க்ஷேமம் எனப்படும். இதுவரை இல்லாததை யடைதல் யோகம் எனப்படும் பிரும்மமானது *க்ஷேமரூபமாக வாக்கிலிருப்பதாக உபாஸிக்க வேண்டும். **प्राणापानयो:**=பிராணன், அபானன் இவற்றில் பிரும்மமானது **योगक्षेम इति**=யோக க்ஷேம ரூபமாக இருப்பதாக உபாஸிக்க வேண்டும். (பிராணன் அபானன் இவ்விரண்டும் இருந்தால் தான் யோக க்ஷேமம் உண்டாகின்றதாயினும், அந்த யோக க்ஷேமத்திற்கு பிராணுபானன் நிமித்தமன்று. பிரும்மமே அதற்கு நிமித்தம் என்று கருத்து). ஆகவே பிரும்மமானது யோகக்ஷேமரூபமாக பிராணுபானங்களில் இருக்கின்றது என உபாஸிக்க வேண்டும் என்றேற்பட்டது. இவ்விதமே மேலுள்ள விடங்களிலும் அந்தந்த ரூபமாக பிரும்மமே இருப்பதாக உபாஸிக்கவேண்டும் என்று பொருள் கொள்ளவும்.. **हस्तयो:**=இருகைகளிலும் பிரும்மமானது **कर्मेति**=கர்மரூபமாக இருக்கின்றதென்றும், **पादयो:**=இருகால்களிலும், **गति: इति**= பிரும்மமானது கதிரூபமாக இருக்கின்றதென்றும், **पायौ**=மலாசயத்தில் **विमुक्ति: इति**=பிரும்மமானது வெளிவருதல் ரூபமாக இருக்கின்றதென்றும் உபாஸிக்க வேண்டும். **इति**=இவ்விதம் **मानुषी: समाज्ञा:** மனிதரிடத்துண்டான ஆத்யாத்மிகமான உபாஸனங்கள் சொல்லப்பட்டன.

**अथ**=இனி **दैवी:**=தேவர்களிட முண்டாகும் ஆதிதைவிக உபாஸனங்கள் சொல்லப்படும். **वृष्टौ**=மழையில் **तृप्ति: इति**=பிரும்ம

---

* எவனொருவன் இவ்விதமான உபாஸனத்தைச் செய்யவில்லையோ அவனுக்கு அவனது வாக்கே சத்துருவாகி அதன்மூலமாகவே கிடைத்த பொருள் நாசமாகிவிடும் என்று கருத்து. மேலுள்ள விடங்களிலும் இவ்விதமே கருத்துக் கொள்ளவும்.

மானது திருப்திரூபமாக இருக்கின்றதென்றும், அதாவது:— விருஷ்டியானது அன்னாதிகள் வாயிலாகத் திருப்திஹேதுவாக வாவதுபற்றி பிரும்மமே விருஷ்டியில் திருப்தியுருவமாக விருக்கின்றது என உபாஸிக்க வேண்டும் என்பதாம். இவ்விதமே வேறு இடங்களிலும் அந்தந்த உருவமாக பிரும்மமானது உபாஸிக்கத் தக்கது என்று கண்டுகொள்ளவும். विद्युति=மின்னலில் बल इति=பல வுருவமாகவும், पशुपु=பசுக்களில் यश इति=கீர்த்தி ரூபமாகவும், नक्षत्रेपु=நக்ஷத்திரங்களில் ज्योतिरिति=ஜ்யோதிரூபமாகவும், उपस्थे=ரஹஸ்ய இந்திரியத்தில் अमृतम्=மோக்ஷப்ராப்தி ஹேதுவான प्रजाति:=புத்திர ரூபமாகவும்,பிதிருக்களின் கடனைப் போக்கி மோக்ஷஹேதுவாக வாவதுபற்றி புத்திரன் அமிருதம் எனப்படுகிறது. आनन्द:=சுகரூபமாகவும் பிரும்ம மிருக்கின்றது. आकाशे=ஆகாசத்திலுள்ள सर्वमिति=எல்லா விதமாகவும் பிரும்ம மிருக்கின்றது. எல்லா வஸ்துவும் ஆகாசத்தில் அன்றோ நிலைபெற்று நிற்கின்றது. ஆனதுபற்றி ஆகாசத்திலுள்ள எல்லா வஸ்து ரூபமாகவும் பிரும்மமே இருக்கின்றதென உபாஸிக்க வேண்டும். அந்த ஆகாசமும் பிரும்மமே யாகும். ஆனதுபற்றி तत्=அந்த ஆகாசரூபப் பிரும்மமானது प्रतिष्ठेत्युपासीत=நிலையானது என்று உபாஸிக்க வேண்டும். प्रतिष्ठावान् = ப்ரதிஷ்டை என்ற குணமுள்ள பிரும்மோபாஸனத்தால் பிரதிஷ்டையுள்ளவனாக வாகிறான். இவ்விதமே க்ஷேமாதிகுணமுள்ள பிரும்மோபாஸனத்தால் க்ஷேமாதியுள்ளவனாகிறான் என்றும் கண்டுகொள்ள வேண்டும்.

எவ்விடத்தில் எந்த பலம் பிராப்தமாகிறதோ அதுவும் பிரும்மமேயாகும். அவற்றை யுபாஸிப்பதால் அவையாகவே உபாஸகன் ஆகிவிடுகிறான் என்றும் கண்டுகொள்ள வேண்டும். तं यथा यथोपासते तदेव भवति=அதை எந்தெந்த விதமாக வெல்லாம் உபாஸிக்கின்றானோ அந்தந்த விதமாக வெல்லாம் அதுவே ஆகிவிடுகின்றது என வேறு சுருதியு முபதேசிக்கின்றது. तत्=அந்தப் பிரும்மத்தை मह: इत्युपासीत=மஹத்துவ குணமுள்ளதாக உபாஸிக்கவேண்டும். அந்த உபாஸனத்தால் महान्भवति=உபாஸகன் மஹானாக வாகிறான். तत्=அந்தப் பிரும்மத்தை मन: इत्यु-

पासीत=மனனம் என்ற குணமுள்ளதாக உபாஸிக்கவேண்டும். அவ்வித உபாஸகன் मानवान्भवति=மனனஞ் செய்வதில் ஸமர்த்தனுகவாகிறான். तत्=அந்த பிரும்மத்தை नमः इत्युपासीत=நமன குணமுள்ளதாக உபாஸிக்கவேண்டும். अस्मै நமனகுண விசிஷ்டமான பிரும்மத்தை யுபாஸிப்பவனுக்கு कामाः=போக்கியமான விஷயங்கள் नम्यन्ते=தானே வந்தடைகின்றன. तत्=அந்த பிரும்மத்தை ब्रह्मेति=மிக்கப்பெரிய விராட்ரூபமாக उपासीत=உபாஸிக்க வேண்டும். ब्रह्मवान्=விராட் புருஷனுடைய போகமுள்ளவனுக வாகிறான். तत्=அந்தப் பிரும்மத்தை ब्रह्मणः परिमर इत्युपासीत= பிரும்மத்தின் பரிமரமான ஆகாசமாக உபாஸிக்கவேண்டும். அதாவது: परिम्रियन्ते=अस्मिन् पञ्चदेवताः इति व्युत्पत्त्या இதில் நாலா பக்கத்திலும் வித்யுத், விருஷ்டி, சந்திரன், சூரியன் அக்னி ஆகிய ஐந்து தேவதைகளும் ஒடுங்குகின்றனர். ஆனதுபற்றி परिमरः என்றதால் வாயுசொல்லப்படும். வேறு சுருதியிலும் வாயுபரிமரம் என்பது பிரசித்தமாகவே யிருக்கின்றது. அத்தகைய பரிமரரூபமான வாயு ஆகாசத்தை விடவேறுக இல்லாததால் ஆகாசமானது பிரும்மத்தினுடைய பரிமரமாகின்றது. ஆகவே வாயுரூபமான அந்த ஆகாசத்தை பிரும்மத்தின் பரிமரமாக உபாஸிக்க வேண்டும் என்றேற்பட்டது என்பதாம். एनम् = இத்தகைய பிரும்மோபாஸகனை द्विषन्तः = துவேஷிக்கின்ற सपत्नाः=சத்துருக்கள் परिम्रियन्ते = நாலா பக்கத்திலும் நாசமடைகின்றனர். துவேஷமில்லாத சத்துருக்கள் என்றும், துவேஷமுள்ள சத்துருக்கள் என்றும் சத்துருக்கள் இருவகைப்படுவர். ஆகவே துவேஷமுள்ள சத்துருக்கள் என்பதைக் காட்டவேண்டி இங்கு द्विषन्तः सपत्नाः என்று அடைமொழி (விசேஷணம்) கொடுத்து உபதேசிக்கப்பட்டது. மேலும், ये=எவர்கள் अप्रियाः=பிரியமற்ற भ्रातृव्याः சத்துருக்களுண்டோ [तेच=அவர்களும். परिम्रियन्ते= நாசத்தை யடைகின்றனர்]

स यश्चायं पुरुषे यश्चासावादित्ये स एकः॥ पुरुषे=சரீரத்திலுள்ள ஹிருதயகுஹையில் योऽयम्=யாதொரு இந்த ப்ரத்யகாத்மாவுண்டோ, स च=அவனும், आदित्ये சூரியமண்டலத்தில் योऽसौ=யாதொரு அந்த ஆத்மாவுண்டோ स च=அவனும் एकः உண்மை

யில் ஒன்றே यः=எவன் एवंवित्=இவ்விதம் அறிகின்றனோ सः அவன் अस्मात्=இந்த लोकात् போக்கியமான ஸகலவஸ்துவினின்றும் प्रेत्य=விலகி அதாவது: அவற்றிலுள்ள கௌணத்மபுத்தியை விலக்கிக்கொண்டு एतमन्नमयमात्मानमुपसंक्रम्य=விஷய ஸமூஹத்தை அன்னமயமான பிண்டாத்மாவை விடவேறாக என்னுதவனைக் கொண்டு அதாவது: ஸ்தூல பூதமான ஸகலத்தையும் அன்ன மயாத்மாவாகவே பார்க்கின்றவனைக் கொண்டு என்பதாம். இவ்விதமே பிராணமயன், மனோமயன், விக்ஞானமயன் ஆனந்த மயன் இவற்றையும் உபஸங்க்ரமித்துக் கொண்டு அதாவது: புருஷன், சூரியன் இரண்டிலுமுள்ள ஆத்மைகத்வ விக்ஞானத்தினால் உயர்வு தாழ்வுகளாகவான ஜீவபரமாத்ம உபாதிகளைப் போக்கிக் கொண்டு அன்னமயம் முதல் ஆனந்தமயன் முடியவுள்ள அனுத் மாக்களையும் விலக்கிக்கொண்டு ஸத்யக்ஞானதி ஸ்வரூபமானதும், அதிருச்யாதிதர்மமுள்ளதும் அத்வைதமுமான பலபூதமான ஆனந்தத்தை யடைந்தவனைக் கொண்டு என்பதாம். कामान्नी= இஷ்டப்படிக்கான அன்னமுள்ளவனாகவும், இஷ்டப்படிக்கான ரூபமுள்ளவனாகவும், इमान् இந்த लोकान्=பூராதிஸமஸ்த லோகங்களையும், अनुसंचरन्=அத்மஸ்வரூபமாக அனுபவிக்கின்றவனைக் கொண்டு हा३वुहा३वुहा३वु=என்பது अहो अहो अहो என்ற அர்த்தத்தில் படிக்கப்பட்டதாகும். ஆகவே வெகுஆச்சரியத்தை யடைந்தவனைப் एतत्=இந்த साम=ஸமமாயிருப்பதுபற்றி साम சப்தத்தாற் சொல்லப்படும் பிரும்மத்தை गायन्=சொல்லிக் கொண்டு. அதாவது:—தான் அனுபவிக்கும் ஆத்மைகத்துவத்தையும், அவ்வித விக்ஞானபலனையும், லோகானுக்கிரஹத்திற்கு வேண்டி பிரகடனஞ் செய்துகொண்டு आस्ते=இருக்கிறார். அதாவது: உலகில் ஆங்காங்கு சஞ்சரித்துக்கொண்டிருக்கிறார் என்பதாம்.

சங்கை—இவருக்குண்டான ஆச்சரியமானது யாது எனின்?

உத்தரம் — கூறுவாம். अहमन्नमहमन्नमहमन्नम्—நானே அன்னம், நானே அன்னம், நானே அன்னம் अहमन्नादोऽहमन्नादोऽहमन्नादः—நானே அன்னத்தையனுபவிப்பவன், நானே அன்னத்தை யனுபவிப்பவன் நானே அன்னத்தை யனுபவிப்பவன் अहं श्लोककृदहं श्लोककृदहं श्लोककृत्=நானே அன்ன அன்னுதரூபமான ஸங்

காரத்திற்கு கர்த்தா அல்லது, போக்தாவின் பிரயோஜனத்திற்கு வேண்டி போக்கியமான அன்னஸங்காரத்தைச் செய்கின்றவன் என்று பொருள். ऋतस्य=மூர்த்தாமூர்த்தாத்மகமான ஜகத்திற்கு प्रथमजः–முதலிலுள்ளவரான ஹிரண்யகர்ப்பராக अहम्–நான் अस्मि–இருக்கிறேன். देवेभ्यः पूर्वम्–ஹிரண்யகர்ப்பர் உண்டான பிறகு தேவர்கள் உண்டாவதற்கு முன்னர் ஆவிர்ப்பவித்த விராட் புருஷனும் अहम् நானே. अमृतस्य–அமிருதத்வத்திற்கு (மோக்ஷத்திற்கு) नाभिः–நடுவான ஸ்தானமும் நானே. அதாவது: பிராணிகளுடைய அமிருதத்வமானது என்னிடமுள்ளது என்பதாம். यः–எவன் मा–அன்னரூபனான என்னை ददाति–அன்னார்த்திகளையும் பொருட்டு கொடுக்கின்றானோ स इत्–அவனே एवम्–அன்னபூதனான என்னை आवाः–ரக்ஷிக்கிறான். அதாவது: அன்னபூதனான என்னை எவனொருவன் கொடுக்கின்றானோ இவ்விதம் கொடுக்கும் அவன் நாசமற்றிருக்கும்படி என்னை ரக்ஷிக்கிறான் என்பதாம். अन्नमदन्तम्–பிராப்தகாலத்தில் அர்த்திகளுக்கு அன்னரூபனான என்னைக் கொடுக்காமல் அன்னத்தைச் சாப்பிடுகின்றவனை அன்னமாகவே யிருக்கிற நான் சாப்பிட்டுவிடுகிறேன் अहम्–நான், विश्वम्–ஸமஸ்தமான भुवनम्–பூராதிலோகஸமூஹத்தை अभ्यभवाम्–ஸம்ஹாரமூர்த்தியின் உருவத்தால் நாசமாக்குகிறேன். सुवर्न–சூரியன் போல (இங்குள்ள न–என்பது உபமை என்ற பொருளுள்ளது) ज्योतिः–எனது ஜ்யோதிஸ்ஸானது பிரகாசவடிவமானதே इत्युपनिषत्–இவ்விதம் ஆனந்தவல்லி, பிருகுவல்லி இரண்டிலும் சொல்லப்பட்ட ரஹஸ்ய உபதேசமானது பரமாத்மக்ஞானமாகும். यः எவன் एवम्–இதுவரை சொல்லிய உபநிஷத்தை (பரமாத்மவிக்ஞானத்தை) சாந்தனுயும், தாந்தனுயும், உபரதனுயும், திதிக்ஷுவாயும், ஸமாஹிதனுயும் ஆகி பிருகுவைப்போல மஹத்தான தபஸ்ஸைச்செய்து वेद–அறிவனோ तस्य–அவனுக்கு இவ்விதபலனுண்டாகின்றது.

ஓம்–பிருகுவல்லீ முற்றிற்று.

---

குறிப்பு—एतत्सामगायन्नास्ते=என்றதால் ஜீவந்முக்தர் ஸர்வஸமமான பிரும்மத்தை யனுபவித்து தனது அனுபவத்தாலுண்டான ஆனந்தத்தை हावु हावु हावु என்றதால் अहो अहो अहो என பரமாஸ்சரியத்துடன் வெளியிடுகிறார் என்று உபதேசிக்கப்பட்டது. அவ்விதம் ஜீவன்முக்தராகவுள்ள மஹான் தனது அனுபவத்தை ஆச்சரியத்துடன் வெளியிடும் முறையானது ஸ்வாராஜ்யஸித்தி என்ற கிரந்தம் கைவல்யப்பிரகரணத்தில் 25-வது சுலோகம்முதல் 32-வது சுலோகம் முடியவுள்ள 8 சுலோகங்களில் வெகுதெளிவாயும், வெகுஇனிமையாயுமுள்ள சப்தங்களாலுபதேசித்திருப்பது இந்தவிடத்திற்கு மிக்கப்பொருத்தமாக இருக்குமாதலால் அந்த சுலோகங்களை மட்டும் அடியில் சேர்த்திருக்கிறோம். அவைகளாவன—

மூ० ॥ सोऽयं पूर्णमनोरथोपि सहजात्कौतूहलात्पर्यट-
न्नुर्वीं सर्वहितेरतः प्रतिपदं स्वानन्दमास्वादयन् ।
साश्चर्यं सकुतूहलं सकरुणं सानन्दमुत्कण्ठया
धीरः पारमवाप्य मोहजलधेरेवं मुहुर्गायति ॥ १ ॥

(ப—ரை) सः–இதுவரை சொல்லப்பட்ட உத்கர்ஷமுள்ள अयम्–இந்த धीरः–பிரும்மவித்தானவர் मोहजलधेः–தாண்டற்கரிதான மாயா ஸமுத்திரத்தினுடைய पारम्–அக்கரையான ஆத்மதத்துவத்தை अवाप्य–ஞானத்தாலடைந்து स्वयं पूर्णमनोरथोऽपि–தான் நிறைந்தமனோரதமுள்ளவராயினும்,ஒருவித்தப்பிரயோஜனத்தையும் கருதாதவராய் सहजात्कौतूहलात् – இயற்கையானதும், விசித்திரமானதேசம், தீர்த்தம், ஸாதுஜனங்கள் இவர்களைக்கண்டதா லுண்டானதுமான பேராவலால் उर्वीं–பூமியை पर्यटन्–சஞ்சரித்துக்கொண்டு. सर्वहिते–எல்லாப் பிராணிகளுடையவும் அபிலாஷையைப் பூர்த்திசெய்வதில் रतः–முயன்றவராய்க்கொண்டு प्रतिपदम्–அடிக்கடி அல்லது ஒவ்வொரு அடிவைப்புதோறும், स्वानन्दम्–ஆத்மசுகரஸாயனத்தை आस्वादयन्–மிக்கப்பிரேமையுடன் அனுபவிக்கின்றவராய்க்கொண்டு साश्चर्यम्–ஆப்சரியத்துடன் கூடியிருக்கும்படியும். அதாவது: பிரும்மாதிகளுக்கும் துர்லபமான இந்த ஆனந்தமானது எவ்வித மென்னாலடையப்பட்டதென்றும்

என்பதாம். **सकुतूहलम्**—குதூஹலத்துடன் கூடியிருக்கும்படியும் அதாவது: வாக்குகளுக் கெட்டாததும், கரைபற்றதுமான இந்த ஆத்மசுகத்தை யனுபவிக்கப்பெற்றேனே என்றும் என்பதாம். **सकरुणम्**—கருணையுடன் கூடியிருக்கும்படியும், அதாவது:—கரை யற்ற இந்த மோஹஸமுத்திரத்தில் விழுந்து மூழ்கினவர்களான பிராணிகள் என்னைப்போல எவ்விதம் கரையேறப் போகின்றனர்' என்றும் என்பதாம். **सानन्दञ्च**—ஆனந்தத்துடன் கூடியிருக்கும் படியும், அதாவது: பரமபுருஷார்த்தமானது என்னால் அடையப் பட்டு விட்டது. ஆனதுபற்றி கிருதார்த்தனானேன் என்பதாம். **उत्कण्ठया**—அனுபவிக்கப்படும் சுகோத்கர்ஷபரவசத்தால் அதை மறைக்க முடியாமையினால். அதிகாரி ஜனங்களிடத்து அதைப் பிரகாசப்படுத்த வேண்டுமென்ற அதிக இச்சையினால் **मुहुः**— அடிக்கடி **एवम्**—பின்வருமாறு **गायति**—நல்லகுரலுடன் வெளியிடு கிறார். (எ—று)

(அ—கை) இதற்குமேலுள்ள சுலோகத்திற்கு உரை எழுது வதானால் கிரந்தம் விரிவடைவதால் சுலோகத்தைமட்டும் எழுது கிறோம்—

मू० ॥ चिरान्मग्नेनाऽन्तः प्रकृति विषमे जन्मजलधौ
　　मया पुण्यैर्लब्धो गुरुरमृतचिन्तामणिरहो ।
यदीयाभिर्गोभिर्विशदमधुराभिर्वितिमिरे
　　स्वसंपूर्णे यस्मान्निरवधिसुखे धामनि रमे ॥ २ ॥

यथापूर्वं मायापरिकलितदृष्टिर्निजसुखं-
　　स्वयं भातं पश्यन्नपि न परिपश्यामि सहजम् ।
तथेदानीं ज्ञानाञ्जनविमलचक्षुर्जगदिदं-
　　चिदाकाशे पश्यन्नपि नपरिपश्यामि वितथम् ॥ ३ ॥

न वेद्यो नावेद्यः स्वरसमतिहृद्यः सुखघनो
　　न गद्यो नापोद्यो न पुनरुपरोध्यः कथमपि ।
न हेयो नादेयो नपुनरपिधेयः क्षणमहो
　　स्फुरन्नात्माऽस्माकं जगदिदमकस्मात्तिरयति ॥ ४ ॥

मू० ॥ किमस्तं किं ध्वस्तं किमु विलुलितं किन्नु मलितं
विशीर्णं वा गीर्णं ननु सपदि जीर्णं किमथवा।
अमन्दे स्वच्छन्दे निरुपमनिजानन्दजलधौ
मयि स्वान्ते शान्ते जगदिदमशेषं न कलये ॥ ५ ॥

कथमिदभवत्कथन्नु तिष्ठत्यथकथमेति लयं प्रतीचि विश्वम्।
विमलदृशि निजे निरस्तसंगे पटुपरिमृश्य मृषेति निर्वृतोऽस्मि ॥

निराधाराकारं निरवयवसंस्थानमचलं
निरीहं निर्द्वन्द्वं निरुपमनिजानन्दविभवम्।
विनोपायं स्वीयं करणसमुदायं च परमं
कथं तन्निर्मायं त्रिभुवननिकायं रचयति ॥ ७ ॥

जागृत्सुप्तिस्वपनविपिने गाहमानोप्यसंगः
सत्वोत्कर्षात्करणहरिणैर्नेक्षणीयः पराग्भिः।
लीलावृत्तिप्रशमितमहामोहमत्तेभजालः
कालातीते विलसति पदे स्वात्मकण्ठीरवो नः ॥ ८ ॥

इत्यादिभिर्भुवनजाड्यहरैः सुगोभिः
सत्योज्वलैः श्रुतिसुखैरमृतप्रबोधैः।
आनन्दयन्प्रतिपदं प्रणतान्सभाग्या
नाशाः पवित्रयति भानुरिव प्रबुद्धः ॥ ९ ॥

சங்கர பகவத்பாத பாஷ்யப்படி பிருகுவல்லீ முற்றிற்று.

---

வித்யாரண்ய தீபிகை.

(मन्त्रः) अन्नं ननिन्द्यात् तद्व्रतम् ॥

*(க—ரை) த்வாரமாக ஆனதும் உபாஸிக்கப் பட்டதுமான அன்னத்தால் பிரும்மக்ஞான முண்டாவதுபற்றி இந்த உபாஸகன் குருவைப்போலவே அன்னத்தை நிந்தித்தல் தகா. அவ்*

விதம் அன்ன நிந்தை செய்யாதிருத்தலை விரதமாக கொள்ள வேண்டும். (எ—று)

(அ—கை) வேறு உபாஸனத்தை விதிக்க வேண்டி உபாஸ்ய த்தின் ஸ்வரூபத்தைச் சாஸ்திரம் சொல்லுகிறது—

**(मन्त्रः) प्राणो वा अन्नं.........प्रतिष्ठितम् ।**

(க—ரை) புஜிக்கப்பட்ட அன்னமானது சரீரத்திற் குள்ளி ருப்பது போல பிராணனும் சரீரத்தின் நடுவிலிருப்பதால் பிரா ணனே அன்னமாகிறது. நடுவிலிருக்கின்ற பிராணனுகிற அந்த அன்னத்தைத் தாரணம் செய்வது பற்றி சரீரமானது அன்னுத மாகிறது. அதாவது: போக்திரு ரூபமாகவாகிறது என்பதாம். வீட்டின் நடுவிலிருக்கும் தூண் போன்று தேஹ மத்தியிலிருக் கின்ற பிராணன் தேஹதாரணம் செய்வதால் பிராணனில் சரீரம் பிரதிஷ்டிதமாகவாகிறது, சரீரமானது பிராணதாரகம் என்பது கண் கூடு. பிராணன், சரீரம் இவைகள் பரஸ்பரம் ஆதாரமாக இருக்கின்றதென்பது தியானஞ் செய்யத் தகுந்ததாக வாகின் றது. மேலும், உள்ளிருப்பதுபற்றி பிராணனை அன்னமாக முன்னர் சொல்லப்பட்டது. தேஹமானது அன்ன காரியமா னது பற்றி அன்னமாகிறது. அவ்விதமாகும் பொழுது இரண்டு மே அன்னமாகி விடுகின்றது. முன்சொன்ன முறைப்படி ஒன் றுக்கொன்று ஆதாரமாயிருத்தல் பற்றியும் அன்னமே அன் னத்தில் பிரதிஷ்டையை யடைகிறது என்றும் தியானிக்க வேண் டும். (எ—று)

(அ—கை) உபாஸ்யம் இன்னதென்பதை யுபதேசித்து உபா ஸனத்தைச் சுருதி விதிக்கிறது—

**(मन्त्रः) स य एतदन्नमन्ने.........महान्कीर्त्या ॥**

(க—ரை) இதன் பொருள் தெளிவான்தே.

ஏழாவது அநுவாகம் முற்றிற்று.

---

## எட்டாவது அநுவாகம்.

(அ—கை) வேறு உபாஸ்யம் சொல்லப்படுகிறது—

**(मन्त्रः) अन्नं न परिचक्षीत.........प्रतिष्ठितम् ।**

(க—ரை) குடிக்கப்பட்ட ஜலங்கள் வயிற்றிலுள்ள அக்னியி ஞல் ஜீர்ணமாக்கப்படுவதால் ஜலமானது அன்னமாக வாகிறது. அக்னியானது அன்னுதமாகவாகிறது. மழைஜலத்தில் மின்ன லுடன் கூட அக்னி காணப்படுவதாலும், தேஹஸந்தாபத்தினுல் வியர்வை காணப்படுவதாலும், ஜலம், ஜ்யோதிஸ் இவைகள் ஒன் றில் மற்றொன்றிருப்பது விளங்குகின்றது. ஆனது பற்றியே ஒன் றிற்கொன்று அன்னமாகவுமாகிறது. (எ—று)

(அ—கை) உபாஸனத்தை சுருதி விதிக்கின்றது—

**(मन्त्रः) सय एतदन्नमन्ने प्रतिष्ठितं वेद.........महान्कीर्त्या ॥**

(க—ரை) எவன் அன்னத்தில் அன்னம் நிலைபெற்றிருப்ப தாக வெண்ணி உபாஸிக்கின்றனோ அவன் அன்னவானுகவும் அன்னுதனுகவும், பிரஜை, பசு, பிரும்மவர்ச்சஸ், இவற்றால் மஹானுகவும், கீர்த்தியினுல் மஹானுகவும் ஆகிறான். (எ—று)

எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அனுவாகம்.

(அ—கை) முன்னர் கிடைத்த அன்னத்தை நல்லதன்று என வெண்ணி பரிஹரித்தல் தகாதென உபதேசிக்கப்பட்டது. இங் கோ அதிதிகளுக்குக் கொடுக்கவேண்டி வெகு அன்ன ஸம்பாத னஞ் செய்யவேண்டுமெனச் சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) अन्नं बहुकुर्वीत । तद्व्रतम् ॥**

(க—ரை) வெகு அன்னத்தைத் தேடவேண்டும். இதுவே விருதமானது. (எ—று)

(அ—கை) வேறு உபாஸ்யம் சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) पृथिवी वा अन्नम्.........तदेतदन्नमन्ने प्रतिष्ठितम् ॥**

(க—ரை) பூமியானது தனது கீழும் மேலுமுள்ள ஆகாசத்தின் நடுவிலிருப்பதுபற்றி அன்னமாக வாகின்றது. ஆகாசமானது

அன்னாதமாக வாகிறது. ஸாதாரண ஜனங்களின் பார்வைக்கு ஆகாசம் மேலிருப்பதாகவும், பூமி கீழிருப்பதாகவும் தோற்ற மேற்படுவதைக் கொண்டு பூமி ஆகாசம் இவைகள் ஒன்றில் மற்றொன்றிருப்பதாக வேற்படுகிறது. தத்துவதிருஷ்டியாகப் பார்க்குங்கால் ஆகாசம் தான் ஆதாரமாகவாகிறது. ஆகாச பூமிகளின் பரஸ்பரான்னத்வமானது தியானிக்கவேண்டுவதாக வாகிறது.

(அ—கை) உபாஸனம் விதிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) स य एतदन्नमन्ने प्रतिष्ठितं वेद.........महान्कीर्त्या॥**

(க—ரை) முற்கூறியதுபோலவே இதன் பொருளையும் காண்க.

ஒன்பதாவது அனுவாகம் முற்றிற்று.

---

## பத்தாவது அனுவாகம்.

**(मन्त्रः) न कंचन वसतौ प्रत्याचक्षीत। तद्व्रतम्॥**

(க—ரை) வர்ஸத்திற்கு வேண்டித் தனதுவீடுவந்தவர் எவரையும் மறுத்தல் தகா. (எ—று)

(அ—கை) முன்னர் சொன்ன விருதத்தை நடத்திமுடிக்கும் உபாயம் உபதேசிக்கப்படுகிறது—

**(मन्त्रः) तस्माद्यया कयाच विधया बह्वन्नं प्राप्नुयात्॥**

(க—ரை) வஸிக்க இடங்கொடுத்தபிறகு அன்னமும் கொடுக்க வேண்டுவது யாதுகாரணம்பற்றி அவசியமாகிவிட்டதோ அக்காரணம் பற்றி (பிராம்மணனுயுள்ளவன்) யாஜனம், அத்யாபனம், ப்ரதிக்ரஹம் இவற்றுள் யாதானும் ஒருமுறையால் அதிகம் அன்னத்தை ஸம்பாதித்துக்கொள்ள வேண்டுவது அவசியமாகிவிட்டது. (எ—று)

(அ—கை) இவ்விஷயத்தில் சிஷ்டாசாரம் தெரிவிக்கப்படுகின்றது—

**(मन्त्रः) अराध्यस्मा अन्नमित्याचक्षते॥**

(க—ரை) எவர் வீட்டிற்கு வருகின்றாரோ அவர்க்கு அன்னம் தயாராகவே இருக்கின்றதெனப் பெரியோர் சொல்லுகின்றனரே இன்றி அவர்களை மறுப்பதில்லை. (எ—று)

-(அ—கை) அதிகமாக அன்னஸம்பாதனஞ் செய்வதில் அதிகம் பலனுண்டென்பதைக் காட்டவேண்டி அன்னதான விசேஷத்தாலுண்டாகும் பலவிசேஷம் சொல்லப்படுகின்றது—

**(मन्त्रः) एतद्वै मुखतोऽन्नꣳराद्धं.........य एवं वेद ॥**

(க—ரை) ஸம்பாதிக்கப்பட்ட அன்னம் யாருண்டோ, இதுவே முக்கியமான தீர்த்தம், க்ஷேத்திரம், இவற்றிலும், முக்கியமான ஸங்கிராந்தி, அமாவாஸ்யை முதலிய காலத்திலும், வேதம், சாஸ்திரம் இவற்றை அத்யயனஞ் செய்து அதன்படி அனுஷ்டிப்பவருக்கு சிரத்தை, நமஸ்காரம், மரியாதை ரூபமான முக்கியமான முறையினால் ஸாத்விகனான தாதாவினால் கொடுக்கப்பட்டதாகவாகும். ஆகவே எவனொருவன் இவ்விதம் ஸாத்விகமான தானமுறையை அறிந்து அனுஷ்டிப்பனோ இவனுக்கு வேறு பிறவியில் முற்கூறிய முக்கிய முறைப்படியே அன்னம் உண்டாகின்றது. **मध्यतः, अन्ततः**, என்பதற்கு ராஜஸ, தாமஸ முறையில் தானஞ்செய்பவன் என்றும், அம்முறையில் செய்பவனுக்கும் அதே முறையிற்றான் மறுபிறவியில் அன்னம் கிட்டும் என்றும் பொருள் கொள்ளவும். ஆகவே இதுவரை கூறியவற்றால் உபாஸனைக்கு அங்கமான விருதத்தைச் சொல்லுமிடத்து தானத்தை யொட்டிய பல விசேஷம் சொல்லப்பட்டதாக வாகிறது (எ—று)

(அ—கை) இனி சிலவுபாஸனங்கள் விதிக்கப்படுகின்றன—

**(मन्त्रः) क्षेम इति वाचि.........इति मानुषीः समाज्ञाः ॥**

(க—ரை) **वाचि**=வாக்காகிற ப்ரதீகத்தில் **क्षेम इति**=க்ஷேம(ரக்ஷண) ரூபமாக பிரும்மம் இருக்கின்றதென உபாஸிக்க வேண்டும். **प्राणापानयोः**=பிராணன், அபானன் ஆகிய இரண்டு ப்ரதீகங்களிலும் முறையே **योगक्षेम इति**=யோகரூபமாகவும், க்ஷேமரூபமாகவும் பிரும்மம் இருப்பதாக உபாஸிக்கவேண்டும். (கிடைக்காத தனாதிகளின் பிராப்தியானது யோகம் என்றும், கிடைத்த அவற்

றின் ரக்ஷணம் க்ஷேமம் என்றும் சொல்லப்படும்.) **हस्तयोः**=இரு கைகளிலும் **कर्मेति**=கர்மரூபமாகப் பிரும்மம் இருப்பதாக உபாஸிக்க வேண்டும் (பிராம்மணர்க்கு ஹோமாதி வியாபார ரூபமாகவும், க்ஷத்திரியனுக்கு யுத்தாதி வியாபார ரூபமாகவும், மற்றவர்க்கு அவரவர்க்குச்சொல்லிய வியாபார ரூபமாகவும், பிரும்மம் இருப்பதாக அறியவேண்டும்.) **पादयोः**=இருகால்களிலும் **गतिरिति**=கமன ரூபமாக பிரும்மம் இருப்பதாகவும், **पायौ**=அபான துவாரத்தில் **विमुक्तिरिति**=மலமோசன ரூபமாகவும்பிரும்மமிருப்பதாக உபாஸிக்கவேண்டும். **इति**=இவ்விதம் **क्षेम इति** என்று தொடங்கி **विमुक्तिरिति पायौ** என்றதுவரை சொல்லப்பட்டவை **मानुषीः**=மனுஷ்ய தேஹாவயவங்களிற் செய்ய வேண்டிய **समाज्ञाः**=உபாஸனங்களாகும். (இங்கு **समाज्ञाः** என பஹுவசனம் (பன்மை) பிரயோகித்திருப்பதைக் கொண்டு ஒவ்வொரு உபாஸனமும் தனித்தனி செய்ய வேண்டும் என்றேற்படுகிறது.)

(அ—கை) வேறு உபாஸனங்கள் விதிக்கப்படுகின்றன—

**(मन्त्रः) अथ दैवीः.........सर्वमित्याकाशे ॥**

(க—ரை) **अथ**=மனுஷ்யாவயவத்திலுள்ள ஐந்து அவயவவிஷயங்களான உபாஸனங்களை யுபதேசித்த பின்னர் **दैवीः**=தேவசரீரத்திலுள்ள உபாஸனங்கள் விதிக்கப்படுகின்றன. **वृष्टौ**=விருஷ்டியபிமானி தேவதையினிடத்தில் **तृप्तिरिति**=திருப்திரூபமாகப் பிரும்மமிருப்பதாகவும், **विद्युति**=மின்னலுக்கு அபிமானி தேவதையினிடத்தில் **बलमिति**=பலரூபமாகப் பிரும்மமிருப்பதாகவும், **पशुषु**= பசுவுக்கு அபிமானி தேவதையினிடத்தில் **यश इति**=யசோரூபமாகப் பிரும்மம் இருப்பதாகவும், **नक्षत्रेषु**=நக்ஷத்திராபிமானி தேவதைகளிடத்தில் **ज्योतिरिति**=ஜோதிரூபமாகப் பிரும்மம் இருப்பதாகவும், **उपस्थे**=உபஸ்தாபிமானி தேவதையினிடத்தில் **प्रजातिः**= புத்திரோத்பாதன ரூபமாகவும் **अमृतम्**=ஸ்திரீயுடன் சேர்ந்து செய்யும் கிரீடாரூபமாகவும் **आनन्दः**=ஹர்ஷோத்பத்தியுண்டாகக்கூடிய பிறருடைய அவயவஸம்யோகரூபமான வியாபார ரூபமாகவும் பிரும்மம் இருப்பதாகவும், **आकाशे**=ஆகாசாபிமானி தேவதையினிடத்தில் **सर्वमिति**=பூத, பௌதிகரூப ஸகலஜகத்ரூப

மாக பிரும்மமிருப்பதாகவும் உபாஸிக்க வேண்டும். இங்கு க்ஷேம இதி வாசி, என்று தொடங்கி விதிக்கப்பட்ட உபாஸனங்களுக்கு तं यथा यथोपासते तदेव भवति அதை எந்த எந்த விதமாக உபாஸிக்கின்றனரோ அவ்விதமே அது ஆகின்றது என்றபடி அந்தந்தஉபாஸனானுகுணமானபலன் சொல்லப்பட்டதாகக்கண்டு கொள்ளவேண்டும். (எ—று)

(அ—கை) இவ்விதமே இந்த சுருதியின் பொருள் என்பதைக் காட்டவேண்டி பலனுடன் கூடின வேறுசில உபாஸனங்களை சுருதி திருஷ்டாந்தமாக உபதேசிக்கின்றது—

## (मन्त्रः) तत्प्रतिष्ठेत्युपासीत.........येऽप्रिया भ्रातृव्याः ॥

(க—ரை) அந்தப் பிரும்மத்தை பிரதிஷ்டை (ஸ்திதிக்கு ஹேது) என உபாஸிக்க வேண்டும். இவ்வித முபாஸிப்பவன் அசனம், ஆச்சாதனம் முதலிய ஸ்திதிக்கு ஹேதுவானவை யுள்ளவனாகிறான். அதை (பிரும்மத்தை) மஹான் (மஹத்வ குணோபேதம்) ஆக உபாஸிக்க வேண்டும். அவ்வித முபாஸிப்பவன் மஹானாக (தனதிஸமிருத்தி யுள்ளவனாக) ஆகிறான். அதை மன: (மனன சக்தியுள்ளது) என உபாஸிப்பவன் மனன சக்தியுள்ளவனாக வாகிறான். அதை நம: என (வசப்படுத்தும் தன்மை யுள்ளதென)உபாஸிக்க வேண்டும். இவ்வித முபாஸிப்பவனையும் பொருட்டு காமங்கள் ஸ்வாதீனங்களாகின்றன. அதை வேதமாக உபாஸிக்க வேண்டும். வேதம் இவனுக்கு ஸ்வாதீனமாகி விடுகின்றது. ब्रह्मण: = பிராம்மணனுடைய परि=நாலாபக்கத்திலு மிருக்கின்ற சத்ருவுக்கு मर:=மிருத்யுரூபனாக உபாஸிக்கவேண்டும். एनम्= இவ்வித முபாஸிப்பவனைக் குறித்து परि நாலாபக்கத்திலுமுள்ள த்வேஷிக்கின்ற சத்துருக்கள் மரண மடைகின்றனர். த்வேஷிக்காமல் அப்பிரியர்களாக மட்டும் இருக்கின்ற சத்துருக்களும் நானாவிதத்திலும் நாசமடைகின்றனர். (எ—று)

(அ—கை) இதுவரை சொல்லியபடிக்கான உபாஸனங்களால் இந்த ஜன்மத்திலோ, வேறு ஜன்மத்திலோ சித்தைகார்யத்தை யடைந்தவனுக்கு எது அறியத்தகுந்ததோ, எது அவ்வித வேத

னத்தின் (அறிதலின்) பலனை அவ்விரண்டையும் சுருதிசொல்லுகிறது—

(मन्त्रः) स यश्चायं पुरुषे.........एतत्सामगायन्नास्ते॥

(க—ரை) सयश्चायं पुरुषे என்று தொடங்கி एतमानन्दमयमात्मानमुपसंक्रम्य என்றதுமுடியவுள்ள பாகத்தின் பொருள் முந்தின அநுவாகத்திற் சொல்லப்பட்டிருக்கின்றதாயினும் நாநாவிதமான உபாஸநாஸாத்யமான சித்தைகாக்ர்யரூப தபஸ்ஸே பரமபுருஷார்த்தத்தில் முடிவையடைகின்றது என்பதைக் காட்டவேண்டியே திரும்பவும் இங்கு அதேபாகம் படிக்கப்பட்டது. ஆனந்தமய கோசத்தில் ब्रह्मपुच्छम् என்றதாற் சொல்லப்பட்டதும், அகண்டைகரஸமானதுமான ஆனந்தத்தை ஆத்மாவாக ஸாக்ஷாத்கரித்த படியால்பிரியமோதாதிகளான நான்கு கோசாவயவங்களிலும், அதற்கு முன்னுள்ள கோசங்களிலும், பந்த ஹேதுவான ஸர்வபதார்த்தங்களிலும், ஆத்மத்வப்ரமமானது நிஶ்சேஷமாக விலக்கப்பட்டுவிட்டமையின் இந்த நிலையிலுள்ளவர் முக்தராகவேதான் ஆகிறார். ஆயினும் இவர் உயிருடனிருக்கிறார் என லோகத்தவரால் சொல்லப்படுகிறார். ஏனெனில் லோகத்தவரால் தேஹேந்திரியாதிகள் காணப்படுவதே அதன் காரணமாகும். ஆகவே லோகதிருஷ்டியாக ஜீவிப்பதுபற்றியும், தனது திருஷ்டியால் முக்தராகிறார் ஆனதுபற்றியும் இவர் ஜீவன் முக்தர் எனச் சொல்லப்படுகிறார் அந்த முக்தரும் இதுவரை சொல்லிய முறைப்படி ஆத்மாவை உபஸங்க்ரமணஞ்செய்து (அறிந்து கொண்டு) தேஹமுள்ளவரை வெளிக்கு மற்றவர் போலவே இருக்கிறார். அவ்வித ஜீவன் முக்தரின் காரியம் யாதெனில்? அதைச் சுருதியுபதேசிக்கிறது—कामान्नी=தனது இஷ்டப்படிக்கான அன்னத்தை யுட்கொள்ளுகின்றவராகவும், அதாவது:—போஜ்யம் இன்னது, அபோஜ்யம் இன்னது என ஒரு பேதத்தைச் சொல்லுகின்ற விதி, விலக்கு சாஸ்திரங்களை இவர் கடந்து விட்டபடியால் எப்பொழுது தனக்குப்பசியுண்டாயிற்றோ அந்த சமயத்தில் எந்த விடத்தில் எந்த அன்னம் கிடைக்குமோ பசியாகிற பிணியைப் போக்கும் அந்த ஆஹாரத்தை யுட்கொள்ளுபவர் என்பதாம். "सार्ववर्णिकं भैक्षमाचरन्नुदरपात्रेण" என சுருதியு முபதேசித்திருக்

கிறது. "निस्त्रैगुण्ये पथि विचरतां कोविधि:कोनिषेध:" என மஹான்களும் இவ்விதமே உபதேசித்திருக்கின்றனர். कामरूपी=இஷ்டப்படிக்கான ரூப(வேஷதாரண)த்தைச் செய்து கொள்ளும் ஸ்வபாவமுடையவர் என்று பொருள். अव्यक्तलिंगा: अव्यक्ताचारा: என வேறு சுருதியு முபதேசிக்கிறது. इमान् लोकान्=காசி, துவாரகை முதலிய புண்ணிய பூமிகளில் अनुसंचरन्=முறையே சஞ்சரிப்பவர் என்று பொருள். அல்லது பிராணிகள் எந்த பிரும்மாதிலோகங்களில் வஸிக்கின்றனரோ அவையாவும் தன்னுடையதே என தனக்குண்டான ஸர்வாத்மபாவ ஸித்தியையொட்டி எண்ணிக் கொண்டு பரமசந்தோஷ முள்ளவராய் வஸிக்கின்றார் என்றும் கொள்ளலாம். மேலும், एतत्साम गायन्=பின்னர் சொல்லப்படும் கானரூபமான மந்திரத்தைக் கானஞ்செய்துகொண்டு வஸிக்கிறார். அல்லது ஸமத்வத்தைச் சொல்லும் மந்திரத்தைச் சொல்லிக் கொண்டு வஸிக்கிறார் என்றும் பொருள் கொள்ளலாம். தனக்குக் கிடைத்த ஸர்வாத்ம பாவத்தை சிஷ்யர்களிடத்துப் பிரகடனஞ் செய்ய வேண்டியே இவ்வித கானஞ் செய்கிறார் என்று கருத்து. மற்றபாகத்திற்கு சங்கரபாஷ்யத்திற் சொல்லியபடியே பொருள் கொள்ளவும்.

வித்யாரண்யதீபிகைப்படி 10-வது அனுவாகம் முற்றிற்று.

---

## விசிஷ்டாத்வைதப்படி ஏழாவது அனுவாகம்.

(அ—கை) இதுவரை சொல்லிய வித்யைக்கு அங்கமான நியமம் சொல்லப்படுகின்றது—

### (मन्त्र:) अन्नं न निन्द्यात्........महान् कीर्त्या ॥

(க—ரை) பிராணன் சரீரம் இவ்விரண்டிலும், அப் தேஜஸ் இவ்விரண்டிலும், பிருதிவீ ஆகாசம் இவ்விரண்டிலும், அன்ன அன்னாதத்வ திருஷ்டியையும், அவைகள் ஒன்றுக்கொன்றுப் பிரதிஷ்டிதமாக ஆகின்றது என்ற திருஷ்டியையும், அவைகள் ஒன்றுக்கொன்று பிரதிஷ்டிதமாயிருத்தல் காரணமாய் பரம் பரையாக ஸ்வப்ரதிஷ்டிதத்வ திருஷ்டியையும் அந்த விரதவிசேஷத்

லையும் அதன்பலனையும் प्राणो वा अन्नम् என்பது முதலிய வற்றால் சுருதி யுபதேசிக்கிறது. (எ—று)

ஏழாவது அனுவாகம் முற்றிற்று.

---

## எட்டாவது அனுவாகம்.

**(मन्त्रः) अन्नं न परिचक्षीत.........महान्कीर्त्या ॥**

(க—ரை) न परिचक्षीत=பாத்திரத்திலிருக்கும் அன்னத்தை நிராகரணம் செய்தல் கூடாது என்று பொருள். (எ—று)

எட்டாவது அனுவாகம் முற்றிற்று.

---

## ஒன்பதாவது அனுவாகம்.

**(मन्त्रः) अन्नं बहुकुर्वीत.........महान्कीर्त्या ॥**

(க—ரை) அதிதி, அப்யாகதர், ஸ்வஜனம் இவர்களுக்குப் போதுமான அன்னத்தைத் தேடவேண்டும். என்றுபொருள் அல்லது—அன்னத்தை வெகுமதிக்கவேண்டும். என்றும் பொருள் கொள்ளலாம். (எ—று)

ஒன்பதாவது அனுவாகம் முற்றிற்று.

---

## பத்தாவது அனுவாகம்.

**(मन्त्रः)न कञ्चन वसतौ प्रत्याचक्षीत.........इत्युपनिषत्॥**

(க—ரை) தனது வீட்டில் ராத்திரி முதலிய காலங்களில் போஜனார்த்தம் வந்த எந்த மனிதனையும் நிராகரணஞ் செய்தல் தகா. ஆகையால் போஜனார்த்தம் வந்த புருஷர்களை நிராகரணஞ் செய்யாதிருத்தல் அவசியமாவது பற்றி விலக்கப்பட்டதாயினும் யாதானுமொரு மார்க்கத்தினால் அதிகம் அன்னத்தை ஸம்பாதிக்க வேண்டும். अस्मै=இந்த உபாஸகனையும் பொருட்டு अन्नम्=அன்ன

மானது अराधि=ஸித்தமாகயிருக்கிறது. உபாஸகனுக்கு வேண்டியே (ஆண்டவனால்) அன்ன முண்டாக்கப்பட்டிருக்கிறது. ஆகவே அவருக்கு வேண்டியே அன்ன முண்டாயிருத்தலால் யாதானுமொரு உபாயத்தால் அந்த அன்னத்தை தேடுவதில் தோஷம் எதுவுமில்லை என்று பொருள். ஆதி, மத்யம், அந்த ப்ரதேசங்களில் ஸித்தமான யாதொரு அன்னமுண்டோ அந்த அன்னமானது ஸர்வாவயவயுக்தமாயினும் இந்த உபாஸகனையும் பொருட்டே ஸித்தமாகிறது. அதாவது: அவனுக்கு வேண்டியே அன்னமுண்டாயிற்றென ஸாதுக்கள் சொல்லுகின்றனர். என்று பொருள். எவனொருவன் இவ்விதம் அறிகின்றானோ அவன் யாதானுமொரு முறையில் அன்னத்தைச் சம்பாதிப்பான் என முன்னுள்ள வாக்கியத்துடன் சேர்த்துப் பொருள் கொள்ள வேண்டும். क्षेम इति वाचि=வாக்கு க்ஷேமஸாதனமாகையால் அதில் க்ஷேமத்துவ புத்தி செய்ய வேண்டும் என்று பொருள். இவ்விதமே மேலுள்ள விடங்களிலும் காண்க. विमुक्ति:=விடுதல் என்று பொருள். அத்யாத்மத்தில் இந்த உபாஸனங்கள் சொல்லப்பட்டன.

अथ दैवी:=இனி தைவிகங்களான உபாஸனங்களைச் சொல்லுகிறேன் என்று பொருள். प्रजाति: இது முன்னர் சொல்லிய ஆத்யாத்மிகோபாஸனத்துடனேயே சேரும். பாடக்கிரமத்தைக் காட்டிலும் அர்த்தக் கிரமம் வலுவாயிருத்தலே அதன் காரணமாகும். सर्वमित्याकाशे=ஆகாசத்தை ப்ரதிஷ்டிதத்துவாதி குணயுக்தமாக உபாஸனஞ் செய்வதால் तत्क्रतुन्याय த்தால் உபாஸகனுக்கு பிரதிஷ்டாதிகள் உண்டாகின்றன என்று பொருள். ब्रह्मवान्= பிருஹத்வமுள்ளவனாகிறான் என்று பொருள். नश्यन्ते—அடையப்படுகின்றன என்று பொருள். परिमर:—எல்லாவிடத்திலு முண்டாகும் மரணத்திற்கும் அவகாசமாயிருப்பதால் ஆகாசமானது ஆசிரயமாகிறது என்று பொருள். இவ்விதம் ஆகாசத்தை பிரும்மசேஷமாகவும், பரிமரமாகவும் உபாஸனஞ் செய்வதால் एनम्— இந்த உபாஸகனைச் சுற்றிலுமுள்ள துவேஷிகள் மரிக்கின்றனர் என்று பொருள். अप्रिया: भ्रातृव्या: நாலாபக்கத்திலுமுள்ள சத்துருக்கள் மரிக்கின்றனர் என்று பொருள். स य एवं वित्—

என்ற பாகத்திற்கு முன்போலவே பொருள் கொள்ளவும். **एतम्**— பின்னர் சொல்லப்படுவதை என்றுபொருள்.

**अहमन्नमिति** இங்குள்ள **अहं** சப்தமானது பரமாத்மாவரையிலும் பொருளுள்ளது. போக்திரு, போக்ய வாசியான அன்ன, அன்னாதசப்தங்களும் பரமாத்ம பர்யந்தமான பொருளுள்ளவைகளே யாகும். **श्लोककृत्**—சிலாகிக்கத் தகுந்த ஜகத்ரக்ஷணாதிகளைச் செய்பவர் என்று பொருள். **ऋतस्य**—கர்மத்தினுடைய **प्रथमजा:** சிருஷ்டியாதி ஸமயத்தில் அந்தபரிபாகத்தைச் செய்கின்றவர் என்று பொருள். **देवेभ्य: पूर्वम्**—தேவர்களுக்கு முன்னுள்ள **अमृतस्य**—மோக்ஷத்தினுடைய **नाभि:** தேர்சக்கிரத்திற்குக் குடமானது போல ஆச்ரயமானது. **यो मा**—எவன் என்னை யோக்யனை சிஷ்யனுக்கு **ददाति**—உபதேசிக்கின்றானோ **स इदेव**—அவனே **मा**—என்னை **आवा:**—அடைந்தவனாகிறான். **अहमन्नमन्नमदन्तमद्मि**— அன்ன சப்தத்தாற் சொல்லப்படும் அசேதனத்தையும், அதன் போக்தாவான சேதனனையும், **अद्मि**—வியாபிக்கின்றவனாகின்றேன். **अहम्**—நான் பிரளயகாலத்தில் **विश्वं भुवनम्**—ஸமஸ்த லோகத்தையும் அடக்குகின்றவனாகின்றேன். **सुवर्नज्योती:**—கம்னீயமா (அழகா) யும், மிக்க மிக்கப் பிரகாசிக்கின்றதாயும் இருக்கின்ற சரீரமுள்ளவனாகிறான். **इत्युपनिषत्** — இவ்விதம் உபநிஷத் முடிவு பெறுகிறது.

விசிஷ்டாத்வைதப்படி பத்தாவது அனுவாகம் முற்றிற்று.

## தைத்திரீயோபநிஷத் முற்றிற்று.

சுபம்.

—•◆•—

# ப்ரம்ம ஸூத்ர ஸ்ரீ சங்கர பாஷ்யம்

(தேவநாகரி எழுத்தில் மூலமும் தமிழுரையும்)

மூன்று வால்யூம்கள் (1500 பக்கங்கள்)

## (புத்தகத்தின் சைஸ் Royal Crown)

இரும்புக் கடலையை வறுத்ததைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? இதோ கேளுங்கள். அதுதான் ப்ரம்ம சூத்திர சங்கர பாஷ்யத்துக்கான **கடலங்குடி நடேச சாஸ்திரி**யாரின் விரிவுரை.

1929-ஆம் ஆண்டு முதல் முதலில் முதற்பதிப்பாக வெளி வந்தது பலரின் பாராட்டுக்களையும் நன்மதிப்பையும் பெற்ற அருமையான இந்த கிரந்தம் மறு பதிப்பாக ஆன்மிக மக்களையும் ஆராய்ச்சி யாளர்களையும் மகிழ்விக்கும் நிலையில் 68 ஆண்டுகளுக்குப் பின் 3 வால்யூம்களாக வெளிவந்துள்ளது.

கடலங்குடிப் பெரியவரால் முதல் முதலில் எளிய நடையில் தேவநாகரி மூலத்துடனும், தமிழ் மொழி பெயர்ப்புடனும் வெளியிடப் பட்ட இந்த நூல் பலரின் வேண்டுகோளுக்கிணங்க மறு பதிப்பாக ஆப்செட்டில் அச்சிடப் பட்டுள்ளது. ஒவ்வொரு சூத்திரமும் தமிழ் மொழியில் அச்சிடப் பட்டிருக்கிறது. **பாமதி, கல்பதரு, பரிமளம், ப்ரம்ஹவித்யாபரணம், ராமாநந்தீயம், நியாயரக்ஷாமணி** முதலிய வியாக்கியானங்களையொட்டி ஆங்காங்கு குறிப்பெழுதி விளக்கப்பட்டுள்ளது. மேலும் அத்வைத-ஸித்தாந்தத்தை யொட்டி சூத்திரார்த்தங்களை தெளிவாய் விளக்கி ஒவ்வொரு அதிகரணத்திலும் வித்தியார்ண்ய சுவாமிகளால் இயற்றப்பட்ட **வையாஸிக நியாய மாலையை** எழுதி அதற்கும் கருத்துரை எழுதியும் வெளி யிட்டுள்ளார்.

**ஸ்ரீ சங்கர பாஷ்யம்** முழுமையும் 4 அத்யாயங்களாகத் தொகுத்து 3 வால்யூம்களாக வெளியிடப்பட்டுள்ளன.

அச்சுக்கூலியும், பேப்பர் விலையும், விளம்பரக் கட்டணமும் விஷம் போல் ஏறியுள்ள இந்தச் சமயம் ராயல் கிரௌனில் புத்தகம் போடுவது மிகவும் சிரமமானது. ஆயினும் கடலங்குடிப் பெரியவரின் புத்தக வெளியீடு யாவராலும் போற்றப்படக் கூடியது. ஆகவே அன்னாரின் புகழை நிலை நாட்டவும், புத்தக மறுபதிப்பில் எந்தவித சொற்பிழையோ கருத்துப் பிழையோ அச்சுப்பிழையோ ஏற்பட்டு அன்னாரின் கடுமையான உழைப்பிற்று களங்கம் ஏற்படாமல் பாதுகாக்கவும் எல்லா அத்யாயங் களையும் OFFSET-ல் பிரிண்ட் செய்து வெளியிட்டுள்ளோம்.

புத்தக விலைக்கும் தபால் செலவுக்கும் எழுதவும்.





**KADALANGUDI PUBLICATIONS**

**38, Natesa Iyer Street, T.Nagar,**

**Madras - 600 017. Phone : 434 3406.**